# வேதகிரியார் சூடாமணி நிகண்டு

பதிப்பாசிரியர்
பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை
(தமிழ் பல்கலைக்கழகம் - ஓய்வு)

த. பூமிநாகநாதன்
ஆராய்ச்சி உதவியாளர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
1997

# வேதகிரியார் சூடாமணி நிகண்டு

பதிப்பாசிரியர்

பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை

(தமிழ்ப் பல்கலைக் கழகம் - ஓய்வு)

த.பூமிநாகநாதன்

ஆராய்ச்சி உதவியாளர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சி.பி.டி.வளாகம், சென்னை.

1997

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | | Veta kiriyar Cudamani Nikandu |
| Author | : | Prof M.Shanmukham Pillai<br>D Boominaganathan |
| Publication & Copy right | : | International Institute of Tamil Studies,<br>C.I.T. Campus<br>Taramani, Chennai-113 |
| Publication No. | : | 271 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | November 1997 |
| Edition | : | First |
| Paper used | : | 60 GSM Cream Wove |
| Size of the book | : | 1/8 Demmy |
| Printing types | : | 10 Point |
| No. of pages | : | xxi + 284 |
| Price | : | Rs.65/- |
| Printers | : | Shri Vignesh Prints,<br>158/5, Lake View Road<br>West Mambalam<br>Chennai-33. Ph.4848486 |
| Subject | : | A Tamil Nigandu |

# அணிந்துரை

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ,**
இயக்குநர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை - 600 113.

மண்டலபுருடர் யாத்த சூடாமணி நிகண்டை அடியொற்றி விரிவு செய்யப்பெற்ற நூல் வேதகிரியார் 'சூடாமணி நிகண்டு-ஒருசொல் பல்பொருள் தொகுதி' என்பதாகும்.

பேராசிரியர் மு.சண்முகம்பிள்ளை அவர்கள் இவ்விரு நிகண்டுகளின் ஒற்றுமை, வேற்றுமை, வளர்ச்சி நிலைகளை இந்நூலின் முகவுரையில் விளக்கியுள்ளார். 'சொல்லில் உயர்வு தமிழ்ச் சொல்லே' என்று பாரதியார் தமிழ் மொழியில் அமைந்துள்ள சொல் வளத்தைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். அவர் பாடியது வெறும் புகழ்ச்சியன்று; உண்மை என்பதற்கு உறுதி பயப்பவை தமிழில் கி.பி. 9 ஆம் நூற்றாண்டு முதலாகத் தோன்றிய நிகண்டுகளாகும். தமிழ் மொழியின் சொல் வளத்தை அறிய உதவும் கருவி நூல்கள் நிகண்டுகள். நிகண்டு என்பதற்கு 'உரிச்சொற் பனுவல்' என்பது பொருளாகும்.

ஒரு சொல் குறிக்கும் பல பொருளை நிகண்டுகள் நமக்குத் திரட்டித் தருகின்றன. தமிழ் மொழியில் அமைந்துள்ள நிகண்டுகளைப் போன்று வடமொழியிலும் உள்ளன. அவற்றுள் முதலாவதாகக் கருதப்படுவது 'அமரகோசம்' ஆகும்.

ஆங்கிலக் கல்வியின் பயனாகத் தமிழில் அகராதி உருவாகுவதற்கு முன்னர் நிகண்டுகள் அப்பணியைச் செய்தன. எனவே, தமிழ் மொழியில் அகராதி உருவாக்கத்திற்கு நிகண்டுகள் அடித்தளம் அமைத்தன எனலாம்.

இலக்கியம், இலக்கணம் முதலிய துறைகளைக் கற்றுத் தேர்வதற்கு நிகண்டுகள் உதவின. பாடலைப் புனையும் கவிஞனுக்கு நிகண்டுகள் தோன்றாத் துணையாயின. கவிஞர்கள் தமக்குத் தெரிந்த ஓரிரு சொற்களைப் பயன்படுத்துவதைத் தவிர்த்து அப் பொருளில் அமைந்த பிற சொற்களைக் கையாள்வதற்கு நிகண்டுகள் உதவின.

அகராதிகள் உரைநடையில் எழுதப்பட்டன. ஆயின் நிகண்டுகள் நூற்பாவினாலேயே அன்றிக் கட்டளைக் கலித்துறை, வெண்பா, விருத்தம் முதலிய பாவகைகளில் இயற்றப்பட்டன. நிகண்டுகள் பா வடிவில் அமைந்திருந்ததால் மனப்பாடம் செய்வதற்கு ஏதுவாய் அமைந்தன.

நிகண்டுகள் பதிப்பிப்பதில் முன்னோடியாக விளங்கியவர் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை ஆவார். நாம தீப நிகண்டு, பொதிகை நிகண்டு, கயாதர நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு முதலிய நிகண்டுகளைப் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் பதிப்பித்துள்ளார். மேலும் சூடாமணி நிகண்டு, கைலாச நிகண்டு முதலியனவற்றைப் பதிப்பிக்க முயன்றுள்ளார். ஆயின் அவரது முயற்சி முழுமையாக நிறைவேற வில்லை.

தமிழ் நெடுங்கணக்கைப் பின்பற்றி அகர வரிசையில் நிகண்டுகளை அடியொற்றி வீரமாமுனிவர் சதுரகராதியை உருவாக்கினார். அவர் சதுரகராதி எழுதுவதற்கு முன்னரே அம்முறையில் 'அகராதி மோனைக் ககராதி எதுகை' என்னும் நிகண்டு எழுதப்பட்டது என்று பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை குறிப்பிட்டுள்ளார். சுமார் 7500 சொற்கள் கொண்ட இந்நிகண்டு இன்னும் பதிப்பிக்கப்படவில்லை.

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் தான் சேர்த்து வைத்திருந்த சுவடிகளை அவருடைய இறுதிக் காலத்தில் கல்கத்தாவில் உள்ள தேசிய நூலகத்திற்கு அன்பளிப்பாக அனுப்பி வைத்தார். அந்த நூலகத்தில் அச்சுவடி உள்ளது. தமிழ் ஆய்வாளர்கள் அச்சுவடியைத் தேடிப் பதிப்பிக்க முன்வர வேண்டும்.

திவாகர நிகண்டு, பிங்கல நிகண்டு, சூடாமணி நிகண்டு, வேதகிரியார் சூடாமணி நிகண்டு, அகராதி நிகண்டு, வடமலை நிகண்டு, உரிச்சொல் நிகண்டு, கைலாச நிகண்டு, கயாதர நிகண்டு, ஆசிரிய நிகண்டு, பல்பொருள் சூடாமணி நிகண்டு, பொதிகை நிகண்டு, அரும் பொருள் விளக்க நிகண்டு, சிந்தாமணி நிகண்டு, விரிவு நிகண்டு முதலிய நிகண்டுகளை அறிஞர் பெருமக்கள் பதிப்பித்துள்ளனர். ஆயினும் அவற்றுள் மறுபதிப்பு காணாத நிகண்டுகளும், அச்சில் வராமல் ஓலைச் சுவடியில் ஒளிந்து கொண்டு இருக்கும் நிகண்டுகளும் உள்ளன.

பேராசிரியர் மு.சண்முகம்பிள்ளை அவர்கள் தமிழ் உலகிற்குக் கிடைத்த மிகப் பெரிய கருவூலம். அவருடைய தமிழ்ப் பணியில் நிகண்டுகள் பதிப்புத் தலையாய பணியாகும்.

திவாகர நிகண்டு, பாரதி தீபம், நிகண்டு சொற் பொருட் கோவை- தெய்வப்பெயர் முதலிய நிகண்டுகளைப் பேராசிரியர் மு.சண்முகம்பிள்ளை அவர்கள் பதிப்பித்துள்ளர்.

இலக்கியக் களஞ்சியம், இலக்கணக் களஞ்சியம் முதலிய நூல்களை யாத்த வேதகிரியார் எழுதிய பிறிதொரு நூல் 'வேதகிரியார் சூடாமணி-ஒருசொல் பல்பொருள் தொகுதி' என்ற நிகண்டாகும். இந்நூலை 1843-இல் யாழ்ப்பாணத்தில் உள்ள புத்தகசாலை வெளியிட்டது. 155 ஆண்டுகள் மறைந்தன. இந்த அரிய நூலை மறுபதிப்பு செய்வதற்கு இசைவு தெரிவித்த நிறுவனப் பதிப்புக் குழுவிற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பேராசிரியர் மு.சண்முகம்பிள்ளை 'புலவர் மணி', 'பதிப்புச் செம்மல்', செந்தமிழ்ச் செம்மல்' என்னும் விருதுகளைப் பெற்றவர். சென்னை, மதுரை, தஞ்சை பல்கலைக் கழகங்களில் பணி புரிந்தவர். பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையிடம் பதிப்பு முறைகளை அறிந்தவர். பல நூல்களைப் பதிப்பித்தவர்.

தள்ளாத வயதிலும் தமிழ் ஆய்வில் தளராது உழைக்கும் பேராசிரியர் மு.சண்முகம்பிள்ளை அவர்கள் இன்றுள்ள தமிழ் ஆய்வாளர்கள் பின்பற்றக்கூடிய வழிகாட்டியாக விளங்குகின்ற பெருமை பெற்றவர்.

இந்நிகண்டு மறுபதிப்புக்கு உதவியாக இருந்தவர் இந்நிறுவனக் கல்விசார் அலுவலர் ஆராய்ச்சி உதவியாளர் திரு த.பூமிநாகநாதன் ஆவார். அவருடைய அரிய உழைப்பு இந்நூல் வெளிவரத் துணை நின்றது.

இந்நூல் சிறப்பாக வெளிவரத் துணை நின்ற பேராசிரியர் மு.சண்முகம்பிள்ளை அவர்களுக்கும், திரு த.பூமிநாகநாதன் அவர்களுக்கும் நிறுவனத்தின் சார்பில் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி-பண்பாட்டுத்துறை, இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் பெருந்தகை முனைவர் மு.தமிழ்க்குடிமகனார்அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறைச் செயலாளர் அவர்களுக்கும் எங்கள் இதயம் கனிந்த நன்றி.

வனப்புற அச்சிட்டுத்தந்த விக்னேசு பிரிண்டர்ஸ் அச்சகத் தார்க்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இயக்குநர்

# பதிப்புரை

தமிழ் மொழியின் வளத்தையும் சொற் பொருட் செறிவின் நுட்பத்தையும் நிகண்டு நூல்கள் காலந்தோறும் வெளிப்படுத்தியுள்ளன. இலக்கிய இலக்கணப் பயிற்சிக்கு நிகண்டு நூல்களே கருவி நூல்களாகத் திகழ்ந்தமையை முன்னையோர் கூற்றுகளினின்றும் அறிய முடிகின்றது. இத்தகைய சிறப்பு வாய்ந்த பல்வேறுபட்ட நூல்கள் அக்காலத்தில் ஓலைச்சுவடிகளிலேயே எழுதிவைக்கப்பட்டன.

இப்படி ஓலைச்சுவடிகளில் முன்னாள் எழுதப் பெற்ற பல நூல்கள் அழிவுற்றன. மக்களின் அறியாமையால் நீருக்கும் நெருப்புக்கும் இரையாயின. எஞ்சிய நூல்கள் கூடக் காலப் பழைமையால் கெட்டு உடைந்து வீணாய்ப்போனதும் பலவாம். அந்த நாளில் சுவடி கிலமாய்ப் போகும் நிலையில் புதிய ஓலைகளில் எழுதி வைத்துப் பாதுகாத்து வந்தனர். இவ்வாறு அமைந்த சுவடிகளே காலத்தை வென்று வாழ்ந்தன.

பண்டை நாளிலே குருகுலக் கல்வி முறையில் குரு - சீடர் பரம் பரையினால் சில பல நூல்களுக்குப் பற்பல சுவடிகள் தோன்றின. இவ்வகைக் கல்வி முறை அருகி வந்ததோடு நூற் சுவடிகளின் பழக்கமும் குறைந்தது. திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் காலம்வரை சுவடி எழுதும் பழக்கம் கற்றார் இடையிலும் பொதுமக்கள் இடையிலும் அலுவலகங்களிலும் நடைமுறையில் இருந்து வந்தமைக்கான சான்றுகள் கிடைக்கின்றன.

தற்போது இச்சுவடிகள் எல்லாம் அருகிப் போய் காட்சிப் பொருளாகி விட்டன. தஞ்சை சரசுவதி மகால், சென்னை உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், அரசு கீழ்த்திசைச் சுவடி நூலகம் முதலிய இடங்களில் பாதுகாத்து வருகின்றார்கள்.

காகிதமும் அதில் எழுதுவதற்குரிய கருவிகளும் வந்ததும் ஓலையில் எழுதும் பழக்கம் சிறுகச் சிறுகக் குறைந்து இன்று முற்றிலும் மறைந்து போயிற்று. இந்நாளில் ஓலையில் எழுதும் பயிற்சி உடையாரைத் தேடித்தான் கண்டுபிடிக்க வேண்டிய சூழல். அவ்வகையில் ஏடும் எழுத்தாணியும் இன்று அருங்காட்சியகப் பொருளாக ஆகி விட்டன.

காகிதம் அச்சு இயந்திரம் பதினாறாம் நூற்றாண்டில் அறிமுக மாயின. பாரத நாட்டில் தமிழில் தான் எழுத்துக்கள் உருவாக்கப் பெற்று அச்சுப் படிகள் தோன்றலாயின. பாதிரிமார்களால் **'தம்பிரான் வணக்கம்'** என்னும் நூல் கி.பி.1578-ல் அச்சானது. இந்நூல் கிடைப்பதற்கு அருமையாயிற்று. இதன் நூற்படி ஒன்று இலண்டன்

அருங்காட்சியகத்தில் கண்டெடுக்கப்பட்டது. இதனைப் பெற்று இப்பொழுது தஞ்சையில் நிகழ்ந்த எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டின் பொழுது சேலத்தில் உள்ள அன்பர் ஒருவர் வெளியிட்டு உதவினார்.

முதல் மாதிரி நூல் பதினாறாம் நூற்றாண்டில் தோன்றிய போதிலும் அச்சு நூல்கள் பலவாக அச்சேறத் தொடங்கிய காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான். முதற் பகுதி வரை அச்சுக் கூடம் வைக்கும் உரிமை அரசாங்கத்திடமே இருந்தது. இந்தியரும் அச்சுக் கூடம் வைக்கலாம் என்ற உரிமை கிபி 1935-ல் வழங்கப்பெற்றது. அன்று முதல் அச்சகங்களும் நூல்களும் பலவாகப் பெருகின.

தமிழ்ப் புலவர்கள் சிலரும் அச்சுக் கூடம் நடத்தி வந்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

ஓலைச்சுவடிகள் சுமார் 300-400 ஆண்டுகள் வரைக் கெடாமல் இருந்து வந்துள்ளன. ஆனால் அச்சு நூல்களோ நூறாண்டுகளுக்கு மேல் தாக்குப்பிடிப்பதில்லை. காகிதம் பொடிப் பொடியாகக் கொட்டும் நிலை ஆகிவிடுகிறது. எனவே சென்ற நூற்றாண்டில் அச்சில் வெளிவந்த நூல்களுக்கு மீண்டும் அச்சு வடிவம் கொண்டுவந்தால்தான் இன்னும் நூறு ஆண்டுகள் வாழ்ந்திருக்கும். இப்பொழுது நூல்கள் ஆயிரக்கணக்கில் அச்சிடப்படுவதாலும், நூலகங்களில் அவை இடம் பெறுவதாலும் நூல்கள் பெரும்பாலும் கிட்டும் நிலையில் உள்ளன.

சென்ற நூற்றாண்டில் அச்சிட்ட நூலுக்கு விவர அட்டவணை தயாரித்து வழங்கியவர் **'மார்டாக்'** பாதிரியார் ஆவார். கேட்டலாக் ஆப் தமிழ் பிரிண்டெட் புக்ஸ் **(Catalogue of Tamil Printed Books)** என்னும் அட்டவணைத் தொகுதி கிபி.1865-ல் வெளிவந்துள்ளது.

இந்நூலில் மார்டாக் பாதிரியார் தாம் தொகுத்துள்ள நூல் களுக்குப் பொருள் அடிப்படையில் விளக்கங்களையும் அமைத்துத் தந்துள்ளார். இதற்கு இரண்டாண்டுகளுக்குப் பின் கி.பி.1867-ஆம் ஆண்டு தொடங்கி மாநிலத்தில் அச்சேறிய நூல்கள் பதிவு செய்யும் சட்டம் நடைமுறைக்கு வந்தது. அதுமுதல் அச்சான நூல்கள் நூல் பதிவாளருடைய அலுவலகத்தில் பதிவு செய்வதற்காகத் தரப்பட்டு வந்தன.

பதிவாளர் அலுவலகத்தில் பதிவாளரால் பதிவு செய்யப்பட்ட நூல்களுக்கு மூன்று மாதத்திற்கு ஒரு முறை அரசு இதழில் அந்நூல்கள் பற்றிய விவரங்கள் வெளி வந்துள்ளன. பதிவாளர் அலுவலத்தில் உள்ள நூல்கள் பாதுகாப்பிற்காக ஆவணக்காப்பகத்தில் வரிசையாக வைத்தனர். இந்தக் காப்பகத்தில் உள்ள தமிழ் நூல்களுக்குத் தமிழ் வளர்ச்சித் துறை அட்டவணை தயாரிக்கும் தனி அலுவலகம் அமைத்தது. அதன் மூலம் கி.பி. 1867 முதல் பத்தாண்டு, ஐந்தாண்டு தொகுதிகளாக, 'தமிழ் நூல் விவர அட்டவணை' என்னும் பெயரில் பல தொகுதிகள் வந்துள்ளன.

இத்தொகுதிகளால் நமக்குச் சென்ற நூற்றாண்டுப் பிற்பகுதி முதல் அச்சிட்ட நூல் விவரங்கள் தெரியவருகின்றன.

கி.பி. 1954 இல் நமது பாரத நாட்டு மொழிகளில் வெளியிடப்படும் நூல்கள் யாவற்றையும் ஒருங்கு தொகுத்து வைப்பதற்கு வழி செய்யும் சட்டம் நடைமுறைக்கு வந்தது. இதன்படி சென்னை, மும்பை, டெல்லி, கல்கத்தா நகரங்களில் உள்ள அரசாங்க நூலகங்களுக்கு அவ்வவ் மொழிப் பிரதிகள் ஒன்று அனுப்பப்பட்டு வருகின்றன. இவற்றுள் கல்கத்தாவில் உள்ள இந்திய தேசிய நூலகத்தார் தம் நூலகத்தில் தொகுக்கப்பட்ட நூல்களுக்கு கி.பி.1957-ஆம் ஆண்டு முதல் மூன்று மாதங்களுக்கு ஒரு முறை ஒரு நூற்பட்டியல் வெளியிட்டு வருகின்றனர்.

ஆண்டுக்கு ஒரு முறையும் ஒரு தொகுப்பு நூற் பட்டியல் வெளி வந்து கொண்டிருக்கின்றனது.

இவ்வாறு வெளிவரும் அட்டவணைகளை ஆராய்ந்தால் எத்தனையோ அருமையான நூல்கள் இடம்பெற்றுள்ளமையைக் காணலாம். அவற்றுள் முதற்பதிப்போடு நின்றுபோன நூல்கள் பல. இவற்றுள் அருமையான நூல்களை மீண்டும் அச்சிடுவது தமிழுக்கு வளம் சேர்ப்பதாகும்.

இந்நாளில் அறிஞர் பலர் எழுதிய நூற் சுவடிகள் அச்சிடப் படாமல் முடங்கிக் கிடக்கின்றன. ஆராய்ச்சி ஏடுகள் பல்கலைக் கழகங்களில் குவிந்து வருகின்றன. மறைந்த தமிழ் அறிஞர்தம் இல்லங்களில் அவர்களின் படைப்புகள் பல இருக்கலாம். எடுத்துக் காட்டாக மகாவித்துவான் ரா.ராகவையங்காரின் வெளிவராத படைப்புகளில் ஒன்றான தாழிசைப் பாவில் அமைந்த **'கீதைப் பாட்டு'** என்னும் நூல் பேராசிரியர் மு.சண்முகம்பிள்ளை அவர்கள் பெரும் முயற்சியில் இப்பொழுது வெளி வந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இதுபோன்று காலப் பழைமையால் உள்ள அரிய நூல்களை அச்சிடுவதற்கு அரசாங்கமும் பல்கலைக்கழகங்களும் ஆய்வு நிறுவனங்களும் முன் வந்தால் அரிய தமிழ்க் கருவூலங்கள் கிட்டுவதற்கு வழி பிறக்கும்.

இந்த நோக்கில்தான் கி.பி.1843-ல் வெளிவந்த **வேதகிரியார் சூடாமணி** நூல் நூற்று ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்குப் பின் இன்று புதிய வடிவம் பெற்று வெளிவருகிறது. தமிழ்கூறு நல்லுலகம் இதனை ஏற்றுப் போற்றி வரவேற்குமாறு பெரிதும் வேண்டுகின்றோம்.

**மு.சண்முகம்பிள்ளை**
**த.பூமிநாகநாதன்**
பதிப்பாசிரியர்

# முகவுரை

## பேராசிரியர் மு.சண்முகம்பிள்ளை

### நிகண்டு கற்றல்

தமிழ் மொழியின் முக்கிய கூறுகளுள் 'நிகண்டு' என்பது தனிச் சிறப்புடையதாகும். தமிழ் கற்பார் புலமை பெற இலக்கியம், இலக்கணம், நிகண்டு என்னும் மூன்றையும் மூன்று கண்களாக முன்னையோர் போற்றிவந்தனர். இலக்கிய இலக்கணப் பயிற்சிக்கு முற்பட நிகண்டு கற்றலைப் புலவர் பெருமக்கள் வலியுறுத்தியுள்ளனர். மாதவச் சிவஞான சுவாமிகள் வழங்கிய நன்னூல் விருத்தியுரையுள், இலக்கணம் கேட்டற்குரியாரின் தகுதிப்பாடு பற்றி உரைக்குமிடத்து, "யாவரும் உணர எனவே முன்னர் நிகண்டு கற்றுச் செய்யுள் ஆராய்ச்சி யுடையார்க்கே அவற்றை ஆராய்வுழி, அவற்றின்கண் உளவாகிய செய்கை வேறுபாடுகளும் சொல்முடிவு பொருள்முடிவு வேறுபாடுகளும் துணியப்படும் (நன்னூல் சிறப்புப்பாயிரவுரை) என்று எடுத்துக் காட்டுகின்றார். இதனால் தமிழ் பயிலத் தொடங்குவார் நிகண்டு நூல் கற்பது மிகவும் இன்றியமையாதுதாக அந்நாளில் கருதி வந்தனர் என்பது தெரியவரும். முன்பெல்லாம் தமிழ் பயில முற்பட்டார் முதற்கண் சூடாமணி நிகண்டு நூலை மனப்பாடம் செய்யவேண்டும் என வற்புறுத்தி வந்தனர். திவாகரம், பிங்கலம் முதலிய பழைய நிகண்டு களையும் மனப்பாடம் செய்வது அந்நாளைய கல்வி முறையாக அமைந்திருந்தது.

### நிகண்டும் பாவகையும்

திவாகரமும், பிங்கலமும் தொல்காப்பியரின் பெருநூல் போல நூற்பா அகவல் என்னும் சூத்திரயாப்பினால் அமைந்தவை. இச் சூத்திரங்கள் எதுகை நயம் பற்றிய ஓர் ஒழுங்கில் உள்ளன என்றாலும் மனப்பாடம் செய்து நினைவில் பதிய வைத்தல் சற்றுக் கடினமா யிருந்தது. இக் குறையை நீக்கக் கருதிப் பின் வந்த நிகண்டாசிரியன்மார் வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம் என்னும் பாவகைகளில் நிகண்டு நூல்களை இயற்றி வரலாயினர். உரிச்சொல் நிகண்டும், நாமதீப நிகண்டும் வெண்பா யாப்பினால் அமைந்தவை. கட்டளைக் கலித்துறைப் பாவால் அமைந்த நிகண்டுகளுள் ஒன்று கயாதரம்; மற்றொன்று பாரதிதீபம். கயாதர நிகண்டைக் கயாதரர் அந்தாதி அமைப்பில் யாத்தது தொடர்ந்து மனனம் செய்யும் பயன்பற்றியேயாம்.

விருத்தப்பாவில் அமைந்த நிகண்டுகளுள் சிறப்பிடம் பெற்றுத் திகழ்வது மண்டலபுருடரின் சூடாமணி நிகண்டு. இந் நிகண்டின் பா அமைப்பு எளிதில் கற்று மனப்பாடம் செய்வதற்கு ஏற்ற தன்மையது.

## சூடாமணி நிகண்டின் அமைப்பு

நிகண்டுகளுள் ஒரு பொருட் பல்பெயர்களை விளக்கும் பகுதி. ஒரு சொல்லின் பல்பொருள்களை விளக்கும் பகுதி. தொகைப்பெயர் விளக்கப் பகுதி என மூவகை அமைப்பு உண்டு. இம் மூவகையையும் கொண்ட நிகண்டுகளுள் சிறப்பிடம் பெறுவன திவாகரமும் சூடாமணியும் ஆம். இப் பகுதிகளுள் ஒவ்வொன்றை மட்டும் பொருளாகக் கொண்டு அமைந்தவையும் சிலவுள. சொற்பொருள் அறிய நிகண்டுகளில் அமைந்துள்ள ஒரு சொற் பல்பொருள் தொகுதியையே முக்கியமாக மனப்பாடம் செய்வது வழக்கம். சூடாமணி நிகண்டின் பதினோராவது தொகுதி ஒரு சொல் பல பொருள் பற்றியது. ஆதலின் இத் தொகுதியை மட்டும் தனியாகப் 'பதினொன்றாம் நிகண்டு' என உரை விளக்கத்துடன் அச்சிட்டு வெளியிட்ட நூல்களும் உள.

## ஒருசொல் பல்பொருள் தொகுதி

மண்டலபுருடர் வகுத்த ஒரு சொல் - பல் பொருள் தொகுதியில் சொற்களை எதுகை அமைப்பில் பாடல்களில் கொண்டு அவற்றின் பொருள்களையும் தொகுத்து உரைத்துள்ளார். ககர எதுகை முதலாக னகர எதுகை ஈறாகப் பதினெட்டுப் பகுதியாக இது உள்ளது.

"நடைபெறு ககரம் ஆதி னகரவீறு எதுகை யாகப்
படியிலோர் சொற்பொருட் பல் விதத்தொகை பகர லுற்றாம்"

என்று தோற்றுவாய் செய்கின்றார் மண்டலபுருடர். இதனால் ஒரு சொல்லை எதுகை முறையில் குறித்த பகுதியில் காண்பதும் எளிதாயிருந்தது. இசையோடு கற்கக் கூடியதாகவும் அதிகச் சொற்கள் அடங்குதற்குரிய விருத்தப் பாவினத்தானும் இயன்றுள்ளமையால் இவர்தம் நூல் நினைவில் வைத்துப் போற்றுதற்குப் பெருந்துணை யாயிற்று.

## ஓர் எதுகையில் பிற எதுகைச் சொல்

எதுகை முறையில் சொற்களின் பொருள் விளக்க வந்த முதல் நூலாகிய இச் சூடாமணியின் பதினொன்றாம் தொகுதியில் வேற்றெதுகைச் சொற்கள் விரவுமாறும் யாத்துள்ளார். பாடலின் முதலில் அமைந்துள்ள மோனையுறுப்பு பிற எதுகையின் கலப்பிற்கு ஒரு முதன்மைக் காரணம் ஆகலாம். முதல் வருக்கமாகிய ககர வருக்கப்பகுதியை நோக்கினால், வசி (1), மாய்பு (2), கடவுள் (3), குடங்கர் (6), சடை (11), சமம் (11), புன்கண் (13), நுதல் (14), அறல் (10), இரவி (15), அரிட்டம் (16), கருத்தல் (16), அந்தம் (16), ஞாட்பு (17), ஈரம் (17),

வரைதல் (17) என 16 வேற்றெதுகைச் சொற்களின் பொருளும் விரவப் பாடல் இயற்றியுள்ளார். இது போன்ற குறைபாடு பிற எதுகைப் பகுதிகளிலும் உண்டு.

அடைச் சொற் புணர்த்துச் சொற்களைப் பாடலில் தருவதையும் இந் நிகண்டில் ஒரு குறையாகக் கருதுவர். பொருள் அடைகளைப் பிரித்து உணர்வதில் மயக்கம் உண்டாகிறது என்றும் கூறுவர். மோனை எதுகைகளை நிறைவு செய்யும் நிலையில் அடைமொழி சேர்த்தல் தவிர்க்க இயலாத ஒன்று.

மண்டலபுருடர் வகுத்த ஒரு சொற் பல பொருள் - தொகுதி 310 பாடல்கள் கொண்ட சிறு தொகுதியாயிருப்பதனால் பலபொருட் சொற்கள் அனைத்தும் கூறப்பெறாமை மற்றொரு குறையெனக் கருதுவர்.

## வேதகிரியார் சூடாமணி

மேலே சுட்டிய குறைகளை நிறைவு செய்யும் பொருட்டாக எழுந்ததே வேதகிரியாரின் சூடாமணி. பொருள் விளக்கும் முறையில் ஓரெதுகையில் பிற எதுகைச் சொல் விரவி வருதலை வேதகிரி முதலியார் அறவே தவிர்த்துள்ளார். இது இவருடைய நூலின் ஒரு தனிச்சிறப்பு என்று கொள்ளலாம்.

பலபொருட் சொற்களை இவர் மிகுதியாகச் சேர்த்து நூலைப் பெருக்கியுள்ளார். சூடாமணியில் ககர எதுகையிலே 19 பாடல்களே உள. வேதகிரியார் நிகண்டிலே 45 பாடல்கள் காணப்படுகின்றன. சூடாமணி நிகண்டுப் பாடல்களையும் இவர் பயன்படுத்திக் கொண்டுள்ளார். அவர் வேற்றெதுகை விரவ அமைந்துள்ள இடங்களை முற்றுமாய் இவர் மாற்றியுள்ளார். மண்டலபுருடர் தந்த பொருள்களை விடவும் அதிகமான பொருள்களைப் பல சொற்களுக்குச் சேர்த்துள்ளார். சொற்பெருக்கம் பொருட் பெருக்கம் இரண்டுக்கும் இவர் பிற நிகண்டுகளையும் சதுரகராதியையும் கூடப் பயன்படுத்தியிருக்கிறார் என்பது தெரியவருகிறது. இவ்வாறாக இவர் சொற்பொருள் விரிவுகளை அறிமுகப்படுத்தியமையால் இவர்தம் நூல் சூடாமணியிலும் 273 பாடல்கள் அதிகமாய் 583 பாடல்களைக் கொண்ட பெருநூலாய்த் திகழ்கிறது. சூடாமணி நிகண்டின் விரிவாக்கமாக இந்நூல் அமைந்துள்ளமையால் இதனை அறிஞர், 'வேதகிரியார் சூடாமணி' என்பர். இப்பெயர் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் நிகண்டு பற்றி எழுதிய கட்டுரையில் தரப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

இந் நிகண்டு நூலின் தலைப்பாக முதற் பதிப்பில் 'நிகண்டு' என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. இது கொண்டு, 'வேதகிரியார் நிகண்டு' என்றும் இதனைச் சுட்டுவது உண்டு.

## நூலின் அமைப்பு

சூடாமணி நிகண்டிற்போல வேதகிரியாரும் தெய்வ வணக்கமும் நூற்பொருளும் சுட்டிய காப்புப் பாடல் ஒன்றை முதற்கண் தந்துள்ளார். அடுத்துக் ககர எதுகை முதல் னகர எதுகை ஈறாக 18 பகுதிகளாக இந்நூல் அமைந்துள்ளது. பகவனைச் சுட்டும்போது 'சொல்லிடைப் பொருள் போல்' என்னும் உவமை தரப்பட்டிருப்பதும் நூற் பொருளுக்குப் பொருத்தமாகும். 577 பாடல்களில் எதுகை அமைப்பு முற்றுப் பெறுகிறது. ஈற்றில் ஓரெழுத்தொரு சொல்லாக வரும் ஆ, கா, பா, தா முதலிய 21 சொற்களின் பொருள்களை விளக்கும் ஆறு பாடல்கள் தந்துள்ளார். இவை எதுகை முறையில் அடங்காமை யினாலே ஈற்றில் வைத்து விளக்கியுள்ளார் ஆசிரியர்.

## மூலபாடம் அமைந்துள்ள முறை

பாடல்களில் அடிவரையறையோ, அவற்றுள் சீர்ப்பிரிப்போ, சொற் பிரிப்போ எதுவும் இல்லை. இடை வெளியின்றிச் சந்திப்பிணைப்போடு அமையக் காண்கிறோம். இந்த அமைப்பு கற்ற புலவர்களையே திகைக்க வைக்கும் பான்மையது. இப்பொழுதோ வேதகிரியார் நிகண்டின் பாடல்கள் அடிவரையறைப்படி அமைக்கப் பட்டுள்ளன. மூலபாடத்தைச் சந்தி பிரித்துச் சொல்லும் பொருளும் துலங்கக் குறியீடுகள் அமைத்து, இப்பதிப்பில் தரப்பட்டிருக்கிறது. பாடலில் விளக்க எடுத்துக்கொண்ட சொற்கள் தடித்த எழுத்தில் அச்சில் வருமாறு காட்டப்பட்டுள்ளன. ஒவ்வொரு சொல்லுக்கும் அவர்தரும் பொருள்களைக் காற்புள்ளியிட்டுப் பிரித்து முடிவில் தொடர் அமைப்பின் பான்மைக்கு ஏற்ப அரைப் புள்ளியோ, முற்றுப்புள்ளியோ தரப்பெற்றுள்ளன. இத்தகு அமைப்பு முறையினால் ஒவ்வொரு சொல்லும் அதற்குரிய பொருள்களும் தெளிவாகப் பாடலில் புலப்படுதல் காணலாம். அவற்றை ஒருசேர வாசிக்கும்போது பாடலின் மோனை எதுகைச் சந்த அமைப்பும் இனிது பொருந்தித் தெளிவுற விளக்கமாய் அமைந்து இன்பம் பயக்கின்றன.

ஒவ்வொரு பாடலையும் அடுத்து அதில் ஆசிரியர் பொருள் விளக்க எடுத்துக் கொண்ட சொல்லோடு, அதன் பொருளும் மூல பாடத்தில் காணுமாறே எண்ணிட்டுத் தரப்பட்டுள்ளன. இதனால் சொற்பொருள்கள் எளிதில் நன்கு விளங்கும். ஒவ்வொரு சொல்லுக்கும் எத்தனை பொருள்கள் உள என்பதும் தெளிவாம். நூலுள்ளும் ஆசிரியர் முப்பேர், நாற்பேர் என்றாற்போலப் பல சொற்களுக்கும் தெரிவித்துள்ளார். இவ்வாறு தொகை எண் சுட்டி அமைத்தல் நிகண்டு நூல்களில் காணப்படும் ஒரு மரபே.

## வேதகிரி முதலியாரின் உரைவிளக்கம்

வேதகிரியார் சூடாமணியின் மூலபாடம் இடப்பக்கமும் உரை விளக்கம் அவ்வப்பாட்டிற்கு நேரே எதிர்ப்பக்கமும் (வலப்பக்கமும்) வருமாறு முதற்பதிப்பில் நூல் அச்சிடப்பட்டிருக்கிறது. இப்பதிப்பிலோ பாடலில் கண்டவாறு எண் சுட்டிப் பொருள் தந்துள்ள பகுதியை அடுத்து, அதன் கீழேயே ஆசிரியர் தரும் பொருள் விளக்கப் பகுதியும் தரப்பட்டிருக்கிறது. சொற்பொருள் உரையை அடுத்து முதற் பதிப்பில் தொகை எண் சுட்டிய குறிப்பை நீக்கியுள்ளோம். ஏனெனில் இப்பகுதியின் மேலேயுள்ள பாடலிற் குறிக்கப்பட்ட பொருளுக்கு எண் தரப்பட்டிருப்பதால்தான். உரைப்பகுதியில் எல்லாம் இயற்சொல்லாக அமையவில்லை. பாடலின் வரும் பெயருக்கு மாற்றுப்பெயரான கடின சொற்களும் காணப்படுகின்றன. சிற்சில இடங்களில் பாடலில் சுட்டிய அதே பெயரையே மீண்டும் உரை விளக்கத்திலும் தருகிறார்.

ஒருசொல் பலபொருள் அகராதி நூலின் இறுதியில் அச்சொல் இடம்பெற்ற பாடல் எண் குறிப்புடன் அமைத்துத்தரப்பட்டுள்ளது. இந்த அகராதியில் எதுகை முறையில் அமைந்துள்ள சொற்கள் அகர வரிசையில் அமைகின்றன.

## சொற்களில் சில மீண்டும் இடம்பெறல்

ஒருசில சொற்கள் வெவ்வேறு பாடல்களில் மீண்டும் வருதல் கூறியது கூறல்போல் தோற்றமளிக்கின்றது. ஒதுக்கம் 172, 218; வியம் 292, 304; சாயம் 309, 312. இம்மூன்று சொற்களுக்கும் அவை வரும் ஈரிடங்களிலும் தரும் பொருள்களில் மாற்றம் எதுவும் இல்லை. செயல் என்பது 'ஒழுக்கம், காவல், சேறொடு தொழிலும் ஆகும்' (198). இதே பொருள்கள் செய்யல் என்பதற்கும், 'செய்யலே ஒழுக்கம், காவல், சேறு, செய்வினை நாற்பேர்' (310) எனவருதல் ஒப்புக் காணத்தகும். கண்டம் 137, 138. இச்சொல் ஈரிடங்களில் வரினும் இவ்விரண்டிடத்தும் வெவ்வேறு பொருள்கள் சுட்டப்படுகின்றன. இராசி 339, 372. 339-ல் இருபொருள் அதிகமாகத் தரப்பட்டுள்ளன. செய்யல் 307, 310. இங்கே மேலைச் சொற்போல 310-ல் இருபொருள் அதிகம் காணப்படுகின்றன. துணர் 132, 155. 132-ல் ஒரு பொருள் அதிகம். மாந்தல் 231, 244. 244-ல் ஒரு பொருள் அதிகம். ஒரு பொருளவான தாசி 78, தாதி 207, திடம் 105, திடன் 110 என வருபவை சொல் வடிவ வேற்றுமை கருதி வந்த அமைப்பாகும். இவையெல்லாம் கூறியது கூறல் என்று தள்ளவும் இடமில்லை. இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட சொற்களின் பொருள்களை விளக்கும் இந்நூலில் இதனை ஒரு பெருங்குறை என்று கொள்வதற்கில்லை. பாடலின் அமைப்பில் இத்தகு நிலை நேர்ந்ததாகலாம். இவையெல்லாம் அந்தந்த எதுகைப் பகுதியுள் வந்திருப்பது சிறப்பாகும்.

## புதிய சொற்பொருள்கள்

இவருடைய நிகண்டினைப் பின்வந்த அகராதியாளர்களாகிய வின்ஸ்லோ முதலியோர் பயன்படுத்தியிருத்தல் இயல்பே. எனினும் மிக விரிவாய் அமைந்த தமிழ் லெக்ஸிகனில் கூட இடம்பெறாத சொற்கள் இந்நிகண்டினால் அறியப்படுகின்றன. மூக்கு என்னும் பொருளில் 'மோர்ப்பம்' (வே.சூ.21) பறவை மூக்கு என்னும் பொருளில் 'இலமேசு' (வே.சூ. 138). பூனை என்பதனைச் சுட்டும் 'மனைப்புலி' (வே.சூ.101) என்னும் சொல். திண்ணியன் என்னும் பொருளில் 'யவணன்' என்பது (வே.சூ.146) அச்சப்பொருளில் 'பேம்' என்பது வரும் என்பது தொல்காப்பியம், சங்கப் பாடல்களாலும் இது தெரியவரும். இந் நிகண்டில் 'போம்' என்னும் சொல் அச்சப்பொருள் தருவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. 'பூமகள் பொறிபூ மின்ஆம்; போம் அச்சம் அசைச் சொல் ஆகும்' (வே. சூ. 279) என மோனையில் இச்சொல் அமைதலின் வேதகிரியார் இங்குக் கருதியது 'போம்' என்பதே என்பது தெளிவு. லெக்ஸிகனில் அசைச்சொல் என்னும் பொருள் மட்டும் தரப்பட்டிருக்கிறது. இவ்வாறே 'சாயல் மென்மை' எனத் தொல்காப்பியம் சுட்டுவதனை இந்நிகண்டு 'சாயலே மேன்மை' எனக் குறிப்பிடுகிறது (வே.சூ. 320). மென்மை என்பது மேன்மை என்றும் படிக்கத் தக்கதாம்: படிப்பதால் வந்த இந்தச் சொல் வடிவ மாற்றத்தால் மேம்பாடு என்னும் பொருள் தருவதாக இது அமையலாயிற்று. இந்த மாற்றத்தால் பொருள் வேறுபட்டு வருதலைத் தமிழ் லெக்ஸிகனும் எடுத்துக் காட்டியுள்ளது.

வேதகிரியார் சூடாமணி 320-ல் 'ஆயம்' என்னும் சொல்லிற்கு 'மெல்லரி' என்னும் பொருள் தந்து, 'பம்பை மேளம்' என உரை வரையப் பட்டுள்ளது. பறை வகையைச் சுட்டுவதாக 'மெல்லரி' என்பது தமிழ் லெக்ஸிகனில் இடம்பெறவில்லை. 'கடிகவர் பொலிக்கும் மெல்வாய் எல்லரி' (மலைபடு.10) என எல்லரி என்பது இலக்கிய வழக்கில் காணப்படுகிறது. இவ்வாசிரியர் தரும் மெல்லரி என்பது இதன் மாற்று வடிவமான சொல், லெக்ஸிகன் மெல்லரி என்பதற்கு 'உயர்ந்த அரிசிவகை' என்னும் பொருள் மட்டும் தந்துள்ளது. இந்நிகண்டினால் பறைவகையைச் சுட்டவும் இச்சொல் பின்னாளில் பயன்பட்டுள்ளமை தெரியவரும்.

'உரை என்பதற்கு உயர்ச்சி, பொன் என்னும் இருபொருள்கள் (வே.சூ.360) தரப்பட்டுள்ளன. இவை லெக்ஸிகனில் காணப்பெறாத புதுப்பொருள்கள். உரைத்து மாற்று அறியப்படுதலின் பொன்னுக்கு 'உரை' என்னும் பெயரும் உளதாயிற்று என்பது கருதற்பாற்று. 'சீலம்' என்பதற்குக் 'கையாறு' என்றும் (வே.சூ.424) அதற்கு விளக்கமாகச் சரித்திரம் என்பதும் குறிக்கப்பட்டிருக்கிறது. 'கையாறு' என்பதற்கு 'ஒழுக்கநெறி' என்பது ஒன்றே லெக்ஸிகனில் காணப்படும் பொருள். சரித்திரம் என்னும் பொருள் புதுமையே.

'ஓலமே பாராவாரம் ஒலியும் சிம்மகமும் ஆகும்' (வே.சூ. 429). இங்கே 'சிம்மகம்' என்பதற்குப் 'பாம்பு' என்று உரையில் காணப்படுகிறது. லெக்ஸிகனில் 'சிம்மதம்' பாம்பு என்று சதுரகராதி நோக்கித் தரப்பட்டுள்ளது. இதன் மூலச் சொல்லைக் கருதும்பொழுது 'சிம்மகம்' என்பதும் பொருத்தமான சொல்வடிவம் என்று தெரியவருகிறது. 'சிம்மகம்' என்பது லெக்ஸிகனில் இடம்பெறவில்லை. 'காலியே தொறு விரேயம்' (வே.சூ. 431) என்பதில் 'விரேயம்' என்பதற்குக் 'கள்' என்று பொருள் தந்துள்ளனர். விரேயம் என்னும் சொல் லெக்ஸிகனில் இடம் பெறவில்லை. 'அவ' என்றும் சொல்லிற்கே 'இறங்கல்' என்னும் பொருள் லெக்ஸிகனில் தரப்பட்டுள்ளது. வேதகிரியார், 'அவா என்பது இறங்கல், ஆசை' (வே.சூ.457) என்று குறிப்பிடுகிறார். 'அவ' என்பதனையே இவர் அவா என்று ஆளுகின்றார். இவ்வாறாகப் புதிய சொற்கள், புதிய பொருள்கள பல வேதகிரியார் சூடாமணியால் அறியலாம்.

சிற்சில சொற்களுக்குப் புதிய பொருள்கள் வேதகிரியார் நிகண்டினால் தெரியவருகின்றன. அகல்-அல்குல் என்பது புதுப்பொருள் (வே.சூ.14) வட்டில் என்பதற்கு வழி என்னும் பொருளில் 'உந்தரம்' என்பது (வே.சூ.112), தலை என்னும் பொருளில் 'மூர்த்தினி' என்னும் சொல்; திரட்சி என்னும் பொருளில் 'அவையல்' என்னும் சொல் (வே.சூ.137)கோணாய் என்பதற்கு 'ஆணரி' என்னும் பொருள் (வே.சூ.145); கணவன் என்னும் பொருளில் 'பத்தா' என்னும் வழக்கு (வே.சூ.155) வேதகிரியார் சூடாமணி 182-ல் 'கரிகாடு' யானை திரியும் காடு என்று உரை விளக்கம் உள்ளது. இப்பொருள் பயக்கக் 'கரிக்காடு' என்று வரல் வேண்டும். கரிகாடு எனில் வினைத் தொகையாய்க் கரிந்த காடு, சுடுகாடு என்னும் பொருளதாய் விடும். இப்பொருள்களையே இச்சொல்லுக்கு லெக்ஸிகன் காட்டுகிறது. 'கரிக்காடு' என்பது லெக்ஸிகனில் இல்லை. 291-ல் 'ஆதி' என்பதற்கு 'வெறுப்பு' என்று உரை காண்கிறது. லெக்ஸிகனில் மனோவியாதி என்னும் பொருள் மட்டுமே உள்ளது. 'பாவை' என்பது திருமகள் ஆடிய கூத்து எனச் சிலப்பதிகாரம் முதலியவற்றால் தெரியவரும். வேதகிரியார் இதனைப் 'பரவை' எனக் கொள்கிறார். பாவை என்பதனைப் பரவை எனவும் படிக்க இடமுண்டு. 'பரவை வாருதி, பரப்பு பங்கய மாதின் கூத்து ஆம்' (வே.சூ. 325) என்கிறார் வேதகிரியார். இவருக்கு முந்திய நூலாசிரியராகிய பிங்கலரும் பிங்கலந்தையில் 'பரவை' என்று சுட்டுதலும் காணத்தகும். எனவே திருமகள் கூத்தைக் குறிக்கப் பாவை, பரவை என இரு சொற்கள் வழக்கில் வந்துவிட்டமை புலனாகும். 'தேனீ' என்னும் பொருளில் சாகம், சரகம் என இருசொற்கள் இடம் பெற்றதும் படிப்பதினால் வந்த விளைவே. வேதகிரியார் 'சாகம்' என்னும் வடிவத்தையே ஆள்கிறார் (வே.சூ.332). இவ்வாறாகப் பல புதுச்சொல், புதுப்பொருள்களை வேதகிரியார் நிகண்டு நமக்கு அறிமுகப்படுத்துகிறது.

## வேதகிரி முதலியார்

இனி, வேதகிரி முதலியாரின் வரலாறு பற்றிய செய்திகளை நோக்குவோம். இவர் பிறந்த ஊர்ப்பெயருடன் சார்த்திக் 'களத்தூர் வேதகிரி முதலியார்' எனக் குறிப்பிடுவர். சென்ற 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரும்புலவர்களுள் இவரும் ஒருவர். இவர்தம் நூல்களை நோக்கி இவருடைய வரலாற்றை ஆசிரியர் ந.சி. கந்தையாபிள்ளை தாம் இயற்றிய தமிழ்ப்புலவர் அகராதியில் பின்வருமாறு தெரிவித்துள்ளார்:

**வேதகிரி முதலியார்** (1795 - 1852). இவர் தொண்டை மண்டலத்திலுள்ள களத்தூரிற் பிறந்தவர். இராமாநுசக் கவிராயரின் மாணவர். இவர் மனுநீதி சதகம், மனுவியாக்கியான சதகம், சன்மார்க்க சதகம், நீதி சிந்தாமணி என்னும் நூல்களைச் செய்தவர். இலக்கணக் களஞ்சியம், இலக்கியக் களஞ்சியம் என்னும் இரு தொகுப்பு நூல்களும் இவராற் செய்யப்பட்டன. இலக்கணக் களஞ்சியத்திலே இலக்கணத் திரட்டு, பிரபந்த தீபம், கவிசாகரம், குவலயானந்தம், அரியவிதி, மயேச்சரம், அவிநயம், பஞ்சலட்சணப்பயன் முதலிய இலக்கண நூல்களிலிருந்து பல சூத்திரங்கள் எடுத்து எழுதியுள்ளார். இலக்கியக் களஞ்சியத்துள் கயாதர நிகண்டு, ஏகபாத நிகண்டு, பொதிய நிகண்டு, அவ்வை நிகண்டு முதலிய நூல்கள் எடுத்தெழுதியுள்ளார். அமெரிக்-கமிஷன் 1843-ல் அச்சிட்ட சூடாமணி நிகண்டின் 11-வது பகுதியில் இவர் பாடல்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

(தமிழ்ப்புலவர் அகராதி, பக். 387 - 88)

இவர் இறுதியில் சுட்டிய 11-வது நிகண்டு என்பதுதான் இப்பொழுது வெளியிடப்படுகிற இந்த வேதகிரியார் சூடாமணி. இதில் வரும் பதிப்புப் பற்றிய குறிப்பிலிருந்து இவர் துளுவ வேளாள மரபைச் சார்ந்தவர் என்பதும் இவர்தம் தந்தை பெயர் சாமி முதலியார் என்பதும் தெரியவருகின்றன. இந்நூல் புலவரின் வாழ்நாளிலேயே அவர்தம் ஒப்பு-தலுடன் வெளியிட்டிருக்கவேண்டும் என்பதும் புலனாகிறது. 1842-ல் யாழ்ப்பாணத்து அகராதி என்னும் மானிப்பாய் அகராதி வெளிவந்தது. இது சதுரகராதிக்குப் பின்வந்த ஒருமொழி அகராதியாகும். இதற்கு ஓர் அனுபந்த அகராதியைச் சாமி வேதகிரி முதலியார் சேர்க்கலாயினர். இச்சேர்ப்பில் கிட்டத்தட்ட 6500 சொற்கள் உள்ளன. இதனால் இவர் சூடாமணி நிகண்டின் விரிவாக்கம் செய்ததோடு அகராதி வளர்ச்சிக்கும் செய்த பெரும்பணி நமக்குத் தெரியவருகிறது.

## நிகண்டு நூல் அறிமுகம்

நிகண்டுநூல் பயிற்சி பின்னாளில் ஆங்கில முறைக் கல்விப் பயிற்சியால் அறவே நின்று போயிற்று. நிகண்டுகள் சொற்பொருளா-ராய்ச்சிக்கு எவ்வளவு இன்றியமையாதவை என்பதும் உணரப்படாமல்

இருந்தது. நிகண்டுகள் பேணுவாரற்றுக் கிடந்த நிலையில் நிகண்டுகளின் தன்மையையும் பயனையும் விளக்கி நிகண்டு நூல்களை அறிமுகம் செய்த பெருமை பேராசிரியர் எஸ்.வையாபுரிப் பிள்ளை அவர்களுக்கு உண்டு.

திவாகரம், பிங்கலம், சூடாமணி, உரிச்சொல் நிகண்டு என்பவை சென்ற நூற்றாண்டில் பதிப்பிடப்பெற்றன. இவை தவிர எத்தனையோ நிகண்டுகள் சுவடிகளில் அமைந்திருந்தன. அகராதிக்கு நிகண்டுகள் ஆதார நூல்களாய் விளங்குதல் கண்டு பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் தாம் தமிழ்ப்பேரகராதிப் பணியை மேற்கொண்டபின், 'தமிழகராதியின் ஆதார நூற்றொகுதி' என்னும் வரிசையில் நாமதீப நிகண்டு, பொதிகை நிகண்டு, கயாதர நிகண்டு, அரும்பொருள் விளக்க நிகண்டு ஆகியவற்றை வெளியிட்டார்கள். கைலாச நிகண்டு சூடாமணி, பிங்கல நிகண்டு ஆகியவற்றைப் பத்திரிகை வழி பதிப்பிக்கத் தொடங்கினார். ஆனால் அவை தொடக்க நிலையோடு அமைந்து விட்டன; நூல் பகுதி முற்றும் தொடர்ந்து வெளிவரவில்லை.

> "சூடாமணி நிகண்டொன்று தவிர, அச்சில் வந்துள்ள மற்றைய நிகண்டுகட்கு இதுவரை நல்ல பதிப்புக்களே கிடையா. பல நிகண்டுகள் அச்சியற்றப் பெறவே இல்லை. நிகண்டுகள் செவ்வையாய் அச்சியற்றப் பெறாவிடின் தற்காலத்தே அத்தியாவசியமாக வேண்டப்படும் தமிழகராதி திருத்தம் எய்திப் பெரு நலம் பயப்பதாகாது"

என்று நாமிதீப நிகண்டுப் பதிப்புரையில் பேராசிரியர் எடுத்துரைக் கின்றார்.

பழைய நிகண்டுகளுள் ஒன்றாகிய திவாகரம் பல்வேறு இடைச் செருகல்களுடன் அச்சில் வெளியிடப்பட்டிருக்கிறது என்பது கண்டு சுவடிகளை ஆராய்ந்து திருத்தமான மூலபாடம் வெளியிட வேண்டும் எனப் பேராசிரியர் முயன்று வந்தார். பல சுவடிகளை ஒப்பு நோக்கிப் பாடவேறுபாடுகளைத் தம்மிடமுள்ள அச்சுப்புத்தகத்தில் காகிதம் இடைவைத்துக் காட்டுமானம் செய்து குறித்து வைத்தார்கள். அவர்கள் விரும்பிய வண்ணம் அப்பணி நிறைவேற வாய்ப்பில்லாதாயிற்று. பேராசிரியர் மு.இராகவையங்காரும் திவாகர மூலபாடம் ஒன்று அச்சிடுதற்காகச் சித்தம் செய்து வைத்திருந்தார். இதுவும் வெளிவரவில்லை.

## அகராதித் துணை

அகராதியாக்கத்திற்குப் பெருந்துணையாவன நம் மொழியில் பல்வேறு காலத்தும் தோன்றிய நிகண்டுகள் ஆகும். "நிகண்டுகள்

அனைத்தையும் பயன்படுத்தித் தொகுக்கப்பெற்ற அகராதி இதுவரை வெளிவரவில்லை" என்று பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் அரும்பொருள் விளக்க நிகண்டு முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்கள். "இதுவரை வெளிவந்த நிகண்டுகளில் கூடச் சிலவற்றின் படிகள் கிடப்பது இன்று அருமையாயிருக்கிறது. இத்தகைய நூல்கள் மீண்டும் புதிய முறையில் அகராதி முதலியவற்றுடன் வெளியிடப்படுதல் வேண்டும். இன்னும் பல நிகண்டுகள் வெளிவர வேண்டுவனவாயும் உள்ளன. நிகண்டுகளின் அடிப்படையில், நிகண்டுச் சொற்பொருள் அகராதி ஒன்று தனிப்படத் தொகுத்தலும் அவசியமே. அப்பொழுதுதான் இலக்கியம், இலக்கணம் முதலிய நூல்களின் ஆட்சியும் நிகண்டு ஆட்சியும் தெளிவுற அறிய இயலும். நிகண்டுச் சொற்களின் மூலங்கள் பற்றி அறியவும் எளிதாம்". பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் வெளியிட்ட நாமதீப நிகண்டு, அரும் பொருள் விளக்க நிகண்டு ஆகியவை அகராதிகளுடன் அமைந்துள்ளன. இந்த வகையில் பிற நிகண்டுகளுக்கும் அகராதிகள் தனித்தனி வந்தால், பின்பு எல்லாம் ஒருசேர நிகண்டு அகராதி அமைத்தல் கூடும். எனவே நிகண்டுகளை அகராதிச் சேர்க்கையுடன் வெளியிடுதல் முதற்பணியாகும்.

## நிகண்டுத் துறையில் என் பணி

நான் சென்னைப் பல்கலைக் கழகத்தின் பணிபுரிந்தபோது பல்கலைக்கழக மானியக்குழு உதவியுடன் திவாகர நிகண்டின் ஆய்வில் ஈடுபட்டேன். பல்வேறு இடங்களிலுமுள்ள சுவடிகள், அச்சுப் புத்தகங்களை ஒப்புநோக்கி ஆய்வுப் பதிப்பாக அமைத்தேன். இது இப்பொழுது சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் அச்சியற்றப்பட்டு இரண்டு தொகுதிகளாக முறையே 1990, 1993ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ளன. இதில் சொற்பொருள் அகராதி விரிவாக அமைந்துள்ளது. நிகண்டு அகராதிக்கு முன் மாதிரியாக உள்ளது இந்தச் சொற்பொருள் அகராதி.

திவாகரத்திற்கு ஒப்பாக வைத்து மதிக்கப்பெறும் 'பாரதிதீபம்' என்னும் பழைய நிகண்டு நூலைச் சுவடியிலிருந்து எடுத்துப் பதிப்பித்து 1980-ல் சென்னை பல்கலைக்கழக வாயிலாக வெளியிட்டேன்.

அதன்பின் மதுரை-காமராசர் பல்கலைக் கழகத்தில் தமிழியற் புலத்திலே நான் ஆய்வாளனாகப் பணிபுரிந்தபோது நிகண்டு ஆய்வினையே மேற்கொண்டேன். 'நிகண்டுச் சொற்பொருட் கோவை'-தெய்வப் பெயர்' என்னும் நூல் அப் பல்கலைக் கழக வாயிலாக வெளிவந்தது. அப்பொழுது நான் ஆராய்ந்த பல நிகண்டுகளுள் வேதகிரியார் சூடாமணியும் ஒன்று.

## வேதகிரியார் சூடாமணி - முதற்பதிப்பு

இப்பதிப்பின் முகப்புப் பக்கத்தில் 'நிகண்டு - ஒரு சொற் பல பொருட்டொகுதி - மூலமும் உரையும்' என்று தலைப்புத் தரப்பபட்டுள்ளது. அதன்பின்னர், 'யாழ்ப்பாணத்துப் புத்தக சங்கத்தாரால் பிரசித்தம் பண்ணப்பட்டது' என்றும், 'யாழ்ப்பாணம் அமெரிக்க மிஷியோன் பிரஸ் - 1843' என்றும் பதிப்பு விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நூலின் வெளியீடு பற்றிய ஒரு குறிப்பு அடுத்து இடம்பெற்றுள்ளது. அது வருமாறு:

"இஃது வீரை மண்டலவன் நிகண்டடினுள் அடங்காத பொருள்கள் பற்பல நிகண்டகராதிகளுள் காணப்பட்டனவற்றுள் கற்போர்க்கு உபயோகமானவற்றையும் அந்நிகண்டின் ஒரு சொற் பலபொருள் தொகுதியுள் சேர்த்துச் சொல்லியங்ககுறும் பொருள் துகளற
உணர்ந்து கல்வியங் கடற்கரை காணுறீஇ ஓங்கித்
தொண்டைநன் நாட்டுத் துளுவ வேளாளருள்
எண்தரும் களத்தூர்க்கு இறைமைசேர் சாமிசெய்
நற்றவத் துதித்த நாற்கவி ராயன்
பொற்புவி வியப்புறும் புலவர் சிகாமணி
தாதவிழ் குவளையந் தாமமார் புயவரை
வேதகிரி முதலியார் எனச் செந்தமிழ்
நாடெங்கணும் விளங்காநின்ற நாமமுடையார்
இயற்றிய சில செய்யுட்களையும் கோத்துக்
கற்போர்க்கு எளிதிற் கற்கவோர் வழியா
யாழ்ப்பாணத்துப் புத்தக சங்கத்தாரால்
கிறிஸ்து வருஷம் ௲அளசங க்குச்
சரியாக நிகழாநின்ற சோபகிருது வருஷம்
பிரசித்தஞ் செய்யப்பட்டது"

1843ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் தமிழ்ச் சங்கத்தாரால் வெளியிடப் பெற்ற இந்நூல் தமிழ் கூறும் நல்லுலகத்தில் ஓர் அரும் புதையலாயிற்று. தமிழ் லெக்ஸிகனுக்குக் கூட இந்நூலின் அச்சுப்படி கிட்டவில்லை. இதன் அச்சுப்படி ஒன்று சென்னை மறைமலையடிகள் நூலகத்தில் உள்ளது. இதனைத் தட்டச்சுச் செய்து பெற்று மூலபாடம் சொற்பொருளகராதி என்பவற்றையும் எழுதி முற்றுவித்திருந்தேன்.

## புதுப்பதிப்பு

தமிழ் இலக்கிய இலக்கணம் நிகண்டு நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டுத் தமிழுலகுக்கு வழங்கிவரும் திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக மேலாளர் இரா.முத்துக்குமாரசுவாமி அவர்களை 1988ஆம் ஆண்டு அணுகி, இந்நிகண்டு நூலை கழகத்தின் வழி வெளியீடு

செய்யக் கேட்டுக் கொண்டேன். அவர்களும் வெளிவிடுவதாக ஒப்புக் கொண்டு மூலப்படிகளைப் பெற்றுக் கொண்டார்கள். ஆயினும் ஆண்டு பலவாகப் பல முறை நினைவூட்டியும் இந்நூல் அச்சிடப் பெறவே இல்லை. இவற்றை ஒன்றரை ஆண்டுகளுக்கு முன் நானே அச்சிடத் துணிந்து மூலப்படிகளைத் தருமாறு கேட்டேன். அப்பொழுது அவர்கள் “அந்நூலின் படிவம் எங்கோ தவறாக வைக்கப்பட்டிருக்கிறது. தேடித் தருகிறேன்” என்று சொல்லிவந்தார்கள். பலமுறை நினைவூட்டிக் கடிதம் எழுதியும் பல முறை நேரில் சந்தித்தும் ப்யனில்லை. அம்மூலப்படிவம் அவர்களுளடைய சுவடிக் கடலில் சங்கமமாகிவிட்டது போலும். முதலில் அச்சிடுவதற்காக நான் கைப்பட எழுதிவைத்திருந்த மூலப் படிவத்தின் கதி இவ்வாறாயிற்று.

சென்ற ஆண்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களிடம் சென்ற நூற்றாண்டில் வெளிவந்த ‘ஒருசொல் பல்பொருள் விளக்கம்’ குறித்தும் ‘வேதகிரியார் சூடாமணி’ பற்றியும் பேசிக் கொண்டிருந்தேன். அவை தொடர்பான என் பணி நிலை பற்றியும் தெரிவித்தேன். அவர்கள் அந் நிகண்டுகள் வெளிவர ஆவன செய்வதாக வாக்களித்தார்கள். வேதகிரியார் சூடாமணியின் அச்சுக்கு உரிய மூலப்படிவத்தை உருவாக்க எனக்கு உதவ நிறுவனப் பணியாளர் திரு. பூமிநாகநாதன் அவர்களை அனுப்பி வைத்தார்கள். நான் சொல்லிய வண்ணம் நூலின் மூலப்படியை அவர் எழுதி நிறைவு செய்தார். இந்நூலுக்கு உரிய அகராதியையும் என் விருப்பிற்கிணங்க செய்து தந்தார். இவருக்கு என் உளமார்ந்த நன்றியும் நல்வாழ்த்தும் உரியனவாகுக.

வேதகிரியார் சூடாமணியின் பதிப்புப்படிவம் தொலைந்து விட்டதே என்ற ஏக்க நிலையில் இந்நூற்பதிப்பிற்குப் புத்துயிர் அளித்த பெருமை உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களையே சாரும்.

இப் புதிய பதிப்பைக் காணும்போது எனக்கு உண்டாகும் மகிழ்ச்சிக்கு அளவில்லை. சிறையிருந்த செல்வி சீதாப்பிராட்டியிடம் அனுமன் இராமனுடைய கணையாழியைக் கொடுத்தபோது, அப்பிராட்டியின் மகிழ்ச்சியையும் பூரிப்பையும் கம்பர் பின்வருமாறு எடுத்துரைக்கின்றார்:

'இறந்தவர் பிறந்த பயன்
எய்தினர்கொல் என்கோ?
மறந்தவர் அறிந்து உணர்வு
வந்தனர்கொல் என்கோ?
துறந்த உயிர் வந்து இடை
தொடர்ந்தது கொல் என்கோ?
திறம் தெரிவது என்னைகொல்,
இந்நல்லுதவி செய்கை?'

'இழந்த மனிபுற்று அரவு
எதிர்ந்தது எனல் ஆனாள்;
பழந்தனம் இழந்தன
படைத்தவரை ஒத்தாள்;
குழந்தையை உயிர்த்த
மலடிக்கு உவமை கொண்டாள்:
உழந்து விழி பெற்றது ஓர்
உயிர்ப் பொறையும் ஒத்தாள்'
(கம்ப. உருக்காட்டு. 64-65)

இவ்வாறான பேருவகையே என்னை ஆட்கொண்டுள்ளது. இந்நிகண்டு வெளிவரப் பலவாறு உதவிய எல்லாருக்கும் சீரிய முறையில் அச்சிட்ட அச்சகத்தாருக்கும் பெரிதும் நன்றிக் கடப்பாடு உடையேன்.

## நிகண்டுப் பதிப்பின் இன்றியமையாமை

முன்னாளில் அச்சிடப்பட்டு நீண்ட காலம் பதிப்பிக்கப்படாமல் மறைந்து கிடக்கும் நிகண்டு நூல்களையும், இதுவரை அச்சில் வராத நிகண்டு நூல்களையும் ஆய்ந்து பதிப்பிக்கும் முயற்சியில் பலகாலம் ஈடுபட்டு வருகிறேன். முந்திப் பதிப்பித்த நிகண்டுகளில் பலவும் ஏட்டுச் சுவடிகளின் துணையால் மீண்டும் பரிசோதிக்கப் பெற்று வெளியிடும் நிலையில்தான் உள்ளன. அச்சில் வந்தவற்றுள் பல மூலபாடமாக மட்டுமே பதிப்பிக்கப்பட்டுள்ளன. மூலபாடங்களைச் சரிபார்த்து, உரைவிளக்கம், சொற்பொருள் அகராதி முதலியனவும் சேர்த்து வெளியிட்டால்தான் அவற்றை எளிதில் இந்நாளில் பயன்படுத்த இயலும். நிகண்டு பற்றிய ஆய்வுகளுக்கும் நிகண்டுகளை அடிப்படை யாகக் கொண்டு தொகுக்கப்பெறும் தனி அகராதிகளுக்கும் பயன்படும் வகையில் புதிய பதிப்பு வருதல் இன்றியமையாததாகும். இந்த வகையில் வேதகிரியார் சூடாமணி 155 ஆண்டுகளுக்குப்பின் மறுபிறப்புப் பிறந்து தமிழுலகில் நடைபோட வருகிறது. இதனை அறிஞர் உலகம் போற்றிப் பயன்கொள்வதாக.

கவிமணி நிலையம், மு.சண்முகம்பிள்ளை
15.8.1997.

## பொருளடக்கம்

# வேதகிரியார் சூடாமணி நிகண்டு

## ஒருசொற்
## பலபொருட்பெயர்த் தொகுதி

### பாயிரம்

"இஃது வீரை மண்டலவன் நிகண்டினுள் அடங்காத பொருள்கள் பற்பல நிகண்டகராதிகளுள் காணப்பட்டனவற்றுள் கற்போர்க்கு உபயோகமானவற்றையும் அந்நிகண்டின் ஒரு சொற் பலபொருள் தொகுதியுள் சேர்த்துச் சொல்லியங்குறும் பொருள் துகளற
உணர்ந்து, கல்வியங் கடற்கரை காணுறீஇ ஓங்கித்
தொண்டைநன் நாட்டுத் துளுவ வேளாளருள்
எண்தரும் களத்தூர்க்கு இறைமைசேர் சாமிசெய்
நற்றவத் துதித்த நாற்கவி ராயன்
பொற்புவி வியப்புறம் புலவர் சிகாமணி
தாதவிழ் குவளையந் தாமமார் புயவரை
வேதகிரி முதலியார் எனச் செந்தமிழ்
நாடெங்கணும் விளங்காநின்ற நாமமுடையார்
இயற்றிய சில செய்யுட்களையும் கோத்துக்
கற்போர்க்கு எளிதிற் கற்கவோர் வழியா
யாழ்ப்பாணத்துப் புத்தக சங்கத்தாரால்
கிறிஸ்து வருஷம் ௲அ௱௫௰ க்குச்
சரியாக நிகழாநின்ற சோபகிருது வருஷம்
பிரசித்தஞ் செய்யப்பட்டது"

## சிறப்புப் பாயிரம்

சொல்லிடைப் பொருள்போல் எங்கும்
துவன்றிய பகவன் பாதம்
எல்லியும் பகலும் போற்றி
இரும்பெயர் பொருள் முன் வைத்து
நல்லியற் ககரம் ஆதி
னகர ஈறு எதுகையாகப்
பல்பொருள் ஒருசொல் உற்ற
தொகுதியைப் பகர்தல் உற்றாம்

## இதன் பொருள்

சொல்லிடை - மொழியிடத்தே; பொருள்போல் - அருத்தஞ் செறிந்திருப்பது போல; எங்கும் - பிரவஞ்சம் யாவற்றினும்; துவன்றிய- வியாபித்திராநின்ற; பகவன்பாதம் - ஞானவடிவாய கடவுளது சீர் பாதத்தை; எல்லியும் பகலும் போற்றி - இரவு பகல் விடாது வணங்கி; இரும் - பெருமைபொருந்திய; பெயர் - பெயரை; பொருள் முன்வைத்து- பொருள்கட்கு முன்பு வைத்து; நல்லியல் - நல்லொழுங்குடைய; ககரமாதி- ககராக்கர முதல்; னகரமீறு - னகராக்கரம் இறுவாய்; எதுகையாக - எதுகை பொருந்த; பல்பொருள் ஒரு சொல் உற்ற தொகுதியை - ஒரு சொற்பலபொருள் தொகுதியை; பகர்தல் உற்றாம் - சொல்வாம் என்றவாறு.

---

* இந்த அடையாளம் கவிராச வேதகிரி முதலியார் செய்த செய்யுளுக்கு.

† இஃது அவர் செய்த செய்யுளிற் கலந்தவைகளுக்கு

இந்த அடையாளங்கள் பாடல்களின் தொடர் எண்ணை அடுத்துத் தரப்பட்டுள்ளன.

# வேதகிரியார் சூடாமணி

## ககர எதுகை

1. **பகவனே** ஈசன், மாயோன், பங்கயன், சினனே, புத்தன்;
**பகல்** நடு, நாள், முகுர்த்தம், பதியாணி, பரிதி, தேசு;
**மகரம்** ஓர் இராசி, வன்மீன், மலர்த்தாது, சுறவு, காதல்;
**அகம்** மனம், மனை, உள், பாவம், அகலியம், இடம், ஆன்மாவே

**பகவன்** : 1. ஈசன் 2. மாயோன் 3. பங்கயன் 4. சினன் 5. புத்தன்
**பகல்** : 1. நடு 2. நாள் 3. முகுர்த்தம் 4. பதியாணி 5. பரிதி 6. தேசு
**மகரம்** : 1. ஓர்இராசி 2. வன்மீன் 3. மலர்த்தாது 4. சுறவு 5. காதல்
**அகம்** : 1. மனம் 2. மனை 3. உள் 4. பாவம் 5. அகலியம் 6. இடம் 7. ஆன்மா

***பகவன்*** -- சிவன், திருமால், பிரமன், அருகன், பௌத்தன்
***பகல்*** -- மையம், தினம், மூன்றேமுக்கானாழிகை, நுகத்தினடு - வாணி, சூரியன், பிரகாசம்.
***மகரம்*** -- மகரராசி, முதலை, பூஞ்சுண்ணம், சுறாமீன், விருப்பம்
***அகம்*** -- இதையம், வீடு, உள், அதருமம், மரப்பொது, இடம், ஆத்துமா

2. **சிகரி** கோபுரமே, வெற்பு, சீறெலி, கருநாரைப்பேர்;
**சிகழிகை** மயிர்முடிப்பேர், சிறந்த வாசிகை, தேமாலை;
**சிகரம்** வெற்பு, அலை, கோடு, உச்சி, கவரிமா, திவலை, காக்கை;
**மகம்** யாகம், ஓர்நாள் என்ப; **மகன்** மைந்தன், சிறந்தோன்ஆமே.

**சிகரி** : 1. கோபுரம் 2. வெற்பு 3. சீறெலி 4. கருநாரை
**சிகழிகை** : 1. மயிர்முடி 2. வாசிகை 3. தேமாலை
**சிகரம்** : 1. வெற்பு 2. அலை 3. கோடு 4. உச்சி 5. கவரிமா 6. திவலை 7. காக்கை
**மகம்** : 1. யாகம் 2. ஓர்நாள்
**மகன்** : 1. மைந்தன் 2. சிறந்தோன்

***சிகரி*** -- கோபுரம், மலை, எலி, கருநாரைப்பறவை
***சிகழிகை*** -- கொண்டை, கோத்தமாலை, தொடுத்தமாலை
***சிகரம்*** --மலை, கடற்றிரை, மலைமுடி, தலை, மானமா, துளி, காகம்
***மகம்*** -- வேள்வி, மகநட்சத்திரம்
***மகன்*** -- புத்திரன், உத்தமபுருடன்

3. **இகல்** பகை, வலி, போர், ஒப்பு, ஆம்;
**இகுளையே** தோழி நட்பு;
**புகர்** என்ப மழைக்கோள், குற்றம்,
**புற்கு** எனும் நிறமும் அப்பேர்;

**நகம்**மலை, உகிர், மரப்பேர்;
**நகர்** மனை, கோயில், ஊர் ஆம்;
**ககனம்** விண், படையினோடு,
காடும், புட்பொதுவும் ஆமே.

**இகல்** : 1. பகை 2. வலி 3. போர் 4. ஒப்பு
**இகுளை** : 1. தோழி 2. நட்பு
**புகர்** : 1. மழைக்கோள் 2. குற்றம் 3. புற்கு எனும் நிறம்
**நகம்** : 1. மலை 2. உகிர் 3. மரம்
**நகர்** : 1. மனை 2. கோயில் 3. ஊர்
**ககனம்** : 1. விண் 2. படை 3. காடு 4. புட்பொது

***இகல்*** -- பகை, ஆண்மை, யுத்தம், சமம்
***இகுளை*** -- பாங்கி, சிநேகம்
***புகர்*** -- சுக்கிரன், தீது, கபிலநிறம்
***நகம்*** -- பருப்பதம், விரனகம், விருக்கம்
***நகர்*** -- வீடு, கோயில், ஊர்
***ககனம்*** -- ஆகாயம், சேனை, காடு, பறவைப்பொது

4. **திகிரி** தேர், மூங்கில், வட்டம், தேருருள், ஆழி, வெற்பு ஆம்;
**சிகி** என்ப பரிபுரம், தீ, தீதுஉறு கேது, மஞ்ஞை;
**ஞெகிழி** நூபுரம், புலிங்கம், நெருப்புஉறுகொள்ளி, தீஆம்;
**எகினம்** நாய், புளி, மா, நவ்வி, கவரிமா, நீர்நாய், அன்னம்.

**திகிரி** : 1. தேர் 2. மூங்கில் 3. வட்டம் 4. தேருருள் 5. ஆழி 6. வெற்பு
**சிகி** : 1. பரிபுரம் 2. தீ 3. கேது 4. மஞ்ஞை
**ஞெகிழி** : 1. நூபுரம் 2. புலிங்கம் 3. நெருப்பு உறுகொள்ளி 4. தீ
**எகினம்** : 1. நாய் 2. புளி 3. மா 4. நவ்வி 5. கவரிமா 6. நீர்நாய் 7. அன்னம்

***திகிரி*** -- இரதம், மூங்கில், விருத்தம், தேர்ச்சில், சக்கரம், மலை.
***சிகி*** -- பாதசிலம்பு, நெருப்பு, செம்பாம்பு, மயில்
***ஞெகிழி*** -- பாதசிலம்பு, நெருப்புப்பொறி,நெருப்புக்கொள்ளி, நெருப்பு.
***எகினம்*** -- நாய், புளியமரம், மாமரம், மான், மானமா,நீர்நாய், அன்னப்பட்சி.

5. **பொகுட்டுத்** தாமரைப் பூங்கொட்டை,
பொருப்பு, சேற்று எழுந்த கொப்புள்;
**நகைத்தலே** சிரித்தலோடு,
நிந்தித்தல் இருபேர் நாட்டும்;
**புகைக்கு** இடும் நாமம் தூமம்,
போற்றும் யோசனைக்கும் பேரே;
**செகுத்தலே** அழித்தல், கொல்லல்;
**தெகுளமே** பெருகல், ஆர்தல்

**பொகுட்டு** : 1. தாமரைப்பூங்கொட்டை 2. பொருப்பு 3. சேற்று எழுந்த கொப்புள்
**நகைத்தல்** : 1. சிரித்தல் 2. நிந்தித்தல்
**புகை** : 1. தூமம் 2. யோசனை
**செகுத்தல்** : 1. அழித்தல் 2. கொல்லல்
**தெகுளம்** : 1. பெருகல் 2. ஆர்தல்

*பொகுட்டு* -- தாமரைக்கொட்டை, மலை, சேற்றிலெழுங்குமிழி
*நகைத்தல்* -- சிரிக்குதல், இகழ்தல்
*புகை* -- புகை, யோசனைதூரம்
*செகுத்தல்* -- அழித்தல், கொல்லுதல்
*தெகுளம்* -- பெருகுதல், நிறைதல்

6. **பகடு** இபம், பெருமை, ஏறு, பஃறி, ஆண்மேதி, தெப்பம்;
**தகடு** அடர்பு, இலை, ஐம்மைப்பேர்; **தகைமை** ஏர், இயல்பு, [பீடு ஆம்;
**அகடு** ஈனம், நடு, உள், மேடு ஆம்; **அகலுளே** பரப்பு,ஊர்,நாடு;
**மகரந்தம்** கொங்கு, தேன், கள்; **வகிர்** என்ப வழி,வார் ஆமே.

**பகடு** : 1. இபம் 2. பெருமை 3. ஏறு 4. பஃறி 5. ஆண்மேதி 6. தெப்பம்
**தகடு** : 1. அடர்பு 2. இலை 3. ஐம்மைப்பேர்
**தகைமை** : 1. ஏர் 2. இயல்பு 3. பீடு
**அகடு** : 1. ஈனம் 2. நடு 3. உள் 4. மேடு
**அகலுள்** : 1. பரப்பு 2. ஊர் 3. நாடு
**மகரந்தம்** : 1. கொங்கு 2. தேன் 3. கள்
**வகிர்** : 1. வழி 2. வார்

*பகடு* -- யானை, பீடு, எருது, ஓடம், எருமைக்கடா, மிதவை
*தகடு* -- அடர்பு, பத்திரம், அச்சவடிவு
*தகைமை* -- அழகு, குணம், பெருமை
*அகடு* -- தீங்கு, மையம், உள், வயிறு
*அகலுள்* -- அகலம், ஊர், நாடு
*மகரந்தம்* -- பூந்தாது, தேன், மது
*வகிர்* -- பாதை, வார்

7. **சகுந்தம்**புட்பொதுவே, பூகம்; **சகண்டையே** முரசு இயப்பேர்;
**சிகண்டி** ஓர் பண், ஏரண்டம், செழுமயில், அலி, நாற்பேரே;
**சகுனி** புள், நிமித்திகன் பேர்; **சாகினி** சேம்பு, கீரை;
**சகுனமே** கிழங்கு, புள்ளின் சாதியும், நிமித்தமும் பேர்.

**சகுந்தம்** : 1. புட்பொது 2. பூகம்
**சகண்டை** : 1. முரசு 2. இயப்பேர்
**சிகண்டி** : 1. ஓர்பண் 2. ஏரண்டம் 3. மயில் 4. அலி

**சகுனி** : 1. புள் 2. நிமித்திகன்
**சாகினி** : 1. சேம்பு 2. கீரை
**சகுனம்** : 1. கிழங்கு 2. புள்ளின் சாதி 3. நிமித்தம்

***சகுந்தம்*** -- பறவைப்பொது, கழுகு
***சகண்டை*** -- முரசவாச்சியம், வாச்சியப்பொது
***சிகண்டி*** -- ஓர்பண், ஆமணக்கு, மயிற்பட்சி, பேடி
***சகுனி*** -- பறவை, நிமித்தம்பார்ப்போன்
***சாகினி*** -- சேம்பு, சிறுகீரை
***சகுனம்*** -- மூலவருக்கம், பறவைக்குலம், சோதிடம்

8. **தகை** என்பது அழகு, இளைப்பு, தகைமை, அன்பொடு,
[பண்பு ஆகும்;
**அகி** என்பது அரவு, இரும்பு ஆம்; **அகளமே** மிடா, நல்தாழி;
**ககம்** என்பது அம்பு, புள், ஆம்; **காகம்** கற்பகமே, காக்கை;
**அகவல்** பா, ஏங்கல், கூத்து ஆம்; **அகலமே** விரிவு, மார்பு.

**தகை** : 1. அழகு 2. இளைப்பு 3. தகைமை 4. அன்பு 5. பண்பு
**அகி** : 1. அரவு 2. இரும்பு
**அகளம்** : 1. மிடா 2. தாழி
**ககம்** : 1. அம்பு 2. புள்
**காகம்** : 1. கற்பகம் 2. காக்கை
**அகவல்** : 1. பா 2. ஏங்கல் 3. கூத்து
**அகலம்** : 1. விரிவு 2. மார்பு

***தகை*** -- சுந்தரம், இளைப்பு, பெருமை, கிருபை, குணம்
***அகி*** -- பாம்பு, கரும்பொன்
***அகளம்*** -- மிடா, தாழி
***ககம்*** -- அத்திரம், பட்சி
***காகம்*** -- கற்பகதரு, காகம்
***அகவல்*** -- ஆசிரியப்பா, மயிற்குரல், கூத்து
***அகலம்*** -- விசாலம், மார்பு

9.* **உகம்** என்பது அரவு, நாளும், உலகமும், முடிவும் ஆகும்;
**பகம்** கொக்கு, செல்வம், ஞானம், பற்றின்மை, சீர்த்தி, குய்யம்;
**சகம்** ஒரு தேயம், பூமி, சட்டை, மார்கழி மாதப்பேர்;
**யுகம்** நுகம், உபயம், பூமி, ஓர் காலத்து அளவும் ஆமே.

**உகம்** : 1. அரவு 2. நாள் 3. உலகம் 4. முடிவு
**பகம்** : 1. கொக்கு 2. செல்வம் 3. ஞானம் 4. பற்றின்மை
5. சீர்த்தி 6. குய்யம்
**சகம்** : 1. ஒரு தேயம் 2. பூமி 3. சட்டை 4. மார்கழி மாதம்
**யுகம்** : 1. நுகம் 2. உபயம் 3. பூமி 4. ஓர்காலத்தளவு

*உகம்* -- பாம்பு, நாள், பூமி, முடிவு
*பகம்* -- கொக்குப்பட்சி, செல்வம், ஞானம், அவாவின்மை, சீர்த்தி, பெண்குறி.
*சகம்* -- ஒர்தேயம், உலகம், சட்டை, மார்கழிமாதம்
*யுகம்* -- நுகத்தடி, இருபொருள், உலகம், ஓர்காலத்தளவு

10. **அகற்றலே** விரித்தல், நீத்தல்; **அகணி** உள், மருதம், செய்ஆம்;
**இகத்தலே** கடத்தல், போகல்; **இகழ்ச்சியே** மறதி, ஈனம்;
**உகுத்தலே** சொரிதல், சிந்தல், விடுத்தலோடு ஒருமூன்றுஆமே;
**பகுத்தலே** தறித்தல் ஈதல், பங்கிடல், வெட்டல், நாற்பேர்.

**அகற்றல்** : 1. விரித்தல் 2. நீத்தல்
**அகணி** : 1. உள் 2. மருதம் 3. செய்
**இகத்தல்** : 1. கடத்தல் 2. போகல்
**இகழ்ச்சி** : 1. மறதி 2. ஈனம்
**உகுத்தல்** : 1. சொரிதல் 2. சிந்தல் 3. விடுத்தல்
**பகுத்தல்** : 1. தறித்தல் 2. ஈதல் 3. பங்கிடல் 4. வெட்டல்

*அகற்றல்* -- விரித்தல், நீக்கல்
*அகணி* -- உள், மருதநிலம், வயல்
*இகத்தல்* -- கடத்தல், போகல்
*இகழ்ச்சி* -- மறதி, ஈனம்
*உகுத்தல்* -- பொழிதல், சிந்தல், விடுதல்
*பகுத்தல்* -- தறித்தல், கொடுத்தல், பங்கிடல், வெட்டல்

11.* **தொகுதியே** திரட்சி, கூட்டம்; **சுகிர்தமே** அறம், நெய்,நன்மை;
**மிகுதி** பூரிப்பு, அநேகம், வினைமுற்று, பொலிவு, கூட்டம்;
**பகுதியே** இறை, பகுத்தல், படை, பதவுறுப்பு, இயற்பேர்;
**தகுதியே** அறிவு, ஒழுக்கம், சாந்தம், பண்பு, உரிமை ஆமே.

**தொகுதி** : 1. திரட்சி 2. கூட்டம்
**சுகிர்தம்** : 1. அறம் 2. நெய் 3. நன்மை
**மிகுதி** : 1. பூரிப்பு 2. அநேகம் 3. வினைமுற்று 4. பொலிவு 5. கூட்டம்
**பகுதி** : 1. இறை 2. பகுத்தல் 3. படை 4. பதவுறுப்பு 5. இயற்பேர்
**தகுதி** : 1. அறிவு 2. ஒழுக்கம் 3. சாந்தம் 4. பண்பு 5. உரிமை

*தொகுதி* -- திரட்சி, கூட்டம்
*சுகிர்தம்* -- தருமம், நெய், நன்மை
*மிகுதி* -- பூரிப்பு, அநேகம், வினைமுற்று, பொலிவு, கூட்டம்
*பகுதி* -- குடியிறை, பகுத்தல், படை, பகுபதவுறுப்பு, இயல்
*தகுதி* -- அறிவு, ஒழுக்கம், பொறுமை, குணம், உரிமை

12. **நகுதலே** இகழ்தல், மின்னல், நகைத்தலும் வகுத்த முப்பேர்;
**நெகிழ்தலே** குழைதலோடு மலர்தலும் நிகழ்த்தல் ஆகும்;
**பகழியே** அம்பும், அம்பின் குதையும் என்று இருபேர் பன்னும்;
**புகல்** குதிர், உடம்பு, வார்த்தை, வென்றியும் புகலும் நாற்பேர்;

**நகுதல்** : 1. இகழ்தல் 2. மின்னல். 3. நகைத்தல்
**நெகிழ்தல்** : 1. குழைதல் 2. மலர்தல் 3. நிகழ்த்தல்
**பகழி** : 1. அம்பு 2. அம்பின் குதை
**புதல்** : 1. குதிர் 2. உடம்பு 3. வார்த்தை 4. வென்றி

***நகுதல்*** -- இகழ்ச்சிபண்ணல், ஒளிசெய்தல், சிரித்தல்
***நெகிழ்தல்*** -- குழைதல், அலர்தல்
***பகழி*** -- அத்திரம், அம்புக்குதை
***புகல்*** -- தானியக்குதிர், சரீரம், சொல், வெற்றி

13.† **நகரமே** அரசர் கோயில், நகர், மருதப்பதிப்பேர்;
**நிகர்** ஒளி, உவமை ஆகும்; **நிகமமே** நகரம், வேதம்;
**நுகர்தலே** அனுபவித்தல், நுங்கலும், புசித்தலும் பேர்;
**தகரமே** மயிர்ச்சார்ந்து, ஈயம், தகரம், வாசப் பொருட்பேர்.

**நகரம்** : 1. அரசர்கோயில் 2. நகர் 3. மருதப்பதி
**நிகர்** : 1. ஒளி 2. உவமை
**நிகமம்** : 1. நகரம் 2. வேதம்
**நுகர்தல்** : 1. அனுபவித்தல் 2. நுங்கல் 3. புசித்தல்
**தகரம்** : 1. மயிர்ச்சாந்து 2. ஈயம் 3. தகரம் 4. வாசப்பொருள்

***நகரம்*** -- அரசர்மனை, மருதநிலத்தூர், மருதப்பதி
***நிகர்*** -- ஒளி, உவமை
***நிகமம்*** -- நகரம், வேதம்
***நுகர்தல்*** -- அனுபவித்தல், விழுங்கல், புசித்தல்
***தகரம்*** -- மயிர்ச்சாந்து, ஈயம், தகரம், வாசனைப்பண்டம்

14.* **தகம்** வெப்பம், எரித்தல் ஆகும்; **தாகம்** நீர்வேட்கை, ஆசை;
**அகல்** அல்குல், தகழி, ஏவல்; **அகிலமே** எல்லாம், பூமி;
**சிகல்** கேடு, குறைதல் என்ப; **சிக்கலே** கிடைத்தல், நைதல்;
**முகம்** இடம், வதனம், நீர்பாய்கழிமுகம் மூன்றும் ஆமே.

**தகம்** : 1. வெப்பம் 2. எரித்தல்
**தாகம்** : 1. நீர்வேட்கை 2. ஆசை
**அகல்** : 1. அல்குல் 2. தகழி 3. ஏவல்
**அகிலம்** : 1. எல்லாம் 2. பூமி
**சிகல்** : 1. கேடு 2. குறைதல்
**சிக்கல்** : 1. கிடைத்தல் 2. நைதல்
**முகம்** : 1. இடம் 2. வதனம் 3. நீர்பாய்கழிமுகம்

***தகம்*** -- உட்டணம், எரித்தல்
***தாகம்*** -- நீர்வேட்கை, இச்சை
***அகல்*** -- நிதம்பம், தகழி, அகலென்னுமேவல்
***அகிலம்*** -- எல்லாம், பூவுலகம்
***சிகல்*** -- கெடுதல், குறைதல்
***சிக்கல்*** -- கிடைத்தல், இளைத்தல்
***முகம்*** -- இடம், முகம், நீர்பாய்முகத்துவாரம்

15.† **புகைத்தலே** சினக்குறிப்பு, புகையச் செய்திடலும் ஆகும்;
**இகைத்தலே,** நடத்தல், ஈதல்; **இகுள்** என்பது ஆரல், ஓர்மீன்;
**உகைத்தலே** எழல், செலுத்தல்; **உகளலே** கடத்தல், பாய்தல்;
**தகைத்தலே** இளைத்தல்,ஆணைதனையிடல்,தடுத்தல்முப்பேர்.

**புகைத்தல்** : 1. சினக்குறிப்பு 2. புகையச்செய்தல்
**இகைத்தல்** : 1. நடத்தல் 2. ஈதல்
**இகுள்** : 1. ஆரல் 2. ஓர்மீன்
**உகைத்தல்** : 1. எழல் 2. செலுத்தல்
**உகளல்** : 1. கடத்தல் 2. பாய்தல்
**தகைத்தல்** : 1. இளைத்தல் 2. ஆணையிடல் 3. தடுத்தல்

***புகைத்தல்*** -- கோபக்குறிப்பு, புகையச்செய்தல்
***இகைத்தல்*** -- நடத்தல், கொடுத்தல்
***இகுள்*** -- கார்த்திகைநாள், ஓர்மீன்
***உகைத்தல்*** -- எழுதல், செலுத்தல்
***உகளல்*** -- கடத்தல், பாய்தல்
***தகைத்தல்*** -- இளைத்தல், ஆணையிடல், தடுத்தல்

16. **எக்கலே** பொருதல், ஏறல்; **ஏகமே** தனிமை, ஒன்று;
**தொக்கு** உடல், தோலும் ஆகும்; **சொக்குப்** பொன், அழகு, [சோர்வு ஆம்;
**பக்கம்** புட்சிறகு, நட்பு, பகர்திதி, அருகும் ஆகும்;
**நக்கனே** அருகன், சம்பு, நிருவாணி நாட்டும் முப்பேர்.

**எக்கல்** : 1. பொருதல் 2. ஏறல்
**ஏகம்** : 1. தனிமை 2. ஒன்று
**தொக்கு** : 1. உடல் 2. தோல்
**சொக்கு** : 1. பொன் 2. அழகு 3. சோர்வு
**பக்கம்** : 1. புட்சிறகு 2. நட்பு 3. திதி 4. அருகு
**நக்கன்** : 1. அருகன் 2. சம்பு 3. நிருவாணி

***எக்கல்*** -- யுத்தஞ்செய்தல். ஏறல்
***ஏகம்*** -- தனிமை, ஒன்று
***தொக்கு*** -- உடம்பு, தோல்
***சொக்கு*** -- பொன், அழகு, சோர்வு
***பக்கம்*** -- பறவையினிறகு, சிநேகம், திதி, பாரிசம்
***நக்கன்*** -- அருகக்கடவுள், சிவன், நிருவாணி

17. **அக்கு** என்பு, விடைமுரிப்பும், அணி சங்குமணியும் ஆகும்;
**நக்கலே** உண்டல், சொன்றி,நகைத்தலோடு ஒளியும் நாற்பேர்;
**இக்கு** என்ப கரும்பு, கள் ஆம்; **இகரம்** சாந்து, இகரம்என்ப;
**மக்கள்** மானுடர், சிறார் ஆம்; **வகுளமே** மகிழ், இலஞ்சி.

**அக்கு** : 1. என்பு 2. விடைமுரிப்பு 3. சங்குமணி
**நக்கல்** : 1. உண்டல் 2. சொன்றி 3. நகைத்தல் 4. ஒளி
**இக்கு** : 1. கரும்பு 2. கள்
**இகரம்** : 1. சாந்து 2. இகரம்
**மக்கள்** : 1. மானுடர் 2. சிறார்
**வகுளம்** : 1. மகிழ் 2. இலஞ்சி

***அக்கு*** -- எலும்பு, எருத்துத்திமில், சங்குமணி
***நக்கல்*** -- புசித்தல், சோறு, சிரித்தல், பிரகாசம்
***இக்கு*** -- கரும்பு, மது
***இகரம்*** -- சந்தனம், இகராக்கரம்
***மக்கள்*** -- மனிதர், சிறுவர்
***வகுளம்*** -- மகிழமரம், மதில்

18. **துக்கம்**, நோய், நராலை, தீது ஆம்; **சுகம்** கிளி, இன்பம்,நன்மை;
**பொக்கம்**பொய், பொலிவு, கூட்டம், மிகுதியும் புகலல் ஆகும்;
**அக்கமே** கயிறு, கண் ஆம்; **அகலலே** பிரிதல், நீங்கல்;
**ஒக்கலே** இடையின்பக்கம், உறவு, ஒத்தல்,குடி,மூட்டல் பேர்.

**துக்கம்** : 1. நோய் 2. நராலை 3. தீது
**சுகம்** : 1. கிளி 2. இன்பம் 3. நன்மை
**பொக்கம்** : 1. பொய் 2. பொலிவு 3. கூட்டம் 4. மிகுதி
**அக்கம்** : 1. கயிறு 2. கண்
**அகலல்** : 1. பிரிதல் 2. நீங்கல்
**ஒக்கல்** : 1. இடையின்பக்கம் 2. உறவு 3. ஒத்தல் 4. குடி
5. மூட்டல்

***துக்கம்*** -- துன்பம், நரகம், குற்றம்
***சுகம்*** -- கிளிப்பட்சி, இன்பம், நன்மை
***பொக்கம்*** -- பொய், பொலிவு, கூட்டம், மிகுதி
***அக்கம்*** -- கயிறு, கண்
***அகலல்*** -- பிரிதல், நீங்கல்
***ஒக்கல்*** -- இடைப்பக்கம், சுற்றம், ஒத்தல், குடி, மூட்டல்

19.† **ஒக்கம்** ஊர், உயர்ச்சி என்ப; **உக்கிரன்** சிவன், குரோதன்;
**தெக்கணம்** வலப்பாலோடு, தென்திசை தானும் ஆகும்;
**தக்கையே** தெப்பம், பம்பை, சடை, பலவகைப் பறைப்பேர்;
**செக்கு** என்ப சதயம், செக்கு ஆம்; **செக்கரே** சிவப்புச்
[செவ்வான்.

**ஒக்கம்** : 1. ஊர் 2. உயர்ச்சி
**உக்கிரன்** : 1. சிவன் 2. குரோதன்
**தெக்கணம்** : 1. வலப்பால் 2. தென்திசை
**தக்கை** : 1. தெப்பம் 2. பம்பை 3. சடை 4. பலவகைப் பறைப்பேர்
**செக்கு** : 1. சதயம் 2. செக்கு
**செக்கர்** : 1. சிவப்பு 2. செவ்வான்

***ஒக்கம்*** -- ஊர், உயர்ச்சி
***உக்கிரன்*** -- அரன், வீரபத்திரன்
***தெக்கணம்*** -- வலப்பக்கம், தென்றிக்கு
***தக்கை*** -- மிதவை, பம்பைவாச்சியம், நெட்டி, பலவிதப்பறை
***செக்கு*** -- சதயநாள், செக்கு
***செக்கர்*** -- சிவந்தநிறம், செக்கர்மேகம்

20. **பக்கணம்** வேடர் வீதி, ஊர்ப்பொது பகரும் நாமம்;
**சுக்கிலம்** இரதம், வெண்மை, திங்களின் சுவேத பக்கம்;
**உக்கிரம்** கொடுமையோடு தலைக்காவல் இருபேர் ஓதும்;
**கொக்கரை** வலையே, பாந்தள், கொடுமரம், வலம்புரிப்பேர்.

**பக்கணம்** : 1. வேடர்வீதி 2. ஊர்ப்பொது
**சுக்கிலம்** : 1. இரதம் 2. வெண்மை 3. திங்களின் சுவேதபக்கம்
**உக்கிரம்** : 1. கொடுமை 2. தலைக்காவல்
கொக்கரை : 1. வலை 2. பாந்தள் 3. கொடுமரம் 4. வலம்புரி

***பக்கணம்*** -- வேடர்வீதி, ஊர்ப்பொது
***சுக்கிலம்*** -- சுக்கிலம், வெண்மை, சுக்கிலபக்கம்
***உக்கிரம்*** – கொடுமை, தலைக்காவல்
***கொக்கரை*** -- வலை, பாம்பு, வில், வலம்புரிச்சங்கு

21. **செக்கர்வான்நிறத்தோன்** ஈசன், சிறுவிதி மகம் சிதைத்தோன்;
**முக்கணன்**, குரோதன் ஈசன், கரிமுகன் முப்பேர் சொல்லும்;
**புக்கிலே** உடல், வீடு என்ப; **புகலிடம்** தஞ்சம், ஊர் ஆம்;
**முக்கணி** பவானி, துற்கை; **மூக்கு** என்பது அலகு, மோர்ப்பம்.

செக்கர்வான்நிறத்தோன் : 1. ஈசன் 2. சிறுவிதிமகம்சிதைத்தோன்
**முக்கணன்** : 1. குரோதன் 2. ஈசன் 3. கரிமுகன்
**புக்கில்** : 1. உடல் 2. வீடு
**புகலிடம்** : 1. தஞ்சம் 2. ஊர்
**முக்கணி** : 1. பவானி 2. துற்கை
**மூக்கு** : 1. அலகு 2. மோர்ப்பம்.

***செக்கர்வான்நிறத்தோன்*** – சிவன், வீரபத்திரன்
***முக்கணன்*** -- வீரபத்திரன், சிவன், விநாயகன்
***புக்கில்*** -- உடம்பு, வீடு

***புகலிடம்*** -- அடைக்கலம், ஊர்
***முக்கணி*** -- பார்வதி, துற்காதேவி
***மூக்கு*** -- பறவையலகு, மூக்கு

22. **கைக்கிளை** இசை விகற்பம், ஒருதலைக் காமமும் பேர்;
**சுக்கை** தாரகை,மாலைப்பேர்; **துகள்** என்ப குற்றம்,தூள்ஆம்;
**எக்கரே** சொரிதலோடு, குவிதலும், இடக்கரும் பேர்;
**மொக்குள்** நீர்க்குமிழி, பூவின் முகிழ் என மொழியலாமே.

**கைக்கிளை** : 1. இசைவிகற்பம் 2. ஒருதலைக்காமம்
**சுக்கை** : 1. தாரகை 2. மாலை
**துகள்** : 1. குற்றம் 2. தூள்
**எக்கர்** : 1. சொரிதல் 2. குவிதல் 3. இடக்கர்
**மொக்குள்** : 1. நீர்க்குமிழி 2. பூவின்முகிழ்

***கைக்கிளை*** -- இராகவேறுபாடு, ஒருதலைக்காமம்
***சுக்கை*** -- நட்சத்திரம், பூமாலை
***துகள்*** -- குற்றம், தூள்
***எக்கர்*** -- பொழிதல், குவிதல், மறைத்தசொல்
***மொக்குள்*** -- நீரிலெழுங்குமிழி, மலரும்பருவத்தரும்பு

23. **சிக்கமே** குடுமி, உச்சி, சீப்பு, உறி, மெலிவு, காவல்;
**கொக்கு** மாமரமே, மூலம், குரண்டமே, குதிரை, செந்நாய்;
**வக்கிரம்** கொடுமை, மீளமடங்குதல், கோணல், வட்டம்;
**சக்கிரி** குயவன், செக்கான், தராபதி, நெடுமால், பாம்பு.

**சிக்கம்** : 1. குடுமி 2. உச்சி 3. சீப்பு 4. உறி 5. மெலிவு 6. காவல்
**கொக்கு** : 1. மாமரம் 2. மூலம் 3. குரண்டம் 4. குதிரை 5. செந்நாய்
**வக்கிரம்** : 1. கொடுமை 2. மீளமடங்குதல் 3. கோணல் 4. வட்டம்
**சக்கிரி** : 1. குயவன் 2. செக்கான் 3. தராபதி 4. நெடுமால் 5. பாம்பு

*சிக்கம்* -- ஆண்மயிர், உச்சி, மயிர்வாரி, உறி, இளைத்தல், சிறைச்சாலை.
*கொக்கு* -- மாமரம், மூலநட்சத்திரம், கொக்குப்பட்சி, குதிரை, செந்நாய்
*வக்கிரம்* -- கொடுமை, போய்த்திரும்பல், வளைவு, விருத்தம்
*சக்கிரி* -- குயவன், வாணியன், அரசன், திருமால், பாம்பு

24. **சாகம்** சாகினி, வெள்ளாடு, தேக்கு, சஞ்சரிகம், தேனீ;
**பாகல்** ஓர்கொடி, பலாப் பேர்; **பகர்தலே** விற்றல், பேசல்;
ஆகமே உடலும், மார்பும்; **அகப்பாவே** புரிசை, மேடை;
சேகரம் தலை, மா, ஏர் ஆம்; **திகை** திசை, சுண்ங்கும் ஆமே.

**சாகம்** : 1. சாகினி 2. வெள்ளாடு 3. தேக்கு 4. சஞ்சரிகம்
5. தேனீ .
**பாகல்** : 1. ஓர்கொடி 2. பலா
**பகர்தல்** : 1. விற்றல் 2. பேசல்
**ஆகம்** : 1. உடல் 2. மார்பு
**அகப்பா** : 1. புரிசை 2. மேடை
**சேகரம்** : 1. தலை 2. மா 3. ஏர்
**திகை** : 1. திசை 2. சுணங்கு

***சாகம்*** -- சிறுகீரை, வெள்ளாடு, தேக்கமரம், வண்டு, தேனீ
***பாகல்*** -- பாகற்கொடி, பலாமரம்
***பகர்தல்*** -- விற்றல், பேசுதல்
***ஆகம்*** -- சரீரம், மார்பு
***அகப்பா*** -- மதில், மதிலுண்மேடை
***சேகரம்*** -- சிரசு, மாமரம், அழகு
***திகை*** -- திக்கு, தேமல்

25. **ஆகு** எலி, கவரி, கொப்பூழ் ஆம்; பெருச்சாளிக்கும் பேர்;
**யோகம்** சா, தியானம், உச்சம், உபாயம், தாள்,கூட்டம்,கூடல்;
**போகி** இந்திரன், பாம்பு என்ப; **போகில்** புள், பூமொட்டு உந்தி;
**கோகிலம்** குயிலே, பல்லி, குரங்கொடு, புழையும் ஆமே.

**ஆகு** : 1. எலி 2. கவரி 3. கொப்பூழ் 4. பெருச்சாளி
**யோகம்** : 1. சா 2. தியானம் 3. உச்சம் 4. உபாயம் 5. தாள்
6. கூட்டம் 7. கூடல்
**போகி** : 1. இந்திரன் 2. பாம்பு
**போகில்** : 1. புள் 2. பூமொட்டு 3. உந்தி
**கோகிலம்** : 1. குயில் 2. பல்லி 3. குரங்கு 4. புழை

***ஆகு*** -- எலி, சாமரம், கொப்புள், பெருச்சாளி
***யோகம்*** -- சாவு, நினைவு, உயர்ச்சி, உபாயம், உற்சாகம்,
கூட்டம், கூடுதல்
***போகி*** -- தேவேந்திரன், பாம்பு
***போகில்*** -- பறவை, பூவரும்பு, கொப்பூழ்
***கோகிலம்*** -- குயிற்பட்சி, பல்லி, குரங்கு, துளையுடைப்பொருள்

26. **சீகரம்** கவரி, தூறல், திரை, கரகம், துளிப்பேர்;
**சாகரம்** துயில் ஒழித்தல், சமுத்திரம் இருபேர் சாற்றும்;
**காகுளி** தவிசு, கண்டத்து எழும் ஒலி, இசையும் காட்டும்.
**ஈகை** பொன்,கொடை, கார் என்ப, இண்டும்கற்பகமும்ஆகும்.

**சீகரம்** : 1. கவரி 2. தூறல் 3. திரை 4. கரகம் 5. துளி
**சாகரம்** : 1. துயில் ஒழித்தல் 2. சமுத்திரம்
**காகுளி** : 1. தவிசு 2. கண்டத்து எழும் ஒலி 3. இசை
**ஈகை** : 1. பொன் 2. கொடை 3. கார் 4. இண்டு 5. கற்பகம்

*சீகரம்* -- சாமரை, மழை, அலை, கரகம், துளி
*சாகரம்* -- நித்திரைநீங்கல், கடல்
*காகுளி* -- மெத்தை, மிடற்றிலெழுமோசை, மந்தவிசை
*ஈகை* -- பொன், ஈதல், மேகம், இண்டங்கொடி, கற்பகதரு

27.* சோகமே உண்டை, துன்பம், சோம்பலும், தொடையும் ஆகும்.
**மாகமே** மகநாள், மாசிமாதம், ஆகாயம் முப்பேர்;
மோகமே காமம், ஆசை, உன்மத்தம் மூன்றும் காட்டும்;
**வீகம்** மோதிரம், பூட்டு ஆகும்; **வேகமே** கடுமை, கோபம்.

சோகம் : 1. உண்டை 2. துன்பம் 3. சோம்பல் 4. தொடை
**மாகம்** : 1. மகநாள் 2. மாசிமாதம் 3. ஆகாயம்
**மோகம்** : 1. க்ாமம் 2. ஆசை 3. உன்மத்தம்
**வீகம்** : 1. மோதிரம் 2. பூட்டு
வேகம் : 1. கடுமை 2. கோபம்.

*சோகம்* -- உண்டை, துன்பம், சோம்புதல், தொடை
*மாகம்* -- மகநட்சத்திரம், மாசிமாதம், ஆகாயம்
*மோகம்* -- காமம், ஆசை, உன்மத்தம் •
*வீகம்* -- மோதிரம், பூட்டு
*வேகம்* -- சீக்கிரம், கோபம்

28. **பூகமே** திரளை, கூந்தற்கமுகொடு, கமுகு, பூகம்;
**வாகுவே** அழகு, தோள் ஆம்; **வைகல்** வைகறை, நாள், தங்கல்;
**பாகம்** ஓர் அளவு, பிச்சை, பங்கு என்ப பாதியும் பேர்.
**பாகு** கூறு,ஆணம்,பாக்கு, பரணி,கண்டு,அணை, பால்,பாகன்.

**பூகம்** : 1. திரளை 2. கூந்தற்கமுகு 3. கமுகு 4. பூகம்
**வாகு** : 1. அழகு 2. தோள்
**வைகல்** : 1. வைகறை 2. நாள் 3. தங்கல்
**பாகம்** : 1. ஓர் அளவு 2. பிச்சை 3. பங்கு 4. பாதி
**பாகு** : 1. கூறு 2. ஆணம் 3. பாக்கு 4. பரணி 5. கண்டு
6. அணை 7. பால் 8. பாகன்

**பூகம்** -- திரண்டவடிவு, கூந்தற்கமுகு, கமுகு, கமுகமரம்
**வாகு** -- அழகு, புயம்
**வைகல்** -- விடியல், தினம், தங்குதல்
**பாகம்** -- ஓரளவு, பிச்சை, பங்கு, பாதி
**பாகு** -- பகிர்ச்சி, குழம்பு, பாக்கு, பரணிநட்சத்திரம்,கற்கண்டு,
கரை, பால், சாரதி

29. **கேகயம்** அசுணம், பண், வில், கேதாரம், பருந்து, ஓர்தேயம்;
**ஆகுலம்** ஒலி, நோவு என்ப; **அக்காரம்** புடைவை, வெல்லம்.
**போகம்** பாம்புடலம், செல்வம்,அனுபோகம், புணர்ச்சி நாற்பேர்;
**போகுதல்** நெடுமை, நேர்மை, போகுதல் எனும் முப்பேரே.

**கேகயம்** : 1. அசுணம் 2. பண் 3. வில் 4. கேதாரம் 5. பருந்து 6. ஓர்தேயம்
**ஆகுலம்** : 1. ஒலி 2. நோவு
**அக்காரம்** : 1. புடைவை 2. வெல்லம்
**போகம்** : 1. பாம்புடலம் 2. செல்வம் 3. அனுபோகம் 4. புணர்ச்சி
**போகுதல்** : 1. நெடுமை 2. நேர்மை 3. போகுதல்

***கேகயம்*** -- அசுணப்பட்சி, ஓர்பண், வில், மயில், பருந்து, ஓர்தேயம்
***ஆகுலம்*** -- ஒலி, வருத்தம்
***அக்காரம்*** -- சீலை, வெல்லம்
***போகம்*** -- பாம்பினுடல், பெருக்கம், அனுபோகம், கலவி
***போகுதல்*** -- நீளம், நேர்மை, போதல்

30.* **பாகனே** புதன், தேர்ப்பாகன்; **பகரமே** அணி, சிறப்பு ஆம்;
**ஏகனே** கடவுள், ஈசன்; **இகலனே** நரி, ஓரிப் பேர்;
**மேகம்** ஓர்நோய், விண் ஆகும்; **மிகை** துன்பம், மிகுதி, கேடு [ஆம்;
**பாகி** பக்குவன், நாய் என்ப; **பகவதி** அம்மை, துற்கை.

**பாகன்** : 1. புதன் 2. தேர்ப்பாகன்
**பகரம்** : 1. அணி 2. சிறப்பு
**ஏகன்** : 1. கடவுள் 2. ஈசன்
**இகலன்** : 1. நரி 2. ஓரி
**மேகம்** : 1. ஓர்நோய் 2. விண்
**மிகை** : 1. துன்பம் 2. மிகுதி 3. கேடு
**பாகி** : 1. பக்குவன் 2. நாய்
**பகவதி** : 1. அம்மை 2. துற்கை

***பாகன்*** -- புதன், சாரதி
***பகரம்*** -- அலங்காரம், சிறப்பு
***ஏகன்*** -- கடவுள், சிவன்
***இகலன்*** -- நரி, ஓரி
***மேகம்*** -- ஓர்நோய், ஆகாயம்
***மிகை*** -- துன்பம், மிகுதி, கேடு
***பாகி*** -- பக்குவன், நாய்
***பகவதி*** -- பார்ப்பதி, துற்கை

31.† **போகலே** உயர்தல், நீளல், போகுதல் புகலும் முப்பேர்;
**யோகியே** அருகன், ஈசன், உயர்முனி, ஐயன் என்ப;
**நீகமே** தவளை, மேகம்; **நிகழ்தலே** நடத்தல், மின்னல்;
**கோகமே** சகோரம், செந்நாய்; **குகம்** என்ப முழை, [நுண்மைப்பேர்.

**போகல்** : 1. உயர்தல் 2. நீளல் 3. போகுதல்
**யோகி** : 1. அருகன் 2. ஈசன் 3. முனி 4. ஐயன்.
**நீகம்** : 1. தவளை 2. மேகம்
**நிகழ்தல்** : 1. நடத்தல் 2. மின்னல்
**கோகம்** : 1. சகோரம் 2. செந்நாய்
**குகம்** : 1. முழை 2. நுண்மை

***போகல்*** -- உயர்தல், நீளல், போதல்
***யோகி*** -- அருகதேவன், சிவன், முனிவன், ஐயனார்
***நீகம்*** -- தவளை, முகில்
***நிகழ்தல்*** -- சம்பவித்தல், பிரகாசித்தல்
***கோகம்*** -- சக்கரவாகப்புள், செந்நாய்
***குகம்*** -- மலைக்குகை, நுட்பம்

32. **ஊகம்** வானரம், புலிக்கு ஆம்; **உகளமே** இரண்டு, இட்டப்பேர்;
**சாகசம்** விறல், மெய், யானை; **சகோரமே** குக்கில், கோகம்;
**சூகை** ஓர் எறும்பினோடு, தும்பியும் இருபேர் சொல்லும்;
**கோகனம்** என்ப கையான், நிலக்கடம்பு எனவும் கூறும்.

**ஊகம்** : 1. வானரம் 2. புலி
**உகளம்** : 1. இரண்டு 2. இட்டம்
**சாகசம்** : 1. விறல் 2. மெய் 3. யானை
**சகோரம்** : 1. குக்கில் 2. கோகம்
**சூகை** : 1. ஓர் எறும்பு 2. தும்பி
**கோகனம்** : 1. கையான் 2. நிலக்கடம்பு

***ஊகம்*** -- குரங்கு, புலி
***உகளம்*** -- இரண்டு, சினேகம்
***சாகசம்*** -- வீரம், உண்மை, யானை
***சகோரம்*** -- செம்போத்து, சக்கரவாகப்புள்
***சூகை*** -- ஓரெறும்பு, யானை
***கோகனம்*** -- கையாந்தரை, நிலக்கடம்பு

33. **ஆகமம்** முதல்வன் வாக்கோடு, அகலியம், கல்வி முப்பேர்;
**ஆகவம்** மொய், போர் தூசு ஆம்; **ஆகாரம்** உணா, நெய், வீடு;
**ஏகல்** போகுதல், நடத்தல், உயர்ச்சியும் இயம்பும் முப்பேர்;
**காகப்புள்** கொடி, அவிட்டம்; **ககுபமே** மருது, திக்கு ஆம்.

**ஆகமம்** : 1. முதல்வன் வாக்கு 2. அகலியம் 3. கல்வி
**ஆகவம்** : 1. மொய் 2. போர் 3. தூசு
**ஆகாரம்** : 1. உணா 2. நெய் 3. வீடு
**ஏகல்** : 1. போகுதல் 2. நடத்தல் 3. உயர்ச்சி
**காகப்புள்** : 1. கொடி 2. அவிட்டம்
**ககுபம்** : 1. மருது 2. திக்கு

***ஆகமம்*** -- தேவன்வாய்ச்சொல், மரப்பொது, கல்வி
***ஆகவம்*** -- போர்க்களம், போர், புடைவை
***ஆகாரம்*** -- போசனம், நெய், வீடு
***ஏகல்*** -- போதல், நடக்குதல், உயர்ச்சி
***காகப்புள்*** -- காக்கை, அவிட்டநட்சத்திரம்
***ககுபம்*** -- மருதமரம், திசை

34. **தேக்கு** என்பது இனிமை, பூகம்,
தேக்கு எனும்தருவும் ஆகும்.
**பாக்கு** என்பது எதிர்காலத்தைப்
பகர் இடைச்சொல், துவர்க்காய்;
**மேக்கு** மேல், உயர்ச்சி, மேற்கு ஆம்;
**மீக்கூறல்** புகழ்தல், மெச்சல்;
**ஊக்கம்** உற்சாகம், உள்ளக்கிளர்ச்சி,
மெய், வலி, உயர்ச்சி

**தேக்கு** : 1. இனிமை 2. பூகம் 3. தேக்கு எனும் மரம்
**பாக்கு** : 1. எதிர்காலத்தைப் பகர் இடைச்சொல் 2. துவர்க்காய்
**மேக்கு** : 1. மேல் 2. உயர்ச்சி 3. மேற்கு
**மீக்கூறல்** : 1. புகழ்தல் 2. மெச்சல்
**ஊக்கம்** : 1. உற்சாகம் 2. உள்ளக்கிளர்ச்சி 3. மெய் 4. வலி 5. உயர்ச்சி

***தேக்கு*** -- இனிமை, கமுகமரம், தேக்கமரம்
***பாக்கு*** -- எதிர்காலலிடைச்சொல், பாக்கு
***மேக்கு*** -- மேல், உயரம், மேற்றிசை
***மீக்கூறல்*** -- புகழுதல், மெச்சுதல்
***ஊக்கம்*** -- உற்சாகம், உள்ளமிகுதி, உண்மை, வலிமை, உயர்ச்சி

35. **நோக்கே** கண், அழகு, பார்வை; **நோக்கலே** காணல், காத்தல்;
**சேக்கையே** விலங்கின் பாழி, வடு, முலை, சிறந்த பாயல்;
**பூக்கமே** மதுவும், ஊரும், பூகமும் என முப்பேரே;
**ஆக்கம்** பூமகள், செல்வப்பேர்;**அக்கரம்** எழுத்து, ஓர்நோய்ஆம்;

**நோக்கு** : 1. கண் 2. அழகு 3. பார்வை
**நோக்கல்** : 1. காணல் 2. காத்தல்
**சேக்கை** : 1. விலங்கின் பாழி 2. வடு 3. முலை 4. பாயல்
**பூக்கம்** : 1. மது 2. ஊர் 3. பூகம்
**ஆக்கம்** : 1. பூமகள் 2. செல்வப்பேர்
**அக்கரம்** : 1. எழுத்து 2. ஓர்நோய்

***நோக்கு*** -- கண், அழகு, பார்வை
***நோக்கல்*** -- காணுதல், காக்குதல்
***சேக்கை*** -- விலங்கின்படுக்கை, உடற்றழும்பு, தனம், மக்கட் படுக்கை
***பூக்கம்*** -- கள், ஊர், கமுகு
***ஆக்கம்*** -- இலக்குமி, வாழ்வு
***அக்கரம்*** -- எழுத்து, ஓர்நோய்

36.† **தாக்கலே** எதிர்த்தல், பாய்தல்; **சகசமே** உண்மை, வட்டில்;
**நீக்கலே** அகற்றல், கொல்லல், நீளுதல், மாறுபாடு ஆம்;
**நோக்கமே** அழகு, உயர்ச்சி, நோக்கு என்ப; பார்வையும் பேர்.
**மோக்கமே** தீர்தல், முத்தி; **முகையே** பூவரும்பு, கூட்டம்.

**தாக்கல்** : 1. எதிர்த்தல் 2. பாய்தல்
**சகசம்** : 1. உண்மை 2. வட்டில்
**நீக்கல்** : 1. அகற்றல் 2. கொல்லல் 3. நீளுதல் 4. மாறுபாடு
**நோக்கம்** : 1. அழகு 2. உயர்ச்சி 3. நோக்கு 4. பார்வை
**மோக்கம்** : 1. தீர்தல் 2. முத்தி
**முகை** : 1. பூவரும்பு 2. கூட்டம்

***தாக்கல்*** -- எதிர்த்தல், தாண்டல்
***சகசம்*** -- மெய், வட்டில்
***நீக்கல்*** -- அகற்றுதல், கொல்லுதல், நீளல், மாறுபாடு
***நோக்கம்*** -- அழகு, உயர்ச்சி, கண், பார்வை
***மோக்கம்*** -- தீர்தல், பரகதி
***முகை*** -- மலரும்பருவத்தரும்பு, கூட்டம்

37. **தீக்கையோன்**அரன்,ஆசான்பேர்; **திகம்பரன்** அருகன், நக்கன்;
**தூக்கம்** காதணியினோடு, துயிலும், சல்லியும் முப்பேரே;
**தோக்கை** மேற்போர்வையோடு, துகில் இருபேரும் சொல்லும்
**தூக்கல்** ஆராய்தல் என்ப; **தூக்குதல்** நிறுத்தலும் பேர்.

**தீக்கையோன்** : 1. அரன் 2. ஆசான்
**திகம்பரன்** : 1. அருகன் 2. நக்கன்
**தூக்கம்** : 1. காதணி 2. துயில் 3. சல்லி
**தோக்கை** : 1. மேற்போர்வை 2. துகில்
**தூக்கல்** : 1. ஆராய்தல் 2. தூக்குதல் 3. நிறுத்தல்

***தீக்கையோன்*** -- சிவன், குரு
***திகம்பரன்*** -- அருகதேவன், நிருவாணி
***தூக்கம்*** -- காதணி, நித்திரை, தூக்கங்கள்
***தோக்கை*** -- மேற்போர்வை, புடைவை
***தூக்கல்*** -- தேர்தல், தூக்குதல், நிறுக்குதல்

38.* **தகர்** சுறா, மேடராசி, தந்தியாண், யாழியாணினோடு,
அகிலம், மேழகம், பராகம், துருவாட்டேறு ஆகும் எண்பேர்;
**தகவு** அறிவு, உரிமை, தேர்ச்சி, தயை,பண்பு,நல்லொழுக்கம்,
தகுதியே, நன்மை, நீதி, தருபெயர் ஒன்பான் ஆமே.

**தகர்** : 1. சுறா 2. மேடராசி 3. தந்தியாண் 4. யாழியாண்
5. அகிலம் 6. மேழகம் 7. பராகம் 8. துருவாட்டேறு

**தகவு** : 1. அறிவு 2. உரிமை 3. தேர்ச்சி 4. தயை 5. பண்பு 6. நல்லொழுக்கம் 7. தகுதி 8. நன்மை 9. நீதி

***தகர்*** -- சுறா, மேடராசி, யானையினாண், யாழியினாண், பூமி, செம்மறிக்கடா, பராகம், துருவாட்டேறு
***தகவு*** -- அறிவு, உரிமை, தெளிவு, கிருபை, குணம்,ஒழுக்கம், த்குதி, நன்மை, நீதி

39. **சகடம்** ஊற்றாலே, வட்டில், சடகம், ஆசவுசம், பண்டி
அகமுறு பாண்டில் பூண்ட ஊர்தியும் ஆகும் அப்பேர்;
**நகை** மகிழ்வு, ஒளி, இகழ்ச்சி, நகைப்பு, இன்பம், எயிறு, பூவின்
முகை, அணிகலன், மலர்ச்சி, தந்தமும் மொழியலாமே.

**சகடம்** : 1. ஊற்றால் 2. வட்டில் 3. சடகம் 4. ஆசவுசம் 5. பண்டி 6. பாண்டில் பூண்ட ஊர்தி.
**நகை** : 1. மகிழ்வு 2. ஒளி 3. இகழ்ச்சி 4. நகைப்பு 5. இன்பம் 6. எயிறு 7. பூவின்முகை 8. அணிகலன் 9. மலர்ச்சி 10. தந்தம்.

***சகடம்*** -- உரோகணிநட்சத்திரம், வட்டில், ஊர்க்குருவி, அசுத்தம், பண்டி, பாண்டில்பூண்டவூர்தி
***நகை*** -- அக்களிப்பு, பிரகாசம், இகழ்ச்சி, சிரிப்பு, இன்பம், பல், பூவரும்பு, ஆபரணம்,மலர்ச்சி,யானைக்கொம்பு

40. **இகுத்தலே** அழைத்தல், வீழ்த்தல், எறிதலே, தாழ்த்தலோடு,
செகுத்தல், தாண்டுதல், மறித்தல், சீத்தல், ஈகுதலும் ஒன்பான்;
**அகைத்தல்** வேதனை, முறித்தல், அறுத்திடல், இவர்தலே, [மற்று
உகைத்தலே, உயர்த்தல் என்ப;ஒடித்தலும்உரைக்கும்ஏழ்பேர்.

**இகுத்தல்** :1. அழைத்தல் 2. வீழ்த்தல் 3. எறிதல் 4.தாழ்த்தல் 5. செகுத்தல் 6. தாண்டுதல் 7. மறித்தல் 8.சீத்தல் 9. ஈகுதல்
**அகைத்தல்** : 1. வேதனை 2. முறித்தல் 3. அறுத்திடல் 4. இவர்தல் 5. உகைத்தல் 6. உயர்த்தல் 7. ஒடித்தல்

***இகுத்தல்*** -- அழைக்குதல், வீழ்த்துதல், எறிதல், தாழ்த்தல், கொல்லல், தாண்டல், மறித்தல், துடைத்தல், கொடுத்தல்
***அகைத்தல்*** -- துன்பம், முறித்தல், அறுத்தல், எழுச்சி, செலுத்தல், உயர்த்துதல், ஒடித்தல்

41. **சக்கரம்** பெருமை, ஓர்புள், தரணியே, பிறப்பு, வட்டம்,
மிக்க தேருருளே, ஆழி, வீரை, வற்சகமே, வெற்பு ஆம்.
**உக்கமே** ஆலவட்டம், உதாசனன், மருங்குலோடு
தக்க ஆன், ஏறு, கோழி சாற்றும் மூவிருபேர் ஆமே.

**சக்கரம்**: 1. பெருமை 2. ஓர்புள் 3. தரணி 4. பிறப்பு 5. வட்டம் 6. தேருருள் 7. ஆழி 8. வீரை 9. வற்சகம் 10. வெற்பு.
**உக்கம்**: 1. ஆலவட்டம் 2. உதாசனன் 3. மருங்குல் 4. ஆன் 5. ஏறு 6. கோழி.

***சக்கரம்*** -- பெருமை, சக்கரவாகப்பட்சி, பூமி, உற்பத்தி, விருத்தம், தேர்ச்சில், சக்கராயுதம், கடல், மலைமல்லிகை, மலை
***உக்கம்*** -- ஆலவட்டம், அக்கினி, இடை, பசு, எருது, கோழி.

42. **நாகம்** காரீயம், வெற்பு, ஞாழல், நல்தூசு, புன்னை,
வேகம் ஆர் கரி, விண், ஓசை, விண்ணாடு, சிகி, குரங்குஆம்;
**யூகமே** கவந்தம், தர்க்கம், உலூகம், உட்பொருள்ஆராய்தல்,
ஆகும் கார் ஊகம்; ஓர்புல் அணி, மந்தி, படையும் ஆமே.

**நாகம்** : 1. காரீயம் 2. வெற்பு 3. ஞாழல் 4. நல்தூசு 5. புன்னை 6. கரி 7. விண் 8. ஓசை 9. விண்ணாடு 10. சிகி 11. குரங்கு
**யூகம்** : 1. கவந்தம் 2. தர்க்கம் 3. உலூகம் 4. உட்பொருள்ஆராய்தல் 5. கார் ஊகம் 6. ஓர்புல் 7. அணி 8. மந்தி 9. படை

***நாகம்*** -- காரீயம்,மலை, பலினி, நற்சீலை, புன்னைமரம்,யானை, ஆகாயம், ஒலி, தேவலோகம், பாம்பு, குரங்கு
***யூகம்*** -- உடற்குறை, தருக்கம், கோட்டான், அகப்பொருளறிதல், கருங்குரங்கு, ஓர்புல், படைவகுப்பு, பெண்குரங்கு, சேனை.

43. **தோகையே** பெண் முன்றானை, சுற்று ஆரல்,தூவி,மஞ்ஞை,
வாகை சேர் பதாகையே, வால், மயிற்பீலியுடன் எண்பேர் ஆம்.
**சாகையே** பிரிவு, சாதல், தங்கிடம், இலை, தருக்கொம்பு,
ஆகிய வேதநூலின் பிரிவு, அகம், புயம், வட்டில் பேர்.

**தோகை** : 1. பெண் 2. முன்றானை 3. சுற்றுஆரல் 4. தூவி 5. மஞ்ஞை 6. பதாகை 7. வால் 8. மயிற்பீலி
**சாகை** : 1. பிரிவு 2. சாதல் 3. தங்கிடம் 4. இலை 5. தருக்கொம்பு 6. வேதநூலின் பிரிவு 7. அகம் 8. புயம் 9. வட்டில்

***தோகை*** -- பெண், முன்றானை, சுற்றுமதில், இறகு, மயில், விருதுக்கொடி, வால், மயிற்பீலி
***சாகை*** -- பிரிவு, சாவு, தங்குமிடம், இலை, மரக்கொம்பு, வேதநூற்பிரிவு, வீடு, புயம், வட்டில்

44. **நாகு** இளமரமே, சங்கு, நத்தை, புற்று, இளமை,பெண்மீன்,
வாகு உறு மரை, ஆன், மேதிப் பெண்ணுமாய் வகுப்பர் நூலோர்.
**வாகை** ஓர் மரம், ஒழுக்கம், நலன், தவம், வாய்மை, பண்போடு,
ஈகையே, மிகுதி, வென்றி, அறத்துறை, ஈர் ஐம்பேர் ஆம்.

**நாகு** : 1. இளமரம் 2. சங்கு 3. நத்தை 4. புற்று 5. இளமை 6. பெண்மீன் 7. மரை 8. ஆன் 9. மேதிப்பெண்
**வாகை** : 1. ஓர்மரம் 2. ஒழுக்கம் 3. நலன் 4. தவம் 5. வாய்மை 6. பண்பு 7. ஈகை 8. மிகுதி 9. வென்றி 10. அறத்துறை

***நாகு*** -- இளமரம், சங்கு, நத்தை, புற்று, இளமை, பெண்மீன், மரைப்பெட்டை, பசு, காரான்
***வாகை*** -- ஓர்மரம், ஆசாரம், நன்மை, தவம், உண்மை,குணம், கொடை, மிகுதி, வெற்றி, அறத்தின்துறை

45. **சூக்குமம்** தவறு, ஓர்தேகம், தூய நுண்ணறிவு, தேவன்,
தேக்கிய வஞ்சம், நுண்மை, சிவாகமம் ஒன்றும், ஏழ்பேர்.
**தூக்கு** உறி, நிறையே, ஆசான், துலாம், கவி, தெளிதலோடு,
தூக்கமே, உயர்ச்சி, கூத்து, தூக்கணங்குரீஇ ஈர் ஐந்தாம்.

**சூக்குமம்** : 1. தவறு 2. ஓர்தேகம் 3. நுண்ணறிவு 4. தேவன் 5. வஞ்சம் 6. நுண்மை 7. சிவாகமம் ஒன்று.
**தூக்கு** : 1. உறி 2. நிறை 3. ஆசான் 4. துலாம் 5. கவி 6. தெளிதல் 7. தூக்கம் 8. உயர்ச்சி 9. கூத்து 10. தூக்கணாங்குரீஇ.

***சூக்குமம்*** -- தவறு, சூக்குமதேகம், நுண்ணறிவு, கடவுள், வஞ்சம், நுட்பம், சிவாகமத்தொன்று
***தூக்கு*** -- உறி, நிறை, குரு, துலாராசி, பாட்டு, ஆராய்தல், தூக்கங்கள், உயர்ச்சி, நடனம், தூக்கணங்குருவி

**(ககர எதுகை முற்றிற்று)**

## ஙகர எதுகை

46. **புங்கமே** உயர்ச்சி, அம்பு, பொரும் அம்பிற் குதை, நற்றூசு;
**திங்கள்,** அம்புலி, மாதப்பேர்; **சிங்கலே,** இளைத்தல், குன்றல்;
**கங்கு** என்ப வரம்பின் பக்கம் கருந்தினை கழுகு பாறு;
**அங்கி** தீ, கவசம், ஆரல்; **ஆங்கே** அவ்விடம், அசைச்சொல்.

**புங்கம்** : 1. உயர்ச்சி 2. அம்பு 3. அம்பிற்குதை 4. நற்றூசு
**திங்கள்** : 1. அம்புலி 2. மாதம்
**சிங்கல்** : 1. இளைத்தல் 2. குன்றல்
**கங்கு** : 1. வரம்பின் பக்கம் 2. கருந்தினை 3. கழுகு 4. பாறு
**அங்கி** : 1. தீ 2. கவசம் 3. ஆரல்
**ஆங்கு** : 1. அவ்விடம் 2. குன்றல்

*புங்கம்* -- மேல், அம்பு, அம்புக்குதை, புடைவை
*திங்கள்* -- சந்திரன், மாதம்
*சிங்கல்* -- இளைத்தல், குறைதல்
*கங்கு* -- அணையின்பக்கம், கருந்தினை, கழுகு, பருந்து
*அங்கி* -- நெருப்பு, சட்டை, கார்த்திகை நட்சத்திரம்
*ஆங்கு* -- அவ்விடம், அசைச்சொல்

47. **சங்கதம்** பொருந்தல், நட்பு ஆம்; **சாங்கம்**, சங்கோசை, சாயல்.
**பங்கு** என்ப முடமே ஆகும்; பாதியும், சனியும் அப்பேர்.
**வங்கம்** ஓர்தேயம், நாவாய், வழுதுணை, ஈயம், வெள்ளி;
**அங்கணம்** சேறு, முற்றம் ஆம்; சலதாரைக்கும் பேர்.

**சங்கதம்** : 1. பொருந்தல் 2. நட்பு
**சாங்கம்** : 1. சங்கோசை 2. சாயல்
**பங்கு** : 1. முடம் 2. பாதி 3. சனி
**வங்கம்** : 1. ஓர்தேயம் 2. நாவாய் 3. வழுதுணை 4. ஈயம் 5. வெள்ளி
**அங்கணம்** : 1. சேறு 2. முற்றம் 3. சலதாரை.

***சங்கதம்*** -- பொருந்துதல், சினேகம்
***சாங்கம்*** -- சங்கொலி, இயல்
***பங்கு*** -- முடம், பாதி, சனி
***வங்கம்*** -- வங்கதேயம், தோணி, வழுதுணைச்செடி, ஈயம், வெள்ளி
***அங்கணம்*** -- சேறு, முற்றம், தூம்பு

48. **கங்கமே** பருந்து, சீப்புக், கனற்பொறி, மூன்றுங் காட்டும்;
**மங்கலந்** தருமம், அட்டசுபம், பொலிவொடு மணப்பேர்;
**கொங்கு** தேன், மணம், ஓர்தேயம்; மலர்த்தாதும் குறிக்கல்ஆகும்.
**கங்குலே** இருள், இராவே, கருதிய பரணிநாள் ஆம்.

**கங்கம்**: 1. பருந்து 2. சீப்பு 3. கனற்பொறி
**மங்கலம்**: 1. தருமம் 2. அட்டசுபம் 3. பொலிவு 4. மணம்
**கொங்கு**: 1. தேன் 2. மணம் 3. ஓர்தேயம் 4. மலர்த்தாது
**கங்குல்**: 1. இருள் 2. இரா 3. பரணிநாள்

***கங்கம்*** -- பருந்து, மயிர்வாரி, நெருப்புப்பொறி
***மங்கலம்*** -- தருமம், அட்டமங்கலம், பொலிவு, விவாகம்
***கொங்கு*** -- தேன், வாசனை, ஒருதேயம், பூந்தாது
***கங்குல்*** -- இருள், இரவு, பரணிநட்சத்திரம்

49. **மங்குல்** கார், இருள், விண் முப்பேர்; **மங்கலன்** குசன், ஏனாதி;
**பங்கியே** பிற மயிர்க்கும், பகரும் ஆண்மயிர்க்கும் பேர் ஆம்;
**அங்கதம்** வசைச்சொல், மார்போடு, அரவு, தோளணிபொய் [ஆகும்;
**பங்கம்** சேறு, ஆடை, பாவம், குளம், முடம், பழுது, பின்னம்.

**மங்குல்**: 1. கார் 2. இருள் 3. விண்
**மங்கலன்**: 1. குசன் 2.. ஏனாதி
**பங்கி**: 1. பிறமயிர் 2. ஆண்மயிர்
**அங்கதம்**: 1. வசைச்சொல் 2. மார்பு 3. அரவு 4.. தோளணி 5. பொய்

**பங்கம்** : 1. சேறு 2. ஆடை 3. பாவம் 4. குளம் 5. முடம்
6. பழுது 7. பின்னம்.

***மங்குல்*** -- மேகம், இரவு, ஆகாயம்.
***மங்கலன்*** -- செவ்வாய், நாவிதன்
***பங்கி*** -- பிறமயிர், ஆண்மயிர்
***அங்கதம்*** -- பழிமொழி, மார்பு, பாம்பு, தோளணி, பொய்
***பங்கம்*** -- சேறு, புடைவை, பாவம், குளம், முடம், குற்றம்,
வேறுபாடு.

50. **அங்கம்** என்பு, உடல், உறுப்பு, ஓர்தேயம், ஆறு அங்கம்,கட்டில்;
**பிங்கலம்** வடக்கு, பொன்; பொன்னிறமும், ஓர்நூலும் பேசும்.
**பொங்கரே** மரத்தின் கோடு, பொருப்பு, உயர்இலவு, சோலை;
**பொங்கலே** பொலிவு, மிக்கு ஆம்; புங்கவன் குரு, தே, புத்தன்.

**அங்கம்** : 1. என்பு 2. உடல் 3. உறுப்பு 4. ஓர்தேயம்
5. ஆறுஅங்கம் 6. கட்டில்
**பிங்கலம்** : 1. வடக்கு 2. பொன் 3. பொன்னிறம் 4. ஒருநூல்
**பொங்கர்** : 1. மரத்தின் கோடு 2. பொருப்பு 3. இலவு 4.சோலை
**பொங்கல்** : 1. பொலிவு 2. மிக்கு
**புங்கவன்** : 1. குரு 2. தே 3. புத்தன்

***அங்கம்*** -- எலும்பு, உடம்பு, அவயவம், அங்கதேயம்,
வேதாங்கம், மஞ்சம்
***பிங்கலம்*** -- வடக்கு, பொன், பொன்னிறம், பிங்கலந்தைநூல்
***பொங்கர்*** -- மரக்கொம்பு, மலை, இலவமரம், சோலை
***பொங்கல்*** -- பொலிவு, மிகுதி
***புங்கலன்*** -- குரு, கடவுள், புத்ததேவன்.

51. **சங்கு**; கூர்த்திகை, பொருந்தல், சரி, நுதல் கணைக்கால், நந்து;
**துங்கமே** உயர்ச்சி, பீடு, சுத்தமும் சொல்லும் முப்பேர்;
**அங்கிநாள்** கயினி, ஆரல்; **அங்ஙனே** அவண், அத்தன்மை;
**பிங்கலை** உமையே, ஆந்தை; சூரிய சரமும் பேசும்.

**சங்கு** : 1. கூர்த்திகை 2. பொருந்தல் 3. சரி 4. நுதல்
5. கணைக்கால் 6. நந்து
**துங்கம்** : 1. உயர்ச்சி 2. பீடு 3. சுத்தம்
**அங்கிநாள்** : 1. கயினி 2. ஆரல்
**அங்ஙன்** : 1. அவண் 2. அத்தன்மை
**பிங்கலை** : 1. உமை 2. ஆந்தை 3. சூரியசரம்

***சங்கு*** -- படைக்கலப்பொது, கூடுதல், கைவளை, நெற்றி,
கணைக்கால், சங்கு
***துங்கம்*** -- உயர்ச்சி, பெருமை, சுத்தம்
***அங்கிநாள்*** -- அத்தநாள், கார்த்திகைநாள்
***அங்ஙன்*** -- அவ்விடம், அத்தன்மை
***பிங்கலை*** -- பார்வதி, ஆந்தை, சூரியசரம்

52. **சங்கமம்** கூடல், கூட்டம்,
சரப்பொருள், ஆற்றுச்சங்கம்;
**சங்கடம்** அயர்வு, ஒடுக்கம்;
மிதவை, இட்டிகையும் சாற்றும்;
இங்கு இவண், பெருங்காயப் பேர்;
ஈங்கு சாந்து, இவண், இண்டு என்ப;
கிங்கிரர் ஏவல் செய்வோர்;
கிங்கிர கணமும் ஆமே.

**சங்கமம்** : 1. கூடல் 2. கூட்டம் 3. சரப்பொருள் 4.ஆற்றுச்சங்கம்
**சங்கடம்** : 1. அயர்வு 2. ஒடுக்கம் 3. மிதவை 4. இட்டிகை
**இங்கு** : 1. இவண் 2. பெருங்காயம்
**ஈங்கு** : 1. சாந்து 2. இவண் 3. இண்டு
**கிங்கிரர்** : 1. ஏவல் செய்வோர் 2. கிங்கிரகணம்.

*சங்கமம்* -- கலவி, கூட்டம், இயங்குதிணைப்பொருள்,
ஆற்றுக்கூட்டம்
*சங்கடம்* -- வருத்தம், ஒடுக்கம், தெப்பம், இடுக்குவழி
*இங்கு* -- இவ்விடம், பெருங்காயம்
*ஈங்கு* -- சந்தனம், இவ்விடம், இண்டங்கொடி
*கிங்கிரர்* -- ஏவல்செய்வோர், கிங்கிரசாதியார்.

53. ஞாங்கர் வேல், பக்கம், முன்பு, மேல், இடம் நாட்டும் ஐம்பேர்;
தூங்கல் சா, கரி, கூத்து, ஓசை, துயில், சோம்பு, தராசு, தாழ்தல்;
வாங்கலே வளைதல், கொள்ளல், வளைவோடு,வளைத்தலும் [பேர்;
வேங்கை பொன் புலி, ஓர்தாரு; வீங்கலே பொருமல், தூங்கல்.

**ஞாங்கர்** : 1. வேல் 2. பக்கம் 3. முன்பு 4. மேல் 5. இடம்
**தூங்கல்** : 1. சா 2. கரி 3. கூத்து 4. ஓசை 5. துயில்
6. சோம்பு 7. தராசு 8. தாழ்தல்
**வாங்கல்** : 1. வளைதல் 2. கொள்ளல் 3. வளைவு 4. வளைத்தல்
**வேங்கை** : 1. பொன் 2. புலி 3. ஓர்தாரு
**வீங்கல்** : 1. பொருமல் 2. தூங்கல்

*ஞாங்கர்* -- வேலாயுதம், பக்கம், முன், மேல், இடம்.
*தூங்கல்* -- சாவு, யானை, நடனம், தூங்கலோசை, நித்திரை,
சோம்பு, நிறைகோல், தாழ்தல்
*வாங்கல்* -- வளைதல், பெறுதல், வளைவு, வளைத்தல்
*வேங்கை* -- பொன்,. புலி, வேங்கைமரம்
*வீங்கல்* -- வீக்கம், நித்திரைசெய்தல்

54. † தாங்கலே சுமத்தல், காத்தல், தடாகம், இம் முப்பேர் சாற்றும்;
சோங்கு நாவாயே, சோர்வு, குருகு எனச் சொல்லும் முப்பேர்;
பாங்கு அணி, உரிமை, பால் ஆம்; **பங்கயன்** பிரமன், பானு;
தீங்கு என்ப தீமை, குற்றம்; **செங்கை** கை, ஆதிரைப்பேர்.

**தாங்கல்** : 1. சுமத்தல் 2. காத்தல் 3. தடாகம்
**சோங்கு** : 1. நாவாய் 2. சோர்வு 3. குருகு
**பாங்கு** : 1. அணி 2. உரிமை 3. பால்
**பங்கயன்** : 1. பிரமன் 2. பானு
**தீங்கு** : 1. தீமை 2. குற்றம்
**செங்கை** : 1. கை 2. ஆதிரை

***தாங்கல்*** -- சுமத்தல், காக்குதல், குளம்
***சோங்கு*** -- தோணி, மறத்தல், குருகு
***பாங்கு*** -- அலங்காரம், உரிமை, பக்கம்
***பங்கயன்*** -- பிரமதேவன், சூரியன்
***தீங்கு*** -- தீமை, குற்றம்
***செங்கை*** -- கை, திருவாதிரை

55.† **நீங்கலே** பிரிதல், போகல், நீங்குதல், மாற்றல் நாற்பேர்;
**நூங்கு** அண்ணல், மிகுதி ஆகும்; **நுங்கலே** விழுங்கல் உண்டல்;
**தேங்கல்** அச்சக்குறிப்பு; நிறைதலும் இருபேர் செப்பும்.
**பாங்கரே** வளாகம், நண்பர்; பக்கமும் முப்பேர் ஆமே.

**நீங்கல்** : 1. பிரிதல், 2. போகல் 3. நீங்குதல் 4. மாற்றல்
**நூங்கு** : 1. அண்ணல் 2. மிகுதி
**நுங்கல்** : 1. விழுங்கல் 2. உண்டல்
**தேங்கல்** : 1. அச்சக்குறிப்பு 2. நிறைதல்
**பாங்கர்** : 1. வளாகம் 2. நண்பர் 3. பக்கம்

***நீங்கல்*** -- பிரிதல், போகல், நீங்குதல், மாற்றல்
***நூங்கு*** -- பெருமை, மிகுதி
***நுங்கல்*** -- விழுங்கல், புசித்தல்
***தேங்கல்*** -- அச்சக்குறிப்பு, நிறைதல்
***பாங்கர்*** -- இடம், சிநேகிதர், பக்கம்

56. **சங்கம்** ஓர் எண், கணைக்கால், சவை, வளை, புலவர், நெற்றி,
பொங்கும் ஓர்நிதி, சங்கோடு, புணர்ச்சியும், புகலல் ஆகும்;
**தொங்கலே** பீலி, பிலிக்குடை, மாலை, தூக்கு, குஞ்சம்;
பங்கி, வெண்குடையே, துக்கம், பகர் பெயர் இரு நான்கு ஆமே.

**சங்கம்** : 1. ஓர் எண் 2. கணைக்கால் 3. சவை 4. வளை
5. புலவர், 6. நெற்றி 7. ஓர் நிதி 8. சங்கு 9. புணர்ச்சி
**தொங்கல்** : 1. பீலி 2. பீலிக்குடை 3. மாலை 4. தூக்கு
5. குஞ்சம் 6. பங்கி 7. வெண்குடை 8. துக்கம்

***சங்கம்*** -- ஓரெண், கணைக்கால், சவை, கைவளை, கவிஞர்,
நெற்றி, சங்கநிதி, சங்கு, கலவி

*தொங்கல்* -- மயிற்றோகை, பீலிக்குடை, பூமாலை,தூக்கங்கள், குஞ்சம், ஆண்மயிர்,வெண்குடை, துன்பம்

57. ஏங்கலே உரோதனம், மிக்கு இரங்குதல், உட்கலோடு,
தூங்குறும் மயிலின் ஓசை, துவைத்தலும் சொல்லும் ஐம்பேர்;
ஓங்கலே உயர்ச்சி, நாவாய், ஒருத்தல், மேடு, இவர்தல், வன்மை
மூங்கில்,கக்குதல், பொருப்பு, முதலவனும் ஈரைந்து ஆமே.

**ஏங்கல்** : 1. உரோதனம் 2. மிக்கு இரங்குதல் 3. உட்கல் 4. மயிலின் ஓசை 5. துவைத்தல்
**ஓங்கல்** : 1. உயர்ச்சி 2. நாவாய் 3. ஒருத்தல் 4. மேடு 5. இவர்தல் 6. வன்மை 7. மூங்கில் 8. கக்குதல் 9. பொருப்பு 10. முதல்வன்

*ஏங்கல்* -- அழுதல், மிகவிரங்குதல், பயப்படல், மயிற்குரல் ஒலித்தல்
*ஓங்கல்* -- உயர்ச்சி, மரக்கலம், யானை, மேடு, எழுச்சி, வலிமை, மூங்கில், சத்திபண்ணல், மலை, அரசன்.

**(ஙகர எதுகை முற்றிற்று)**

## சகர எதுகை

58. அசி படைக்கலமே, வாளே, அவமதிச்சிரிப்பு முப்பேர்;
நிசி இரா, மஞ்சள், பொன் ஆம்; நிசாதனம் இடமே, உண்மை;
பிசி என்ப பொய்யும், சோறும்; பேசஅரும்பெருளும் முப்பேர்.
சுசி ஆடிமாதம், சுத்தம், சுவேதம், வெண்குடை, நெருப்பு ஆம்.

**அசி** : 1. படைக்கலம் 2. வாள் 3. அவமதிச்சிரிப்பு
**நிசி** : 1. இரா 2. மஞ்சள் 3. பொன்
**நிசாதனம்** : 1. இடம் 2. உண்மை
**பிசி** : 1. பொய் 2. சோறு 3. அரும்பொருள்
**சுசி** : 1. ஆடிமாதம் 2. சுத்தம் 3. சுவேதம் 4. வெண்குடை 5. நெருப்பு

*அசி* -- படையாயுதம், வாளாயுதம், அவமதிச்சிரிப்பு
*நிசி* -- இராக்காலம், மஞ்சள், பொன்
*நிசாதனம்* -- இடம், மெய்
*பிசி* -- பொய், சோறு, அரும்பொருள்
*சுசி* -- ஆடிமாதம், சவுசம், வெண்மை, வெள்ளைக்குடை,தீ

59. **பசு** ஏறு, சீவன், ஆ, ஆம்; **பசப்பு** என்ப பசலை பொன்மை;
**வசுவே** ஆன்கன்று, தீ, பொன்; வசுக்கணம், கிரணம் என்ப;
**அசம்** மூவாண்டுறு நெல், ஆடு ஆம்; **ஆசனம்** இருப்புப் பீடம்
**சசி** அயிராணி, மாரி, சந்திரன், கடல் கர்ப்பூரம்.

**பசு** : 1. ஏறு 2. சீவன் 3. ஆ
**பசப்பு** : 1. பசலை 2. பொன்மை
**வசு** : 1. ஆன்கன்று 2. தீ 3. பொன் 4. வசுக்கணம் 5. கிரணம்
**அசம்** : 1. மூவாண்டுறு நெல் 2. ஆடு
**ஆசனம்** : 1. இருப்பு 2. பீடம்
**சசி** : 1. அயிராணி 2. மாரி 3. சந்திரன் 4. கடல் 5. கர்ப்பூரம்

***பசு*** -- இடபம், உயிர், பசு
***பசப்பு*** -- பசலை, பொன்மைநிறம்
***வசு*** -- பசுவின்கன்று, அக்கினி, பொன், அட்டவசுக்கள், கிரணம்
***அசம்*** -- மூன்றுவருடத்துநெல், ஆடு
***ஆசனம்*** -- இருக்கை, பீடம்
***சசி*** -- இந்திராணி, மழை, சந்திரன், சமுத்திரம், கருப்பூரம்

60. **விசும்பு** பொன்னுலகு மேகம், விண்ணொடு, திசை நாற்பேரே;
**தசும்பு** பொன், குடம், மிடாவே; **தசம்** என்ப சிவிகை பத்து [ஆம்;
**கசம்** கயம், இரும்பு கோலி, கரியும் ஓர் அளவுங் காட்டும்;
**குசம்** மரப்பொது, தருப்பை, கொங்கை, நீர், புறங்கூறல் பேர்.

**விசும்பு** : 1. பொன்னுலகு 2. மேகம் 3. விண் 4. திசை
**தசும்பு** : 1. பொன் 2. குடம் 3. மிடா
**தசம்** : 1. சிவிகை 2. பத்து
**கசம்** : 1. கயம் 2. இரும்பு 3. கோலி 4. கரி 5. ஓர் அளவு
**குசம்** : 1. மரப்பொது 2. தருப்பை 3. கொங்கை 4. நீர்
5. புறங்கூறல்

***விசும்பு*** -- தேவலோகம், முகில், ஆகாயம், திக்கு
***தசும்பு*** -- பொன், குடம், மிடா
***தசம்*** -- தண்டிகை, பத்தாமிலக்கம்
***கசம்*** -- கசரோகம், கரும்பொன், மயிர், யானை, ஒரளவு
***குசம்*** -- மரப்பொது, தருப்பைப்புல், தனம், நீர், வெறும்புறங் கூறுதல்

61. **இசை** புகழ் வண்மை, பொன், சொல்,
இனிமை, பண்பு, இசைப்பும், பாட்டும்;
**பிசிதமே** உதகம், வேம்பும்,
இறைச்சியும் பேசும் முப்பேர்;
**வசி** கூர்மை, வருட்டல், குற்றம்,
வசியம், வாள், வடு, திரட்சி;
**அசைதலே** துவள்ல், சோம்பல்,
ஆடுதல், தயங்கலும் பேர்.

**இசை** : 1. புகழ் 2. வண்மை 3. பொன் 4. சொல் 5. இனிமை 6. பண்பு 7. இசைப்பு 8. பாட்டு
**பிசிதம்** : 1. உதகம் 2. வேம்பு 3. இறைச்சி
**வசி** : 1. கூர்மை 2. வருட்டல் 3. குற்றம் 4. வசியம் 5. வாள் 6. வடு 7. திரட்சி
**அசைதல்** : 1. துவளல் 2. சோம்பல் 3. ஆடுதல் 4. தயங்கல்

***இசை*** -- கீர்த்தி, ஈகை, பொன், வார்த்தை, இனிமை, குணம், கூடிநிற்றல், இசைப்பாட்டு.
***பிசிதம்*** -- நீர், வேம்பு, தசை.
***வசி*** -- கூர்மை, வற்புறுத்தல், குற்றம், கைவசம், வாளாயுதம், தழும்பு, திரட்சி
***அசைதல்*** -- தளம்பல், சோர்தல், ஆடுதல், இலங்குதல்

62. **மிசை** என்ப வறுமை, உண்டி; மேடு, மேல், உயர்ச்சி, சோறு [ஆம்;
**விசய**மே வென்றி, வெல்லம், வெண்கதிர் மண்டலப்பேர்;
**முசலி** தண்டு, உடும்பு, தாழை, முதலை, நற்பல்லி, வெள்ளை;
**வசதி** நல்லிடம், ஊர், வீடு ஆம்; **மச்சு**; மேனிலை, குற்றப் பேர்.

**மிசை** : 1. வறுமை 2. உண்டி 3. மேடு 4. மேல் 5. உயர்ச்சி 6. சோறு
**விசயம்** : 1. வென்றி 2. வெல்லம் 3. வெண்கதிர். மண்டலம்
**முசலி** : 1. தண்டு 2. உடும்பு 3. தாழை 4. முதலை 5. பல்லி 6. வெள்ளை
**வசதி** : 1. நல்லிடம் 2. ஊர் 3. வீடு
**மச்சு** : 1. மேனிலை 2. குற்றம்

***மிசை*** -- தரித்திரம், உணவு, திட்டை,மேல், உயர்ச்சி,சோறு
***விசயம்*** -- வெற்றி, கரும்பின்கட்டி, சூரியமண்டலம்
***முசலி*** -- ஓணான், உடும்பு, தாழை, முதலை, பல்லி, பலதேவன்
***வசதி*** -- நல்லிடம், மருதநிலத்தூர், வீடு
***மச்சு*** -- மேல்மாடம், குற்றம்

63.* **விசனம்** பேராசை, துன்பம், விசிறி, மானிடரில்லாப்பால்;
**அசன**மே உணவு சோறே ஆம்; வேங்கை மரமும் ஆகும்.
**கசிவு** என்ப வருத்தம், வேர்வை, கலுழ்தல், அன்பொடு [நாற்பேரே;
**அசல**மே மலையும், பாரும்; அசையாத நிலையும் ஆமே.

**விசனம்** : 1. பேராசை 2. துன்பம் 3. விசிறி 4.மானிடரிலாப்பால்
**அசனமே** : 1. உணவு 2. சோறு 3. வேங்கைமரம்
**கசிவு** : 1. வருத்தம் 2. வேர்வை 3. கலுழ்தல் 4. அன்பு
**அசலம்** : 1. மலை 2. பார் 3. அசையாநிலை.

***விசனம்*** -- ஆசைப்பெருக்கம், துன்பம், விசிறி, மனிதரில்லாதவிடம்
***அசனம்*** -- உண்டி, சோறு, வேங்கைமரம்
***கசிவு*** — வருத்தம், வேர்வை, அழுதல், அன்பு
***அசலம்*** -- மலை, பூமி, அசையாநிலை

64. **வசந்தம்** தென்காலே, வாசம், வலாரி மாளிகையே, வேனில்;
**பிசின்** பஞ்சின் நூல், வானீரம்; **பேச்சு** என்ப வார்த்தை,
[சொல்லல்;
**வசந்தன்** மன்மதன், தென்கால் ஆம்;**மாசேனன்** அருகன்தேவன்
**துசம்** தவிடு, உமியே, பல்லு, துவசம், குங்கிலியமும் பேர்.

**வசந்தம்** : 1. தென்கால் 2. வாசம் 3. வலாரி மாளிகை 4. வேனில்
**பிசின்** : 1. பஞ்சின் நூல் 2. வானீரம்
**பேச்சு** : 1. வார்த்தை 2. சொல்லல்
**வசந்தன்** : 1. மன்மதன் 2. தென்கால்
**மாசேனன்** : 1. அருகன் 2. தேவன்
**துசம்** : 1. தவிடு 2. உமி 3. பல்லு 4. துவசம் 5. குங்குலியம்

***வசந்தம்*** -- தென்றற்காற்று, வாசனை, இந்திரன்மாளிகை, இளவேனில்
***பிசின்*** -- நூல், நீர்வஞ்சி
***பேச்சு*** -- சொல், சொல்லல்
***வசந்தன்*** -- காமன், தென்றற்காற்று
***மாசேனன்*** -- அருகதேவன், கடவுள்
***துசம்*** -- தவிடு, உமி, பல்லு, விருதுக்கொடி, குங்குலியம்

65. **ஓசிதலே** முரிதல், ஊசல், **ஊசியே** ஆணி, சூசி;
**குசை** குசம், சுவல், முட்டோடு, வாய்வட்டம், கூறும் நாற்பேர்;
**வசை** பழிச்சொல்லே குற்றம்; **மாசியே** மகம், ஓர்மாதம்;
**பிசுனனே** பொய்யன், கோளன்; உலோபனும் பேசும்முப்பேர்.

**ஓசிதல்** : 1. முரிதல் 2. ஊசல்
**ஊசி** : 1. ஆணி 2. சூசி
**குசை** : 1. குசம் 2. சுவல் 3. முட்டு 4. வாய்வட்டம்
**வசை** : 1. பழிச்சொல் 2. குற்றம்
**மாசி** : 1. மகம் 2. ஓர்மாதம்
**பிசுனன்** : 1. பொய்யன் 2. கோளன் 3. உலோபன்

***ஓசிதல்*** -- முறிதல், அசைதல்
***ஊசி*** — எழுத்தாணி, இழைவாங்கி
***குசை*** -- தருப்பை, குதிரைமயிர், குதிரைக்கடிவாளம், குதிரைக்கயிறு

*வசை* -- இகழ்ச்சிச்சொல், குற்றம்
*மாசி* -- மகநட்சத்திரம், மாசிமாதம்
***பிசுனன்*** -- பொய்யன், கோளன், உலுத்தன்

66. **மச்சமே** மீன், ஓர்தேயம், மயிலை, ஓர்புராணம் என்ப;
**கச்சையே** பழுதை, யானைக்கயிறு, கஞ்சுகி, வடுப்பேர்;
**செச்சை** மை, வெட்சி, தேய்வை, தில்லம், நீறு, உகளம் என்ப;
**மிச்சையே** பொய்த்தல் ஆகும்; மிடிமை அஞ்ஞானமும் பேர்.

**மச்சம்** : 1. மீன் 2. ஓர்தேயம் 3. மயிலை 4. ஓர்புராணம்
**கச்சை** : 1. பழுதை 2. யானைக்கயிறு 3. கஞ்சுகி 4. வடு
**செச்சை** : 1. மை 2. வெட்சி 3. தேய்வை 4. தில்லம் 5. நீறு 6. உகளம்
**மிச்சை** : 1. பொய்த்தல் 2. மிடிமை 3. அஞ்ஞானம்

***மச்சம்*** -- மீன், மச்சதேயம், மீனராசி, மச்சபுராணம்
***கச்சை*** -- கயிறு, யானைகட்டுங்கயிறு, சட்டை, தழும்பு
***செச்சை*** -- வெள்ளாட்டுக்கடா, குல்லை, சாந்தின்குழம்பு, காடு, நீறு, சோடு
***மிச்சை*** -- பொய்த்தல், தரித்திரம், அஞ்ஞானம்

67. **பிச்சமே** இறகு, பித்தை, வெண்குடை, பீலிக்குஞ்சம்;
**இச்சை** பொய், ஆசை என்ப; இடித்தலும் இயம்பும் அப்பேர்.
**எச்சமே** குறை, உச்சிட்டம், யாகம், சேய், தனையை, சேடம்;
**அச்சமே** அகத்தி, ஐமை, அஞ்சல் இம் முப்பேர் ஆமே.

**பிச்சம்** : 1. இறகு 2. பித்தை 3. வெண்குடை 4. பீலிக்குஞ்சம்
**இச்சை** : 1. பொய் 2. ஆசை 3. இடித்தல்
**எச்சம்** : 1. குறை 2. உச்சிட்டம் 3. யாகம் 4. சேய் 5. தனையை 6.சேடம்
**அச்சம்** : 1. அகத்தி 2. ஐமை 3. அஞ்சல்

***பிச்சம்*** -- இறகு, ஆண்மயிர், வெண்குடை, பீலிக்குஞ்சம்
***இச்சை*** -- பொய், அவா, இடித்தல்
***எச்சம்*** -- குறை, எச்சில், யாகம், பிள்ளை, மகள், மிச்சம்
***அச்சம்*** -- அகத்தி, அச்சவடிவு, பயம்

68. **வச்சிரம்** சதுரக்கள்ளி, வயிரமே, குலிசம் முப்பேர்;
**நொச்சியே** சிந்துவாரம், மதில், சிற்றூர், நொச்சிமாலை;
**தச்சனே** அறுவை, தச்சன்; **தசை** என்ப புலால், **ஊன்**ஆகும்;
**உச்சி** ஆண்மயிரே, சென்னி, நடுப்பகல், உச்சி, நாய் ஆம்.

**வச்சிரம்** : 1. சதுரக்கள்ளி 2. வயிரம் 3. குலிசம்
**நொச்சி** : 1. சிந்துவாரம் 2. மதில் 3. சிற்றூர் 4. நொச்சிமாலை
**தச்சன்** : 1. அறுவை 2. தச்சன்
**தசை** : 1. புலால் 2. ஊன்
**உச்சி** : 1. ஆண்மயிர் 2. சென்னி 3. நடுப்பகல் 4. உச்சி 5. நாய்

***வச்சிரம்*** -- சதுரக்கள்ளி. வயிரக்கல், வச்சிராயுதம்
***நொச்சி*** -- நொச்சிச்செடி, மதில், சிற்றூர், தன்னரண்காப்பார்க்கு மாலை
***தச்சன்*** -- சித்திரைநட்சத்திரம், தச்சன்
***தசை*** -- புலால், தசை
***உச்சி*** -- ஆண்மயிர், தலை, மத்தியானம், நடுத்தலை, நாய்

69.* **நச்சு** நஞ்சு, ஆசை, என்ப; **நசை** அவா, ஒழுக்கம் ஆகும்;
**பொச்சையே** அடவி, வெற்பு, கரிகாடு, பொற்றை நாற்பேர்;
**துச்சில்** கூட்டு, ஒதுக்கிடப் பேர்; **சுசிகரம்** நேர்மை, தூய்மை;
**அச்சு** அடையாளம், வையத்தச்சு, உயிர் ஆகும் முப்பேர்.

**நச்சு** : 1. நஞ்சு 2. ஆசை
**நசை** : 1. அவா 2. ஒழுக்கம்
**பொச்சை** : 1. அடவி 2. வெற்பு 3. கரிகாடு 4. பொற்றை
**துச்சில்** : 1. கூட்டு 2. ஒதுக்கிடம்
**சுசிகரம்** : 1. நேர்மை 2. தூய்மை
**அச்சு** : 1. அடையாளம் 2. வையத்தச்சு 3. உயிர்

***நச்சு*** -- விடம், விருப்பம்
***நசை*** -- ஆசை, ஒழுக்கம்
***பொச்சை*** -- காடு, மலை, யானை திரியுங் காடு, சிறுமலை
***துச்சில்*** -- கூட்டு, ஒதுக்கிடம்
***சுசிகரம்*** -- நேர்மை, பவித்திரம்
***அச்சு*** -- அடையாளம், தேரச்சு, உயிர்

70. **ஆசியம்** அசி, முகப் பேர்; **அச்சுதன்** கடவுள், வாமன்;
**நீசகம்** எளிமை, நீர் ஆம்; **நிசாந்தம்** வைகறை, வீடு ஆகும்;
**பூசை** அற்சனை, பூனைப்பேர்; **பொச்சாப்பு** மறவி, தீது ஆம்;
**யோசனை** தியானமே, ஓர் எல்லையின் அளவு, ஒலித்தல்.

**ஆசியம்** 1. அசி 2. முகம்
**அச்சுதன்** : 1. கடவுள் 2. வாமன்
**நீசகம்** : 1. எளிமை 2. நீர்

**நிசாந்தம்** : 1. வைகறை 2. வீடு
**பூசை** : 1. அற்சனை 2. பூனை
**பொச்சாப்பு** : 1. மறவி 2. தீது
**யோசனை** : 1. தியானம் 2. ஓர் எல்லையின்அளவு 3. ஒலித்தல்

***ஆசியம்*** -- அவமதிச்சிரிப்பு, முகம்
***அச்சுதன்*** -- கடவுள், விட்டுணு
***நீசகம்*** -- எளிமை, நீர்
***நிசாந்தம்*** -- விடியற்காலம், வீடு
***பூசை*** -- ஆராதனை, பூனை
***பொச்சாப்பு*** -- மறதி, குற்றம்
***யோசனை*** -- யோசித்தல், யோசனைதூரம், ஒலித்தல்

71.* **ஈசன்** மால் அரன், கோன், மூத்தோன், இறை, குரு. கடவுள், [வேதன்.
**பாசி** நாய், வருணன், நீரிற்படர் பாசி, நெட்டி நாற்பேர்;
**சாசனம்** வலையர் சேரி, தண்டனை, இறையிறாவூர்;
**கேசவன்** திருமால், சோழன், கெழுநிறைமயிருளோன் ஆம்.

**ஈசன்** : 1. மால் 2. அரன் 3. கோன் 4. மூத்தோன் 5. இறை 6. குரு 7. கடவுள் 8. வேதன்
**பாசி** : 1. நாய் 2. வருணன் 3. நீரிற்படர் பாசி 4. நெட்டி
**சாசனம்** : 1. வலையர் சேரி 2. தண்டனை 3. இறையிறாவூர்
**கேசவன்** : 1. திருமால் 2. சோழன் 3. நிறைமயிருளோன்

***ஈசன்*** -- திருமால், சிவன், எப்பொருட்குமிறை, மூத்தோன், அரசன், குரு, கடவுள், பிரமதேவன்
***பாசி*** -- நாய், வருணன், நீர்ப்பாசி, சடைச்சி
***சாசனம்*** -- வலையசேரி, தண்டனை, இறைகொடாதவூர்
***கேசவன்*** -- விட்டுணு, சோழராசன், நிறைமயிருள்ளோன்

72.† **ஓசையே** சீர்த்தி, வாழை ஒலியொடு முப்பேர் ஆகும்;
**கூசல்** நாணுதலே, அச்சக்குறிப்பொடு, பயமும் என்ப;
**பீசமே** விதை, மோவாயோடு, இராசீவச்சுருள்முப்பேர்ஆம்;
**காசறை** மயிர்ச் சாந்தோடு, கத்தூரி, மணியும் ஆமே.

**ஓசை** : 1. சீர்த்தி 2. வாழை 3. ஒலி
**கூசல்** : 1. நாணுதல் 2. அச்சக்குறிப்பு 3. பயம்
**பீசம்** : 1. விதை 2. மோவாய் 3. இராசீவச்சுருள்
**காசறை** : 1. மயிர்ச்சாந்து 2. கத்தூரி 3. மணி

*ஓசை* -- கீர்த்தி, வாழை, சத்தம்
*கூசல்* -- வெட்கம், அச்சக்குறிப்பு, பயம்
*பீசம்* -- வித்து, தாடி, தாமரைப்பூச்சுருள்
*காசறை* -- மயிர்ச்சாந்து, கத்தூரிமிருகம், மணி

73. **பாசனம்** என்ப சுற்றம்; பாண்டம், உண்கலனும் பன்னும்.
**வாசம்** ஊர், இறகு, அம்பு, ஆடை, மணம், இருப்பிடமே, [வேகம்;
கோசமே மதிலுறுப்பு, ஆண்குறி, முட்டை, முறை, பண்டாரம்;
**தேசிகன்** வணிகன், தேசாந்திரி, குரு, அரசனும் பேர்.

**பாசனம்** : 1. சுற்றம் 2. பாண்டம் 3. உண்கலன்
**வாசம்** : 1. ஊர் 2. இறகு 3. அம்பு 4. ஆடை 5. மணம் 6. இருப்பிடம் 7. வேகம்
**கோசம்** : 1. மதிலுறுப்பு 2. ஆண்குறி 3. முட்டை 4. முறை 5. பண்டாரம்
**தேசிகன்** : 1. வணிகன் 2. தேசாந்திரி 3. குரு 4. அரசன்

*பாசனம்* -- உறவு, மட்கலம், உண்கலம்
*வாசம்* -- ஊர், இறகு, அம்பு, சீலை, நற்கந்தம், இருப்பிடம், வேகம்.
*கோசம்* -- மதிலுறுப்பு, ஆண்குறி, முட்டை, புத்தகம், பல பண்டம்
*தேசிகன்* -- வியாபாரி, தேயசஞ்சாரி, குரு, இராசா.

74. **மூசல்** மொய்த்திடல், சா என்ப; **மோசனம்** தீர்தல், ஓர் நெல்;
**கீசகம்** குரங்கு, மூங்கில், சித்தகம் கிளத்தும் முப்பேர்;
**வீசலே** எறிதல், ஈவு ஆம்; **விச்சையே** மறுகு, வித்தை;
**கேசரம்** மகிழ், பூந்தாது, கேசவம் என முப்பேரே.

**மூசல்** : 1. மொய்த்திடல் 2. சா
**மோசனம்** : 1. தீர்தல் 2. ஓர்நெல்
**கீசகம்** : 1. குரங்கு 2. மூங்கில் 3. சித்தகம்
**வீசல்** : 1. எறிதல் 2. ஈவு
**விச்சை** : 1. மறுகு 2. வித்தை
**கேசரம்** : 1. மகிழ் 2. பூந்தாது 3. கேசவம்

*மூசல்* -- நெருங்கல், சாதல்
*மோசனம்* -- தீர்தல், ஓர்வகைநெல்
*கீசகம்* -- குரங்கு, மூங்கில், தலைச்சீரா
*வீசல்* -- எறிதல், கொடுத்தல்
*வீச்சை* -- தெரு, வித்தை
*கேசரம்* -- மகிழமரம், புட்பத்தாது, வண்டு

75. **ஆசு** கைக்கவசம், அங்கி, அற்பம், ஓர்கவி, மாசு, ஒல்லை;
**காசு** பொன், மணியே, மாதர்அணிவடம், கபம், கறைப்பேர்;
**ஆசினி** பலா, விசேடம், மரவுரி, மரம், விண், சேகு ஆம்;
**தேசிகம்** அழகு, காந்தி, திசைச்சொல், ஓர்கூத்து, செம்பொன்.

**ஆசு** : 1. கைக்கவசம் 2. அங்கி 3. அற்பம் 4. ஓர்கவி 5. மாசு 6. ஒல்லை
**காசு** : 1. பொன் 2. மணி 3. மாதர்அணிவடம் 4. கபம் 5. கறை
**ஆசினி** : 1. பலா 2. விசேடம் 3. மரவுரி 4. மரம் 5. விண் 6. சேகு
**தேசிகம்** : 1. அழகு 2. காந்தி 3. திசைச்சொல் 4. ஓர்கூத்து 5. பொன்

***ஆசு*** -- கைக்கவசம், சட்டை, அற்பம், ஆசுகவி, குற்றம், சீக்கிரம்
***காசு*** -- பொன், இரத்தினப்பொது, மகளிரணிவடம், கோழை, குற்றம்
***ஆசினி*** -- ஈரப்பலா, சிறப்பு, நார்ச்சீலை, விருட்சம், ஆகாயம், மரவயிரம்
***தேசிகம்*** -- அழகு, ஒளி, அவ்வந்நாட்டுச்சொல், ஓர் கூத்து, பொன்.

76. **ஆசையே** திசை, பொன், அன்பு ஆம்; **அசனி** வச்சிரம், [இடிப்பேர்;
**காசையே** காயா, நாணல்; **கச்சு** என்ப வம்பு, தீ, மீன்;
**பாசமே** கயிறு, கூளி, பற்று, ஊசித்துளையே, அங்கி;
**தூசு** சித்திரைநாள், ஆடை, துகள், தூசி,புரோசையும் பேர்.

**ஆசை** : 1. திசை 2. பொன் 3. அன்பு
**அசனி** : 1. வச்சிரம் 2. இடி
**காசை** : 1. காயா 2. நாணல்
**கச்சு** : 1. வம்பு 2. தீ 3. மீன்
**பாசம்** : 1. கயிறு 2. கூளி 3. பற்று 4. ஊசித்துளை 5. அங்கி
**தூசு** : 1. சித்திரைநாள் 2. ஆடை 3. துகள் 4. தூசி 5. புரோசை.

***ஆசை*** -- திக்கு, பொன், விருப்பம்
***அசனி*** -- வச்சிராயுதம், இடியேறு
***காசை*** -- காயாமரம், நாணற்புல்
***கச்சு*** -- முலைக்கச்சு, நெருப்பு, மீன்
***பாசம்*** -- கயிறு, பசாசு, அன்பு, ஊசியின்றுளை, கவசம்
***தூசு*** -- சித்திரைநட்சத்திரம், புடைவை, துகள், கொடிபடை, யானைக்கழுத்திடுகயிறு

77. **பாசு** என்ப பசுமை, மூங்கில்; **பசை** என்பது இலாபம், ஆசை;
**மாசு** அற்பம், கருமை, குற்றம்; மழை, முகில்; அழுக்கும்
[அப்பேர்.
**கேசமே** சுரியல், பங்கி, கிளர் வாசியுளை முப்பேரே;
**வாசி** புள், முதல்நாள், அம்பு, மா, இசை, மிகுதி ஆமே.

**பாசு** : 1. பசுமை 2. மூங்கில்
**பசை** : 1. இலாபம் 2. ஆசை
**மாசு** : 1. அற்பம் 2. கருமை 3. குற்றம் 4. மழை 5. முகில் 6. அழுக்கு
**கேசம்** : 1. சுரியல் 2. பங்கி 3. வாசியுளை
**வாசி** : 1. புள் 2. முதல்நாள் 3. அம்பு 4. மா 5. இசை 6. மிகுதி

***பாசு*** -- பசுமை, மூங்கில்
***பசை*** -- இலாபம், அன்பு
***மாசு*** -- அற்பம், கருமை, குற்றம், மழை, மேகம், அழுக்கு
***கேசம்*** -- பெண்மயிர், ஆண்மயிர், குதிரைக்கழுத்தின் மயிர்
***வாசி*** -- பறவை, அச்சுவினிநட்சத்திரம், அம்பு, குதிரை, இசை, மிகுதி

78. **தாசியே** அடிமை, சைரேயகமொடு, தருமநாள் ஆம்;
**வேசரி** கழுதையே, கோவேறு வேசரியும் ஆகும்;
**ஆசுகம்** வயானம், காற்றோடு அத்திரம் முப்பேர் என்ப;
**கோசிகம்** சாமவேதம், கூறை, பட்டாடையும் பேர்.

**தாசி** : 1. அடிமை 2. சைரேயகம் 3. தருமநாள்
**வேசரி** : 1. கழுதை 2. கோவேறுவேசரி
**ஆசுகம்** : 1. வயானம் 2. காற்று 3. அத்திரம்
**கோசிகம்** : 1. சாமவேதம் 2. கூறை 3. பட்டாடை

***தாசி*** -- அடிமை, மேகவன்னப் பூவுள மருதோன்றி மரம், பரணி நட்சத்திரம்
***வேசரி*** -- கழுதை, கோவேறுகழுதை
***ஆசுகம்*** -- பறவை, காற்று, அம்பு
***கோசிகம்*** -- சாமவேதம், சீலை, பட்டுப்புடைவை.

79. **பச்சை** ஓர்புதரே, நற்கோள், பரிமளம், புரணி, பைமை;
அச்சுதன் உடன், இலாபம் ஆம், மரகதமும் எண்பேர்;
**கச்சமே** வார், முன்றானை, கடன், படி, மரக்கா லோடு
கச்சையே, அளவு, தேற்றம், கயிறும் பேர் ஒன்பானாமே.

**பச்சை** : 1. ஓர்புதர் 2. நற்கோள் 3. பரிமளம் 4. புரணி
5. பைமை 6. அச்சுதன் 7. இலாபம் 8. மரகதம்
**கச்சம்** : 1. வார் 2. முன்றானை 3. கடன் 4. படி 5. மரக்கால்
6. கச்சை 7. அளவு 8. தேற்றம் 9. கயிறு

***பச்சை*** -- ஓர்புதர், புதன், மிகுவாசனை, தோல், பசுமை,
விட்டுணு, இலாபம், மரகதரத்தினம்
***கச்சம்*** -- வார், முன்றானை, கடன், குதிரையங்கவடி, மரக்கால்,
யானைக் கழுத்திடு கயிறு, அளவு, துணிவு, கயிறு

**(சகர எதுகை முற்றிற்று)**

## ஞகர எதுகை

80. **துஞ்சலே** நிலைபேறோடு, துயில்,சோம்பு,சாவும்ஆகும்;
**பஞ்சரம்** செருந்தி, கூடு, குயிலாயம், பகரும் முப்பேர்;
**கஞ்சமே** தாளம், குல்லை, கமலம், வெண்கலம், நீர், அப்பம்;
**குஞ்சம்** ஈயோட்டி, நாழி, குறளை, கூன், குன்றி, சிந்து ஆம்.

**துஞ்சல்** : 1. நிலைபேறு 2. துயில் 3. சோம்பு 4. சாவு
**பஞ்சரம்** : 1. செருந்தி 2. கூடு 3. குயிலாயம்
**கஞ்சம்** : 1. தாளம் 2. குல்லை 3. கமலம் 4. வெண்கலம் 5. நீர்
6. அப்பம்
**குஞ்சம்** : 1. ஈயோட்டி 2. நாழி 3. குறளை 4. கூன் 5. குன்றி
6. சிந்து

***துஞ்சல்*** -- நிலைபேறு, நித்திரை, சோம்பு, சாதல்
***பஞ்சரம்*** -- செருந்திமரம், கூடு, பறவை வளர்க்குங் கூடு
***கஞ்சம்*** -- கைத்தாளம், கஞ்சா, தாமரை, வெண்கலம், நீர்,
அப்பவர்க்கம்
***குஞ்சம்*** -- ஈயோட்டி, படி, கோள், கூன், குன்றிக்கொடி, குறள்

81. **நெஞ்சு** என்ப மனமும், மார்பும்,
துணிவுமே நிகழ்த்தும் முப்பேர்;
**மஞ்சு** பூண், பனி, ஏர், மேகம்,
வலி, யானைமுதுகு, நாகு;
**வஞ்சி** மேற்செலவு, ஓர் ஊர், பா,
வல்லி, பெண், இயக்கி என்ப;
**தஞ்சம்** அன்பு, எளிமை, பீடு,
பற்றுக்கோல், துணை, தாழ்வு ஆமே.

**நெஞ்சு** : 1. மனம் 2. மார்பு 3. துணிவு
**மஞ்சு** : 1. பூண் 2. பனி 3. ஏர் 4. மேகம் 5. வலி 6. யானை முதுகு 7. நாகு
**வஞ்சி** : 1. மேற்செலவு 2. ஓர் ஊர் 3. பா 4. வல்லி 5. பெண் 6. இயக்கி
**தஞ்சம்** : 1. அன்பு 2. எளிமை 3. பீடு 4. பற்றுக்கோல் 5. துணை 6. தாழ்வு

*நெஞ்சு* -- மனம், மார்பு, துணிவு
*மஞ்சு* -- ஆபரணம், பனி, அழகு, முகில், வலிமை, யானையின் முதுகு, இளமை
*வஞ்சி* -- பகைவர்மேற்செல்லுதல், ஓரூர், வஞ்சிப்பா, ஓர்கொடி, பெண், தருமதேவதை
*தஞ்சம்* -- அன்பு, எளிமை, பெருமை, பற்றுக்கோடு, துணை, இழிவு

82. **அஞ்சனம்** கறுப்பு, மை, திக்கானையில் ஒன்று முப்பேர்;
**மஞ்சரி** தளிர்,பூங்கொத்து, மாலை,பூத்திரள், ஓர்நூல் ஆம்
**அஞ்சலி** வணங்கல், வாவற்பறவையும் ஆகும் என்ப;
**இஞ்சி** ஆத்திரதம், வாவி, எயிலொடு, பரிசையும் பேர்.

**அஞ்சனம்** : 1. கறுப்பு 2. மை 3. திக்கானையில் ஒன்று
**மஞ்சரி** : 1. தளிர் 2. பூங்கொத்து 3. மாலை 4. பூத்திரள் 5. ஓர் நூல்
**அஞ்சலி** : 1. வணங்கல் 2. வாவற்பறவை
**இஞ்சி** : 1. ஆத்திரதம் 2. வாவி 3. எயில் 4. பரிசை

*அஞ்சனம்* -- கருமை, கண்ணிடுமை, மேற்றிசையானை
*மஞ்சரி* -- தளிர், பூங்கொத்து, மாலை, முத்து,ஓர்பிரபந்தம்
*அஞ்சலி* -- கும்பிடல், வௌவாற்பட்சி
*இஞ்சி* -- இஞ்சி, குளம், மதில், கேடகம்

83. **கிஞ்சுகம்** முள்முருக்கு, கேகயம், சிவப்பு முப்பேர்;
**கஞ்சனம்** வயவன், ஆடி, காரிப்புள்ளொடு, கைத்தாளம்;
**பஞ்சமே** சிறுமை, ஐந்து ஆம்; **பாஞ்சாலம்** அழகு, ஓர்தேயம்
**வஞ்சனை** அணங்கு, பொய்யே, மாயையும் வகுக்கும் முப்பேர்.

**கிஞ்சுகம்** : 1. முள்முருக்கு 2. கேகயம் 3. சிவப்பு
**கஞ்சனம்** : 1. வயவன் 2. ஆடி 3. காரிப்புள் 4. கைத்தாளம்
**பஞ்சம்** : 1. சிறுமை 2. ஐந்து

**பாஞ்சாலம்** : 1. அழகு 2. ஓர்தேயம்
**வஞ்சனை** : 1. அணங்கு 2. பொய் 3. மாயை

***கிஞ்சுகம்*** -- முருக்கமரம், கேகயப்புள், சிவப்புநிறம்
***கஞ்சனம்*** -- வலியன், கண்ணாடி,கரிக்குருவி, கைத்தாளம்
***பஞ்சம்*** -- தரித்திரம், ஓரிலக்கம்
***பாஞ்சாலம்*** -- அழகு, பாஞ்சாலதேயம்
***வஞ்சனை*** -- தெய்வப்பெண், பொய், வஞ்சகம்.

84. **குஞ்சி** ஓர் அளவு, பங்கி, குன்றியின் புதர் முப்பேரே;
**வஞ்சமே** சிறுமை, பொக்கம்; வாளொடு, கொடுமையும் பேர்,
**கஞ்சனே** குறளன், வேதன்; **காஞ்சனமே** பொன், புன்கு ஆம்;
**கஞ்சிகை** சிவிகை, ஆடை, கட்டிடு திரையும் ஆமே.

**குஞ்சி** : 1. ஓர்அள்வு 2. பங்கி 3. குன்றியின் புதர்
**வஞ்சம்** : 1. சிறுமை 2. பொக்கம் 3. வாள் 4. கொடுமை
**கஞ்சன்** : 1. குறளன் 2. வேதன்
**காஞ்சனம்** : 1. பொன் 2. புன்கு
**கஞ்சிகை** : 1. சிவிகை 2. ஆடை 3. திரை.

***குஞ்சி*** -- ஓர்அளவு, ஆண்மயிர், குன்றிக்கொடி
***வஞ்சம்*** -- சிறுமை, பொய், வாளாயுதம், கொடுமை
***கஞ்சன்*** -- குறளுருபன், பிரமதேவன்
***காஞ்சனம்*** -- பொன், புன்கமரம்
***கஞ்சிகை*** -- தண்டிகை, சீலை, திரைச்சீலை

85.† **மஞ்சிகை** தாளி, பேழை, வல்லிகை, பொருட்பெண்டு என்ப;
**முஞ்சல்** முற்றுதலே, சாவு ஆம்; **முஞ்சி** ஓர் நாணல், முஞ்சி;
**கஞ்சனை** கலசப்பானை, கண்ணாடி இருபேர் காட்டும்;
**அஞ்சல்** அஞ்சுதல் தோல்விப்பேர்; **அஞர்** துன்பம், அறிவிலார்
[ஆம்.

**மஞ்சிகை** : 1. தாளி 2. பேழை 3. வல்லிகை 4. பொருட்பெண்டு
**முஞ்சல்** : 1. முற்றுதல் 2. சாவு
**முஞ்சி** : 1. ஓர்நாணல் 2. முஞ்சி
**கஞ்சனை** : 1. கலசப்பானை 2. கண்ணாடி
**அஞ்சல்** : 1. அஞ்சுதல் 2. தோல்வி
**அஞர்** : 1. துன்பம் 2. அறிவிலார்

***மஞ்சிகை*** -- தாளிக்கொடி, பெட்டி, காதணி, வேசி
***முஞ்சல்*** -- முற்றுதல், சாவு

*முஞ்சி* -- ஓர்வகைநாணற்புல், முஞ்சியாபரணம்
***கஞ்சனை*** -- கலசப்பானை, கண்ணாடி
***அஞ்சல்*** -- பயப்படல், தோல்வி
***அஞர்*** -- துன்பம், மூடர்

86.† **பஞ்சி** நூல், பருத்தி, தூசு ஆம்; **பஞ்சமம்** செவ்வி, ஓர்பண்;
**கஞ்சியே** மோழை காஞ்சி; **கஞறலே** அடர்பு, எழுச்சி;
**அஞ்சிதம்** பூத்தல், ஒத்தல்; **ஆஞ்சியே** சோம்பல், கூத்து ஆம்;
**அஞ்சனை** அனுமன் தாயே, வடதிசையானைப் பெண்பேர்.

**பஞ்சி** : 1. நூல் 2. பருத்தி 3. தூசு
**பஞ்சமம்** : 1. செவ்வி 2. ஓர்பண்
**கஞ்சி** : 1. மோழை 2. காஞ்சி
**கஞறல்** : 1. அடர்பு 2. எழுச்சி
**அஞ்சிதம்** : 1. பூத்தல் 2. ஒத்தல்
**ஆஞ்சி** : 1. சோம்பல் 2. கூத்து
**அஞ்சனை** : 1. அனுமன் தாய் 2. வடதிசை யானைப் பெண்

***பஞ்சி*** -- நூல், பருத்தி, புடைவை
***பஞ்சமம்*** -- அழகு, ஓர்பண்
***கஞ்சி*** -- கஞ்சி, காஞ்சி
***கஞறல்*** -- நெருக்கம், எழுச்சி
***அஞ்சிதம்*** -- உண்டாதல், பொருந்தல்
***ஆஞ்சி*** -- சோம்பல், கூத்து
***அஞ்சனை*** -- அஞ்சனாதேவி, வடதிசையானையின் பெண் யானை

87. **கஞ்சுகி** எழினி, பாம்பு, காவலன், அங்கி நாற்பேர்;
**சஞ்சலம்** அசைவு, மின்னல், சாற்றும் உட்கவலை என்ப;
**பிஞ்சம்** மாரணம், தூவிப் பேர்; **பிஞ்சகன்** அரன், விநாசன்;
**வஞ்சனி** வலவை, மாது, மாதரிக்கு ஏவல் செய்வாள்.

**கஞ்சுகி** : 1. எழினி 2. பாம்பு 3. காவலன் 4. அங்கி
**சஞ்சலம்** : 1. அசைவு 2. மின்னல் 3. உட்கவலை
**பிஞ்சம்** : 1. மாரணம் 2. தூவி
**பிஞ்சகன்** : 1. அரன் 2. விநாசன்
**வஞ்சனி** : 1. வலவை 2. மாது 3. மாதரிக்கு ஏவல் செய்வாள்

***கஞ்சுகி*** -- திரைச்சீலை, சர்ப்பம், அரசன், தீ
***சஞ்சலம்*** -- அசைவு, மின்னுதல், மனக்கவலை
***பிஞ்சம்*** -- கொலை, இறகு
***பிஞ்சகன்*** -- சிவன், கொலைசெய்வோன்
***வஞ்சனி*** -- இடாகினி, பெண், காளியினேவல் செய்மகள்

**(ஞகர எதுகை முற்றிற்று)**

## டகர எதுகை

88. நடலை வஞ்சனையும், பொய்யும், நடுக்கமும், துன்பமும் பேர்.
மடல் பனையேடு போல்வ, மலரிதழ், ஓர்நூல் என்ப;
படர் நடை, வருத்தம், சிந்தை, பகை, மேடு, வழி நோய், வீரர்;
குடம் நகர், கொடிறு, ஓர்கூத்து, கும்பம், ஆன், தசும்பு, கட்டி

நடலை : 1. வஞ்சனை 2. பொய் 3. நடுக்கம் 4. துன்பம்
மடல் : 1. பனையேடு போல்வ 2. மலரிதழ் 3. ஓர்நூல்
படர் : 1. நடை 2. வருத்தம் 3. சிந்தை 4. பகை 5. மேடு 6. வழி 7. நோய் 8. வீரர்
குடம் : 1. நகர் 2. கொடிறு 3. ஓர்கூத்து 4. கும்பம் 5. ஆன் 6. தசும்பு 7. கட்டி

*நடலை* -- கபடம், பொய், நடுக்கம், துன்பம்
*மடல்* -- பனையேடு முதலியன, பூவிதழ், மடலென்னுமோர் பிரபந்தம்
*படர்* -- செலவு, துயரம், கருத்து, பகை, திட்டை, வழி, வியாதி, படைவீரர்
*குடம்* -- மருதநிலத்தூர், பூசம், விட்டுணுகூத்து, கும்பவிராசி, பசு, குடம், சருக்கரை

89. இடங்கரே முதலை, நீர்ச்சால், குடம், இடங்கழியர் என்ப;
முடங்கலே மடங்கல், கைதை, மூங்கில், நோய், ஓலை ஐம்பேர்;
படங்கு மேற்கட்டி என்ப பகர் பெருங் கொடியும் ஆகும்.
விடங்கம் ஏர், கொடி, கொடுங்கை, முகடு, ஆண்மை விளம்பும் [ஐம்பேர்.

இடங்கர் : 1. முதலை 2. நீர்ச்சால் 3. குடம் 4. இடங்கழியர்
முடங்கல் : 1. மடங்கல் 2. கைதை 3. மூங்கில் 4. நோய் 5. ஓலை
படங்கு : 1. மேற்கட்டி 2. பெருங்கொடி
விடங்கம் : 1. ஏர் 2. கொடி 3. கொடுங்கை 4. முகடு 5. ஆண்மை

*இடங்கர்* -- முதலை, நீர்ச்சால், குடம், தூர்த்தர்
*முடங்கல்* -- முடங்குதல், தாழை, மூங்கில், வியாதி, மடல்
*படங்கு* -- மேற்கட்டி, பெருங்கொடி
*விடங்கம்* -- அழகு, வீதியிற்கட்டியகொடி, கொடுங்கை, முகடு ஆண்மை

90. குடிஞை புட்பொதுவும், யாறும், கூகையும், குடிசையும், பேர்;
தடி வயல், உலக்கை, வில்லு, தண்டு, மின், தசை, உடும்பு ஆம்;
தொடி வளை, ஒருபலப்பேர், சூழ்ந்த கங்கணமும் ஆமே.
மடி அடங்குதல், பொய், சோறு, வயிறு, சோம்பு, உடை, நோய், [தாழை.

**குடிஞை** : 1. புட்பொது 2. யாறு 3. கூகை 4. குடிசை
**தடி** : 1. வயல் 2. உலக்கை 3. வில்லு 4. தண்டு 5. மின் 6. தசை 7. உடும்பு
**தொடி** : 1. வளை 2. ஒரு பலப்பேர் 3. கங்கணம்
**மடி** : 1. அடங்குதல் 2. பொய் 3. சோறு 4. வயிறு 5. சோம்பு 6 .உடை 7. நோய் 8. தாழை

***குடிஞை*** -- பறவைப்பொது, நதி, கோட்டான், சிற்றில்
***தடி*** -- வயல், உலக்கை, வில்லு, தண்டாயுதம், மின்னல், தசை, உடும்பு
***தொடி*** -- கைவளை, ஒருபலம், கங்கணம்
***மடி*** -- அடங்குதல், அசத்தியம், சோறு, வயிறு, சோம்பல், சீலை, வியாதி, தாழை

91. **படிவம்** மெய், வடிவம், நோன்பு ஆம்; **படப்பை** ஊர்ப்புறமே [தோட்டம்;
**வெடி** அச்சம், அசனி, தேறல், வெளி, நறும் புகையும் ஐம்பேர்;
**துடி** கலை, உதடு, உடுக்கை, சூர்ப்பகையாடல், ஏலம்;
**கொடிறு** என்ப கதுப்பு, பூசம்; பற்றிரும்பு எனவும் கூறும்.

**படிவம்** : 1. மெய் 2. வடிவம் 3. நோன்பு
**படப்பை** : 1. ஊர்ப்புறம் 2. தோட்டம்
**வெடி** : 1. அச்சம் 2. அசனி 3. தேறல் 4. வெளி 5. நறும்புகை
**துடி** : 1. கலை 2. உதடு 3. உடுக்கை 4. சூர்ப்பகையாடல் 5. ஏலம்
**கொடிறு** : 1. கதுப்பு 2. பூசம் 3. பற்றிரும்பு

***படிவம்*** -- உடல், உருவம், விரதம்
***படப்பை*** -- நாட்டிற்புறம், தோட்டம்
***வெடி*** -- பயம், இடி, கள், வெளி, நறும்புகை
***துடி*** -- காலநுட்பம், அதரம், இடைசுருங்கியபறை, குமரனாடல், ஏலம்
***கொடிறு*** -- கவுள், பூசநட்சத்திரம், பற்றிரும்பு

92. **கடிகை** நாழிகையே, துண்டம், கதவின்தாள், சமயம், வேதம்;
**படிறு** பொய், களவு, வஞ்சம்; **பட்டே** பட்டாடை, சீறூர்
**சூடிகையே** மகுடம், உச்சி, சுட்டி, தம்மிலமும் ஆகும்;
**இடி**, இடி, பிட்டு, நெல்மா, இசை, சுண்ணம், உறுதிச்சொல்.

**கடிகை** : 1. நாழிகை 2. துண்டம் 3. கதவின் தாள் 4. சமயம் 5. வேதம்

**படிறு** : 1. பொய் 2. களவு 3. வஞ்சம்
**பட்டு** : 1. பட்டாடை 2. சீறூர்
**சூடிகை** : 1. மகுடம் 2. உச்சி 3. சுட்டி 4. தம்மிலம்
**இடி** : 1. இடி 2. பிட்டு 3. நெல்மா 4. இசை 5. சுண்ணம்
6. உறுதிச் சொல்

***கடிகை*** -- நாழிகை, துண்டம், தாப்பாள், சமயம், வேதம்
***படிறு*** -- பொய், களவு, வஞ்சம்
***பட்டு*** -- பட்டுச்சீலை, சிற்றூர்
***சூடிகை*** -- முடி, நடுத்தலை, நுதலணி, மயிர்முடி
***இடி*** -- இடியேறு, சிற்றுண்டி, நென்மா, ஒலி, சுண்ணம்,
உறுதிச் சொல்

93. **உடு** விண்மீன், கிடங்கு, ஆடு, அம்பு, ஓடக்கோல், அம்பிலீர்க்கு
[ஆம்
**கடு** விடம், முள்ளூத் தானே, அரித்கி, கசப்பு நாற்பேர்;
**படு** மரக் குலையே, கள்ளு, பரவுநீர்நிலையே, நன்மை;
**படுதல்** சா, ஒலி யின்றாதல்; பகரில் உண்டாதல், பூத்தல்.

**உடு** : 1. விண்மீன் 2. கிடங்கு 3. ஆடு 4. அம்பு 5. ஓடக்கோல்
6. அம்பிலீர்க்கு
**கடு** : 1. விடம் 2. முள்ளூ 3. அரிதகி 4. கசப்பு
**படு** : 1. மரக்குலை 2. கள்ளு 3. பரவுநீர்நிலை 4. நன்மை
**படுதல்** : 1. சா 2. ஒலி இன்றாதல் 3. உண்டாதல் 4. பூத்தல்

***உடு*** -- நட்சத்திரம், அகழி, ஆடு, அத்திரம், மரக்கலமோட்டுங்
கோல், அம்பிறகு
***கடு*** -- நஞ்சு, முள்ளூ, கடுமரம், கசப்பு
***படு*** -- மரக்கொத்து, மது, குளம், நன்மை
***படுதல்*** -- சாதல், சத்தமின்மை, உண்டாகுதல், அலர்தல்

94. **மடை** மதகு, அவி, துவாரம்அணிப்பணிக்கடைப் பூட்டும் பேர்
**படை** படைக்கலம், கலப்பை, படுக்கை, பல்லணம், போர், தானை;
**இடை** நடு, நுசுப்பு, யானை, இடம், நிறை, பக்கம் என்ப;
**மடம்** அறியாமை, சத்திரம்; மனை, முனிவாசமும் பேர்.

**மடை**: 1. மதகு 2. அவி 3. துவாரம் 4. பணிக்கடைப் பூட்டு
**படை** : 1. படைக்கலம் 2. கலப்பை 3. படுக்கை 4. பல்லணம்
5. போர் 6. தானை
**இடை**: 1. நடு 2. நுசுப்பு 3. யானை 4. இடம் 5. நிறை 6. பக்கம்
**மடம்** : 1. அறியாமை 2. சத்திரம் 3. மனை 4. முனிவாசம்

*மடை* -- சலதாரை, சோறு, துவாரம், ஆபரணக்கடைப்பூட்டு
*படை* -- படையாயுதம், உழுபடை, நித்திரை, குதிரைச்சேணம், யுத்தம், சேனை
*இடை* -- மத்தி, இடை, யானை, இடம், நிறை, பாரிசம்
*மடம்* -- அறிவின்மை, சத்திரம், வீடு, முனிவர்வாசம்

95. **அடுப்பு** என்ப பரணிநாளே, அச்சமே, சுல்லி முப்பேர்;
**வடு**ச் செம்பு, தழும்பு, குற்றம், வண்டு, இளங்காய், கூர்வாள் ஆம்;
**இடக்கர**ே மறைத்த வார்த்தை, விடர், கும்பம் நெருங்கல் என்ப;
**கடைப்பிடி** மறப்பிலாமை, கருதிய துணிவே, தேற்றம்.

**அடுப்பு** : 1. பரணிநாள் 2. அச்சம் 3. சுல்லி
**வடு** : 1. செம்பு 2. தழும்பு 3. குற்றம் 4. வண்டு 5. இளங்காய் 6. கூர்வாள்
**இடக்கர்** : 1. மறைத்த வார்த்தை 2. விடர் 3. கும்பம் 4. நெருங்கல்
**கடைப்பிடி** : 1. மறப்பிலாமை 2. துணிவு 3. தேற்றம்

*அடுப்பு* -- பரணிநட்சத்திரம், பயம், அடுப்பு
*வடு* -- தாம்பிரம், தழும்பு, குற்றம், வண்டு, இளங்காய், கூர்வாள்
*இடக்கர்* -- மறைத்தசொல், தூர்த்தர், குடம், நெருங்கல்
*கடைப்பிடி* -- மறவியின்மை, கருமமுடியுமளவும்விடாத்துணிவு, தெளிவு

96. **விடம்** நஞ்சு, தெறுக்கால் ஆகும்; **வேட்டுவன்** மகநாள், வேடன்;
**அடல்** வலி, கொலை, சமைத்தல், அமர், வென்றி அறையும் ஐம்பேர்;
**உடல்** பொருள், உடம்பு, ஒற்று ஆகும்; **ஓடுங்கல**ே முணங்கு, [ஒதுங்கல்;
**விடப**மே இடபராசி, விடை, மரக்கொம்பு முப்பேர்.

**விடம்** : 1. நஞ்சு 2. தெறுக்கால்
**வேட்டுவன்** : 1. மகநாள் 2. வேடன்
**அடல்** : 1. வலி 2. கொலை 3. சமைத்தல் 4. அமர் 5. வென்றி
**உடல்** : 1. பொருள் 2. உடம்பு 3. ஒற்று
**ஓடுங்கல்** : 1. முணங்கு 2. ஒதுங்கல்
**விடபம்** : 1. இடபராசி 2. விடை 3. மரக்கொம்பு

*விடம்* -- நஞ்சு, தேள்
*வேட்டுவன்* -- மகநட்சத்திரம், வேடன்
*அடல்* -- வலிமை, கொலை, பாகம்பண்ணல், போர், வெற்றி
*உடல்* -- பொருள், சரீரம், ஒற்றெழுத்து
*ஓடுங்கல்* -- அடக்கம், ஒதுங்குதல்
*விடபம்* -- இடபவிராசி, எருது, மரக்கோடு

97. **இடம்** அகம், விண், பீடு, ஆக்கம், இடப்புறம், ததம், வளாகம்;
**வடகம்** தோல், அத்தவாளம்; **வட்கலே** நாண், கேடு ஆகும்;
**படுவி** சாலினி, குண்டு அப்பேர்; **பட்டிமை** களவு, மாயம்;
**நொடி** பிதிர், கிளவி, காலநுட்பமும், சொல்லும் முப்பேர்.

**இடம்** : 1. அகம் 2. விண் 3. பீடு 4. ஆக்கம் 5. இடப்புறம் 6. ததம் 7. வளாகம்
**வடகம்** : 1. தோல் 2. அத்தவாளம்
**வட்கல்** : 1. நாண் 2. கேடு
**படுவி** : 1. சாலினி 2. குண்டு
**பட்டிமை** : 1. களவு 2. மாயம்
**நொடி** : 1. பிதிர் 2. கிளவி 3. காலநுட்பம்

***இடம்*** -- வீடு, ஆகாயம், பெருமை, செல்வம், இடப்பக்கம், விசாலம், இடம்.
***வடகம்*** -- தோல், உல்லாசம்
***வட்கல்*** -- வெட்கம், கேடு
***படுவி*** -- கள்விற்பவள், வசவி
***பட்டிமை*** -- களவு, வஞ்சகம்
***நொடி*** -- கைநொடி, சொல், காலநுட்பம்

98. **சுடர்** ஒளி, தளிர், விளக்கு, சோமன், ஆதவனே, செந்தீ;
**சடம்** உடல், கொடுமை, பொய் ஆம்; **சாடு** சாதுரியம், பண்டி;
**வடுகு** உபநயனம், தேசம், மருதயாழ், இந்தளப்பேர்;
**வடவையே** குதிரைப்பெட்டை, உவாப்பிடி, வடவைத்தீ ஆம்.

**சுடர்** : 1. ஒளி 2. தளிர் 3. விளக்கு 4. சோமன் 5. ஆதவன் 6. செந்தீ
**சடம்** : 1. உடல் 2. கொடுமை 3. பொய்
**சாடு** : 1. சாதுரியம் 2. பண்டி
**வடுகு** : 1. உபநயனம் 2. தேசம் 3. மருதயாழ் 4. இந்தளப்பண்
**வடவை** : 1. குதிரைப்பெட்டை 2. உவாப்பிடி 3. வடவைத்தீ

***சுடர்*** -- பிரகாசம், தளிர், தீபம், சந்திரன், சூரியன், நெருப்பு
***சடம்*** -- சரீரம், குரூரம், பொய்
***சாடு*** -- சாதுரியம், பண்டி
***வடுகு*** -- பூணூற்கலியாணம், ஓர்தேயம், மருதயாழ்த்திறம், இந்தளராகம்.
***வடவை*** -- பெண்குதிரை, பெண்யானை, வடவாமுகாக்கினி

99. **கடை** இடம், சோரி, ஈறு,
கடை, தடங்கடை, கீழ், பாதை;
**உடை** துகில், குடை, வேல், செல்வம்,
உடைமையும் கலணையும் பேர்;
**அடை** இலை, கனமே, அப்பம்,
அடுத்தல், செல்வழி ஐம்பேர் ஆம்;
**நடை** வழி, ஒழுக்கம், செல்வம்,
நடம், நடை நவிலும் ஐம்பேர்.

**கடை** : 1. இடம் 2. சோரி 3. ஈறு 4. கடை 5. தடங்கடை 6. கீழ் 7. பாதை
**உடை** : 1. துகில் 2. குடை 3. வேல் 4. செல்வம் 5. உடைமை 6. கலணை
**அடை** : 1. இலை 2. கனம் 3. அப்பம் 4. அடுத்தல் 5. செல்வழி
**நடை** : 1. வழி 2. ஒழுக்கம் 3. செல்வம் 4. நடம் 5. நடை

***கடை*** -- இடம், இரத்தம், முடிவு, வாயில், ஆவணம், கீழ், வழி
***உடை*** -- சீலை, குடை, வேலமரம், செல்வம், உடைத்தாதல், குதிரைக்கல்லணை
***அடை*** -- இலை, பாரம், தோசை, அடுத்தல், வழி
***நடை*** -- பாதை, ஒழுக்கம், செல்வம், கூத்து, நடத்தல்

100. **விடை** எதிர்மொழியும், ஏறும், விடுத்தலோடு, இடபமும் பேர்;
**கிடை** சடை, உவமை என்ப; கிடக்கையும் கிளத்தல் ஆகும்;
**படி** அங்கவடி, சோபானம், பகை, குணம், உவமை, பார் ஆம்;
**குடி** குலம், புருவம், ஊர் ஆம்; **கொடி** வல்லி, துவசம், காக்கை.

**விடை** : 1. எதிர்மொழி 2. ஏறு 3. விடுத்தல் 4. இடபம்
**கிடை** : 1. சடை 2. உவ்மை 3. கிடக்கை
**படி** : 1. அங்கவடி 2. சோபானம் 3. பகை 4. குணம் 5. உவமை 6. பார்
**குடி** : 1. குலம் 2. புருவம் 3. ஊர்
**கொடி** : 1. வல்லி 2. துவசம் 3. காக்கை

***விடை*** -- மறுமொழி, எருது, விடைகொடுத்தல், இடபவிராசி
***கிடை*** -- சடை, உவமை, கிடத்தல்
***படி*** -- குதிரையங்கவடி, கற்படி, விரோதம், குணம், உவமை, பூமி
***குடி*** -- சாதி, புருவம், மருதநிலத்தூர்
***கொடி*** -- படர்கொடி, துகிற்கொடி, காகம்

101. **அடுதலே** அட்டல் என்ப; அடர்தலும், கொலையும் முப்பேர்.
**சடிலமே** நெருங்கலோடு, சடை, குதிரையும் முப்பேரே;
**படலையே** படர்தல், மாலை, பதலையே, வாசிக்கோவை;
**கிடுகு** கேடகம், தேர்ச்சுற்று, கிளர் சட்டப்பலகை முப்பேர்.

**அடுதல்** : 1. அட்டல் 2. அடர்தல் 3. கொலை
**சடிலம்** : 1. நெருங்கல் 2. சடை 3. குதிரை
**படலை** : 1. படர்தல் 2. மாலை 3. பதலை 4. வாசிக்கோவை
**கிடுகு** : 1. கேடகம் 2. தேர்ச்சுற்று 3. சட்டப்பலகை

***அடுதல்*** -- தீயிற்பாகஞ்செய்தல், நெருங்கல், கொல்லல்
***சடிலம்*** -- நெருக்கம், சடை, குதிரை
***படலை*** -- பரவல், மாலை, வாயகன்றபறை, குதிரைக்கிண்கிணிமாலை
***கிடுகு*** -- பரிசை, தேரின்மரச்சுற்று, சட்டப்பலகை

102. **படலிகை** பீர்க்கு, வட்டம், பரந்த கைம்மணி, பூந்தட்டு;
**கொடியனே** துட்டன் கேது ஆம்; **கொட்பு** கோண், உலாவல், [சூர்த்தல்;
தொடு என்ப மருதப்பூமி; தோட்டம், கைதவமும் ஆகும்.
**முடி** சிகை, துளவு, நாறுமுடி, சிரம், மகிடம் ஐம்பேர்.

**படலிகை** : 1. பீர்க்கு 2. வட்டம் 3. கைம்மணி 4. பூந்தட்டு
**கொடியன்** : 1. துட்டன் 2. கேது
**கொட்பு** : 1. கோண் 2. உலாவல் 3. சூர்த்தல்
**தொடு** : 1. மருதப்பூமி 2. தோட்டம் 3. கைதவம்
**முடி** : 1. சிகை 2. துளவு 3. நாறுமுடி 4. சிரம் 5. மகிடம்

***படலிகை*** -- பீர்க்கு, வட்டவடிவு, கைம்மணி, பூந்தட்டு
***கொடியன்*** -- துன்மார்க்கன், கேது
***கொட்பு*** -- வளைவு, திரிதல், சுழலல்
***தொடு*** -- மருதநிலம், தோட்டம், வஞ்சம்
***முடி*** -- மயிர்முடி, துளசி, நாறுமுடி, தலை, கிரீடம்

103. **அடர்** தகடு, உடன் நெருங்கல்; ஐமையின் வடிவம் ஆகும்.
**விடர்** முனி வாசம், தூர்த்தர், கமர், வெற்பின் முழை, காடு ஐம்பேர்;
**விடலையே** தலைவன் பேரும், விறலோன் தன் பேரும் ஆகும்;
**அடி** செண்டு வெளி, தாள், ஆதி, கவிதையின் பாதம் நாற்பேர்.

**அடர்** : 1. தகடு 2. நெருங்கல் 3. ஐமையின் வடிவு
**விடர்** : 1. முனிவாசம் 2. தூர்த்தர் 3. கமர் 4. வெற்பின் முழை 5. காடு
**விடலை** : 1. தலைவன் 2. விறலோன்
**அடி** : 1. செண்டுவெளி 2. தாள் 3. ஆதி 4. கவிதையின் பாதம்

*அடர்* -- தகடு, நெருங்குதல், தகட்டுவடிவு
*விடர்* -- முனிவரிருப்பிடம், காமுகர், பிளப்பு, மலைக்குகை, காடு
*விடலை* -- பாலைநிலத்தலைவன், வெற்றியாளன்
*அடி* -- குதிரைவையாளிவீதி, கால், முதல், பாட்டினடி

104.* தொடை அம்பு, நாணி,மாலை,தொடை, மதிற்சுற்று ஐம்பேர் ஆம்;
முடை நாற்றம், புலால், குடைப்பேர்; **முடவன்** பங்கு, அருணன், [மந்தன்;
குடை உடை, பிச்சம், கொட்டை, குமரவேள் ஆடல் நாற்பேர்;
நடு இடை, நீதி, பூமி; **நாட்டியமே** கூத்து எண்ணம்.

**தொடை** : 1. அம்பு 2. நாணி 3. மாலை 4. தொடை 5. மதிற்சுற்று
**முடை** : 1. நாற்றம் 2. புலால் 3. குடை
**முடவன்** : 1. பங்கு 2. அருணன் 3. மந்தன்
**குடை** : 1. உடை 2. பிச்சம் 3. கொட்டை 4. குமரவேள் ஆடல்
**நடு** : 1. இடை 2. நீதி 3. பூமி
**நாட்டியம்** : 1. கூத்து 2. எண்ணம்.

*தொடை* -- அம்பு, நாணி, பூமாலை, துடை, மதிற்சுற்று
*முடை* -- நாற்றம், புலால், ஓலைக்குடை
*முடவன்* -- முடவன், அருணன், சனி
*குடை* -- வேல்மரம், குடை, மிதியடிக்குமிழ், குமரனாடல்
*நடு* -- மத்தி, நீதி, பூமி
*நாட்டியம்* -- கூத்து, எண்ணம்.

105. **செடி** ஒளி, செறிவு, தீது; **திடம்** என்ப வலியே, உண்மை;
**சடையே** வேர், வேணி என்ப; **தடிதலே** கொலை, தறித்தல்;
**தடை** அங்கி, தகைதல் ஆகும்; **தடாரி** பேரிகையே, தக்கை;
**புடை** இடம் பக்கம் என்ப; **புடம்** இடம், புறமும் ஆமே.

**செடி** : 1. ஒளி 2. செறிவு 3. தீது
**திடம்** : 1. வலிமை 2. உண்மை
**சடை** : 1. வேர் 2. வேணி
**தடிதல்** : 1. கொலை 2. தறித்தல்
**தடை** : 1. அங்கி 2. தகைதல்
**தடாரி** : 1. பேரிகை 2. தக்கை
**புடை** : 1. இடம் 2. பக்கம்
**புடம்** : 1. இடம் 2. புறம்

*செடி* -- பிரகாசம், நெருக்கம், தீமை
*திடம்* -- வலிமை, உண்மை
*சடை* -- வேர், சடை
*தடிதல்* -- கொல்லல், தறித்தல்
*தடை* -- கவசம், தடுத்தல்

*தடாரி* -- ஓர்வாச்சியம், பலவகைப்பறை
*புடை* -- இடம், பாரிசம்
*புடம்* -- இடம், பக்கம்

106. **வடம்** கயிறு, ஊர், சாலேகம், வடமரம் வகுக்கும் நாற்பேர்;
**அடம்** கீணமொடு, சஞ்சாரம்; **ஆட்சியே** உரிமை, ஆண்மை;
**கிடங்கு** அகழ், வாவி ஆகும்; **கேட்டை** வல்லாரை, தௌவை;
**மடங்கு** நோய், அளவே என்ப; **வடி** சுவா, மது, நீளப் பேர்.

**வடம்** : 1. கயிறு 2. ஊர் 3. சாலேகம் 4. வடமரம்
**அடம்** : 1. கீணம் 2. சஞ்சாரம்
**ஆட்சி** : 1. உரிமை 2. ஆண்மை
**கிடங்கு** : 1. அகழ் 2. வாவி
**கேட்டை** : 1. வல்லாரை 2. தௌவை
**மடங்கு** : 1. நோய் 2. அளவு
**வடி** : 1. சுவா 2. மது 3. நீளம்

*வடம்* -- கயிறு, ஊர், பூவரும்பு, ஆலமரம்
*அடம்* -- ஈனம், சஞ்சாரம்
*ஆட்சி* -- உரிமை, ஆண்மை.
*கிடங்கு* -- அகழி, குளம்
*கேட்டை* -- கேட்டைநட்சத்திரம், மூதேவி
*மடங்கு* -- துன்பம், அளவு
*வடி* -- நாய், கள், நீளம்

107. **ஒடுக்கம்** ஈறு, அடக்கம் என்ப; **உடன்றலே** பொருதல், கோபம்;
**விடுத்தலே** தங்கல், உய்த்தல்; **வேட்டையே** வேட்டம், நோய் ஆம்;
**கடுத்தலே** உவமை, ஐயம், கலாம், வேகம் கருதும் நாற்பேர்;
**தொடுத்தலே** வளைத்தல், பற்றல், கட்டுதல் முப்பேர் சொல்லும்.

**ஒடுக்கம்** : 1. ஈறு 2. அடக்கம்
**உடன்றல்** : 1. பொருதல் 2. கோபம்
**விடுத்தல்** : 1. தங்கல் 2. உய்த்தல்
**வேட்டை** : 1. வேட்டம் 2. நோய்
**கடுத்தல்** : 1. உவமை 2. ஐயம் 3. கலாம் 4. வேகம்
**தொடுத்தல்** : 1. வளைத்தல் 2. பற்றல் 3. கட்டுதல்

*ஒடுக்கம்* -- முடிவு, அடக்கம்
*உடன்றல்* -- யுத்தஞ்செய்தல், சினம்
*விடுத்தல்* -- தங்குதல், செலுத்தல்
*வேட்டை* -- வேட்டை, துன்பம்
*கடுத்தல்* -- உவமை, ஐயம், கோபம், வேகம்
*தொடுத்தல்* -- வளைத்தல், பற்றல், கட்டுதல்

108. **சட்டகம்** வடிவு, சேக்கை, தாபரம் முப்பேர் சாற்றும்;
**புட்டமே** காகம் ஆகும்; புடைவையும், நிறையும் அப்பேர்.
**குட்டமே** தொழுநோய், ஆழம், குளம் எனப் பெயர் முப்பாற்றே;
**பெட்பு** அன்பு, பெருமை யாகும்; **பேடு** அலி, மதன் கூத்து, ஊர் ஆம்.

**சட்டகம்** : 1. வடிவு 2. சேக்கை 3. தாபரம்
**புட்டம்** : 1. காகம் 2. புடைவை 3. நிறை
**குட்டம்** : 1. தொழுநோய் 2. ஆழம் 3. குளம்
**பெட்பு** : 1. அன்பு 2. பெருமை
பேடு : 1. அலி 2. மதன் கூத்து 3. ஊர்

***சட்டகம்*** -- வடிவு, மக்கட்படுக்கை, சரீரம்
***புட்டம்*** -- காகம், சீலை, நிறைவு
***குட்டம்*** -- குட்டவியாதி, ஆழம், குளம்
*பெட்பு* -- அன்பு, பெருமை
*பேடு* -- அலி, மன்மதன்கூத்து, ஊர்

109. **திட்டையே** உரலும், மேடும்; திண்ணையும் நண்ணும் முப்பேர்.
**தட்டை** வேய், தினைத்தாள், கிள்ளை தனிக்கடிகோல், தீ, [முண்டம்;
**கிட்டி**, கைத்தாளம், கிட்டி, கிருட்டி, நாழிகைவட்டில் பேர்,
**கட்டளை** நிறை, தூக்கு, ஒப்பு, கருவி, இட்டிகை செய் சட்டம்.

திட்டை : 1. உரல் 2. மேடு 3. திண்ணை
**தட்டை** : 1. வேய் 2. தினைத்தாள் 3. கிள்ளை தனிக்கடி கோல் 4. தீ 5. முண்டம்
**கிட்டி** : 1. கைத்தாளம் 2. கிட்டி 3. கிருட்டி 4. நாழிகைவட்டில்
**கட்டளை** : 1. நிறை 2. தூக்கு 3. ஒப்பு 4. கருவி 5. இட்டிகை செய்சட்டம்

***திட்டை*** -- உரல், மேடு, திண்ணை
***தட்டை*** -- மூங்கில், தினைத்தாள், கிளிகடிகோல், நெருப்பு, மொட்டை
***கிட்டி*** -- கைத்தாளம், கிட்டி, தலையீற்றுப்பசு, நாழிகைவட்டில்
***கட்டளை*** -- நிறை, துலாவிராசி, உவமை, கருவி, செங்கற்கருவி

110. தட்டு தேர்நடுவு, குற்றம், தட்டு, ஆழி, பலகை, முட்டு;
**செட்டி** வாணிகன், செவ்வேள் ஆம்; **திடன்** என்ப வலியே, [வாய்மை;
வெட்சி என்பதுவே செச்சை, மிகுநிரை கவர்தல் ஆகும்;
**பட்டிகை** அரைஞாண், கச்சு, பஃறி, தெப்பம், துகில் பேர்.

**தட்டு** : 1. தேர்நடுவ்வு 2. குற்றம் 3. தட்டு 4. ஆழி 5. பலகை 6. முட்டு
**செட்டி** : 1. வாணிகன் 2. செவ்வேள்
**திடன்** : 1. வலி 2. வாய்மை
**வெட்சி** : 1. செச்சை 2. நிரைகவர்தல்
**பட்டிகை** : 1. அரைஞாண் 2. கச்சு 3. பஃறி 4. தெப்பம் 5. துகில்

***தட்டு*** -- தேர்நடு, குற்றம், சுளகு, வட்டம், கேடகம், விக்கினம்
***செட்டி*** -- வாணிபன், குமரன்
***திடன்*** -- வலிமை, உண்மை
***வெட்சி*** -- வெட்சிச்செடி, பகைவர்நிரைகவர்தல்
***பட்டிகை*** -- அரைஞாண், சீலைக்கச்சு, தோணி, மிதவை, புடைவை

111. **நட்டமே** நடனம், கேடு ஆம்; **ஞாட்பு** அமர், பாரம், கூட்டம்;
**தொட்டல்** என்பதுவே உண்டல், தோண்டல், கைதீண்டல் முப்பேர்;
**கட்டலே** தடை, பிணித்தல், கள்ளலோடு, அகழ்தல், மூடல்;
**தட்டலே** ஆணைசெய்தல்; தடுத்தல், கிட்டுதலும் ஆமே.

**நட்டம்** : 1. நடனம் 2. கேடு
**ஞாட்பு** : 1. அமர் 2. பாரம் 3. கூட்டம்
**தொட்டல்** : 1. உண்டல் 2. தோண்டல் 3. கைதீண்டல்
**கட்டல்** : 1. தடை 2. பிணித்தல் 3. கள்ளல் 4. அகழ்தல் 5. மூடல்
**தட்டல்** : 1. ஆணைசெய்தல் 2. தடுத்தல் 3. கிட்டுதல்

***நட்டம்*** -- கூத்து, கேடு
***ஞாட்பு*** -- போர், பாரம், கூட்டம்
***தொட்டல்*** -- புசித்தல், தோண்டுதல், கையாற்றொடல்
***கட்டல்*** -- தடை, கட்டுதல், திருடல், தோண்டல், மூடுதல்
***தட்டல்*** -- ஆணையிடல், தடுத்தல், கிட்டுதல்

112. **முட்டி** காஞ்சிரமே, பிச்சை; **முடுகலே** கடுகல், ஏற்றல்;
**விட்டிலே** சலபம், புக்கி; **வீடு** என்ப மனை, முத்தி பேர்;
**தட்டி** கேடகமே, சேமம்; **சட்பமே** மயிர், இளம்புல்;
**வட்டிலே** புட்டில், கூடை, வள்ளம், முந்தரம் நாற்பேரே.

**முட்டி** : 1. காஞ்சிரம் 2. பிச்சை
**முடுகல்** : 1. கடுகல் 2. ஏற்றல்
**விட்டில்** : 1. சலபம் 2. புக்கி
**வீடு** : 1. மனை 2. முத்தி
**தட்டி** : 1. கேடகம் 2. சேமம்
**சட்பம்** : 1. மயிர் 2. இளம்புல்
**வட்டில்** : 1. புட்டில் 2. கூடை 3. வள்ளம் 4. முந்தரம்

*முட்டி* -- காஞ்சிரமரம், பிச்சை
*முடுகல்* -- சீக்கிரம், கிட்டல்
*விட்டில்* -- விட்டிற்பறவை, பிராயமரம்
*வீடு* -- இல்லம், மோக்கம்
*தட்டி* -- கேடகம், காவல்
*சட்பம்* -- மயிர், அறுகு
*வட்டில்* -- புட்டில், கூடை, வட்டில், வழி

113. **மாடமே** உழுந்து, இல்லப்பேர்; **மடுவே** நீர்நிலை, பயம்பு ஆம்;
**ஏடகம்** பனை, நல்லாடை, இலாங்கலி, பலகை, தோடு;
**சேடனே** இளையோன், பாங்கன், சிலதனோடு, அனந்தன், காளை;
**கேடகம்** பரிசை, வேறுஓர் கேடு இல் ஊர், பலகை முப்பேர்.

**மாடம்** : 1. உழுந்து 2. இல்லப்பேர்
**மடு** : 1. நீர்நிலை 2. பயம்பு
**ஏடகம்** : 1. பனை 2. நல்லாடை 3. இலாங்கலி 4. பலகை 5. தோடு
**சேடன்** : 1. இளையோன் 2. பாங்கன் 3. சிலதன் 4. அனந்தன் 5. காளை
**கேடகம்** : 1. பரிசை 2. ஊர் 3. பலகை

*மாடம்* -- உழுந்து, வீடு
*மடு* -- தடாகம், பள்ளம்
*ஏடகம்* -- பனை, சீலை தென்னமரம், பலகை, பூவிதழ்
*சேடன்* -- இளமையோன், தோழன், ஏவல்செய்வோன், பூமிதாங்குமனந்தன், கட்டிளமையோன்
*கேடகம்* -- பரிசை, ஊர், தோற்பலகை

114. **நாடி** குந்தளம், நரம்பு, நாசிகை நவிலும் முப்பேர்;
**பாடி** தார், நகரம், நாடு, பாசறை, தடை, ஆய்ப்பாடி;
**கோடிகம்** துகில் பூந்தட்டு ஆம்; **குடம்பையே** முட்டை, கூடு;
**கோடி** வில், புதுமை, தூசு, எண்; **குடுமியே** கொற்றம், உச்சி.

**நாடி** : 1. குந்தளம் 2. நரம்பு 3. நாசிகை
**பாடி** : 1. தார் 2. நகரம் 3. நாடு 4. பாசறை 5. தடை 6. ஆய்ப்பாடி
**கோடிகம்** : 1. துகில் 2. பூந்தட்டு
**குடம்பை** : 1. முட்டை 2. கூடு
**கோடி** : 1. வில் 2. புதுமை 3. தூசு 4. எண்
**குடுமி** : 1. கொற்றம் 2. உச்சி

*நாடி* -- மயிர்ப்பொது, நரம்பு, மூக்கு
*பாடி* -- படை, நகரம், நாடு, பகைமேற்சென்றோருறைவிடம், கவசம், முல்லைநிலத்தூர்
*கோடிகம்* -- சீலை, பூந்தட்டு
*குடம்பை* -- முட்டை, கூடு
*கோடி* -- வில், நூதனம், சீலை, ஓரெண்
*குடுமி* -- வெற்றி, உச்சி

115. மாடு பொன், பக்கம், செல்வம்; மணி, நிரை இடமும் ஆகும்.
சேடு என்ப பெருமை, நன்மை, திரட்சி, ஏர், குழவு ஐம்பேர் ஆம்;
பாடு இடம், பெருமை, ஓசை, படுதல், கேடு, அன்பே, பண்பு;
ஈடு என்ப குழைவே, ஒப்பே, வலியொடு, பெருமையும் பேர்.

மாடு : 1. பொன் 2. பக்கம் 3. செல்வம் 4. மணி 5. நிரை 6. இடம்
சேடு : 1. பெருமை 2. நன்மை 3. திரட்சி 4. ஏர் 5. குழவு
பாடு : 1. இடம் 2. பெருமை 3. ஓசை 4. படுதல் 5. கேடு 6. அன்பு 7. பண்பு
ஈடு : 1. குழைவு 2. ஒப்பு 3. வலி 4.பெருமை

*மாடு* -- பொன், பக்கம், செல்வம், அகன்மணி, ஆன், இடம்
*சேடு* -- மாட்சிமை, நலம், பிண்டம், அழகு, இளமை
*பாடு* -- இடம், மாட்சி, ஒலி, படுதல், அழிவு, நேயம், குணம்
*ஈடு* -- செறிவு, ஒப்பு, வலிமை, தகைமை

116. வாடையே பொதுவர்சேரி, வடகாற்று, வீதியும் பேர்;
ஆடு மேழகமே, கூர்மை, அடல், மேடராசி, கூத்து ஆம்;
கோடை மேல்காற்றுக், கோடை, குரகதம், கோடல் என்ப;
ஓடை நீர்நிலை, கிடங்கே, ஓர்தரு, நெற்றிப்பட்டம்.

வாடை : 1. பொதுவர்சேரி 2. வடகாற்று 3. வீதி
ஆடு : 1. மேழகம் 2. கூர்மை 3. அடல் 4. மேடராசி 5. கூத்து
கோடை : 1. மேல்காற்று 2. கோடை 3. குரகதம் 4. கோடல்
ஓடை : 1. நீர்நிலை 2. கிடங்கு 3. ஓர்தரு 4. நெற்றிப்பட்டம்

*வாடை* -- இடைச்சேரி, வாடைக்காற்று, வீதி
*ஆடு* -- ஆடு, கூர்மை, வெற்றி, மேடவிராசி, நடனம்
*கோடை* -- மேல்காற்று, கோடைக்காலம், குதிரை, வெண்காந்தள்
*ஓடை* -- வாவி, அகழி, ஓர்மரம், நெற்றிப்பட்டம்

117. ஆடலே குளித்தல், கூடல், வார்த்தை, கூத்து, அமரே, வென்றி;
பாடலம் சிவப்பு, வாசி, பாதிரி, சேரனூர்தி;
கோடரம் குரங்கு, சோலை, கொம்பு, எட்டி, துரகம், ஏலம்;
ஆடவர் புருடர் நாமம் ஆம், இளையவர்க்கும் ஆமே.

ஆடல் : 1. குளித்தல் 2. கூடல் 3. வார்த்தை 4. கூத்து 5. அமர் 6. வென்றி
பாடலம்: 1. சிவப்பு 2. வாசி 3. பாதிரி 4. சேரனூர்தி
கோடரம் : 1. குரங்கு 2. சோலை 3. கொம்பு 4. எட்டி 5. துரகம் 6. ஏலம்
ஆடவர் : 1. புருடர் 2. இளையவர்

*ஆடல்* -- நீராடல், புணர்தல், சொல், நடனம், போர், வெற்றி
*பாடலம்* -- சிவப்பு, குதிரை, பாதிரிமரம், சேரன்குதிரை
*கோடரம்* -- குரங்கு, சோலை, மரக்கொம்பு, காஞ்சிரமரம், குதிரை, மயிர்ச்சாந்து
*ஆடவர்* -- ஆண்மக்கள், இளைஞர்

118. **ஆடகம்** துவரை, பொன் ஆம்; **அடவியே** பொழில், காடு என்ப;
**கோடகம்** சதுக்கம், வாசி, கோடியே, முடியுறுப்பு ஆம்;
**பீடிகை** கடை, பூந்தட்டு; பீடமும், துமானமும் பேர்.
தோடு இதழ், பன்னம், பெண்ணை மடல் போல்வ, அணை, [தொகைப்பேர்

**ஆடகம்** : 1. துவரை 2. பொன்
**அடவி** : 1. பொழில் 2. காடு
**கோடகம்** : 1. சதுக்கம் 2. வாசி 3. கோடி 4. முடியுறுப்பு
**பீடிகை** : 1. கடை 2. பூந்தட்டு 3. பீடம் 4. துமானம்
தோடு : 1. இதழ் 2. பன்னம் 3. பெண்ணைமடல்போல்வ 4. அணை 5. தொகைப்பேர்.

*ஆடகம்* -- துவரை, பொன்
*அடவி* -- சோலை, காடு
*கோடகம்* -- நாற்றெரு கூடுமிடம், குதிரை, புதுமை, முடியுறுப்பு
*பீடிகை* -- கடை, பூந்தட்டு, ஆசனம், ஆபரணச்செப்பு
*தோடு* -- பூவிதழ், இலை, பனையேடுபோல்வன, அணை, கூட்டம்

119. **ஏடனே**, வதிரன், பாங்கன்; **இடும்பையே** துன்பம், அச்சம்;
**காடு** கானகம், ஊர், எல்லை, களம், நரல், பரணி நாள் ஆம்;
**கோடல்** காந்துகமே, கோணல், கொள்ளுதல், முறித்தலும் பேர்;
**நாடு** இடம், பக்கம், பூமி; **நடமே** கூத்து, ஓர் பண் ஆமே.

**ஏடன்** : 1. வதிரன் 2. பாங்கன்
**இடும்பை** : 1. துன்பம் 2. அச்சம்
**காடு** : 1. கானகம் 2. ஊர் 3. எல்லை 4. களம் 5. நரல் 6. பரணிநாள்
**கோடல்** : 1. காந்துகம் 2. கோணல் 3. கொள்ளுதல் 4. முறித்தல்
**நாடு** : 1. இடம் 2. பக்கம் 3. பூமி
**நடம்** : 1. கூத்து 2. ஓர்பண்

*ஏடன்* -- செவிடன், தோழன்
*இடும்பை* -- வருத்தம், பயம்
*காடு* -- வனம், ஊர், அளவு, இடம், செத்தை, பரணிநட்சத்திரம்
*கோடல்* -- வெண்காந்தள், வளைதல், ஏற்குதல், முரித்தல்
*நாடு* -- இடம், பக்கம், பூமி
*நடம்* -- நடனம், ஓரிராகம்.

120. **நாட்டம்** கண், நடனம், ஓர்பண், நாந்தகம் நவலும் நாற்பேர்;
**ஓட்டம்** மேலுதடே, தோல்வி; **உட்கு** என்ப நாணம், அச்சம்;
**மூட்டம்** மூளுதல், மூடல் பேர்; **முடுவல்** அண்டிகம், சுவாவே;
**தோட்டி** அங்குசம், கபாடம்; **துட்டனே** தீயன், தேள் ஆம்.

**நாட்டம்** : 1. கண் 2. நடனம் 3. ஓர்பண் 4. நாந்தகம்
**ஓட்டம்** : 1. மேலுதடு 2. தோல்வி
**உட்கு** : 1. நாணம் 2. அச்சம்
**மூட்டம்** : 1. மூளுதல் 2. மூடல்
**முடுவல்** : 1. அண்டிகம் 2. சுவா
**தோட்டி** : 1. அங்குசம் 2. கபாடம்
**துட்டன்** : 1. தீயன் 2. தேள்

***நாட்டம்*** -- விழி, கூத்து, ஒரிராகம், வாள்
***ஓட்டம்*** -- மேலுதடு, பின்னிடல்
***உட்கு*** -- வெட்கம், பயம்
***மூட்டம்*** -- மூளல், மூடல்
***முடுவல்*** -- செந்நாய், நாய்
***தோட்டி*** -- குடாரி, கதவு
***துட்டன்*** -- தீயோன், தேள்

121.* **கூட்டமே** தொகுதி, யுத்தம், கூடுதல், மலாவகப் பேர்
**சாட்டியம்** வஞ்சம், நோய் ஆம்; **சாடி** தூசு, அகளி, கும்பம்;
**காட்டை** கால், நுனி, திக்கு, எல்லை; **காட்சியே** அறிவு, பார்வை;
**வாட்டமே** தோட்டம், வீதி, வழி, வாடல் நாற்பேர் ஆமே.

**கூட்டம்** : 1. தொகுதி 2. யுத்தம் 3. கூடுதல் 4. மலாவகம்
**சாட்டியம்** : 1. வஞ்சம் 2. நோய்
**சாடி** : 1. தூசு 2. அகளி 3. கும்பம்
**காட்டை** : 1. கால் 2. நுனி 3. திக்கு 4. எல்லை
**காட்சி** : 1. அறிவு 2. பார்வை
**வாட்டம்** : 1. தோட்டம் 2. வீதி 3. வழி 4. வாடல்

***கூட்டம்*** -- திரள், போர், கூடுதல், பிண்ணாக்கு
***சாட்டியம்*** -- வஞ்சம், வருத்தம்
***சாடி*** -- சீலை, தாழி, கும்பவிராசி
***காட்டை*** -- பொழுது, நுனி, திசை, எல்லை
***காட்சி*** -- அறிவு, பார்வை
***வாட்டம்*** -- தோட்டம், தெரு, வழி, வாடல்

122. **கடம்** கடன், உடல், வான், சாரல், கடாம், சுரம், கரடம், நீதி; குடம், கடறு, ஈமம், யானைக் குழாம், முழா, விசும்பு ஈரேழ் பேர்; **தடம்** கரை, விரிவு, சாரல், சரி, அணை, யானைத்தண்டம் கிடங்கு, கோண், நிதம்பம் வேதி கிரி, பீடு முந்நான்காமே.

**கடம்** : 1. கடன் 2. உடல் 3. வான் 4. சாரல் 5. கடாம் 6. சுரம் 7. கரடம் 8. நீதி 9. குடம் 10. கடறு 11. ஈமம் 12. யானைக் குழாம் 13. முழா 14. விசும்பு

**தடம்** : 1. கரை 2. விரிவு 3. சாரல் 4. சரி 5. அணை 6. யானைத் தண்டம் 7. கிடங்கு 8. கோண் 9. நிதம்பம் 10. வேதி 11. கிரி 12. பீடு.

***கடம்*** -- கடமை, உடம்பு, மேகம், மலைப்பக்கம், யானைமதம், அருநெறி,யானைக்கதுப்பு, நீதி, கும்பம், காடு, சுடலை, யானைக்கூட்டம், முழவு, ஆகாயம்.

***தடம்*** -- நீர்க்கரை, விசாலம், மலைப்பக்கம், வழி, வரம்பு,யானை செல்வழி, குளம், வளைவு, அல்குல் ஓமகுண்டம், மலை, பெருமை.

123. **மடங்கலே** அசனி, சீயம், மறலி, கேதகை, ஊழித்தீ, முடங்கல், மீளுதலே, ஊழி, நோய் என மொழியும் ஒன்பான்; **படம்** கரிமுக படாம், நற்றுகில், கிழி, பணிப்பணத்தோடு, இடுந்திரை; கதலிகைக்கும் எய்திய நாமம் ஆமே.

**மடங்கல்** : 1. அசனி 2. சீயம் 3. மறலி 4. கேதகை 5. ஊழித்தீ 6. முடங்கல் 7. மீளுதல் 8. ஊழி 9. நோய்

**படம்** : 1. கரிமுகபடாம் 2. துகில் 3. கிழி 4. பணிப்பணம் 5. இடுந்திரை 6. கதலிகை

***மடங்கல்*** -- இடி, சிங்கம், இயமன், தாழை, வடவாமுகாக்கினி, முடங்குதல், திரும்புதல், உகமுடிவு, துன்பம்

***படம்*** -- யானைமுகபடாம், சீலை, சித்திரப்படம், பாம்பின்படம், திரைச்சீலை, விருதுக்கொடி

124. **புட்கரம்** நிறைவு, பாண்டமுகம், தீர்த்தம், புனல், வான், சேனம், கட்கம், பங்கயமே, யானைக்கைநுனி, குருகு ஈரைந்தாம்; **பட்டி** சிற்றூர், தூசு, அம்பி, பலகறை வளாகம், கள்ளல், குட்டன், ஓர் செடியினோடு கூறும் எண்பேரது ஆமே.

**புட்கரம்** : 1. நிறைவு 2. பாண்டமுகம் 3. தீர்த்தம் 4. புனல் 5. வான் 6. சேனம் 7. கட்கம் 8. பங்கயம் 9. யானைக் கைநுனி 10. குருகு

**பட்டி** : 1. சிற்றூர் 2. தூசு 3. அம்பி 4. பலகறை 5. வளாகம் 6. கள்ளல் 7. குட்டன் 8. ஓர்செடி

*புட்கரம்* -- நிறைவு, பாண்டமுகம், தீர்த்தம், நீர், ஆகாயம், பருந்து, வாள், தாமரை, யானைக்கைநுனி, நாரை
*பட்டி* -- சிற்றூர், புடைவை, தெப்பம், சோகி, இடம், களவு, மகன், ஓர்செடி

125. **பட்டமே** ஓடை, கட்கம், பதவை, கேடகம், தூசு, ஆறு,
குட்டமோடு, அமளி, நானம், பணவமும் ஈர் ஐங் கூற்று ஆம்;
**வட்டம்** நீர்ச்சால், குண்டு, ஆழி, வலயம், எல்லரி, தட்டு, ஊர்கோள்,
புட்டம், ஆசனமே, வாவி, போற்றிய ஈரைம்பேரே.

**பட்டம்** : 1. ஓடை 2. கட்கம் 3. பதவை 4. கேடகம் 5. தூசு 6. ஆறு 7. குட்டம் 8. அமளி 9. நானம் 10. பணவம்
**வட்டம்** : 1. நீர்ச்சால் 2. குண்டு 3. ஆழி 4. வலயம் 5. எல்லரி 6. தட்டு 7. ஊர்கோள் 8. புட்டம் 9. ஆசனம் 10. வாவி

*பட்டம்* -- நெற்றிப்பட்டம், வாள், நாற்றெருக்கூடுமிடம்,கேடகம், புடைவை, வழி, குளம், படுக்கை, கவரிமா, தம்பட்டம்
*வட்டம்* -- நீர்ச்சால், தாழ்வு, சக்கரம், வட்டம், கைமணி, திரிகை, பரிவேடம், சீலை, பீடம், குளம்.

126. **கோடு** சங்கு, ஊதுங்கொம்பு, மரக்கொம்பு, விலங்கின்கொம்பு,
நீடுசெய் வரம்பு, குன்றின் முகடு, நீர்க்கரை, மாடு எண்பேர்;
**கூடம்** இல், மறைவு, வஞ்சம், கொல்லன் சம்மட்டி, கூட்டம்,
கோடுறு கரியின் பந்தி, மலைமுடி கூறும் ஏழ்பேர்.

**கோடு** : 1. சங்கு 2. ஊதுங்கொம்பு 3. மரக்கொம்பு 4. விலங்கின் கொம்பு 5. செய்வரம்பு 6. குன்றின்முகடு 7. நீர்க்கரை 8. மாடு
**கூடம்** : 1. இல் 2. மறைவு 3. வஞ்சம் 4. கொல்லன் சம்மட்டி 5. கூட்டம் 6. கரியின் பந்தி 7. மலைமுடி

*கோடு* -- சங்கு ஊது கொம்பு, மரக்கொப்பு, மிருகத்தின்கொம்பு, வயலின்வரம்பு, மலையினுச்சி, நீர்க்கரை, பக்கம்.
*கூடம்* -- வீடு, மறைவு, வஞ்சம், கொல்லன்சம்மட்டி, கூட்டம், யானைப்பந்தி, மலையுச்சி.

127. **கடி** மணம், புதுமை, காப்பு, கடித்தல், பேய், இன்பம், அச்சம்,
வடிவு, விம்மிதம், சிறப்பு, வரைவு, ஆடல், ஐயம் ஏற்கும்
கடிஞை, சீக்கிரம், கரிப்பு, காலம், கத்திகை, மனத்தோடு,
அடைவுறு விளக்கம், நாற்றம், ஐயமும் இருபத்து ஒன்றே.

**கடி** : 1. மணம் 2. புதுமை 3. காப்பு 4. கடித்தல் 5. பேய் 6. இன்பம் 7. அச்சம் 8. வடிவு 9. விம்மிதம் 10. சிறப்பு 11. வரைவு 12. ஆடல் 13. கடினை 14. சீக்கிரம் 15. கரிப்பு 16. காலம் 17. கத்திகை 18. மனம் 19. விளக்கம் 20. நாற்றம் 21. ஐயம்

***கடி*** -- விவாகம், புதுமை, காவல், கடித்தல், பைசாசம், இன்பம், பயம், உருவம், விம்மிதம், சிறப்பு, வரைவு, பெண்ணு மாணுங் கூடல், இரப்போர்கலன், சீக்கிரம், கரிப்பு, காலம், சிறுகொடி, மனம், விளக்கம், வாசம், ஐயம்.

128. **கோட்டமே** ஓடை, வாசம், கோவில், அவ்வியம், ஆன் கொட்டில்,
நீட்டுஉவா, மருதத்தூர், கோண், நீள்வயல், கவி, படப்பை,
நாட்டுடன், ஈமம், வீணை, நல்லறம், அமரர்கற்பம்,
கூட்டம், நீர்நிலை, வளாகம், குராமரம், இருபான் பேரே.

**கோட்டம்** : 1. ஓடை 2. வாசம் 3. கோவில் 4. அவ்வியம் 5. ஆன்கொட்டில் 6. உவா 7. மருதத்தூர் 8. கோண் 9. வயல் 10. கவி 11. படப்பை 12. நாடு 13. ஈமம் 14. வீணை 15. அறம் 16. அமரர் கற்பம் 17. கூட்டம் 18. நீர்நிலை 19. வளாகம் 20. குராமரம்

***கோட்டம்*** -- குளம், வாசனை, கொயில், அழுக்காறு, ஆன் கொட்டில், யானை, மருதநிலத்தூர், வளைவு, வயல், குரங்கு, தோட்டம், நாடு, சுடலை, யாழ், தருமம், தேவலோகம், தொகுதி, தடாகம், இடம், குராமரம்

**(டகர எதுகை முற்றும்)**

## ணகர எதுகை

129. **புணர்வு** தோய்ந்திடல், இசைப்பு ஆம்; **புணர்ச்சியே** கலவி, கூடல்;
**உணர்வு** என்ப தெளிவே, ஊடல் ஒழித்தலும், அறிவும் ஆகும்.
**குணம்** பண்பு, கயிறு, சீர்மை, கும்பம், கேழ், நாணி என்ப;
**கணம்** உடு, நோய், திரட்சி, காலநுட்பம், பேய், வட்டம்.

**புணர்வு** : 1. தோய்ந்திடல் 2. இசைப்பு
**புணர்ச்சி** : 1. கலவி 2. கூடல்
**உணர்வு** : 1. தெளிவு 2. ஊடல் ஒழித்தல் 3. அறிவு
**குணம்** : 1. பண்பு 2. கயிறு 3. சீர்மை 4. கும்பம் 5. கேழ் 6. நாணி
**கணம்** : 1. உடு 2. நோய் 3. திரட்சி 4. காலநுட்பம் 5. பேய் 6. வட்டம்

*புணர்வு* -- கலவி, இசைத்தல்
*புணர்ச்சி* -- கலவி, கூடுதல்
*உணர்வு* -- நனவு, ஊடனீங்கல், அறிவு
*குணம்* -- குணம், கயிறு, சிறப்பு, குடம், நிறம், வின்னாண்
*கணம்* -- நட்சத்திரம், துன்பம், திரட்சி, காலநுட்பம், பைசாசு, விருத்தம்

130. குணில் கயிறொடு, கடிப்பு, குறுந்தடி கூறும் முப்பேர்;
**மணி** நவமணியே, கண்டை, வனப்பொடு, கருமை, நன்மை;
**துணி** ஒளி, சோதி, துண்டம், தூக்கமே, தெளிவும் ஆகும்;
**பிணிமுகம்** எகினம், மஞ்ஞை; புட்பொது பேசும் முப்பேர்.

**குணில்** : 1. கயிறு 2. கடிப்பு 3. குறுந்தடி
**மணி** : 1. நவமணி 2. கண்டை 3. வனப்பு 4. கருமை 5. நன்மை
**துணி** : 1. ஒளி 2. சோதி 3. துண்டம் 4. தூக்கம் 5. தெளிவு
**பிணிமுகம்** : 1. எகினம் 2. மஞ்ஞை 3. புட்பொது

*குணில்* -- கயிறு, பறைசாத்துந்தடி, குறியதண்டு
*மணி* -- நவரத்தினம், யானைமணி, அழகு, கருமை, நன்மை
*துணி* -- ஒளி, சோதிநட்சத்திரம், துண்டம், தூக்கங்கள், துணிவு
*பிணிமுகம்* -- அன்னம், மயில், பறவைப்பொது

131. **துணை** இணை, சகாயம், ஒப்போடு,
அளவு எனச் சொல்லும் நாமம்;
**பிணை** நசை, தொடையல், கட்டு,
பெண்விலங்கு உடன்பாடு ஐம்பேர்;
**கணை** அம்பு, திரட்சி, பூரம்,
கனை, பாரா வளையம் என்ப;
**துணைவன்** ஓர் உதரத்துற்றோன்,
தோழன், மந்திரி, வேட்டோன் ஆம்.

**துணை** : 1. இணை 2. சகாயம் 3. ஒப்பு 4. அளவு
**பிணை** : 1. நசை 2. தொடையல் 3. கட்டு 4. பெண்விலங்கு 5. உடன்பாடு
**கணை** : 1. அம்பு 2. திரட்சி 3. பூரம் 4. கனை 5. பாராவளையம்
**துணைவன்** : 1. ஓர் உதரத்துற்றோன் 2. தோழன் 3. மந்திரி 4. வேட்டோன்

*துணை* -- இணை, சகாயம், ஒப்பு, அளவு
*பிணை* -- ஆசை, மாலை, கட்டு, விலங்கின்பெண், உடன்பாடு
*கணை* -- அம்பு, திரட்சி, பூரநட்சத்திரம், நிறைவு, வளைதடி
*துணைவன்* -- ஒரு வயிற்றிற்பிறந்தோன், தோழன், அமைச்சன், தலைவன்

132. **அணங்கு** நோய், ஏர், சூர், அச்சம், ஆசை, பெண், கொலை,
[அரம்பை;
**துணங்கை**யே விழா, பேய், கூத்து; ஆதிரை நாளும் சொல்லும்;
**குணுங்கர்** தோற்கருவி மாக்கள் குயிலுவர், இழிஞர் முப்பேர்;
**துணங்கறல்** இருள், விழாவாம்; **துணர்** மலர், இணர், பூங்கொத்தே.

**அணங்கு** : 1. நோய் 2. ஏர் 3. சூர் 4. அச்சம் 5. ஆசை 6. பெண் 7. கொலை 8. அரம்பை
**துணங்கை** : 1. விழா 2. பேய் 3. கூத்து 4. ஆதிரைநாள்
**குணுங்கர்** : 1. தோற்கருவிமாக்கள் 2. குயிலுவர் 3. இழிஞர்
**துணங்கறல்** : 1. இருள் 2. விழா
**துணர்** : 1. மலர் 2. இணர் 3. பூங்கொத்து

***அணங்கு*** -- துன்பம், அழகு, தெய்வம், பயம், அவா, பெண், கொலை, தெய்வப்பெண்
***துணங்கை*** – திருவிழா, பைசாசம், கூத்து, திருவாதிரை நட்சத்திரம்
***குணுங்கர்*** -- தோற்கருவிமாக்கள்,நரம்பினாயகருவிக்குரியோர், இழிஞர்
***துணங்கறல்*** -- இருள், திருவிழா
***துணர்*** -- பூ, பூஞ்சுண்ணம், பூங்கொத்து

133. **புணரி**யே வாரி, நீரிற் பொருந்திரை, கரை முப்பேர் ஆம்;
**பணிலமே** சலஞ்சலம், சங்கு இருபெயர் பகரலாமே;
**கணி** வேங்கைமரம், ஓர்சாதி, கழனிசூழ் மருதமும் பேர்;
**பணி** ஏவல் மொழி, பாம்பு, ஈகை, பட்டு, தோற்கருவி,பூண்ஆம்;

**புணரி** : 1. வாரி 2. நீரிற்பொருந்திரை 3. கரை
**பணிலம்** : 1. சலஞ்சலம் 2. சங்கு
**கணி** : 1. வேங்கைமரம் 2. ஓர்சாதி 3. மருதம்
**பணி** : 1. ஏவல் 2. மொழி 3. பாம்பு 4. ஈகை 5. பட்டு 6. தோற்கருவி 7. பூண்

***புணரி*** -- கடல், கடற்றிரை, கரை
***பணிலம்*** -- சலஞ்சலச்சங்கு, சங்கு
***கணி*** -- வேங்கைமரம், ஓர்சாதி, மருதநிலம்
***பணி*** -- ஏவல், சொல், சர்ப்பம், கொடை, பட்டுவஸ்திரம், தோற்கருவி, ஆபரணம்

134.* **பிணி** கட்டு, துன்பம், நோய் ஆம்;
**பிணாப்** பட்டம், சுவாவே, கேழல்;
**குணி** ஊமை, பண்பி, வில் ஆம்;
**குணக்குக்** கீழ்த்திசை,கோணல்;
**இணை** துணை, உவமை, கூந்தல்;
இச்சையும் இயம்பல் ஆகும்.
**புணை** தெப்பம், விலங்கு, வேய் ஆம்;
**புண்ணியம்** அறம், தூய்மைப் பேர்.

**பிணி** : 1. கட்டு 2. துன்பம் 3. நோய்
**பிணா** : 1. பட்டம் 2. சுவா 3. கேழல்
**குணி** : 1. ஊமை 2. பண்பி 3. வில்
**குணக்கு** : 1. கீழ்த்திசை 2. கோணல்
**இணை** : 1. துணை 2. உவமை 3. கூந்தல் 4. இச்சை
**புணை** : 1. தெப்பம் 2. விலங்கு 3. வேய்
**புண்ணியம்** : 1. அறம் 2. தூய்மை

***பிணி*** -- கட்டு, வருத்தம், விசாதி
***பிணா*** -- கவரிமா, நாய், பன்றி
***குணி*** -- ஊமை, குணமுள்ளவள், வில்
***குணக்கு*** -- கிழக்கு, கோணல்
***இணை*** -- துணை, உவமை, அளகம், இச்சை
***புணை*** -- மிதவை, தளை, மூங்கில்
***புண்ணியம்*** -- தருமம், பவித்திரம்

135. **பணம்** என்பது அரவின் துத்தி, பாம்பு, பொற்காசு, பீனம்;
**மணம்** என்ப வாசம், கூட்டம்; வதுவையும், மதர்ப்பும் ஆகும்.
நுணவையே தணக்கு, மா, எண்ணோலையும் நுவலும், முப்பேர்;
**பணவை** பேய், இதணம், புள் ஆம்; **பாண்**மது,இசைப்பாட்டு [ஆமே.

**பணம்** : 1. அரவின் துத்தி 2. பாம்பு 3. பொற்காசு 4. பீனம்
**மணம்** : 1. வாசம் 2. கூட்டம் 3. வதுவை 4. மதர்ப்பு
**துணவை** : 1. தணக்கு 2. மா 3. எண்ணோலை
**பணவை** : 1. பேய் 2. இதணம் 3. புள்
**பாண்** : 1. மது 2. இசைப்பாட்டு

***பணம்*** -- பாம்பின் படம், சர்ப்பம், காசு, பருமை
***மணம்*** -- வாசனை, கூட்டம், கலியாணம், சந்தோஷம்
***நுணவை*** -- தணக்கமரம், மா, எண்ணோலை
***பணவை*** -- பிசாசம், பரண், பறவை
***பாண்*** -- கள், இசைப்பாட்டு

136. **அணு** உயிர், நுண்மை, அற்பம்; **ஆணு**வே இரதம், நன்மை;
**பிணைவு** சையோகம், பின்னல்; **பெண்** என்ப பிணவல்,மாது;
**அணை** என்ப குரம்பு, சேது; அமளி, நீர்க்கரையும் ஆகும்.
**அணி** தொடை, பணி, பீடு, ஏர், நன்று, அலங்காரம், நிரை, [ஊகப்பேர்.

**அணு** : 1. உயிர் 2. நுண்மை 3. அற்பம்
**ஆணு** : 1. இரதம் 2. நன்மை
**பிணைவு** : 1. சையோகம் 2. பின்னல்

**பெண்** : 1. பிணவல் 2. மாது
**அணை** : 1. குரம்பு 2. சேது 3. அமளி 4. நீர்க்கரை
**அணி** : 1. தொடை 2. பணி 3. பீடு 4. ஏர் 5. நன்று
6.அலங்காரம் 7. நிரை 8. ஊகப்பேர்

***அணு*** -- சீவன், நுட்பம், சிறுமை
***ஆணு*** -- இனிமை, நயம்
***பிணைவு*** -- புணர்ச்சி, பின்னல்
***பெண்*** -- விலங்கின் பெண், பெண்
***அணை*** -- வரம்பு, செய்கரை, சேக்கை, நீர்க்கரை
***அணி*** -- மாலை, ஆபரணம், பெருமை, அழகு, நன்மை, அலங்காரம், ஒழுங்கு, படைவகுப்பு

137. கண்டனே புருடன், கிள்ளி; கணக்கு என்ப எழுத்து, எண் ஆகும்;
சண்டனே நடுவன், பேடி, சதாசிவன், பருதி, காலன்;
முண்டமே கவந்தம், மொட்டை, மூர்த்தினி, அவையல் என்ப;
சுண்டமே மதகயத்தின் துதிக்கையும், மதுவும் ஆமே.

**கண்டன்** : 1. புருடன் 2. கிள்ளி
**கணக்கு** : 1. எழுத்து 2. எண்
**சண்டன்** : 1. நடுவன் 2. பேடி 3. சதாசிவன் 4. பருதி 5. காலன்
**முண்டம்** : 1. கவந்தம் 2. மொட்டை 3. மூர்த்தினி 4. அவையல்
**சுண்டம்** : 1. மதகயத்தின் துதிக்கை 2. மது

***கண்டன்*** -- தலைவன், சோழன்
***கணக்கு*** -- எழுத்து, கணக்கு
***சண்டன்*** -- யமன், பேடி, சிவன், சூரியன், காலன்
***முண்டம்*** -- உடற்குறை, முண்டிதம், தலை, திரட்சி
***சுண்டம்*** -- யானைத்துதிக்கை, கள்

138. அண்டம் ஆகாயம், முட்டை, அழுப்புகம், பிரமாண்டப் பேர்;
துண்டமே வதனம், கோணம், துணி, அரா, சிலமேசு அஞ்சு ஆம்;
கண்டமே அயிரம், மெய்ப்பை, கழுத்து ஆணி, திரை, வாள்,
[துண்டம்;
கண்டையே துகில், யானைமணி, பெருமணியும் காட்டும்.

**அண்டம்** : 1.ஆகாயம் 2.முட்டை 3.அழுப்புகம் 4.பிரமாண்டம்
**துண்டம்** : 1. வதனம் 2. கோணம் 3. துணி 4. அரா 5. சிலமேசு
**கண்டம்** : 1. அயிரம் 2. மெய்ப்பை 3. கழுத்து 4. ஆணி
5. திரை 6. வாள் 7. துண்டம்
**கண்டை** : 1. துகில் 2. யானைமணி 3. பெதுமணி

***அண்டம்*** -- ஆகாயம், முட்டை, தேவலோகம், பிரமாண்டம்
***துண்டம்*** -- முகம், மூக்கு, துண்டு, சாரைப்பாம்பு,பறவைமூக்கு
***கண்டம்*** -- கண்டசருக்கரை, சட்டை, மிடறு, எழுத்தாணி, திரைச்சீலை, வாளாயுதம், துண்டு
***கண்டை*** -- சீலை, யானைமணி, பெருமணி

139 **நொண்டலே** நுங்கல், நொண்டல்; **நுணங்கு** என்ப சுணங்கே, [நுண்மை;
**தண்டலை** சோலையே, பூந்தோட்டம்; ஓர் ஊரும் சாற்றும்;
**மண்டலே** மிகல், நெருங்கல்; **மாணலே** மாட்சி, நன்று ஆம்;
**கண்டகர்** அவுணர், கையல், நிருதரும் கருதும் முப்பேர்.

**நொண்டல்** : 1. நுங்கல் 2. நொண்டல்
**நுணங்கு** : 1. சுணங்கு 2. நுண்மை
**தண்டலை** : 1. சோலை 2. பூந்தோட்டம் 3. ஓர் ஊர்
**மண்டல்** : 1. மிகல் 2. நெருங்கல்
**மாணல்** : 1. மாட்சி 2. நன்று
**கண்டகர்** : 1. அவுணர் 2. கையர் 3. நிருதர்

***நொண்டல்*** -- விழுங்கல், நொண்டுதல்
***நுணங்கு*** -- தேமல், நுட்பம்
***தண்டலை*** -- சோலை, பூந்தோட்டம், ஒரூர்
***மண்டல்*** -- மிகுதல், நெருங்குதல்
***மாணல்*** -- மாண்பு, நன்மை
***கண்டகர்*** -- அசுரர், கீழ்மக்கள், இராக்கதர்

140. **அண்டரே** பகைவர், வானோர், ஆயர் என்று ஆகும் முப்பேர்;
**சுண்டனே** சதயம், சூறன், அறிவிலி முப்பேர் சொல்லும்;
**கண்டல்** கேதகை, முள்ளிப் பேர்; **கண்ணுதல்** கருதல், ஈசன்;
**பண்டம்** மெய்யறிவு சொன்னம், பரிகாரம் பகரும் முப்பேர்.

**அண்டர்** : 1. பகைவர் 2. வானோர் 3. ஆயர்
**சுண்டன்** : 1. சதயம் 2. சூறன் 3. அறிவிலி
**கண்டல்** : 1. கேதகை 2. முள்ளி
**கண்ணுதல்** : 1. கருதுதல் 2. ஈசன்
**பண்டம்** : 1. மெய்யறிவு 2. சொன்னம் 3. பரிகாரம்

***அண்டர்*** -- சத்துருக்கள், தேவர், இடையர்
***சுண்டன்*** -- சதயநட்சத்திரம், மூஞ்சூறு, அறிவிலான்
***கண்டல்*** -- தாழை, முள்ளிச்செடி

***கண்ணுதல்*** -- கருதுதல், சிவன்
***பண்டம்*** -- மெய்யறிவு, பொன், பலபண்டம்

141. **குண்டலம்** குழை, விண், வட்டம்;
**குண்டமே** பானை, குண்டம்;
**மண்டிலம்** நடம், போர், வாளி,
வாசி, மண்டலம், நாடு ஆகும்;
**கொண்டலே** முகில், கீழ் காற்று ஆம்;
**குண்டு** உலம் கயம், தாழ்வு, ஆண்மா;
**மண்டலி** சுவாவே, கூட்டம்,
மனைப்புலி, புவி, பாம்பு ஆமே.

**குண்டலம்** : 1. குழை 2. விண் 3. வட்டம்
**குண்டம்** : 1. பானை 2. குண்டம்
**மண்டிலம்** : 1. நடம் 2. போர் 3. வாளி 4. வாசி 5. மண்டலம் 6. நாடு
**கொண்டல்** : 1. முகில் 2. கீழ்காற்று
**குண்டு** : 1. உலம் 2. கயம் 3. தாழ்வு 4. ஆண்மா
**மண்டலி** : 1. சுவா 2. கூட்டம் 3. மனைப்புலி 4. புவி 5. பாம்பு

***குண்டலம்*** -- காதணி, ஆகாயம், வட்டம்
***குண்டம்*** -- பானை, குண்டம்
***மண்டிலம்*** -- கூத்து, யுத்தம், வட்டமாயோடல், குதிரை, வட்டம், ஊர்
***கொண்டல்*** -- மேகம், கீழ்காற்று
***குண்டு*** -- திரண்டகல், குளம், ஆழம், ஆண்குதிரை
***மண்டலி*** -- நாய், கூட்டம், பூனை, பூமி, பாம்பு

142. **கண்டி** தோளணி, பதக்கம், கடிப்பம், ஓர்அளவும் ஆகும்;
**குண்டி** மீன்சினை, ஈரல் பேர்; **குண்டலி** காளி, பாம்பு ஆம்;
**சுண்டியே** மது, நீர்ச்சுண்டி; சுக்கொடு முப்பேர் ஆகும்.
**பண்டியே** சடரம், ஊற்றால்; சகடமும் பகரற்பாற்றே

**கண்டி** : 1. தோளணி 2. பதக்கம் 3. கடிப்பம் 4. ஓர் அளவு
**குண்டி** : 1. மீன்சினை 2. ஈரல்
**குண்டலி** : 1. காளி 2. பாம்பு
**சுண்டி** : 1. மது 2. நீர்ச்சுண்டி 3. சுக்கு
**பண்டி** : 1. சடரம் 2. ஊற்றால் 3. சகடம்

***கண்டி*** -- தோளணி, பதக்கம், ஆபரணப்பெட்டி, ஓரளவு
***குண்டி*** -- மீன்சினை, ஈரல்
***குண்டலி*** -- காளி, சர்ப்பம்
***சுண்டி*** -- கள், நீர்ச்சுண்டி, சுக்கு
***பண்டி*** -- வயிறு, உரோகணிநட்சத்திரம், பண்டி

143. **விண்டு** என்ப மாயோன், வெற்பு, மேகம், ஓர்நூல், வேய், காற்றுஆம்;
**தொண்டு** என்ப பழமை, ஒன்பான், தொழும்பு, வந்தனை, சுக்கு [ஆகும்.
**தண்டு** வேய், குழாயே, வீணை, தடி, படை, மிதுனம், ஓந்தி;
**வண்டு** சங்கு, இழிவு, பூசம், வளை, அளி, வாளி ஆமே.

**விண்டு** : 1. மாயோன் 2. வெற்பு 3. மேகம் 4. ஓர்நூல் 5. வேய் 6. காற்று

**தொண்டு** : 1. பழமை 2. ஒன்பான் 3. தொழும்பு 4. வந்தனை 5. சுக்கு

**தண்டு** : 1. வேய் 2. குழாய் 3. வீணை 4. தடி 5. படை 6. மிதுனம் 7. ஓந்தி

**வண்டு** : 1. சங்கு 2. இழிவு 3. பூசம் 4. வளை 5. அளி 6. வாளி

*விண்டு* -- திருமால், மலை, மேகம், அட்டாதசதருமநூலினொன்று, மூங்கில், காற்று

*தொண்டு* -- பழமை, ஒன்பது, அடிமை, வழிபாடு, சுக்கு

*தண்டு* -- மூங்கில், துளையுடைப் பொருள், வீணை, தண்டம், சேனை, மிதுனவிராசி, ஓணான்

*வண்டு* -- சங்கு, குற்றம், பூசநட்சத்திரம், கைவளை, வண்டு, அம்பு

144. **உண்டை**யே திரளை ஆகும்,
உறுபடை வகுப்பும் என்ப;
**தொண்டை** ஆதொண்டை, கொவ்வை,
களம், யானைத் துதிக்கை நாற்பேர்
**கொண்டை** பின்னகமே, கோலம்;
**கொண்மூ**வே மேகம், விண் ஆம்;
**கண்டிகை** வலையம், கரண்டம்,
கடகமே, மதாணியும் பேர்.

**உண்டை** : 1. திரளை 2. படை வகுப்பு

**தொண்டை** : 1. ஆதொண்டை 2. கொவ்வை 3. களம் 4. யானைத் துதிக்கை

**கொண்டை** : 1. பின்னகம் 2. கோலம்

**கொண்மூ** : 1. மேகம் 2. விண்

**கண்டிகை** : 1. வலையம் 2. கரண்டம் 3. கடகம் 4. மதாணி

*உண்டை* -- திரளை, படைவகுப்பு

*தொண்டை* -- ஆதொண்டைச்செடி, கொவ்வை, கழுத்து, யானைத் துதிக்கை.

*கொண்டை* -- மயிர்முடி, இலந்தைக்கனி

*கொண்மூ* -- முகில், ஆகாயம்

*கண்டிகை* -- வாகுவலையம், ஆபரணச்செப்பு, கடகம், பதக்கம்

145. **குண்டை** ஏறு இடபம் ஆகும்; **கோணாய்** ஆண்நரி, தோண்டான் [ஆம்;
**மண்டை** கப்பரை, கபாலம்; **வண்டரே** இயவர், எட்டர்;
**சண்டிகை** துற்கை, காளி; **சண்டமே**, கரில், பேடு ஒல்லை;
**இண்டை** முண்டகமே, மாலை; ஈங்கையும் இயம்பும் முப்பேர்.

**குண்டை** : 1. ஏறு 2. இடபம்
**கோணாய்** : 1. ஆண்நரி 2. தோண்டான்
**மண்டை** : 1. கப்பரை 2. கபாலம்
**வண்டர்** : 1. இயவர் 2. எட்டர்
**சண்டிகை** : 1. துற்கை 2. காளி
**சண்டம்** : 1. கரில் 2. பேடு 3. ஒல்லை
**இண்டை** : 1. முண்டகம் 2. மாலை 3. ஈங்கை

***குண்டை*** -- எருது, இடபவிராசி
***கோணாய்*** -- ஓரி, கோணாய்
***மண்டை*** -- இரப்போர்கலம், தலையோடு
***வண்டர்*** -- இயவர், மங்கலப்பாடகர்
***சண்டிகை*** -- துர்க்காதேவி, காளி
***சண்டம்*** -- கொடுமை, பேடு, சீக்கிரம்
***இண்டை*** -- தாமரை, மாலை, இண்டங்கொடி

146. **பண்ணவன்** முனிவன், தேவன், பரமேட்டி, யவணன், ஆசான்;
**தண்ணடை** துடி, கான், நாடு, தமாலமே, மருதம்சார் ஊர்;
**வண்மை** ஏர், வழங்கல், வாய்மை, வளம், புகழ், வலி ஆம் என்ப;
**ஒண்மை**யே மிகுதி, நன்மை, ஒழுங்கு, அறிவு, அழகு ஐம்பேரே.

**பண்ணவன்** : 1. முனிவன் 2. தேவன் 3. பரமேட்டி 4. யவணன் 5. ஆசான்
**தண்ணடை** : 1. துடி 2. கான் 3. நாடு 4. தமாலம் 5. மருதம் சார் ஊர்
**வண்மை** : 1. ஏர் 2. வழங்கல் 3. வாய்மை 4. வளம் 5. புகழ் 6. வலி
**ஒண்மை** : 1. மிகுதி 2. நன்மை 3. ஒழுங்கு 4. அறிவு 5. அழகு

***பண்ணவன்*** -- இருடி, கடவுள், அருகன், திண்ணியன், குரு
***தண்ணடை*** -- உடுக்கை, காடு, நாடு, பச்சிலைமரம், மருதநிலத்தூர்
***வண்மை*** -- அழகு, ஈகை, உண்மை, வளமை, புகழ், வலிமை
***ஒண்மை*** -- மிகுதி, நன்மை, ஒழுக்கம், அறிவு, அழகு

147. **தண்ணமே** பரசு, காடு; ஓர்கட் பறை; **தண்மை**யும் பேர்.
**வண்ணம்** ஏர், நன்மை, பண்பு, வடிவு அலங்காரம் கேழ் ஆம்;
**பண்** அரிக் கலனை, பண்ணை, பாட்டு, நீர்நிலை, பண் ஆகும்;
**மண்** அணு, கழுவல், பூமி, முழவின் மாற்சனை, மாண்பு, ஒப்பு [ஆம்.

**தண்ணம்** : 1. பரசு 2. காடு 3. ஓர்கட்பறை 4. தண்மை
**வண்ணம்** : 1. ஏர் 2. நன்மை 3. பண்பு 4. வடிவு 5. அலங்காரம் 6. கேழ்
**பண்** : 1. அரிக்கலனை 2. பண்ணை 3. பாட்டு 4. நீர்நிலை 5. பண்
**மண்** : 1. அணு 2. கழுவல் 3. பூமி 4. முழவின் மாற்சனை 5. மாண்பு 6. ஒப்பு

***தண்ணம்*** -- மழு, காடு, ஒருகட்பறை, குளிர்
***வண்ணம்*** -- அழகு, நன்மை, குணம், வடிவு, அலங்கரித்தல், நிறம்
***பண்*** -- குதிரைக்கல்லணை, மகளிர் கூட்டம், பாட்டு, நீர்நிலை, இசை
***மண்*** -- அணு, கழுவுதல், பூமி, மத்தளத்திற்பூசுமண், மாட்சிமை ஒப்பனை

148.* **கண்ணி** தாம்பு, அரும்பு, பட்சிக்கண்ணி, பூங்கொத்து, மாலை;
**வெண்மை**யே மடமையோடு, வெளிறு, கோமளம் மூன்று ஆமே;
**மண்ணலே** கழுவல், வேய்தல்; **மணத்தலே** கமழ்தல், கூடல்;
**பெண்ணை** மித்திர நாள், நீலம், ஓர்நதி பேசும் முப்பேர்.

**கண்ணி** : 1. தாம்பு 2. அரும்பு 3. பட்சிக்கண்ணி 4. பூங்கொத்து 5. மாலை
**வெண்மை** : 1. மடமை 2. வெளிறு 3. கோமளம்
**மண்ணல்** : 1. கழுவல் 2. வேய்தல்
**மணத்தல்** : 1. கமழ்தல் 2. கூடல்
**பெண்ணை** : 1. மித்திரநாள் 2. நீலம் 3. ஓர்நதி

***கண்ணி*** -- கயிறு, பூவரும்பு, பறவைபடுக்குங்கண்ணி, பூங்கொத்து, மாலை
***வெண்மை*** -- அறிவின்மை, வெள்ளை, இளமை
***மண்ணல்*** -- கழுவல், அலங்கரித்தல்
***மணத்தல்*** -- வாசனையுறல், பெண்ணுமாணுங் கூடுதல்
***பெண்ணை*** -- அனுடநட்சத்திரம், பனைமரம், பெண்ணையாறு

149. **கண்மை**யே நசை, கண்ணோட்டம்; **கணிச்சி**யே பரசு, தோட்டி;
**மண்ணை**யே இளமை, அஞ்ஞை, வியந்திரம் வகுக்கும் முப்பேர்;
**உண்மை** மெய், அறிவு, ஊழ் ஆகும்; **ஒண்ணுதல்** பொருந்தல், [பெண் ஆம்;
**தண்மை** புல்லறிவு, சீதம், தாழ்வு, எண்மை, பரிபவப்பேர்.

**கண்மை** : 1. நசை 2. கண்ணோட்டம்
**கணிச்சி** : 1. பரசு 2. தோட்டி
**மண்ணை** : 1. இளமை 2. அஞ்ஞை 3. வியந்திரம்
**உண்மை** : 1. மெய் 2. அறிவு 3. ஊழ்
**ஒண்ணுதல்** : 1. பொருந்தல் 2. பெண்
**தண்மை** : 1. புல்லறிவு 2. சீதம் 3. தாழ்வு 4. எண்மை
5. பரிபவம்

***கண்மை*** -- விருப்பம், கண்ணோட்டம்
***கணிச்சி*** -- மழு, அங்குசம்
***மண்ணை*** -- இளமை, அறிவிலான், பிசாசம்
***உண்மை*** -- சத்தியம், அறிவு, நியதி
***ஒண்ணுதல்*** -- பொருந்துதல், பெண்
***தண்மை*** -- புல்லறிவு, குளிர்ச்சி, தாழ்வு, எளிமை, இகழத்தகு பொருள்

150. **விண்** தலை, சுவவு, மேகம்; விசும்புடன் இளமை ஐம்பேர்.
**பிண்டமே** உடல், சோறு, உண்டை, பிச்சை, மொய், கவளம் [என்ப;
**கண்டகம்** சுரிகை, முள் ஆம்; கட்கம், கானகமும் ஆகும்.
**பிண்டி** மா, அசோகு, கூட்டம், பிண்ணாக்கு, புணர்தம் ஐம்பேர்.

**விண்** : 1. தலை 2. சுவவு 3. மேகம் 4. விசும்பு 5. இளமை
**பிண்டம்** : 1. உடல் 2. சோறு 3. உண்டை 4. பிச்சை 5. மொய்
6. கவளம்
**கண்டகம்** : 1. சுரிகை 2. முள் 3. கட்கம் 4. கானகம்
**பிண்டி** : 1. மா 2. அசோகு 3. கூட்டம் 4. பிண்ணாக்கு
5. புணர்தம்

***விண்*** -- சிரசு, சுவர்க்கம், முகில், ஆகாயம், இளமை
***பிண்டம்*** -- உடல், சோறு, திரளை, பிச்சை, கூட்டம், கவளம்
***கண்டகம்*** -- உடைவாள், முள், வாள், காடு
***பிண்டி*** -- நென்மா முதலிய மா, அசோகமரம், கூட்டம், பிண்ணாக்கு, புநர்பூசம்

151. **ஆணமே** குளம்போடு, அன்பு, கொள்கலன் ஆகும் முப்பேர்;
**ஓணம்** மாயோன் நாள், ஆறு ஆம்; **உண்டி** புள் ஊண், சோறு, [உண்டல்;
**காணமே** பரிஊண், செக்கு, ஓர் கண்ணல், பொற்காசு, அளத்தல்
**கோணலே** மாறுபாடு, கூன், சிந்து; வளைவும் ஆமே.

**ஆணம்** : 1. குளம்பு 2. அன்பு 3. கொள்கலன்
**ஓணம்** : 1. மாயோன் நாள் 2. ஆறு
**உண்டி** : 1. புள்ஊண் 2. சோறு 3. உண்டல்
**காணம்** : 1. பரிஊண் 2. செக்கு 3. ஓர்கண்ணல் 4. பொற்காசு 5. அளத்தல்
**கோணல்** : 1. மாறுபாடு 2. கூன் 3. சிந்து 4. வளைவு

***ஆணம்*** -- குளம்பு, அன்பு, கொள்கலம்
***ஓணம்*** -- திருவோணநட்சத்திரம், நதி
***உண்டி*** -- பறவையுணவு, சோறு, புசித்தல்
***காணம்*** -- கொள், செக்கு, ஓர்கட்பிராணி, பொற்காசு, ஓரளவு
***கோணல்*** -- வேறுபாடு, கூன், குறள், வளைவு

152.† **தூணம்** ஆவம், தூண், ஊழ் ஆம்; **துணுக்கம்** உள்ளோசை, அச்சம்;
**ஏணம்** மான், அயிணம், பீடு, ஏண்; **எண்ணலே** மதித்தல், [தேர்ச்சி;
**சோணிதம்** குலிகம், செம்பால்; **துணைவியே** சேடி, பன்னி;
**காணியே** குறிக்கோள், ஓர்எண், நிலன் எனக் கருது முப்பேர்.

**தூணம்** : 1. ஆவம் 2. தூண் 3. ஊழ்
**துணுக்கம்** : 1. உள்ளோசை 2. அச்சம்
**ஏணம்** : 1. மான் 2. அயிணம் 3. பீடு 4. ஏண்
**எண்ணல்** : 1. மதித்தல் 2. தேர்ச்சி
**சோணிதம்** : 1. குலிகம் 2. செம்பால்
**துணைவி** : 1. சேடி 2. பன்னி
**காணி** : 1. குறிக்கோள் 2. ஓர்எண் 3. நிலன்

***தூணம்*** -- அம்புக்கூடு, தூண், பகை
***துணுக்கம்*** -- உள்ளோசை, பயம்
***ஏணம்*** -- மான், மான்றோல், வலிமை, நிலைபேறு
***எண்ணல்*** -- கருதல், தேர்ச்சி
***சோணிதம்*** -- சிவப்பு, இரத்தம்
***துணைவி*** -- தோழி, மனைவி
***காணி*** -- உரிமை, ஒரெண், நிலம்

153. **நாண்** இலச்சைப் பேர், தானே; கயிறு என்றும் நாட்டல் ஆகும்.
**தோணி** நீர், கடைநாள், வங்கம், தொள்ளம், சேறு, அம்பே, [நாயில்;
**வாணி** ஓர்கூத்து, சொல்லல், வாக்கு, நாமகளும் ஆகும்;
**ஏணியே** உலகோடு, எல்லை; இறைவை, மான் என்றும் சொல்லும்.

**நாண்** : 1. இலச்சைப்பேர் 2. கயிறு
**தோணி** : 1. நீர் 2. கடைநாள் 3. வங்கம் 4. தொள்ளம் 5. சேறு 6. அம்பு 7. நாயில்
**வாணி** : 1. ஓர்கூத்து 2. சொல்லல் 3. வாக்கு 4. நாமகள்
**ஏணி** : 1. உலகம் 2. எல்லை 3. இறைவை 4. மான்

***நாண்*** -- வெட்கம், கயிறு
***தோணி*** -- நீர், இரேவதிநாள், மரக்கலம், மிதவை, சேறு, அம்பு, மதிலுறப்பு
***வாணி*** -- ஓர்கூத்து, சொல்லுதல், சொல், சரச்சுவதி
***ஏணி*** -- உலகம், எல்லை, ஏணி, மான்

154. **யாணரே** புதுமை, தச்சர், எழில், வளம், நன்மை ஐம்பேர்;
**பாணம்** தான் மேகம் வண்ணக்குறிஞ்சியே, கணை, பூம்பட்டு ஆம்;
**சாணமே** சிலாபட்டத்தொடு, ஆப்பியும் இருபேர் சாற்றும்;
**ஆணை** மெய், தடை, சூழ், வென்றி, அறிகுறி, பணியும் ஆமே.

**யாணர்** : 1. புதுமை 2. தச்சர் 3. எழில் 4. வளம் 5. நன்மை
**பாணம்** : 1. மேக வண்ணக்குறிஞ்சி 2. கணை 3. பூம்பட்டு
**சாணம்** : 1. சிலாவட்டம் 2. ஆப்பி
**ஆணை** : 1. மெய் 2. தடை 3. சூழ் 4. வென்றி 5. அறிகுறி 6. பணி

***யாணர்*** -- புதுமை, தச்சர், அழகு, வளமை, நன்மை
***பாணம்*** -- மழைவண்ணக்குறிஞ்சி, அம்பு, பட்டுப்புடைவை
***சாணம்*** -- சாணைக்கல், கோமயம்
***ஆணை*** -- உண்மை, தடுத்தல், சபதம், வெற்றி, அடையாளம், ஏவல்

155. **பேணலே** கருதல், ஓம்பல், பேரவா, விருப்பம், நாற்பேர்;
**தூணி** ஓர் அளவே, ஆவம்; **துணர்** என்ப மலர், பூந்தாது ஆம்;
**கோணை** அச்சுதமே, வெம்மை; **கொண்கனே** மெல்லன், பத்தா;
**வேணியே** சடிலம், ஆயர்வீதி, யாறுடன், ஆகாயம்.

**பேணல்** : 1. கருதல் 2. ஓம்பல் 3. பேரவா 4. விருப்பம்
**தூணி** : 1. ஓர்அளவு 2. ஆவம்
**துணர்** : 1. மலர் 2. பூந்தாது
**கோணை** : 1. அச்சுதம் 2. வெம்மை
**கொண்கன்** : 1. மெல்லன் 2. பத்தா
**வேணி** : 1. சடிலம் 2. ஆயர்வீதி 3. யாறு 4. ஆகாயம்

*பேணல்* -- குறித்தல், காத்தல், ஆசைப்பெருக்கம், விருப்பம்
*தூணி* -- ஓரளவு, அம்புக்கூடு
*துணர்* -- பூ, பூஞ்சுண்ணம்
*கோணை* -- அழிவின்மை, கொடுமை
*கொண்கன்* -- நெய்தற்றலைவன், கணவன்
*வேணி* -- சடை, இடையர்வீதி, நதி, ஆகாயம்

156. கோணம் அங்குசம், வளாவல், குதிரை, தெரு, வளைந்த கட்கம்;
நாணல் நாணுதல், நாணற்புல்; **ஞாண்** என்ப கயிறு, வில்நாண்;
ஆணரே பாணர், நன்மை; **அணவல்** அணுகல், புல்லல்;
காணலே குறித்தல், எண்ணல்; வணங்கலும் கருதும் முப்பேர்.

**கோணம்** : 1. அங்குசம் 2. வளாவல் 3. குதிரை 4. தெரு
5. வளைந்த கட்கம்
**நாணல்** : 1. நாணுதல் 2. நாணற்புல்
**ஞாண்** : 1. கயிறு 2. வில்நாண்
**ஆணர்** : 1. பாணர் 2. நன்மை
**அணவல்** : 1. அணுகல் 2. புல்லல்
**காணல்** : 1. குறித்தல் 2. எண்ணம் 3. வணங்கல்

*கோணம்* -- யானைத்தோட்டி, வளைவு, குதிரை,முடுக்குத் தெரு,
வளைந்த வாள்
*நாணல்* -- இலச்சைப்படல், நாணற்புல்லு
*ஞாண்* -- கயிறு, வின்னாண்
*ஆணர்* -- வந்தித்துநிற்போர், நன்மை
*அணவல்* -- கிட்டல், புணர்தல்
*காணல்* -- குறிக்குதல், நினைத்தல், வணங்குதல்

157. கேணியே துரவு, கூவம்; கிடங்கொடு, குளமும் ஆகும்.
சேணி கேசரர் ஊர், என்ப; இறைவையும் செப்பும் நாமம்.
**பூணி** ஏறு, இடபராசி; **புணர்ப்பு** என்பது உடம்பு, கூடல்;
தாணுவே தண்டம், குற்றி, சங்கரன், நிலை, தூண் ஆமே.

**கேணி** : 1. துரவு 2. கூவம் 3. கிடங்கு 4. குளம்
**சேணி** : 1. கேசரர் ஊர் 2. இறைவை
**பூணி** : 1. ஏறு 2. இடபராசி
**புணர்ப்பு** : 1. உடம்பு 2. கூடல்
**தாணு** : 1. தண்டம் 2. குற்றி 3. சங்கரன் 4. நிலை 5. தூண்

*கேணி* -- துரவு, கிணறு, அகழி, குளம்
*சேணி* -- வித்தியாதரருலகு, ஏணி

***பூணி*** -- எருது, இடபவிராசி
***புணர்ப்பு*** -- உடல், கூடல்
***தாணு*** -- மலை, குற்றி, சிவன், நிலைபேறு, தூண்

158. **கோண்** கொடுங்கோன்மை, கோட்டம்; **கோணி**யே ஏனம், ஓர் [எண்;
**சேண்** நீளம், அகலம், தூரம், உயரம், விண் செப்பும் ஐம்பேர்;
**தூண்** பற்றுக்கோலே, தம்பம்; **தூண்டலே** எடுப்பல், உய்த்தல்;
**ஆண்** மகன், தலைமை என்ப; ஆண்விலங்கு எனவும் ஆமே.

**கோண்** : 1. கொடுங்கோன்மை 2. கோட்டம்
**கோணி** : 1. ஏனம் 2. ஓர் எண்
**சேண்** : 1. நீளம் 2. அகலம் 3. தூரம் 4. உயரம் 5. விண்
**தூண்** : 1. பற்றுக்கோல் 2. தம்பம்
**தூண்டல்** : 1. எடுப்பல் 2. உயத்தல்
**ஆண்** : 1. மகன் 2. தலைமை 3. ஆண் விலங்கு

***கோண்*** -- கொடுங்கோன்மை, வளைவு
***கோணி*** -- பன்றி, பதினாயிரங்கோடாகோடி
***சேண்*** -- நீளம், அகலம், தூரம், உயரம், ஆகாயம்
***தூண்*** -- பற்றுக்கோல், தம்பம்
***தூண்டல்*** -- உயர்த்தல், செலுத்தல்
***ஆண்*** -- ஆண்மகன், தலைமை, ஆண்விலங்கு

159. **காண்டலே** இறைஞ்சல், எய்தல், காணுதல் கருதும் முப்பேர்;
**நோண்டலே** அகழ்தல், கீண்டல்; முகத்தலும் நுவலல் ஆகும்.
**வேண்டலே** அவா, விருப்போடு, இரத்தலும் விளம்பும் நாமம்;
**ஈண்டு** சீக்கிரம், இவ்வண்ணம், இவ்விடம், இண்டையும் பேர்.

**காண்டல்** : 1. இறைஞ்சல் 2. எய்தல் 3. காணுதல்
**நோண்டல்** : 1. அகழ்தல் 2. கீண்டல் 3. முகத்தல்
**வேண்டல்** : 1. அவா 2. விருப்பு 3. இரத்தல்
**ஈண்டு** : 1. சீக்கிரம் 2. இவ்வண்ணம் 3. இவ்விடம் 4. இண்டை

***காண்டல்*** -- வணங்கல், பெறுதல், காணல்
***நோண்டல்*** -- தோண்டல், கிழித்தல், முகத்தல்
***வேண்டல்*** -- பேரவா, விருப்பு, இரக்குதல்
***ஈண்டு*** -- சீக்கிரம், இத்தன்மை, இவ்விடம், இண்டங்கொடி

160. **பணை** பரிப்பந்தி, பீனம், பறை, சினை, மருதம், மூங்கில்,
கிணை, வயல், சுவலை, பாழி, பிழைத்தலும் கிழத்து நாமம்;

**திணை** இருதிணை, ஒழுக்கம், அகப்புறத் திணைகளோடு,
நணுகிடம், குடியே, வையம், குலமுமே நாட்டும் பேர் ஆம்.

**பணை** : 1. பரிப்பந்தி 2. பீனம் 3. பறை 4. சினை 5. மருதம் 6. மூங்கில் 7. கிணை 8. வயல் 9. சுவலை 10. பாழி 11. பிழைத்தல்

**திணை** : 1. இருதிணை 2. ஒழுக்கம் 3. அகப்புறத்திணை 4. இடம் 5. குடி 6. வையம் 7. குலம்

***பணை*** -- குதிரைப்பந்தி, பருமை, முரசு, மரக்கொம்பு, கழனி, மூங்கில், மருதநிலப்பறை, வயல், அரசமரம், விலங்கின் படுக்கை, பிழைத்தல்.

***திணை*** -- உயர்திணையஃறிணைகள், ஒழுக்கம். அகப்புறத் திணைகள், இடம், குடி, பூமி, குலம்

161. **புண்டரீகம்** வெண்கஞ்சம், புலி, வண்டு, தென்கீழ்த் திக்கிற்
திண்டி, வெண்குடை, சகுந்தம், செய்ய கோகனகம் ஏழ்பேர்;
**முண்டகம்** தாழை, நெற்றி, முளரி, முத்தகம், முள்மூலம்,
தெண்டிரை வாரி, முள்ளி, மது இருநாற்பேர் செப்பும்.

**புண்டரீகம்** : 1. வெண்கஞ்சம் 2. புலி 3. வண்டு 4. தென்கீழ்த் திக்கிற் திண்டி 5. வெண்குடை 6. சகுந்தம் 7. செய்யகோகனம்

**முண்டகம்** : 1. தாழை 2. நெற்றி 3. முளரி 4. முத்தகம் 5. முள்மூலம் 6. வாரி 7. முள்ளி 8. மது

***புண்டரீகம்*** -- வெண்டாமரை, புலி, வண்டு, தென்கீட்டிசையில் யானை, வெண்குடை, கழுகு, செந்தாமரை

***முண்டகம்*** -- தாழை, நெற்றி, தாமரை, கருக்குவாளிமரம், முட் செடி, கடல், முள்ளிச்செடி, கள்

162. **அண்ணல்** பீடு, அருகன், செம்மல், அணவுதல், குரிசில், முல்லைக்
கண்ணிய தலைவன், புத்தன் ஆகும்; முன்னவனும் எண்பேர்.
**எண்** அளவு, எள், இலக்கம், எளிமை, சோதிட நூலோடு,
திண்மை, எண்ணிக்கை; மற்றை எண்ணலும் செப்பும் அப்பேர்.

**அண்ணல்** : 1. பீடு 2. அருகன் 3. செம்மல் 4. அணவுதல் 5. குரிசில் 6. முல்லைக் கண்ணிய தலைவன் 7. புத்தன் 8. முன்னவன்

**எண்** : 1. அளவு 2. எள் 3. இலக்கம் 4. எளிமை 5. சோதிட நூல் 6. திண்மை 7. எண்ணிக்கை 8. எண்ணல்

***அண்ணல்*** -- பெருமை, அருகதேவன், பெருமையிற்சிறந்தோன், கிட்டல், அரசன், முல்லைநிலத்தலைவன், புத்ததேவன், மூத்தோன்
***எண்*** -- அளவு, எள், இலக்கம், எண்மை, சோதிடநூல், வலி, விசார்ம், எண்ணுதல்

163. **கண்** இடம், பெருமை, வேரல், கணு, நயப்புணர்வு, நாட்டம்,
எண்ணும் ஓர் உருவின் பேரோடு, இயம் சந்திரகம் எண்பேர்;
**பண்ணையே** குளம், நீர்த்தாழ்வு, பணை, பொய்தல், அகனி, நீலுண்
கண்ணியர் ஆடல், மாவின் துயில் இடம் ஏழ்பேர் காட்டும்.

**கண்** : 1. இடம் 2. பெருமை 3. வேரல் 4. கணு 5. நயப்புணர்வு 6. நாட்டம் 7. எண்ணு ஓர் உருபின் பேர் 8. சந்திரகம்
**பண்ணை** : 1. குளம் 2. நீர்த்தாழ்வு 3. பனை 4. பொய்தல் 5. அகனி 6. கண்ணியராடல் 7. மாவின் துயில் இடம்

***கண்*** -- இடம், பெருமை, மூங்கில், மரக்கணு, கண்ணோட்டம், விழி, ஏழாம் வேற்றுமையுருபு, மயிற்றோகைக்கண்
***பண்ணை*** -- குளம், நீர்த்தாழ்வு, வயல், மருதநிலம், மகளிர் விளையாட்டு, விலங்கு துயிலிடம்

164. **பாண்டிலே** கிணி, இடிஞ்சில், பண்டி, ஏறு, இடபம், பீரம்,
நீண்டவேய், தேயம், மஞ்சம், கோளகை நிகழ்த்தும் பத்து ஆம்;
**காண்டமே** நீர், காடு, எல்லை, கரகம், கோல், எழினி, உண்டை,
தூண்டு கோல், படை, துமானம், துகில், பரி, வரை பன்மூன்றே.

**பாண்டில்** : 1. கிணி 2. இடிஞ்சில் 3. பண்டி 4. ஏறு 5. இடபம் 6. பீரம் 7. வேய் 8. தேயம் 9. மஞ்சம் 10. கோளகை
**காண்டம்** : 1. நீர் 2. காடு 3. எல்லை 4. கரகம் 5. கோல் 6. எழினி 7. உண்டை 8. தூண்டுகோல் 9. படை 10. துமானம் 11. துகில் 12. பரி 13. வரை

***பாண்டில்*** -- கைத்தாளம், அகல், பண்டி, எருது, இடபவிராசி, வாகைமரம், மூங்கில், தேயம், கட்டில், வட்டம்.
***காண்டம்*** : நீர், காடு, முடிவு, கமண்டலம், கோல், திரைச்சீலை, திரளை, அம்பு, படைக்கலம், ஆபரணப்பெட்டி, சீலை, குதிரை, மலை

165. **தண்டம்** ஊன்றிடுகோல், நாடு; தண்டிப்பு, துதிக்கை, தஞ்சம்,
கொண்ட தெண்டு, யானை செல்லும் வழி, குடைக்கால், குரம்பு,

எண்தரும் அனீகம், ஊர்தி, இடு தண்டமொடு, பண்டாரம்,
தெண்டன் இட்டு இடுதலோடு செப்பும் ஈரேழு பேர் ஆமே.

**தண்டம்** : 1. ஊன்றிடுகோல் 2. நாடு 3. தண்டிப்பு 4. துதிக்கை 5. தஞ்சம் 6. தெண்டு 7. யானை செல்லும் வழி 8. குடைக்கால் 9. குரம்பு 10. அனீகம் 11. ஊர்தி 12. இடுதண்டம் 13. பண்டாரம் 14. தெண்டன் இட்டு இடுதல்.

***தண்டம்*** -- ஊன்றுகோல், நாடு, தண்டித்தல், யானைத்துதிக்கை, பெருமை, தண்டாயுதம், யானை செல்லும் வழி, குடைக்கால், வரம்பு, சேனை, வாகனம், ஆக்கினை, கோசம், தெண்டனிடுதல்.

166. **பாணி** புட்கரமே, ஊரே, பரிகாரம், இசைப்பாட்டு, அங்கை,
வாணிதம், ஓசை, கூத்து, மாற்றம், சங்கீதம், நாடு,
சேணுறு சோலை, காலம், சிறந்த பல்லியம் பற்றோடு,
பூணுறு விளம்பம், என்னப் போற்றும் ஈரெண் பேர் ஆமே

**பாணி** : 1. புட்கரம் 2. ஊர் 3. பரிகாரம் 4. இசைப்பாட்டு 5. கை 6. வாணிதம் 7. ஓசை 8. கூத்து 9. மாற்றம் 10. சங்கீதம் 11. நாடு 12. சோலை 13. காலம் 14. பல்லியம் 15. பற்று 16. விளம்பம்

***பாணி*** -- நீர், ஊர், பலபண்டம், இசைப்பாட்டு, கை, கள், ஓசை, கூத்து, சொல், சங்கீதம், நாடு, சோலை, காலம், பல்லியம், பற்று, தாமதம்

**(ணகர எதுகை முற்றிற்று)**

## தகர எதுகை

167. **மதலையே** கொன்றை, பிள்ளை, மரக்கலம், கொடுமை, தூண்ஆம்;
**சிதலை** நோய், துணி, செல் என்ப; **சீதம்** நீர், குளிரே, மேகம்;
**பதலை** வெற்பு, அகளி, ஓர்கட்பறையும், தண்ணுமையும் ஆகும்;
**கதலியே** வாழை, தேறு, காற்றாடி, துவசம் ஆமே.

**மதலை** : 1. கொன்றை 2. பிள்ளை 3. மரக்கலம் 4. கொடுமை 5. தூண்

**சிதலை** : 1. நோய் 2. துணி 3. செல்

**சீதம்** : 1. நீர் 2. குளிர் 3. மேகம்

**பதலை** : 1. வெற்பு 2. அகளி 3. ஓர்கட்பறை 4. தண்ணுமை

**கதலி** : 1. வாழை 2. தேறு 3. காற்றாடி 4. துவசம்

***மதலை*** -- கொன்றைமரம், பிள்ளை, மரக்கலம், கொடுங்கை, தூண்
***சிதலை*** -- வியாதி, சீலைத்துணி, கறையான்
***சீதம்*** -- நீர், குளிர், முகில்
**பதலை** -- மலை, சாடி, ஒருகட்பறை, தண்ணுமைப்பறை
***கதலி*** -- வாழை, தேற்றாமரம், காற்றாடி, விருதுக்கொடி

168. **இதழ்** பனையேடு, பூவினிதழ், உதடு, இமையும் நாற்பேர்;
**கதழ்வு** வேகம், விதப்பு; கலந்தையும், சிறப்பும் ஆகும்.
**சிதடன்** அந்தகன், மூடன் பேர்; **திதி** பக்கம், நிலையே, காத்தல்;
**மதுகமே** இருப்பை, எட்டி, மதுரம், ஆதராவும் ஆமே.

**இதழ்** : 1. பனையேடு 2. பூவினிதழ் 3. உதடு 4. இமை
**கதழ்வு** : 1. வேகம் 2. விதப்பு 3. கலந்தை 4. சிறப்பு
**சிதடன்** : 1. அந்தகன் 2. மூடன்
**திதி** : 1. பக்கம் 2. நிலை 3. காத்தல்
**மதுகம்** : 1. இருப்பை 2. எட்டி 3. மதுரம் 4. தரா

***இதழ்*** -- பனையோலை, பூவிதழ், அதரம், கண்ணிமை
***கதழ்வு*** -- சீக்கிரம், மிகுதி, பெருமை, சிறப்பு
***சிதடன்*** -- குருடன், அறிவில்லான்
***திதி*** -- திதி, நிலைபேறு, காக்குதல்
***மதுகம்*** -- இலுப்பைமரம், காஞ்சிரமரம், தித்திப்பு, தரா

169. **மதன்** வலி, வண்மை, வேள், ஏர், மாட்சிமை, கலக்கம் என்ப;
**பதங்கம்** புட்பொது, விட்டில் பேர்; **பதுக்கை**யே பாறை, தூறு;
**சிதம்** விண்மீன், வெண்மை, ஞானம், செயமுறப்பட்டது ஆமே;
**நிதம்பமே** அல்குல் என்ப; நெடுமலைப் பக்கமும் பேர்.

**மதன்** : 1. வலி 2. வண்மை 3. வேள் 4. ஏர் 5. மாட்சிமை 6. கலக்கம்
**பதங்கம்** : 1. புட்பொது 2. விட்டில்
**பதுக்கை** : 1. பாறை 2. தூறு
**சிதம்** : 1. விண்மீன் 2. வெண்மை 3. ஞானம் 4. செயமுறப்படல்
**நிதம்பம்** : 1. அல்குல் 2. மலைப்பக்கம்

***மதன்*** -- வலிமை, வளமை, மன்மதன், அழகு, மாட்சிமை, கலக்கம்
***பதங்கம்*** -- பறவைப்பொது, விட்டிற்பறவை
***பதுக்கை*** -- பாறை, சிறுதூறு
***சிதம்*** -- நட்சத்திரம், வெண்ணிறம் ஞானம், சயமுறப்படல்
***நிதம்பம்*** -- கடிதடம், மலைப்பக்கம்

170. **சுதை** மகள், கறவாத்தேனு, சுண்ணச் சாந்து, அமுதம், வெண்மை;
**புதை** மறை, ஆகம், அம்பின் கட்டு, அம்பு, புதுமை என்ப;
**மது** இணர், வசந்தம், தேன், கள்,வண்டு, மால், சைத்திரைப் பேர்;
**கதை** தண்டாயுதமே, வார்த்தை, காரணச்சொல்லே, தண்டு ஆம்.

**சுதை** : 1. மகள் 2. கறவாத்தேனு 3. சுண்ணச்சாந்து 4. அமுதம் 5. வெண்மை
**புதை** : 1. மறை 2. ஆகம் 3. அம்பின் கட்டு 4. அம்பு 5. புதுமை
**மது** : 1. இணர் 2. வசந்தம் 3. தேன் 4. கள் 5. வண்டு 6. மால் 7. சைத்திரை
**கதை** : 1. தண்டாயுதம் 2. வார்த்தை 3. காரணச்சொல் 4. தண்டு

***சுதை*** -- புத்திரி, உதைகாற்பசு, சுண்ணாம்பு, அமுதம், வெண்மை
***புதை*** -- மறைவு, உடல், அம்பின்கட்டு, அம்பு புதுமை
***மது*** -- பூஞ்சுண்ணம், வசந்தகாலம், தேன், கள், வண்டு, விட்டுணு, சித்திரைமாதம்
***கதை*** -- தண்டாயுதம், சொல், ஏதுச்சொல், தடி

171. **சதம்** இலை, இறகு, நூறு; நிலைமையும் சாற்றும் நாமம்.
**கதவமே** கபாடம், சேவல், காத்தலும் கருதும் முப்பேர்
**வதுவையே** மணம், கல்யாணம்; **மாது** என்பது அசைச்சொல் [பெண் ஆம்;
**நுதல்** நெற்றி, புருவம் ஆகும்; **நோதல்** நோய், கெடுதல் ஆமே.

**சதம்** : 1. இலை 2. இறகு 3. நூறு 4. நிலைமை
**கதவம்** : 1. கபாடம் 2. சேவல் 3. காத்தல்
**வதுவை** : 1. மணம் 2. கல்யாணம்
**மாது** : 1. அசைச்சொல் 2. பெண்
**நுதல்** : 1. நெற்றி 2. புருவம்
**நோதல்** : 1. நோய் 2. கெடுதல்

***சதம்*** -- இலை, இறகு, நூறாமிலக்கம், நிலைமை
***கதவம்*** -- கதவு, காவல், காத்தல்
***வதுவை*** -- வாசனை, விவாகம்
***மாது*** -- ஓரசைச்சொல், பெண்
***நுதல்*** -- நெற்றி, நெற்றிப்புருவம்
***நோதல்*** -- துன்பம், கேடு

172. **கதுப்பே** பெண்மயிர், ஆன்கூட்டம், கவுளும், ஆண்மயிரும் ஆகும்;
**விதப்பு** ஒல்லை, மதிலுறுப்பு ஆம்; மிகுதி, கம்பிதமும் அப்பேர்.
**அதிர்ப்பு** ஒலி, நடுக்கம், அச்சம், அதிர்தலும் அறையும் நாமம்;
**ஓதுக்கமே** நடை, மறைப்பு ஆம்; **ஓதனம்** உணா, போர் ஆமே.

**கதுப்பு** : 1. பெண்மயிர் 2. ஆன்கூட்டம் 3. கவுள், 4. ஆண்மயிர்
**விதப்பு** : 1. ஒல்லை 2. மதிலுறுப்பு 3. மிகுதி 4. கம்பிதம்
**அதிர்ப்பு** : 1. ஒலி 2. நடுக்கம் 3. அச்சம் 4. அதிர்தல்
**ஒதுக்கம்** : 1. நடை 2. மறைப்பு
**ஓதனம்** : 1. உணா 2. போர்

***கதுப்பு*** -- பெண்மயிர், பசுக்கூட்டம், கன்னம், ஆண்மயிர்
***விதப்பு*** -- சடிதி, மதிலுறுப்பு, மிகுதி, நடுக்கம்
***அதிர்ப்பு*** -- ஆரவாரம், நடுக்கம், பயம், அதிர்தல்
***ஒதுக்கம்*** -- நடை, மறைவு
***ஓதனம்*** -- உணவு, யுத்தம்

173. **மதர்வு** என்ப களி, வனப்பு, வலி, இடம், மிகுதி ஆகும்;
**புதவு** என்ப கதவு, ஓர்புல்லு, பூழையும் புகலும் முப்பேர்;
**சிதர்** உறி, திவலை, வண்டு, சீலையின்துணி, பூந்தாது ஆம்;
**அதர்** வழி, புழுதி, ஆட்டின் அதரும்; நுண்மணலும் ஆமே.

**மதர்வு** : 1. களி 2. வனப்பு 3. வலி 4. இடம் 5. மிகுதி
**புதவு** : 1. கதவு 2. ஓர்புல்லு 3. பூழை
**சிதர்** :1. உறி 2. திவலை 3. வண்டு 4. சீலையின்துணி 5. பூந்தாது
**அதர்** : 1. வழி 2. புழுதி 3. ஆட்டின்அதரு 4. நுண்மணல்

***மதர்வு*** -- மகிழ்ச்சி, அழகு, வலிமை, இடம், மிகுதி
***புதவு*** -- கதவு, ஓர்வகைப்புல், கோபுரவாயிற்கதவு விட்டுப் புகும் வழி
***சிதர்*** -- உறி, துளி, வண்டு, சீலைத்துணி, பூந்துகள்
***அதர்*** -- பாதை, புழுதி, ஆட்டின்கழுத்திலதர், நுண்மணல்

174. **முதலை** செங்கிடை, இடங்கர், முருந்து என மொழியல் ஆகும்;
**அதம்** இறங்குதல், பாதாளம், அத்தி, கீழ், சிரத்தல் ஐம்பேர்;
**கதி** நடை, விரைவு, நான்கு கதி, வழி, புகலே, முத்தி;
**மதம்** இபமதம், செருக்கு, சமயம், சம்மதம், வலிப் பேர்.

**முதலை** : 1. செங்கிடை 2. இடங்கர் 3. முருந்து
**அதம்** : 1. இறங்குதல் 2. பாதாளம் 3. அத்தி 4. கீழ் 5. சிரத்தல்
**கதி** : 1. நடை 2. விரைவு 3. நான்கு கதி 4. வழி 5. புகல் 6. முத்தி
**மதம்** : 1. இபமதம் 2. செருக்கு 3. சமயம் 4. சம்மதம் 5. வலி

***முதலை*** -- செஞ்சடை, முதலை, இறகினடிமுள்
***அதம்*** -- இறங்குதல், பாதாளம், அத்திமரம், கீழ், சங்கரித்தல்
***கதி*** -- நடை, சீக்கிரம், தேவகதி முதலிய நாற்கதி, வழி, ஒதுக்கிடம், மோக்கம்
***மதம்*** -- யானைமதம், செருக்கு, சமயமதம், சம்மதம், வலிமை

175. **விதி** விதம், தொழில், நீர், செல்வம், வேதன், ஊழ், நியமம், [உண்மை;
**அதிகமே** படை, இலாபம், அலைத்துவமொடு, வாசந்தி;
**மதி** உடுபதி, நிதானம், மாதம், கற்கடகம், ஒண்மை;
**முதுமையே** பழமை, மூப்பு; முதுமொழி என முப் பேரே.

**விதி** : 1. விதம் 2. தொழில் 3. நீர் 4. செல்வம் 5. வேதன் 6. ஊழ் 7. நியமம் 8. உண்மை
**அதிகம்** : 1. படை 2. இலாபம் 3. அலைத்துவம் 4. வாசந்தி
**மதி** : 1. உடுபதி 2. நிதானம் 3. மாதம் 4. கற்கடகம் 5. ஒண்மை
**முதுமை** : 1. பழமை 2. மூப்பு 3. முதுமொழி

***விதி*** -- விதம், தொழில், குணம், செல்வம், பிரமன், ஊழ், நியமம், மெய்
***அதிகம்*** -- படை, இலாபம், மிகுதி, குருக்கத்தி
***மதி*** -- சந்திரன், நிதானம், மாதம், கற்கடகவிராசி, அறிவு
***முதுமை*** -- பழமை, மூப்பு, முதுமொழி

176. **உதகம்** நீர், திவலை, வைப்பு ஆம்; **உதவியே** சகாயம், ஈகை;
**சிதகன்** தூதுணமே, சுங்கன்; **சிதன்** என்ப மழைக்கோள், பீரு;
**பதணமே** பரிகம், ஞாயில்; **பதமமே** மதி, புள், விட்டில்;
**இதம்** என்பது உரிமை, சொல் ஆம்; இனிமையும் இயம்பு [முப்பேர்.

**உதகம்** : 1. நீர் 2. திவலை 3. வைப்பு
**உதவி** : 1. சகாயம் 2. ஈகை
**சிதகன்** : 1. தூதுணம் 2. சுங்கன்
**சிதன்** : 1. மழைக்கோள் 2. பீரு
**பதணம்** : 1. பரிசம் 2. ஞாயில்
**பதமம்** : 1. மதி 2. புள் 3. விட்டில்
**இதம்** : 1. உரிமை 2. சொல் 3. இனிமை

***உதகம்*** -- நீர், துளி, பூமி
***உதவி*** -- சகாயம், கொடை
***சிதகன்*** -- தூக்கணங்குருவி, சுக்கிரன்
***சிதன்*** -- சுக்கிரன், அச்சமுள்ளோன்
***பதணம்*** -- மதிலுண்மேடை, மதில்
***பதமம்*** -- சந்திரன், பறவை, விட்டில்
***இதம்*** -- உரிமை, சொல், இனிமை

177. **கதம்பம்** ஆன் கூட்டம், நீபம், கந்தமார்பொடி, மராவம் ஆம்;
**விதம்** பக்கி யொடு, விதப்பேர்; **விது** என்ப மதி, மால், ஆகும்;
**நதம்** வளைவு என்ப; மேற்கோடு ஆறுமாய் நவில்வர் மேலோர்.
**கதம்** வலி, கொடுமை, கோபம், அரவு, எனக் கருதலாமே.

**கதம்பம்** : 1. ஆன் கூட்டம் 2. நீபம் 3. கந்தமார்பொடி 4. மராவம்
**விதம்** : 1. பக்கி 2. விதம்
**விது** : 1. மதி 2. மால்
**நதம்** : 1. வளைவு 2. மேற்கோடு ஆறு
**கதம்** : 1. வலி 2. கொடுமை 3. கோபம் 4. அரவு

***கதம்பம்*** -- ஆன் கூட்டம், கடம்பு, வாசனைப்பொடி, வெண்கடம்பு
***விதம்*** -- பறவை, விதம்
***விது*** -- சந்திரன், விட்டுணு
***நதம்*** -- வளைவு, மெற்கோடுமாறு
***கதம்*** -- வலிமை, கொடுமை, கோபம், சர்ப்பம்

178. **முதல்** அகநிலையே, ஆதி, மூலகம் முப்பேர் சாற்றும்;
**குதலை**யே மழலை, அஞ்ஞை; **குதை**யே சைவலம், குலைப்பேர்;
**புதல்** என்ப புருவம், புல் ஆம்; **புதன்** புந்தி, கவிஞன், தேவன்;
**முதல்வனே** கடவுள், சாது, முக்கணன், அரசன் ஆமே.

**முதல்** : 1. அகநிலை 2. ஆதி 3. மூலகம்
**குதலை** : 1. மழலை 2. அஞ்ஞை
**குதை** : 1. சைவலம் 2. குலை
**புதல்** : 1. புருவம் 2. புல்
**புதன்** : 1. புந்தி 2. கவிஞன் 3. தேவன்
**முதல்வன்** : 1. கடவுள் 2. சாது 3. முக்கணன் 4. அரசன்

***முதல்*** -- கடவுள், ஆதி, கிழங்கு
***குதலை*** -- மழலைச்சொல், அறிவிலான்
***குதை*** -- பாசி, விற்குதை
***புதல்*** -- புருவம், புல்
***புதன்*** -- புதனென்னுங்கிரகம், பாவலன், தேவன்
***முதல்வன்*** -- கடவுள், அருகன், சிவன், இராசா

179. **சிதவல்** சீதாரம், சீரை; **சிதடி**யே பேதை, சில்லை;
**பதவி**யே உலகம், செல்வம்; பதவையும், கதியும் என்ப.
**மிதவை**யே உடுபம், தோரி; **வித்தமே**. சிதம், பொன் ஆகும்;
**கதவு** என்ப கபாடம், காப்பு ஆம்; **கதிரம்** கோல், கருங்காலிப்
[பேர்.

**சிதவல்** : 1. சீதாரம் 2. சீரை
**சிதடி** : 1. பேதை 2. சில்லை
**பதவி** : 1. உலகம் 2. செல்வம் 3. பதவை 4. கதி
**மிதவை** : 1. உடுபம் 2. தோரி
**வித்தம்** : 1. சிதம் 2. பொன்
**கதவு** : 1. கபாடம் 2. காப்பு
**கதிரம்** : 1. கோல் 2. கருங்காலி

***சிதவல்*** -- தேர்க்கொடி, சீயா
***சிதடி*** -- அறிவிலான், சிள்வண்டு
***பதவி*** -- உலகம், செல்வம், வழி, கதி
***மிதவை*** -- தெப்பம், சோறு
***வித்தம்*** -- ஞானம், பொன்
***கதவு*** -- கதவு, காவல்
**கதிரம்** -- அம்பு, கருங்காலி

180. **மதர்** அலைத்துவம், களிப்பு ஆம்; **மதலிகை** சல்லி, தூக்கம்;
**கதனமே** சமர், கடுப்பு; கலக்கமும் கருதல் ஆகும்.
**சதனம்** இல், இலை, தூவிப்பேர்; **சாதனம்** குறி, சார், ஊர் ஆம்.
**மதனமே** மோனம், காதல்; மதித்தலும் வகுக்கல் ஆமே.

**மதர்** : 1. அலைத்துவம் 2. களிப்பு
**மதலிகை** : 1. சல்லி 2. தூக்கம்
**கதனம்** : 1. சமர் 2. கடுப்பு 3. கலக்கம் 4. கருதல்
**சதனம்** : 1. இல் 2. இலை 3. தூவி
**சாதனம்** : 1. குறி 2. சார் 3. ஊர்
**மதனம்** : 1. மோனம் 2. காதல் 3. மதித்தல்

***மதர்*** -- மிகுதி, களிப்பு
***மதலிகை*** -- ஆபரணத்தொடக்குவடிவு, தூக்கம்
***கதனம்*** -- போர், கடுப்பு, கலக்கம்
***சதனம்*** -- வீடு, இலை, இறகு
***சாதனம்*** -- குறி, இடம், ஊர்
***மதனம்*** -- மௌனம், காமம், கடைதல்

181. **பிதா** அரன், அருகன், தந்தை, பெருநாரை, கடவுள், வேதன்;
**நிதானமே** படை, பொன், ஆதிகாரணம், நிச்சயப் பேர்;
**விதானமே** வானி, வட்டம்; விதம் உபாயமும் ஆம் என்ப.
**சதா** நிரந்தரம், நாவாய் ஆம்; **ததி** அளை, பருவம் ஆமே.

**பிதா** : 1. அரன் 2. அருகன் 3. தந்தை 4. பெருநாரை 5. கடவுள் 6. வேதன்

**நிதானம்** : 1. படை 2. பொன் 3. ஆதிகாரணம் 4. நிச்சயம்
**விதானம்** : 1. வானி 2. கூட்டம் 3. விதம் 4. உபாயம்
**சதா** : 1. நிரந்தரம் 2. நாவாய்
**ததி** : 1. அளை 2. பருவம்

***பிதா*** -- சிவன், அருகதேவன், அப்பன், பெருநாரை, கடவுள், பிரமன்
***நிதானம்*** -- படை, பொன், ஆதிகாரணம், நிச்சயம்
***விதானம்*** -- மேற்கட்டி, கூட்டம், விதம், உபாயம்
***சதா*** -- எப்போழ்தும், மரக்கலம்
***ததி*** -- தயிர், பருவம்

182. **திதி** நிலை பெறுதல், பக்கம்; திரம், புரந்திடல் என்று ஆகும்.
**வெதிர்** என்ப செவிடு, வேய் ஆம்; **வேதிகை** பலகை, திண்ணை;
**நிதி** இருநிதி, செந்தாது, நிறைவொடு, மதலிகைப் பேர்;
**பொதி** கிழி, கரிக்காடு; ஓலைக்குடையும், அம்பலமும் போற்றும்.

**திதி** : 1. நிலைபெறுதல் 2. பக்கம் 3. திரம் 4. புரந்திடல்
**வெதிர்** : 1. செவிடு 2. வேய்
**வேதிகை** : 1. பலகை 2. திண்ணை
**நிதி** : 1. இருநிதி 2. செந்தாது 3. நிறைவு 4. மதலிகை
**பொதி** : 1. கிழி 2. கரிக்காடு 3. ஓலைக்குடை 4. அம்பலம்

***திதி*** -- நிலைபெறுதல், சந்திரனாள், நிலை, காத்தல்
***வெதிர்*** -- செவிடு, மூங்கில்
***வேதிகை*** -- பலகை, திண்ணை
***நிதி*** -- இருநிதி, பொன், நிறைவு, ஆபரணத்திற்றொங்கணி
***பொதி*** -- பொதி, யானைதிரியுங்காடு, ஓலைக்குடை, அம்பலம்

183. **உதி** பதித்திரி, ஒதிப் பேர்; **ஊதியம்** இலாபம், கல்வி;
**இதி** கழுது, உறுதி ஆகும்; **இதரம்** அந்நியமே, ஈனம்;
**யதி** முனி, மோனை என்ப; **யாதனம்** பஃறி, ஓடம்;
**வதி** வழி, அள்ளல், ஆகும்; **வதானியன்** தனதன், வள்ளல்.

**உதி** : 1. பதித்திரி 2. ஒதி
**ஊதியம்** : 1. இலாபம் 2. கல்வி
**இதி** : 1. கழுது 2. உறுதி
**இதரம்** : 1. அந்நியம் 2. ஈனம்
**யதி** : 1. முனி 2. மோனை
**யாதனம்** : 1. பஃறி 2. ஓடம்
**வதி** : 1. வழி 2. அள்ளல்
**வதானியன்** : 1. தனதன் 2. வள்ளல்

***உதி*** -- உலைத்துருத்தி, ஓதிமரம்
***ஊதியம்*** -- இலாபம், கல்வி
***இதி*** -- பிசாசம், உறுதி
***இதரம்*** -- அந்நியம், ஈனம்
***யதி*** -- முனி, மோனை
***யாதனம்*** -- மரக்கலம், தெப்பம்
***வதி*** -- வழி, சேறு
***வதானியன்*** -- குபேரன், வரையாது கொடுப்போன்

184. **விதித்தலே** பயத்தல், செய்கை; விளம்பலும் விளம்பும் நாமம்.
**கதித்தலே** எழுச்சி, ஆர்த்தல்; **காதையே** கலை, சொல் என்ப;
**உதித்தல்** வீங்குதலே, தோன்றல்; **உதியனே** வழுதி, கொங்கன்;
**மதித்தலே** ஞெலிதல், பேணல்; மதத்தலும் வகுக்கலாமே.

**விதித்தல்** : 1. பயத்தல் 2. செய்கை 3. விளம்பல்
**கதித்தல்** : 1. எழுச்சி 2. ஆர்த்தல்
**காதை** : 1. கதை 2. சொல்
**உதித்தல்** : 1. வீங்குதல் 2. தோன்றல்
**உதியன்** : 1. வழுதி 2. கொங்கன்
**மதித்தல்** : 1. ஞெலிதல் 2. பேணல் 3. மதத்தல்

***விதித்தல்*** -- உண்டாக்கல், செய்தல், சொல்லல்
***கதித்தல்*** -- எழுச்சி, ஒலித்தல்
***காதை*** -- கதை, சொல்
***உதித்தல்*** -- பருத்தல், தோன்றுதல்
***உதியன்*** -- பாண்டியன், சேரன்
***மதித்தல்*** -- கடைதல், வரையறுத்தல், மதத்தல்

185. **கதிர்** பயிர்க்கதிர், அருக்கன், காந்தி, தீவிரம், ஆர், ஆலோன்;
**எதிர்** முன், ஒப்பொடு, மாறு ஆகும்; **ஈதலே** சொரிதல், ஈகை;
**கது** வடுப்படல், வெடிப்பு ஆம்; **காதுதல்** வகிர்தல், கொல்லல்;
**பிதிர்** கதை, நொடி, பராகம்; பிதிர்களும், திவலையும் பேர்.

**கதிர்** : 1. பயிர்க்கதிர் 2. அருக்கன் 3. காந்தி 4. தீவிரம் 5. ஆர் 6. ஆலோன்
**எதிர்** : 1. முன் 2. ஒப்பு 3. மாறு
**ஈதல்** : 1. சொரிதல் 2. ஈகை
**கது** : 1. வடுப்படல் 2. வெடிப்பு
**காதுதல்** : 1. வகிதர்தல் 2. கொல்லல்
**பிதிர்** : 1. கதை 2. நொடி 3. பராகம் 4. பிதிர்கள் 5. திவலை

*கதிர்* -- பயிர்க்கதிர், சூரியன், பிரகாசம், சூரியகிரணம், தேரினுட்
செறிகதிர், சந்திரன்
*எதிர்* -- முன்பு, சமானம், மாறு
*ஈதல்* -- சொரிதல், கொடுத்தல்
*கது* -- வடுப்படுதல், வெடிப்பு
*காதுதல்* -- கூறுசெய்தல், கொல்லல்
*பிதிர்* -- கதை, நொடி, துகள், பிதிர்கள், துளி

186. **பொதிர்ப்பு** அச்சம், நடுக்கம் என்ப; **புதுமை** நூதனமே சால்பு;
**விதிர்ப்பு** என்ப நடுக்கம், பீரே; **வேதண்டம்** கைலை, ஓங்கல்;
**மதிப்பகை** இராகு, கேது ஆம்; **மாதங்கி** காளி, துர்க்கை;
**வெதிர்ப்பே** கம்பிதம், கலக்கம்; மிகுசினக்குறிப்பும் ஆமே.

**பொதிர்ப்பு** : 1. அச்சம் 2. நடுக்கம்
**புதுமை** : 1. நூதனம் 2. சால்பு
**விதிர்ப்பு** : 1. நடுக்கம் 2. பீர்
**வேதண்டம்** : 1. கைலை 2. ஓங்கல்
**மதிப்பகை** : 1. இராகு 2. கேது
**மாதங்கி** : 1. காளி 2. துர்க்கை
**வெதிர்ப்பு** : 1. கம்பிதம் 2. கலக்கம் 3. மிகுசினக்குறிப்பு

*பொதிர்ப்பு* -- பயம், நடுக்கம்
*புதுமை* -- நூதனம், மிகுதி
*விதிர்ப்பு* -- நடுக்கம், பயம்
*வேதண்டம்* -- கைலை, மலை
*மதிப்பகை* -- இராகு, கேது
*மாதங்கி* -- காளி, துர்க்கை
*வெதிர்ப்பு* -- நடுக்கம், கலக்கம், சினக்குறிப்பு

187. **அத்து** என்ப அரை ஞாண், செம்மை,
அசைச்சொல், சாரியை, இசைப்பு;
**தொத்துப்** பூங்கொத்து, தொன்மை,
தொழும்பு எனச் சொல்லும் முப்பேர்;
**தத்தை** மூத்தாள், கிளிக்கு ஆம்;
**தத்துவம்** வலி மெய் என்ப;
**உத்தரம்** ஊழித்தீ, மேலொடு,
மறுமொழி, வடக்கு ஆம்.

**அத்து** : 1. அரைஞாண் 2. செம்மை 3. அசைச்சொல் 4. சாரியை
5. இசைப்பு
**தொத்து** : 1. பூங்கொத்து 2. தொன்மை 3. தொழும்பு
**தத்தை** : 1. மூத்தாள் 2. கிளி
**தத்துவம்** : 1. வலி 2. மெய்
**உத்தரம்** : 1. ஊழித்தீ 2. மேல் 3. மறுமொழி 4. வடக்கு

***அத்து*** -- அரைநாண், சிவப்பு, ஓரசைச்சொல், அத்துச்சாரியை, கூடிநிற்றல்
***தொத்து*** -- பூங்கொத்து, பழமை, அடிமை
***தத்தை*** -- அக்காள், கிளிப்பட்சி
***தத்துவம்*** -- வலிமை, உண்மை
***உத்தரம்*** -- வடவாமுகாக்கினி, உச்சம், விடை, வடதிசை

188. **குத்தி** மண், அடக்கம் என்ப; **கோத்திரை** புவி, வேதண்டம்;
**பத்தி** நார், முறை, ஒழுக்கம், வழிபாடு, படைத்தொகைப் பேர்;
**அத்தி** ஆர்கலியே, யானை, அதவு, எறும்பொடு, விநாசம்;
**சத்தியம்** சபதம், மெய் ஆம்; **சத்தம்** ஏழ், ஒலியும் ஆமே.

**குத்தி** : 1. மண் 2. அடக்கம்
**கோத்திரை** : 1. புவி 2. வேதண்டம்
**பத்தி** : 1. நார் 2. முறை 3. ஒழுக்கம் 4. வழிபாடு 5. படைத்தொகை
**அத்தி** : 1. ஆர்கலி 2. யானை 3. அதவு 4. எறும்பு 5. விநாசம்
**சத்தியம்** : 1. சபதம் 2. மெய்
**சந்தம்** : 1. ஏழ் 2. ஒலி

***குத்தி*** -- பூமி, அடக்கம்
***கோத்திரை*** -- பூமி, மலை
***பத்தி*** -- அன்பு முறைமை, நன்னிலை, வழிபடுதல், படைத்தொகை
***அத்தி*** -- கடல், யானை, அத்திமரம், என்பு, கொலை
***சத்தியம்*** -- சபதம், உண்மை
***சத்தம்*** -- ஏழு, ஓசை

189. **பித்திகை** கருமுகைக்குப் பெயர்; சுவர்த்தலமும் ஆகும்.
**கத்திகை** தொடை விகற்பம், துவசமே, கமழ்வாசந்தி;
**உத்தி** செந்திரு, உறுப்பு, சுணங்கு, உரை, உத்தி, துத்தி;
**துத்தி** நெய், விழவு, நாள், ஓர்புதல், படப்பொறி, சுணங்கு ஆம்.

**பித்திகை** : 1. கருமுகை 2. சுவர்த்தலம்
**கத்திகை** : 1. தொடை விகற்பம் 2. துவசம் 3. வாசந்தி
**உத்தி** : 1. செந்திரு 2. உறுப்பு 3. சுணங்கு 4. உரை 5. உத்தி 6. துத்தி
**துத்தி** : 1. நெய் 2. விழவு 3. நாள் 4. ஓர்புதல் 5. படப்பொறி 6. சுணங்கு

***பித்திகை*** -- சிறுசண்பகம், சுவர்த்தலம்
***கத்திகை*** -- மாலையின் வேறுபாடு, துகிற்கொடி, குருக்கத்தி
***உத்தி*** -- இலக்குமி, அவயவம், தேமல், சொல், யுத்தி, படப்பொறி
***துத்தி*** --நெய், திருவிழா, நாள், துத்திச்செடி, பாம்பின்படப்பொறி, தேமல்

190. **சித்திரபானு** செந்தீ, திவாகரன், ஆண்டு ஒன்றின்பேர்;
**பத்திரம்** சுரிகை, வெற்பு, ஏர், படை, இலை சிறகு, அம்பு ஆணு;
**மித்திரன்** நண்பன், பானு; **வித்தையே** கல்வி, ஞானம்;
**வத்திரம்** முகம், தூசே, போர்க் கருவியும் வகுக்கும் முப்பேர்.

**சித்திரபானு** : 1. செந்தீ 2. திவாகரன், 3. ஆண்டு ஒன்றின்பேர்;
**பத்திரம்** : 1. சுரிகை 2. வெற்பு 3. ஏர் 4. படை 5. இலை 6. சிறகு 7. அம்பு 8. ஆணு
**மித்திரன்** : 1. நண்பன் 2. பானு
**வித்தை** : 1. கல்வி 2. ஞானம்
**வத்திரம்** : 1. முகம் 2. தூசு 3. போர்க்கருவி

***சித்திரபானு*** -- நெருப்பு, சூரியன், ஓர்வருடம்
***பத்திரம்*** -- உடைவாள், மலை, அழகு, ஆயுதம், இலை, இறகு, அத்திரம், நன்மை
***மித்திரன்*** -- சினேகிதன், சூரியன்
***வித்தை*** -- கல்வி, ஞானம்
***வத்திரம்*** -- முகம், சீலை, போர்க்கருவி

191. **பத்திரி**, பறவை, காளி, பரி, இலை, பாணம் ஐம்பேர்;
**அத்திரி** கழுதை, விண், ஒட்டகம், பரி, அசலம், அம்பு ஆம்;
**சத்தி**, கேது, உமை, வேல், கான்றல், தரம், குடை, உதியே, சூலம்;
**சுத்தியே** அகல். வெண்சங்கம், சுத்தம், ஓர்கருவிக்கும் பேர்.

**பத்திரி** : 1. பறவை 2. காளி 3. பரி 4. இலை 5. பாணம்
**அத்திரி** : 1. கழுதை 2. விண் 3. ஒட்டகம் 4. பரி 5. அசலம் 6. அம்பு
**சத்தி** : 1. கேது 2. உமை 3. வேல் 4. கான்றல் 5. தரம் 6. குடை 7. உதி 8. சூலம்
**சுத்தி** : 1. அகல் 2. வெண்சங்கம் 3. சுத்தம் 4. ஓர்கருவி

***பத்திரி*** -- பட்சி, காளி, குதிரை, பத்திரம், அம்பு
***அத்திரி*** -- கழுதை, ஆகாயம், ஒட்டகம், குதிரை, மலை, அத்திரம்
***சத்தி*** -- துகிற்கொடி, பார்வதி, வேலாயுதம், கக்கல், வலிமை, குடை, உலைத்துருத்தி, சூலம்.
***சுத்தி*** -- அகல், சங்கு, சுத்தம், ஓர்கருவி

192. **புத்தனே** உலகளந்தோன், புண்ணியன், அசைனன் என்ப;
**புத்தேளே** புதுமை, தேவு ஆம்; **புதர்** புதர், புலவர் என்ப;
**தைத்தல்** துன்னம், கைத்தல் பேர்; **சதாநந்தன்** கடவுள், வேதா;
**முத்தமே** அதரம், மென்பால்; முத்தொடு, பிரியமும் பேர்.

**புத்தன்** : 1. உலகளந்தோன் 2. புண்ணியன் 3. அசைனன்
**புத்தேள்** : 1. புதுமை 2. தேவு
**புதர்** : 1. புதல் 2. புலவர்
**தைத்தல்** : 1. துன்னம் 2. கைத்தல்
**சதாநந்தன்** : 1. கடவுள் 2. வேதா
**முத்தம்** : 1. அதரம் 2. மென்பால் 3. முத்து 4. பிரியம்

***புத்தன்*** -- திருமால், அருகதேவன், பௌத்தன்
***புத்தேள்*** -- நூதனம், தெய்வம்
***புதர்*** -- புதர், புலவர்
***தைத்தல்*** -- பொல்லம், அலங்கரித்தல்
***சதாநந்தன்*** -- கடவுள், பிரமன்
***முத்தம்*** -- உதடு, மருதநிலம், முத்து, பிரியம்

193.* **முத்தனே** அருகன், ஈசன், முத்தியோன், வாமன், காரி;
**சித்தனே** குமரன், சாது, சிவனொடு முப்பேர் செப்பும்;
**பித்தனே** கள்வன், சம்பு, பித்தன், கேத்திரபாலன் பேர்;
**சுத்தனே** வேதனோடு, சூலபாணியன், அசோகன்.

**முத்தன்** : 1. அருகன் 2. ஈசன் 3. முத்தியோன் 4. வாமன் 5. காரி
**சித்தன்** : 1. குமரன் 2. சாது 3. சிவன்
**பித்தன்** : 1. கள்வன் 2. சம்பு 3. பித்தன் 4. கேத்திரபாலன்
**சுத்தன்** : 1. வேதன் 2. சூலபாணியன் 3. அசோகன்

***முத்தன்*** -- அருகதேவன், சிவன், முத்திபெற்றோன், புத்தன், வயிரவன்
***சித்தன்*** -- வயிரவன், அருகன், அரன்
***பித்தன்*** -- கள்வன், சிவன், பித்தன், வயிரவன்
***சுத்தன்*** -- பிரமன், சிவன், அருகன்

194. **அத்தனே** மூத்தோன், தந்தை, அரன், குரு, கடவுள், சாந்தன்;
**சித்தமே** திடம், உள்ளப்பேர்; **செதுக்கு** அள்ளல், கணமே, மந்தி;
**கைத்தலே** அவைத்தல், கோபம், கசப்பு, அலங்கரித்தல் ஆகும்;
**சித்து** அடல், இட்டி, ஞானம், செப்பிய மாயவித்தை.

**அத்தன்** : 1. மூத்தோன் 2. தந்தை 3. அரன் 4. குரு 5. கடவுள் 6. சாத்தன்
**சித்தம்** : 1. திடம் 2. உள்ளம்
**செதுக்கு** : 1. அள்ளல் 2. கணம் 3. மந்தி
**கைத்தல்** : 1. அலைத்தல் 2. கோபம் 3. கசப்பு 4. அலங்கரித்தல்
**சித்து** : 1. அடல் 2. இட்டி 3. ஞானம் 4. மாயவித்தை

*அத்தன்* -- தமையன், பிதா, சிவன், ஆசான், கடவுள், அருகன்
*சித்தம்* -- மெய், மனம்
*செதுக்கு* -- சேறு, பூதம், மந்தி
*கைத்தல்* -- அலைத்தல், கோபம், கைப்பு, அலங்கரித்தல்
*சித்து* -- வெற்றி, யாகம், ஞானம், மாயவித்தை

195. **உத்திரம்** சித்திரம் சேர்ந்து ஒளிரும் இல்லுறுப்பொடு, ஓர்நாள்;
**பைத்தலே** முனிவு, பாம்பு படம் விரித்திடல், பசுத்தல்,
**மத்திகையே** சம்மட்டி, சுடர்நிலைத்தண்டு, மாலை;
**மத்தம்** உன்மத்தம், மத்து, மகிழ்ச்சி, ஊமத்தையும் பேர்.

**உத்திரம்** : 1. இல்லுறுப்பு 2. ஓர்நாள்
**பைத்தல்** : 1. முனிவு 2. பாம்பு படம் விரித்திடல் 3. பசுத்தல்
**மத்திகை** : 1. சம்மட்டி 2. சுடர்நிலைத்தண்டு 3. மாலை
**மத்தம்** : 1. உன்மத்தம் 2. மத்து 3. மகிழ்ச்சி 4. ஊமத்தை

*உத்திரம்* -- இல்லுறுப்பாகியவுத்திரம், உத்திரநட்சத்திரம்
*பைத்தல்* -- கோபம், பாம்பு படம்விரித்தல், பசுமை
*மத்திகை* -- குதிரைச்சம்மட்டி, விளக்குத்தண்டு, மாலை
*மத்தம்* -- மயக்கம், தயிர்கடைதறி, அக்களிப்பு, ஊமத்து

196. **முத்தகம்** என்பதே ஓர்செய்யுள், கத்திகை என்று ஆகும்;
**யுத்தமே** நியாயம், கூடல், உசிதம், ஞாட்பு எனவும் நாற்பேர்;
**நித்தனே** கடவுள், சாது, நீறணி கடவுள் என்ப;
**ஒத்தலே** பொருந்தல், மத்தி, ஒத்துதல், ஒப்பும் ஆமே.

**முத்தகம்** : 1. ஓர்செய்யுள் 2. கத்திகை
**யுத்தம்** : 1. நியாயம் 2. கூடல் 3. உசிதம் 4. ஞாட்பு
**நித்தன்** : 1. கடவுள் 2. சாது 3. நீறணிகடவுள்
**ஒத்தல்** : 1. பொருந்தல் 2. மத்தி 3. ஒத்துதல் 4. ஒப்பு

*முத்தகம்* -- தனிநின்று முடியுஞ் செய்யுள், கருக்குவாளிமரம்
*யுத்தம்* -- நியாயம், கூடல், உசிதம், போர்
*நித்தன்* -- கடவுள், அருகன், சிவன்
*ஒத்தல்* -- பொருந்தல், நடு, ஒத்துதல், சமம்

197. **மத்தகம்** சென்னி, பொல்லா நிலம், நுதல் வகுக்கும் முப்பேர்;
**முத்தை** மிக்கு அறிவிலாளே, முடலையே, கவளம் என்ப;
**சித்தி** எண்சித்தி, முத்தி, சித்தித்தல் முப்பேர் செப்பும்;
**மெத்தை** அட்டாளம், சேக்கை; **விதை** என்ப வித்தே, பீடு ஆம்.

**மத்தகம்** : 1. சென்னி 2. பொல்லாநிலம் 3. நுதல்
**முத்தை** : 1. மிக்கஅறிவிலாள் 2. முடலை 3. கவளம்
**சித்தி** : 1. எண்சித்தி 2. முத்தி 3. சித்தித்தல்
**மெத்தை** : 1. அட்டாளம் 2. சேக்கை
**விதை** : 1. வித்து 2. பீடு

***மத்தகம்*** -- தலை, சகதி, நெற்றி
***முத்தை*** -- மிகவுந்தெரிவிலாள், திரட்சி, கவளம்
***சித்தி*** -- அட்டசித்தி, மோக்கம், சித்தியாதல்
***மெத்தை*** -- மேல்வீடு, மெத்தை
***விதை*** -- வித்து, பெருமை

198. **கத்தியம்** துகில், நல்லாடை, இலக்கணக் கவிபோல் பாடல் ;
**பத்தியம்** கடுமரத்தோடு, ஆந்திரப்பாட்டு, இதப்பேர்;
**மத்தியம்** இடையே, நாப்பண்; மது என வகுக்கற்பாலாம்.
குத்திரம் அகாதம், ஒல்லை, கோத்திரை முப்பேர் கூறும்.

**கத்தியம்** : 1. துகில் 2. நல்லாடை 3. இலக்கணக்கவிபோல் பாடல்
**பத்தியம்** : 1. கடுமரம் 2. ஆந்திரப்பாட்டு 3. இதம்
**மத்தியம்** : 1. இடை 2. நாப்பண் 3. மது
**குத்திரம்** : 1. அகாதம் 2. ஒல்லை 3. கோத்திரை

***கத்தியம்*** -- சீலை, நல்லாடை, இலக்கணமின்றியிலக்கணக்கவி போற் சொல்வது
***பத்தியம்*** -- கடுமரம், ஆந்திரக்கவி, இதம்
***மத்தியம்*** -- இடை, நடு, மது
***குத்திரம்*** -- வஞ்சகம், சீக்கிரம், மலை

199. **துத்தம்** மத்திமம், நாய், கீரம், அகடு, கண்மருந்தும் சொல்லும்;
**புத்தகம்** கோசம் என்ப; சித்திரப்படமும் போற்றும்.
**வித்தகம்** அகலம், ஞானம், விம்மிதம் விளம்பும் முப்பேர்;
**பித்த**மே மயக்கம், கூத்தின் விகற்பம், முப்பிணியின் ஒன்று ஆம்.

**துத்தம்** : 1. மத்திமம் 2. நாய் 3. கீரம் 4. அகடு 5. கண்மருந்து
**புத்தகம்** : 1. கோசம் 2. சித்திரப்படம்
**வித்தகம்** : 1. அகலம் 2. ஞானம் 3. விம்மிதம்
**பித்தம்** : 1. மயக்கம் 2. கூத்தின் விகற்பம் 3. முப்பிணியில் ஒன்று

***துத்தம்*** -- சமனிசை, நாய், பால், வயிறு, கண்மருந்து
***புத்தகம்*** -- எழுதும்புத்தகம், சித்திரப்படம்
***வித்தகம்*** -- விஸ்தாரம், ஞானம், அதிசயம்
***பித்தம்*** -- மயக்கம், கூத்தின் விகற்பம், முப்பிணியுளொன்று

200. **ஆதன்** ஆருயிரே, பேதை, அருகனோடு, ஆசான் என்ப;
**வாதம்** காற்று, இரதவாதம், வாது, முப்பிணியுள் ஒன்று ஆம்;
**ஏத**மே துன்பம், கேடு, குற்றமும் இயம்பும் நாமம்;
**சூதன்** பப்புவன், தேர்ப்பாகன்; சூதனும் பாணனும் பேர்.

**ஆதன்** : 1. உயிர் 2. பேதை 3. அருகன் 4. ஆசான்
**வாதம்** : 1. காற்று 2. இரதவாதம் 3. வாது 4. முப்பிணியுள் ஒன்று
**ஏதம்** : 1. துன்பம் 2. கேடு 3. குற்றம்
**சூதன்** : 1. பப்புவன் 2. தேர்ப்பாகன் 3. சூதன் 4. பாணன்

***ஆதன்*** -- உயிர், அறிவிலான், அருகதேவன், குரு
***வாதம்*** -- காற்று, இரசவாதம், வாக்குவாதம், வாதநோய்
***ஏதம்*** -- துன்பம், கேடு, குற்றம்
***சூதன்*** -- புகழ்வோன், தேர்ச்சாரதி, சூதாடுவோன், பாணன்

201. **சூதம்** பாரதம், எகின், மா, சூது, அளி, பாரிசாதம்;
**சூத்கம்** சூசம், தோற்றம், தோகையர்பூப்பு, தொன்மை;
**பூதம்** ஆல், சுசி, பேய், பாகு, ஐம்பூதம், செல்காலம், சீவன்;
**மாதவம்** தவம், வைகாசி, வசந்தம், கள், இனிமை ஆமே.

**சூதம்** : 1. பாரதம் 2. எகின் 3. மா 4. சூது 5. அளி 6. பாரிசாதம்
**சூதகம்** : 1. சூசம் 2. தோற்றம் 3. தோகையர்பூப்பு 4. தொன்மை
**பூதம்** : 1. ஆல் 2. சுசி 3. பேய் 4. பாகு 5. ஐம்பூதம்
6. செல்காலம் 7. சீவன்
**மாதவம்** : 1. தவம் 2. வைகாசி 3. வசந்தம் 4. கள் 5. இனிமை

***சூதம்*** -- இரசம், புளிமா, மாமரம், சூது, வண்டு, பவழமல்லிகை
***சூதகம்*** -- அசுத்தம், பிறப்பு, மகளிர் சூதகம், பழைமை
***பூதம்*** -- ஆலமரம், சுத்தம், பைசாசம், பரணிநட்சத்திரம், பஞ்ச பூதம், இறந்தகாலம், சீவன்
***மாதவம்*** -- தவம், வைகாசிமாதம், வசந்தகாலம், மது, இனிமை

202. **ஆதரம்** சிவப்பு, ஊர், ஆசை; **ஆதாரம்** தான் மெய், மாரி;
**தூதுணம்** புறவு, சிந்தன்; **சுதம்** என்ப முறைமை, கேடு ஆம்;
**ஆதுரன்** நோய் உற்றோனோடு, அவாவினன் எனவும் ஆகும்;
**தாதா** ஈன்றோன், தியாகி, தாமரைக் கிழவன் முப்பேர்.

**ஆதரம்** : 1. சிவப்பு 2. ஊர் 3. ஆசை
**ஆதாரம்** : 1. மெய் 2. மாரி
**தூதுணம்** : 1. புறவு 2. சிந்தன்
**சுதம்** : 1. முறைமை 2. கேடு

**ஆதுரன்** : 1. நோய் உற்றோன் 2. அவாவினன்
**தாதா** : 1. ஈன்றோன் 2. தியாகி 3. தாமரைக் கிழவன்

***ஆதரம்*** -- சிவப்பு, ஊர், விருப்பு
***ஆதாரம்*** -- உடல், மழை
***தூதுணம்*** -- புறா, தூக்கணங்குருவி
***சுதம்*** -- முறைமை, கேடு
***ஆதுரன்*** -- நோயுற்றோன், விருப்புற்றோன்
***தாதா*** -- அப்பன், ஈகையாளன், பிரமன்

203. **ஓதிமம்** படகம், அன்னம், ஓங்கல் என்று ஓதும் முப்பேர்;
**போதமே** பஃறி, ஞானம் போற்றிய பரணி நாள் ஆம்;
**பாதிரி** பாடலம், வேய்; **பதாதியே** படை, காலாள் ஆம்,
**ஏதி** ஆயுதம், வாள் என்ப; **இதரர்** அந்நியர், கீழ்மக்கள்

**ஓதிமம்** : 1. படகம் 2. அன்னம் 3. ஓங்கல்
**போதம்** : 1. பஃறி 2. ஞானம் 3. பரணிநாள்
**பாதிரி** : 1. பாடலம் 2. வேய்
**பதாதி** : 1. படை 2. காலாள்
**ஏதி** : 1. ஆயுதம் 2. வாள்
**இதரர்** : 1. அந்நியர் 2. கீழ்மக்கள்

***ஓதிமம்*** -- கவரிமாமிருகம், அன்னம், மலை
***போதம்*** -- மரக்கலம், ஞானம், பரணிநட்சத்திரம்
***பாதிரி*** -- பாதிரிமரம், மூங்கில்
***பதாதி*** -- சேனை, காலாட்சேனை
***ஏதி*** -- ஆயுதப்பொது, வாளாயுதம்
***இதரர்*** -- அந்நியர், கீழ்மக்கள்

204. **வீதி** கால், ஒழுங்கு, தாரை; கடைவீதி, தெருவும் என்ப;
**பூதியம்** உடல், புவிப் பேர்; **பூதாரன்** வேந்தன், மால் ஆம்;
**மாதிரம்** திசை, ஆகாயம், வரை, புவியொடு, மாதங்கம்;
**கேது** ஓர்கோள், சின்னம், கேதனம் கிளத்தும் முப்பேர்.

**வீதி** : 1. கால் 2. ஒழுங்கு 3. தாரை 4. கடைவீதி 5. தெரு
**பூதியம்** : 1. உடல் 2. புவி
**பூதாரன்** : 1. வேந்தன் 2. மால்
**மாதிரம்** : 1. திசை 2. ஆகாயம் 3. வரை 4. புவி 5. மாதங்கம்
**கேது** : 1. ஓர்கோள் 2. சின்னம் 3. கேதனம்

***வீதி*** -- வழி, ஒழுங்கு, நேரோடல், கடைவீதி, தெரு
***பூதியம்*** -- உடம்பு, பூமி
***பூதாரன்*** -- அரசன், திருமால்
***மாதிரம்*** -- திக்கு, ஆகாயம், மலை, பூமி, யானை
***கேது*** -- கேதுவென்னுங்கோள், அடையாளம், விருதுக்கொடி

205. **சீதை**யே பொன்னாங் காணி,
படைச்சால், சீராமன் தேவி;
**மேதை** தோல், தசை, மால், மிக்கோன்,
மேன்மை, கள், அறிவு, நாடி;
**கோதை** நெற்சுமை, கைக்கட்டி, குழல்,
தார், காற்று, அணி, பெண், சேரன்;
**ஓதை**யே ஒலி, உரற்றல்
உவளகம், பதணமும் பேர்.

**சீதை** : 1. பொன்னாங்காணி 2. படைச்சால் 3. சீராமன்தேவி
**மேதை** : 1. தோல் 2. தசை 3. மால் 4. மிக்கோன் 5. மேன்மை 6. கள் 7. அறிவு 8. நாடி
**கோதை** : 1. நெற்சுமை 2. கைக்கட்டி 3. குழல் 4. தார் 5. காற்று 6. அணி 7. பெண் 8. சேரன்
**ஓதை** : 1. ஒலி 2. உரற்றல் 3. உவளகம் 4. பதணம்

***சீதை*** -- பொன்னாங்காணி, உழவுசால், சீதாதேவி
***மேதை*** -- தோல், தசை, புதன், அறிவாளி, மேம்பாடு, மது, அறிவு, நரம்பு
***கோதை*** -- நெற்சுமை, முன்கைத்தோற்கட்டி, பெண்மயிர், மாலை, காற்று, ஒழுங்கு, பெண், சேரன்
***ஓதை*** -- ஒலி, பேரொலி, மதில், மதிலுண்மேடை

206. **பீத**மே கசற்பம், சாத்து, பிங்கலம், பொன்மை நாற்பேர்;
**பேதை** ஓர்பருவம், மூடன், பெண, தரித்திரன், கள், பேடி;
**வாதுவர்** யானைப் பாகர், வயப் பரிமா வடிப்போர்;
**மூதுரை** ஆதிரைப் பேர், முக்கணன் பேரும் ஆமே.

**பீதம்** : 1. கசற்பம் 2. சாந்து 3. பிங்கலம் 4. பொன்மை
**பேதை** : 1. ஓர்பருவம் 2. மூடன் 3. பெண் 4. தரித்திரன் 5. கள் 6. பேடி
**வாதுவர்** : 1. யானைப்பாகர் 2. பரிமாவடிப்போர்
**மூதுரை** : 1. ஆதிரை 2. முக்கணன்

***பீதம்*** -- மஞ்சள், களபம், பொன், பொன்னிறம்
***பேதை*** -- பேதைப்பருவம், அறிவில்லான், பெண், வறிஞன், மது, அலி

*வாதுவர்* -- யானைப்பாகர், குதிரைப்பாகர்
*மூதுரை* -- திருவாதிரைநட்சத்திரம், சிவன்

207. **தாதியே** அடிமை, கைத்தாய், தருமநாள் முப்பேர் சாற்றும்;
**போதுதான்** முகிழம், காலம், புட்பமும் செப்பும் முப்பேர்;
**நாதனே** கடவுள், ஈசன், நரபதி, குரு, நிச்சிந்தன்;
**வீதலே** கெடுதல், சாவு; மிடிமையும் விளம்பும் முப்பேர்.

**தாதி** : 1. அடிமை 2. கைத்தாய் 3. தருமநாள்
**போது** : 1. முகிழம் 2. காலம் 3. புட்பம்
**நாதன்** : 1. கடவுள் 2. ஈசன் 3. நரபதி 4. குரு 5. நிச்சிந்தன்
**வீதல்** : 1. கெடுதல் 2. சாவு 3. மிடிமை

*தாதி* -- அடிமை, செவிலித்தாய், பரணிநட்சத்திரம்
*போது* -- மலரும்பருவத்தரும்பு, காலம், புட்பம்
*நாதன்* -- கடவுள், சிவன், அரசன், குரு, அருகன்
*வீதல்* -- கெடுதல், சாவு, தரித்திரம்

208. **பீதகம்** சாந்து, மூலகந்தம், பிங்கலம், பசப்பு ஆம்;
**ஓதம்** ஆர்கலி; தரங்கம், உற்ற நீர்ப்பெருக்கு முப்பேர்;
**காதம்** நாற்சதுரக் கூவம், காவதம், கொலை, கள், என்ப;
**பாதவம்** விடபி, கொல்லை, பருப்பதம் உரைக்கும் முப்பேர்.

**பீதகம்** : 1. சாந்து 2. மூலகந்தம் 3. பிங்கலம் 4. பசப்பு
**ஓதம்** : 1. ஆர்கலி 2. தரங்கம் 3. நீர்ப்பெருக்கு
**காதம்** : 1. நாற்சதுரக்கூவம் 2. காவதம் 3. கொலை 4. கள்
**பாதவம்** : 1. விடபி 2. கொல்லை 3. பருப்பதம்

*பீதகம்* -- சாந்து, வெட்டிவேர், பொன், பொன்னிறம்
*ஓதம்* -- கடல், கடற்றிரை, வெள்ளம்
*காதம்* -- நாற்சதுரத்துரவு, காததூரம், கொலை, மது
*பாதவம்* -- மரப்பொது, கொல்லை, மலை

209. **ஆதல்** ஆகுதல், நுணுக்கம், கல்விநூல், நடனம், ஆய்தல்;
**காதலி** தனையை, தோழி; காந்தையும் முப்பேர் காட்டும்.
**ஊதலே** பொருமல், ஆரவாரமோடு, ஊதை என்ப;
**போதலே** அகலல், நீளல், போகுதல், வரல் என்று ஆமே.

**ஆதல்** : 1. ஆகுதல் 2. நுணுக்கம் 3. கல்விநூல் 4. நடனம் 5. ஆய்தல்
**காதலி** : 1. தனையை 2. தோழி 3. காந்தை

**ஊதல்** : 1. பொருமல் 2. ஆரவாரம் 3. ஊதை
**போதல்** : 1. அகலல் 2. நீளல் 3. போகுதல் 4. வரல்

***ஆதல்*** -- ஆகுதல், நுணுக்கம், கல்விநூல், கூத்து, தெரிதல்
***காதலி*** -- மகள், தோழி, மனைவி
***ஊதல்*** -- வீங்கல், ஆரவாரம், காற்று
***போதல்*** -- அகலுதல், நீளுதல், போகுதல், வருதல்

210. **சாதகம்** பிறப்பு, கூளி, சனனப் பத்திரிகை, கம்புள்;
**சேதகம்** தொள்ளி, செம்மை; **சித்திரன்** தச்சன், ஓவன்;
**காதகம்** கொலை, வருத்தல்; **காதலே** ஆசை, கோறல்;
**பூதவம்** ககுபம், ஆல் ஆம்; **போதி** பிப்பிலம், வெற்பு ஆமே.

**சாதகம்** : 1. பிறப்பு 2. கூளி 3. சனனப்பத்திரிகை 4. கம்புள்
**சேதகம்** : 1. தொள்ளி 2. செம்மை
**சித்திரன்** 1. தச்சன் 2. ஓவன்
**காதகம்** : 1. கொலை 2. வருத்தல்
**காதல்** : 1. ஆசை 2. கோறல்
**பூதவம்** : 1. ககுபம் 2. ஆல்
**போதி** : 1. பிப்பிலம் 2. வெற்பு

***சாதகம்*** -- சனனம், பிசாசம், சனனம் வரையும் பத்திரிகை, வானம்பாடி
***சேதகம்*** -- சேறு, சிவப்பு
***சித்திரன்*** -- மரவினையாளன், சித்திரகாரன்
***காதகம்*** -- கொலை, வருத்துதல்
***காதல்*** -- வேட்கை, கொல்லல்
***பூதவம்*** -- மருதமரம், ஆலமரம்
***போதி*** -- அரசமரம், மலை

211. **சாதமே** பிறப்பு, பூதம், சரதம், சோறு, எனவும் ஆகும்;
**வேதன்** பீதகனே, வேதா, வேதாந்தன் விளம்பும் நாமம்;
**போதன்** அற்புதனே, வேதன், பொன்எயில்கோன் முப்பேர் ஆம்;
**ஆதபம்** ஒளியே, வெய்யில்; ஆதபத்திரமும் ஆமே.

**சாதம்** : 1. பிறப்பு 2. பூதம் 3. சரதம் 4. சோறு
**வேதன்** : 1. பீதகன் 2. வேதா 3. வேதாந்தன்
**போதன்** : 1. அற்புதன் 2. வேதன் 3. பொன்எயில்கோன்
**ஆதபம்** : 1. ஒளி 2. வெய்யில் 3. ஆதபத்திரம்

***சாதம்*** -- உற்பத்தி, பூதம், உண்மை, சோறு
***வேதன்*** -- வியாழன், பிரமன், கடவுள்

*போதன்* -- ஞானமுள்ளோன், பிரமன், அருகன்
*ஆதபம்* -- ஒளி, வெய்யில், குடை

212. **மாதவன்** வசந்தன், மால் ஆம்; **மாதர்** ஏர், மகளிர், ஆசை;
**ஆதனம்** துகில், விருப்பு ஆம்; **ஆதவன்** மறையோன், பானு;
**கூதிர்** ஓர்பருவம், காற்று; குளிர்பனிக் காற்றும் ஆகும்.
**கீத**மே மிஞிறு, பாணி, கிளர் நெட்டில் கிளந்தும் முப்பேர்.

**மாதவன்** : 1. வசந்தன் 2. மால்
**மாதர்** : 1. ஏர் 2. மகளிர் 3. ஆசை
**ஆதனம்** : 1. துகில் 2. விருப்பு
**ஆதவன்** : 1. மறையோன் 2. பானு
**கூதிர்** : 1. ஓர்பருவம் 2. காற்று 3. பனிக்காற்று
**கீதம்** : 1. மிஞிறு 2. பாணி 3. நெட்டில்

*மாதவன்* -- வசந்தன், திருமால்
*மாதர்* -- அழகு, பெண்கள், ஆசை
*ஆதனம்* -- புடைவை, பீடம்
*ஆதவன்* -- பார்ப்பான், சூரியன்
*கூதிர்* -- ஆறுபருவத்தொன்று, காற்று, குளிர்காற்று
*கீதம்* -- வண்டு, இசைப்பாட்டு, மூங்கில்

213. **வேதி** வேதிகையே, வேள்விக்குண்டம், வேணகை, வல்லாரை;
**வாதி**யே வாதம் செய்வோன், வகுக்கும் ஓர் கவியும் ஆகும்;
**பாதி**யே பால், வாரப்பேர்; **பாதை**யே கிறி, நாவாய் ஆம்;
**சோதினி** நரல், மாறு என்ப; **தூதுவன்** புதனே, தூதன்.

**வேதி** : 1. வேதிகை 2. வேள்விக்குண்டம் 3. வேணகை 4. வல்லாரை
**வாதி** : 1. வாதம் செய்வோன் 2. ஓர் கவி
**பாதி** : 1. பால் 2. வாரம்
**பாதை** : 1. கிறி 2. நாவாய்
**சோதினி** : 1. நரல் 2. மாறு
**தூதுவன்** : 1. புதன் 2. தூதன்

*வேதி* -- திண்ணை, ஓமகுண்டம், மதில், கேட்டைநாள்
*வாதி* -- வாதஞ்செய்பவன், நாற்கவியுளொருவன்
*பாதி* -- அரை, பங்கு
*பாதை* -- வழி, மரக்கலம்
*சோதினி* -- செத்தை, துடைப்பம்
*தூதுவன்* -- புதன், ஒற்றன்

214. **சூது** வஞ்சனையே, ஆடுஞ்சூது, தோடகமும் ஆகும்;
**சேது** செய்கரை, சிவப்பே; **சேதாரம்** வெட்சி, தேமா;
**சாது** சற்குணன், சினன் பேர்; **சதுமுகன்** விதி, அசோகன்;
**காது** மாரணம், அள் ஆகும்; **கைதை**யே கழனி, கண்டல்.

**சூது** : 1. வஞ்சனை 2. ஆடுஞ்சூது 3. தோடகம்
**சேது** : 1. செய்கரை 2. சிவப்பு
**சேதாரம்** : 1. வெட்சி 2. தேமா
**சாது** : 1. சற்குணன் 2. சினன்
**சதுமுகன்** : 1. விதி 2. அசோகன்
**காது** : 1. மாரணம் 2. அள்
**கைதை** : 1. கழனி 2. கண்டல்.

***சூது*** -- வஞ்சனை, ஆடுஞ்சூது, தாமரை
*சேது* -- செய்கரை, சிவப்பு
*சேதாரம்* -- வெட்சி, தேமா
***சாது*** -- சற்குணத்தோன், அருகன்
***சதுமுகன்*** -- பிரமன், அருகன்
***காது*** -- கொலை, செவி
***கைதை*** -- வயல், தாழை

215. **கூத்த**னே உயிர், நடன் பேர்; **குதம்** குசம், குதமும் ஆகும்;
நேத்திரம் கண், பட்டு ஆடை; **நீதி**யே நியாயம், உண்மை;
**பாத்தி**யே சிறுசெய், இல்லம், பகுத்திடல் வகுத்த முப்பேர்;
**பாத்து** என்ப கஞ்சி, சோறு; பாதியும், பங்கும் ஆமே.

**கூத்தன்** : 1. உயிர் 2. நடன்
**குதம்** : 1. குசம் 2. குதம்
**நேத்திரம்** : 1. கண் 2. பட்டு ஆடை
**நீதி** : 1. நியாயம் 2. உண்மை
**பாத்தி** : 1. சிறுசெய் 2. இல்லம் 3. பகுத்திடல்
**பாத்து** : 1. கஞ்சி 2. சோறு 3. பாதி 4. பங்கு

***கூத்தன்*** -- சீவன், நடனன்
*குதம்* -- தருப்பை, குதம்
*நேத்திரம்* -- கண், பட்டுச்சீலை
*நீதி* -- நியாயம், சத்தியம்
*பாத்தி* -- சிறுசெய், வீடு, பங்கு
***பாத்து*** -- கஞ்சி, சோறு, பாதி, பங்கு

216. நீத்தலே துறவு, ஒழுக்கம், நீங்குதல், பிரிதல் நாற்பேர்;
**பூத்தல்** அஞ்சிதம், பயத்தல்; புட்பித்தல் எனவும் செப்பும்.

**சாத்த**னே காரி, ஐயன், தண்டிப்போன், சாதரூபி;
**கோத்திரம்** புடவி, சையம், குலம் என முப்பேர் கூறும்.

**நீத்தல்** : 1. துறவு 2. ஒழுக்கம் 3. நீங்குதல் 4. பிரிதல்
**பூத்தல்** : 1. அஞ்சிதம் 2. பயத்தல் 3. புட்பித்தல்
**சாத்தன்** : 1. காரி 2. ஐயன் 3. தண்டிப்போன் 4. சாதரூபி
**கோத்திரம்** : 1. புடவி 2. சையம் 3. குலம்

***நீத்தல்*** -- துறவு, ஒழுக்கம், நீங்கல், பிரிதல்
***பூத்தல்*** -- உண்டாதல், உண்டாக்கல், புட்பித்தல்
***சாத்தன்*** -- வயிரவன், ஐயனார், தண்டிப்போன், அருகன்
***கோத்திரம்*** -- பூமி, மலை, குலம்

217. **பாத்திரம்** தளிகை, மண்டை, தகுதி, பாத்திர பதப்பேர்;
**வேத்திரம்** பதரி, சூரல், விடுசரம், விளம்பும் நாமம்;
**காத்திரி** நகுலம், எஃகு; **கைத்து** என்ப நிதி, வெறுப்பு ஆம்;
**சூத்திரம்** இயந்திரம், நூல்; பஞ்சின்நூல் எனவும் சொல்லும்.

**பாத்திரம்** : 1. தளிகை 2. மண்டை 3. தகுதி 4. பாத்திரபதம்
**வேத்திரம்** : 1. பதரி 2. சூரல் 3. சரம்
**காத்திரி** : 1. நகுலம் 2. எஃகு
**கைத்து** : 1. நிதி 2. வெறுப்பு
**சூத்திரம்** : 1. இயந்திரம் 2. நூல் 3. பஞ்சின்நூல்

***பாத்திரம்*** -- உண்கலம், இரப்போர்கலம், தகுதி, புரட்டாசி மாதம்
***வேத்திரம்*** -- இலந்தை, பிரம்பு, அம்பு
***காத்திரி*** -- கீரி, படைக்கலம்
***கைத்து*** -- பொன், வெறுப்பு
***சூத்திரம்*** -- இயந்திரம், நூல், பஞ்சினூல்

218. **மாத்திரை** குளிகை, கால நுட்பமே, அளவு, வல்லை;
**சீத்தை** பூரியர், சிதம்பு ஆம்; **சீத்தல்** தூய்தாக்கல், நீக்கல்;
**ஒத்து** இயல், மறை என்று ஆகும்; **ஒதுக்கமே** நடை, ஒதுங்கல்;
**சேத்து** மண்டுதலே, செம்மை, தியானமும் முப்பேர் செப்பும்.

**மாத்திரை** : 1. குளிகை 2. காலநுட்பம் 3. அளவு 4. வல்லை
**சீத்தை** : 1. பூரியர் 2. சிதம்பு
**சீத்தல்** : 1. தூய்தாக்கல் 2. நீக்கல்
**ஒத்து** : 1. இயல் 2. மறை
**ஒதுக்கம்** : 1. நடை 2. ஒதுங்கல்
**சேத்து** : 1. மண்டுதல் 2. செம்மை 3. தியானம்

*மாத்திரை* -- குளிகை, காலநுட்பம், அளவு, காலவிரைவு
*சீத்தை* -- கீழ்மக்கள், பதனழிவு
*சீத்தல்* -- செப்பஞ்செய்தல், நீக்குதல்
*ஓத்து* -- ஓரினப்பொருளை ஒருவழி வைத்திருக்கும் இயல், வேதம்
*ஓதுக்கம்* -- நடை, ஒதுக்கம்
*சேத்து* -- நெருக்கம், சிவப்பு, கருத்து

219. **சதி** உமை, அடிசில், வட்டம், தாளவொத்து, அகாதமோடு,
துதி பெறு கற்பின் மிக்காள், உரோகிணி சொல்லும் ஏழ்பேர்;
**பதி** மனை, இடம், ஊர், கேள்வன், பார்த்திபன், நகரம், மூத்தோன்,
மதி புனை சடிலன், ஆசான், மருதத்து ஊர், அதிபனும் பேர்.

**சதி** : 1. உமை 2. அடிசில் 3. வட்டம் 4. தாளஒத்து 5. அகாதம் 6. கற்பின்மிக்காள் 7. உரோகிணி
**பதி** : 1. மனை 2. இடம் 3. ஊர் 4. கேள்வன் 5. பார்த்திபன் 6. நகரம் 7. மூத்தோன் 8. மதிபுனை சடிலன் 9. ஆசான் 10. மருதத்துஊர் 11. அதிபன்

*சதி* -- பார்வதி, சோறு, வட்டம், தாளவொத்து, வஞ்சனை, கற்புடையாள், உரோகிணிநட்சத்திரம்
*பதி* -- வீடு, இடம், ஊர், கொழுநன், அரசன், நகரம், மூத்தோன், சிவன், குரு, மருதநிலத்தூர், எப்பொருட்குமிறைவன்.

220. **அத்தம்** சொற்பொருள், காடு, ஓர்நாள், அருநெறி, முகுரம், பாதி,
கைத்தலம், வழி, காங்கேயம் கருதிய நாமம் ஒன்பான்;
**நத்தமே** இருள், ஊர், மூக்கு, நாகு, யாமினி, நள், ஆக்கம்,
நத்தை, நத்தமாலமோடு நாட்டிய ஒன்பான் பேரே.

**அத்தம்** : 1. சொற்பொருள் 2. காடு 3. ஓர்நாள் 4. அருநெறி 5. முகுரம் 6. பாதி 7. கைத்தலம் 8. வழி 9. காங்கேயம்
**நத்தம்** : 1. இருள் 2. ஊர் 3. மூக்கு 4. நாகு 5. யாமினி 6. நள் 7. ஆக்கம் 8. நத்தை 9. நத்தமாலம்

*அத்தம்* -- அருத்தம், காடு, அத்தநட்சத்திரம், அருநெறி, கண்ணாடி, பாதி, கை, வழி, பொன்
*நத்தம்* -- இருள், ஊர், மூக்கு, சங்கு, இராத்திரி, நடு, ஆக்கம், நத்தை, புன்கமரம்

221. **ஆதி** மால், ஈசன், வேதன், அருகன், சாக்கியன், கோ, நாதன்,
சோதியம் கதிரோன், தொன்மை, தொடக்கமும் ஈர் ஐம்பேர் ஆம்;

ஓதியே ஞானம், கல்வி, ஒந்தி, மார்ச்சாலம், துற்று
போதி, பெண் மயிர், தெருட்சி போற்றும் நாலிருபேர் ஆமே.

**ஆதி** : 1. மால் 2. ஈசன் 3. வேதன் 4. அருகன் 5. சாக்கியன் 6. கோ 7. நாதன் 8. கதிரோன் 9. தொன்மை 10. தொடக்கம்
**ஓதி** : 1. ஞானம் 2. கல்வி 3. ஒந்தி 4. மார்ச்சாலம் 5. துற்று 6. போதி 7. பெண்மயிர் 8. தெருட்சி

***ஆதி*** -- திருமால், அரன், பிரமன், அருகதேவன், புத்தன், அரசன், எப்பொருட்குமிறைவன், சூரியன், பழமை, முதல்
***ஓதி*** -- ஞானம், கல்வி, ஒந்தி, பூனை, நெருக்கம், மலை, பெண்மயிர், அறிவு

222. **சோதி** மால், அருகன், ஈசன், சுடர், விளக்கு, ஓர்நாள், அங்கி
நீதியங் கடவுள், விண்மீன், கதிரவன், நிகழ்த்தும் பத்து ஆம்
**பூதி**யே கொடுமை, சாம்பர், புழுதி, துர்க்கந்தம், செல்வம்
தீதுறுபவர்க்கம், நீறு, வள்ளூரம் எண்பேர் செப்பும்.

**சோதி** : 1. மால் 2. அருகன் 3. ஈசன் 4. சுடர் 5. விளக்கு 6. ஓர்நாள் 7. அங்கி 8, கடவுள் 9. விண்மீன் 10. கதிரவன்
**பூதி** : 1. கொடுமை 2. சாம்பர் 3. புழுதி 4. துர்க்கந்தம் 5. செல்வம் 6. பவர்க்கம் 7. நீறு 8. வள்ளூரம்

***சோதி*** -- விட்டுணு, அருகதேவன், சிவன், ஒளி, தீபம், சோதி நட்சத்திரம், தீ, கடவுள், விண்மீன், சூரியன்
***பூதி*** -- கொடுமை, சாம்பர், புழுதி, துர்க்கந்தம், செல்வம், நரகம், திருநீறு, புலால்

223. **போத்து** நீர்ச்சாதி ஆணும், புகன்ற பல் விலங்குள் ஆணும்,
மாத்துயில் பாழி, குக்கில், மரக்கன்றும் வகுக்கும் ஐம்பேர்;
**காத்திரம்** களிற்றின் முன்கால், கனம், உடல், சீற்றத்தோடு,
காத்திரி, பருமம், அங்கம், கட்செவி உடன் எண்பேரே.

**போத்து** : 1. நீர்ச்சாதி ஆண் 2. பல் விலங்கின் ஆண் 3. மாத்துயில் பாழி 4. குக்கில் 5. மரக்கன்று
**காத்திரம்** : 1. களிற்றின் முன்கால் 2. கனம் 3. உடல் 4. சீற்றம் 5. காத்திரி 6. பருமம் 7. அங்கம் 8. கட்செவி.

***போத்து*** -- நீர்வாழ்சாதியினாண், எருமைபசுமுதலிய விலங்குகளினாண், விலங்குதுயிலிடம், செம்போத்து, மரக்கன்று
***காத்திரம்*** -- யானையின்முன்கால், கனம், சரீரம், கோபம், கீரி, பருமம், உறுப்பு, பாம்பு

224. **பதம்** அழகு, அறுகு, காலம், பட்டி, தாள், வரிசை, மாற்றம்,
இதமுறு அடிசில், உண்டல், இலாஞ்சனை, கடிகை, சேமம்,
விதமுறு இயல், கொக்கு, இன்பம், மெல்லாடை, அமைதல், ஈரம்,
பதவையே, குழைவு என்னப் பகர் பெயர் இரு பான் ஆமே.

**பதம்** : 1. அழகு 2. அறுகு 3. காலம் 4. பட்டி 5. தாள் 6. வரிசை 7. மாற்றம் 8. அடிசில் 9. உண்டல் 10. இலாஞ்சனை 11. கடிகை 12. சேமம் 13. இயல் 14. கொக்கு 15. இன்பம் 16. மெல்லாடை 17. அமைதல் 18. ஈரம் 19. பதவை 20. குழைவு

***பதம்*** -- அழகு, அறுகு, காலம், இடம், பாதம், வரிசை, சொல், சோறு, உண்டல், அடையாளம், நாழிகை, சேமம், நடை, கொக்கு, இன்பம், புடைவை, அமைதல், ஈரம், வழி, குழைவு,

225. **தாது** பொன்னாதியேழும், சடமுறும் இரதமாதி
ஓதிய ஏழும், மண்ணே ஆதியா உற்ற ஐந்து
பூதமும், நரம்பும், காவிக்கல்லும், பூந்தாதி னோடு,
தாது மாதனையும் என்னச் சாற்றிய எழுபேர் ஆமே.

**தாது** : 1. பொன்னாதி யேழு 2. இரதமாதி ஓதிய ஏழு 3. மண்ணே ஆதியா உற்ற ஐந்து பூதம் 4. நரம்பு 5. காவிக்கல் 6. பூந்தாது 7. தாது மாதளை

***தாது*** -- பொன்னாதியேழு, இரதமாதியேழு, பிருதுவியாதியைம் பூதம், நரம்பு, காவிக்கல், பூஞ்சுண்ணம், தாதுமாதளை

**(தகர எதுகை முற்றிற்று)**

## நகர எதுகை

226. **இந்தனம்** மிசையே, காட்டம், எரிக்கனல், நறும்புகைப்பேர்;
**சந்தமே** நிறம், வனப்பு, சட்டகம், கவிதை, சாந்தம்;
**நந்தலே** கெடுதல் நிந்தை, ஆக்கமும் நாட்டும் முப்பேர்;
**சிந்தகம்** எகினமோடு, சிதகனும் இருபேர் செப்பும்.

**இந்தனம்** : 1. மிசை 2. காட்டம் 3. எரிக்கனல் 4. நறும்புகை
**சந்தம்** : 1. நிறம் 2. வனப்பு 3. சட்டகம் 4. கவிதை 5. சாந்தம்
**நந்தல்** : 1. கெடுதல் 2. நிந்தை 3. ஆக்கம்
**சிந்தகம்** : 1. எகினம் 2. சிதகன்

***இந்தனம்*** -- மேல், விறகு, சுவாலை, பரிமளப்புகை
***சந்தம்*** -- சாயல், அழகு, வடிவு, பாட்டு, சந்தனம்
***நந்தல்*** -- கேடு, நிந்தை, செல்வம்
***சிந்தகம்*** -- புளியமரம், தூக்கணங்குருவி

227. **அந்தில்** ஆங்கு, அசை, இடப்பேர்; **அநித்தியம்** பொய், அற்காமை;
**சந்தியே** அந்தி, வேணு; சதுக்கமோடு, இசைப்பும் அப்பேர்.
**அந்தமே** முடிவு, நானம், அழகு, பஞ்சதையும் ஆகும்
**சுந்தரி** உமை, பெண், துர்க்கை, சுண்டன், இந்திராணியும் பேர்.

**அந்தில்** : 1. ஆங்கு 2. அசை 3. இடம்
**அநித்தியம்** : 1. பொய் 2. அற்காமை
**சந்தி** : 1. அந்தி 2. வேணு 3. சதுக்கம் 4. இசைப்பு
**அந்தம்** : 1. முடிவு 2. நானம் 3. அழகு 4. பஞ்சதை
**சுந்தரி** : 1. உமை 2. பெண் 3. துர்க்கை 4. சுண்டன் 5. இந்திராணி

***அந்தில்*** -- ஆங்கு, அசைச்சொல், இடம்
***அநித்தியம்*** -- பொய், நிலையின்மை
***சந்தி*** -- மாலைநேரம், மூங்கில், நாற்றெருக்கூடுமிடம், இசைப்பு
***அந்தம்*** -- முடிவு, கத்தூரி, அழகு, சாவு
***சுந்தரி*** -- பார்வதி, ஸ்த்திரி, துர்க்காதேவி, மூஞ்சூறு, இந்திராணி

228. **சந்து** சந்தனமே, மூட்டு; சதுக்கமும், தூதும், சாற்றும்.
**கந்துகம்** இவுளி, பந்து; குறும்பரின் பரியும் காட்டும்.
**குந்தளம்** குருளை, கேசம், குழல், குழற்கொத்து, ஓர்தேயம்;
**பந்து** கந்துகம், துருத்தி, பாசனம், திரட்சியும் பேர்.

**சந்து** : 1. சந்தனம் 2. மூட்டு 3. சதுக்கம் 4. தூது
**கந்துகம்** : 1. இவுளி 2. பந்து 3. குறும்பரின் பரி
**குந்தளம்** : 1. குருளை 2. கேசம் 3. குழல் 4. குழற்கொத்து 5. ஓர் தேயம்
**பந்து** : 1. கந்துகம் 2. துருத்தி 3. பாசனம் 4. திரட்சி

***சந்து*** -- சந்தனம், பொருத்து, நாற்றெருக்கூடுமிடம், தூது
***கந்துகம்*** -- குதிரை, பந்து, குறுநிலமன்னரின் குதிரை
***குந்தளம்*** -- விலங்கின்குட்டி, மயிர்ப்பொது, பெண்மயிர், மயிர்க் கொத்து, ஓர்தேசம்
***பந்து*** -- பந்து, மட்டத்துருத்தி, சுற்றம், உண்டை

229. **அந்தரி** உமையே, துர்க்கை; **அந்தனே** சிதடன், மந்தன்;
**கந்தரம்** என்ப மேகம், கழுத்தொடு, மலைமுழைப்பேர்;
**சிந்துரம்** எகினம், யானை, செங்குடை, திலகம், செம்மை;
**மந்தாரம்** தரு மரம், செவ்வாத்தமும் வகுத்த பேரே.

**அந்தரி** : 1. உமை 2. துர்க்கை
**அந்தன்** : 1. சிதடன் 2. மந்தன்
**கந்தரம்** : 1. மேகம் 2. கழுத்து 3. மலைமுழை
**சிந்துரம்** : 1. எகினம் 2. யானை 3. செங்குடை 4. திலகம் 5. செம்மை
**மந்தாரம்** : 1. தருமரம் 2. செவ்வரத்தம்.

***அந்தரி*** -- பார்வதி, துர்க்காதேவி
***அந்தன்*** -- குருடன், சனி
***கந்தரம்*** -- முகில், கண்டம், மலைக்குகை
***சிந்துரம்*** -- புளியமரம், யானை, சிவப்புக்குடை, பொட்டு, சிவப்பு
***மந்தாரம்*** -- ஐந்தருவிலொன்று, செவ்வரத்தம்

230. **கந்தருவம்**, பண், வாசி, கலவியின் வகை ஒன்றின் பேர்;
**குந்தமே** சவளம், பீலி, குருந்து, அயில், பரி, ஓர்கண்ணோய்;
**செந்து** ஓர் நிரயம் ஓரி, சீவனோடு, அணுவும் என்ப;
**ஐந்திணை** நிலன் ஓர் ஐந்தும், அன்புடைக்காமமும் பேர்.

**கந்தருவம்** : 1. பண் 2. வாசி 3. கலவியின் வகை
**குந்தம்** : 1. சவளம் 2. பீலி 3. குருந்தம் 4. அயில் 5. பரி 6. ஓர் கண்ணோய்
**செந்து** : 1. ஓர் நிரயம் 2. ஓரி 3. சீவன் 4. அணு
**ஐந்திணை** : 1. நிலன் ஓர் ஐந்து 2. அன்புடைக்காமம்.

***கந்தருவம்*** -- இராகம், குதிரை, ஒத்தவன்பினா லொருவனு மொருத்தியும் புணரும் புணர்ச்சி
***குந்தம்*** -- சிறுசவளம், பெருஞ்சவளம், குருந்தமரம், வேல், குதிரை, கண்ணோயுளொன்று
***செந்து*** -- ஓர்நரகம், கிழநரி, சீவன், அணு
***ஐந்திணை*** -- ஐவகைநிலம், அன்புடைக்காமம்

231. **அந்தி** முச்சந்தி, பாலையாழிசை, இரவு, மாலை;
**நந்து** என்ப நத்தை, சங்கு ஆம்; **நந்தனன்** மகன், மால் ஆகும்;
**மைந்தனே** திறலோன், சேய் ஆம்; **மாந்தலே** பருகல், உண்டல்;
**வந்தியர்** புகழ்வோர் பேரும், மலடிகள் பேரும் ஆமே.

**அந்தி** : 1. முச்சந்தி 2. பாலை யாழிசை 3. இரவு 4. மாலை
**நந்து** : 1. நத்தை 2. சங்கு
**நந்தனன்** : 1. மகன் 2. மால்
**மைந்தன்** : 1. திறலோன் 2. சேய்
**மாந்தல்** : 1. பருகல் 2. உண்டல்
**வந்தியர்** : 1. புகழ்வோர் 2. மலடிகள்

***அந்தி*** -- முத்தெருக்கூடுமிடம், பாலையாழிசை, இரா, சாயங்காலம்
***நந்து*** -- நத்தை, சங்கு
***நந்தனன்*** -- புத்திரன், மால்
***மைந்தன்*** -- திண்ணியன், மகன்
***மாந்தல்*** -- குடித்தல், உண்ணல்
***வந்தியர்*** -- மங்கலப்பாடகர், மலடிகள்

232. **விந்தமே** மலை, ஓரெண் ஆம்; **விநாயகன்** அருகன், முன்னோன்;
**அந்தணன்** முனிவன், மேற்கோள், அயன், அரன், அருகன், பொன் [ஆம்;
**அந்தகன்** மறலி, நீலன், அழித்தோனே, சிதடன் என்ப;
**மந்தனே** சனி, கூர்ப்பில்லோன்; **வந்தையே** மைமை, பீடு ஆம்.

**விந்தம்** : 1. மலை 2. ஓரெண்
**விநாயகன்** : 1. அருகன் 2. முன்னோன்
**அந்தணன்** : 1. முனிவன் 2. மேற்கோள் 3. அயன் 4. அரன் 5. அருகன் 6. பொன்
**அந்தகன்** : 1. மறலி 2. நீலன் 3. அழித்தோன் 4. சிதடன்
**மந்தன்** : 1. சனி 2. கூர்ப்பில்லோன்
**வந்தை** : 1. மைமை 2. பீடு

***விந்தம்*** -- மலை, ஓரெண்
***விநாயகன்*** -- அருகதேவன், கணபதி
***அந்தணன்*** -- முனிவன், சனி, பிரமன், சிவன், அருகதேவன், வியாழன்
***அந்தகன்*** -- இயமன், சனி, அழித்தோன், குருடன்
***மந்தன்*** -- சனி, கூர்மையில்லான்
***வந்தை*** -- மலடி, பெருமை

233. **மந்தம்**நோய், கூர்மை யின்மை, மத்து, அற்பம், சோம்பல் ஐம்பேர்;
**தந்தம்** பல், யானைக்கோடு ஆம்; **சந்திரம்** கருப்பூரம், பொன்;
**எந்திரம்** மதிலுறுப்பு, சூத்திரம்; இரதமும் பேர்.
**தந்திரம்** நூல், உபாயம், தானை, யாழ், நரம்பும் ஆமே

**மந்தம்** : 1. நோய் 2. கூர்மையின்மை 3. மத்து 4. அற்பம் 5. சோம்பல்
**தந்தம்** : 1. பல் 2. யானைக்கோடு
**சந்திரம்** : 1. கருப்பூரம் 2. பொன்
**எந்திரம்** : 1. மதிலுறுப்பு 2. சூத்திரம் 3. இரதம்
**தந்திரம்** : 1. நூல் 2. உபாயம் 3. தானை 4. யாழ் 5. நரம்பு

***மந்தம்*** -- பிணி, கூர்மையில்லாமை, தயிர்கடைதறி, அற்பம், சோம்பு
***தந்தம்*** -- பல், யானைக்கொம்பு
***சந்திரம்*** -- கர்ப்பூரம், பொன்
***எந்திரம்*** -- மதிலுறுப்பு, சூத்திரம், தேர்
***தந்திரம்*** -- நூல், உபாயம், படை, வீணை, நரம்பு

234. **இந்து** சந்திரன், இருந்தோடு, எண்கு என இயம்பும் நாமம்;
**சிந்துவாரம்** நீர்க்குண்டி, சிலை; வேலாவலையமும் பேர்.
**கந்தை** நல்லாடை, பீறல், கருதில் அக்காரம் என்ப;
**சிந்தை**யே கருத்து, துன்பம், செப்பிய குறிப்பு முப்பேர்.

**இந்து** : 1. சந்திரன் 2. இருந்து 3. எண்கு
**சிந்துவாரம்** : 1. நீர்க்குண்டி 2. சிலை 3. வேலாவலையம்
**கந்தை** : 1. நல்லாடை 2. பீறல் 3. அக்காரம்
**சிந்தை** : 1. கருத்து 2. துன்பம் 3. குறிப்பு

***இந்து*** -- நிலவு, கரி, கரடி
***சிந்துவாரம்*** -- வெண்ணொச்சி, வில், கடல்
***கந்தை*** -- நற்சீலை, கந்தல், சீலை
***சிந்தை*** -- கருத்து, துன்பம், குறிப்பு

235. **விந்தை** ஆச்சரியம், துர்க்கை; **விநயமே,** அறம், வணக்கம்;
**கொந்தலே** சினக்குறிப்பு, கொந்துதல், பெருங்கோபப் பேர்;
**நந்தை** சந்திரன் முன்பக்கம், நாட்டிய கொத்தான் என்ப;
**குந்தி**யே பிரதை, கள்ளு; **கொந்தே** கதிர், பூங்கொத்து ஆம்.

**விந்தை** : 1. ஆச்சரியம் 2. துர்க்கை
**விநயம்** : 1. அறம் 2. வணக்கம்
**கொந்தல்** : 1. சினக்குறிப்பு 2. கொந்துதல் 3. பெருங்கோபம்
**நந்தை** : 1. சந்திரன் முன்பக்கம் 2. கொத்தான்
**குந்தி** : 1. பிரதை 2. கள்ளு
**கொந்து** : 1. கதிர் 2. பூங்கொத்து

***விந்தை*** -- ஆச்சரியம், துர்க்காதேவி
***விநயம்*** -- தருமம், வணக்கம்

*கொந்தல்* -- சினக்குறிப்பு, கொந்துதல், பெருங்கோபம்
*நந்தை* -- சந்திரன் முதற்பக்கம், கொத்தான்செடி
*குந்தி* -- பாண்டவர்தாய், கள்
*கொந்து* -- நெய்கதிர், பூங்கொத்து

236. **மந்தரம்** துறக்கமே, ஓர்மலை, மந்தவிசை முப்பேர் ஆம்;
**பந்தர்** காவணம், பதிப்பேர்; **பந்தனை** மகள், பந்தித்தல்;
**தந்து** தந்திரம், நூலோடு, சாத்திரம் முப்பேர் சாற்றும்;
**இந்தளம்** தூபமுட்டி, இராகமோடு இருபேர் ஆமே.

**மந்தரம்** : 1. துறக்கம் 2. ஓர்மலை 3. மந்தவிசை
**பந்தர்** : 1. காவணம் 2. பதி
**பந்தனை** : 1. மகள் 2. பந்தித்தல்
**தந்து** : 1. தந்திரம் 2. நூல் 3. சாத்திரம்
**இந்தளம்** : 1. தூபமுட்டி 2. இராகம்

*மந்தரம்* -- தேவலோகம், மந்தரமலை, மந்தவிசை
*பந்தர்* -- பந்தல், ஓர்நகர்
*பந்தனை* -- புதல்வி, கட்டல்
*தந்து* -- தந்திரம், பஞ்சிநூல், கல்வி
*இந்தளம்* -- தூபக்கால், ஓரிசை

237. **நந்தனம்** கா, ஓராண்டு, நாகாதிபதி, பூந்தோட்டம்;
**வந்தனம்** பணிதலோடு, வழுத்திய விநயம் ஆமே;
**பந்தனம்** காவல், கட்டல்; **பந்தி**யே சபை, ஒழுங்கு;
**கந்தி** கந்தகமே, ஆசாள், கமுகு என முப்பேர் காட்டும்.

**நந்தனம்** : 1. கா 2. ஓராண்டு 3. நாகாதிபதி பூந்தோட்டம்
**வந்தனம்** : 1. பணிதல் 2. விநயம்
**பந்தனம்** : 1. காவல் 2. கட்டல்
**பந்தி** : 1. சபை 2. ஒழுங்கு
**கந்தி** : 1. கந்தகம் 2. ஆசாள் 3. கமுகு

*நந்தனம்* -- பூங்கா, அறுபதுவருடத்தொன்று, இந்திரன் வனம்
*வந்தனம்* -- அட்டாங்கமாய்ப்பணிதல், விநயம்
*பந்தனம்* -- காவல், கட்டுதல்
*பந்தி* -- சபை, ஒழுங்கு
*கந்தி* -- கந்தகம், தவப்பெண், கமுகு

238. **புந்தி**யே அறிவு, புத்தி, புதன் என்ப போற்றும் முப்பேர்,
**கொந்தளம்** ஐம்பால், கூத்தின் விகற்பமும் இருபேர் கூறும்;
**இந்திரன்** வலாரி, மும்மீன்; ஏந்தலும் இயம்பற்பாற்று ஆம்.
**மந்தி** பெண் குரங்கினோடு, வண்டு, பெண் முசுவும் ஆமே.

**புந்தி** : 1. அறிவு 2. புத்தி 3. புதன்
**கொந்தளம்** : 1. ஐம்பால் 2. கூத்தின் விகற்பம்
**இந்திரன்** : 1. வலாரி 2. மும்மீன் 3. ஏந்தல்
**மந்தி** : 1. பெண்குரங்கு 2. வண்டு 3. பெண் முசு.

***புந்தி*** -- அறிவு, புத்தி, புதன்
***கொந்தளம்*** -- பெண்மயிர், கூத்தின்விகற்பம்
***இந்திரன்*** -- தேவேந்திரன், மிருகசீரிடநாள், அரசன்
***மந்தி*** -- பெண்குரங்கு, வண்டு, பெண்முசு

239. **விந்து** நீர்த்துளி, ஓர்புள்ளி, விளங்கிய குறியே, வட்டம்;
**புந்தியர்** கவிகள், மிக்கோர்; **போந்து** என்பது அனுடம் பெண்ணை;
**கந்தனே** அருகன், சூதபாடாணமொடு, காங்கேயன்;
தொந்தமே சலஞ்சாதித்தல், தொடர்பு, இரண்டு, ஊழும் ஆமே.

**விந்து** : 1. நீர்த்துளி 2. ஓர்புள்ளி 3. குறி 4. வட்டம்
**புந்தியர்** : 1. கவிகள் 2. மிக்கோர்
**போந்து** : 1. அனுடம் 2. பெண்ணை
**கந்தன்** : 1. அருகன் 2. சூதபாடாணம் 3. காங்கேயன்
**தொந்தம்** : 1. சலஞ்சாதித்தல் 2. தொடர்பு 3. இரண்டு 4. ஊழ்

***விந்து*** -- நீர்த்திவலை, ஓர்புள்ளி, குறி, வட்டம்
***புந்தியர்*** -- புலயர், அறிவுடையோர்
***போந்து*** -- அனுடநாள், பனை
***கந்தன்*** -- அருகதேவன், சூதபாடாணம், முருகன்
***தொந்தம்*** -- கோபஞ்சாதித்தல், தொடர்பு, இரண்டு, ஊழ்

240. **வேந்தனே** அரசன், திங்கள், வியாழம், இந்திரன், ஆதித்தன்;
**காந்தாரம்** இசை, ஓர்தேயம், குறிஞ்சியாழ்த் திறமே, கானம்;
**ஏந்தல்** பீடு, உயர்ச்சி, அண்ணல், இறைவன், ஏந்துதல், வெற்பு
[என்ப;
**கூந்தல்** பெண்மயிரே, பீலி, குசை, கூந்தற்பனை, ஓலைப் பேர்.

**வேந்தன்** : 1. அரசன் 2. திங்கள் 3. வியாழம் 4. இந்திரன்
5. ஆதித்தன்
**காந்தாரம்** : 1. இசை 2. ஓர்தேயம் 3. குறிஞ்சியாழ்த்திறம் 4. கானம்

**ஏந்தல்** : 1. பீடு 2. உயர்ச்சி 3. அண்ணல் 4. இறைவன் 5. ஏந்துதல் 6. வெற்பு
**கூந்தல்** : 1. பெண்மயிர் 2. பீலி 3. குசை 4. கூந்தற்பனை 5. ஓலை

*வேந்தன்* -- இராசா, சந்திரன், வியாழன், தேவேந்திரன், சூரியன்
*காந்தாரம்* -- ஓரிசை, காந்தாரதேயம், குறிஞ்சியாழத்திறம், காடு
*ஏந்தல்* -- பெருமை, உயர்ச்சி, பெருமையிற்சிறந்தோன், இராசா, ஏந்துதல், மலை
*கூந்தல்* -- பெண்மயிர், மயிற்றோகை, குதிரைக்கழுத்தில்மயிர், கூந்தற்பனை, ஓலை

241. **காந்த**மே ஊசிக்காந்தம், கவின், கந்தபுராணம் என்ப;
**பாந்த**ளே பெரும்பாம்போடு, பாம்பு என்ப பகரும் நாமம்;
**சாந்தன்** எண்குணன், புத்தன் பேர்; **தந்தி** யாழ் நரம்பு, யானை;
**கா ந்த**னே தலைவன், வேந்தன், கருதும் ஆதிபனும் முப்பேர்.

**காந்தம்** : 1. ஊசிக்காந்தம் 2. கவின் 3. கந்தபுராணம்
**பாந்தள்** : 1. பெரும்பாம்பு 2. பாம்பு
**சாந்தன்** : 1. எண்குணன் 2. புத்தன்
**தந்தி** : 1. யாழ்நரம்பு 2. யானை
**காந்தன்** : 1. தலைவன் 2. வேந்தன் 3. ஆதிபன்

*காந்தம்* -- காந்தக்கல், அழகு, கந்தபுராணம்
*பாந்தள்* -- பெரும்பாம்பு, பாம்பு
*சாந்தன்* -- அருகன், புத்ததேவன்
*தந்தி* -- வீணைநரம்பு, யானை
*காந்தன்* -- நாயகன், அரசன், எப்பொருட்குமிறை

242. **காந்தை**யே மனைவியோடு, காரிகை இருபேர் ஆகும்;
**போந்தை**யே அனுடநாளும், இளம்பனை, பனையும் போற்றும்;
**சாந்தை**யே பூமி, கங்கை; **தந்தை**யே அப்பன், வேதன்;
**சாந்திரம்** நிறைவி னோடு, நெருக்கமும் சாற்றலாமே.

**காந்தை** : 1. மனைவி 2. காரிகை
**போந்தை** : 1. அனுடநாள் 2. இளம்பனை 3. பனை
**சாந்தை** : 1. பூமி 2. கங்கை
**தந்தை** : 1. அப்பன் 2. வேதன்
**சாந்திரம்** : 1. நிறைவு 2. நெருக்கம்

*காந்தை* -- நாயகி, பெண்
*போந்தை* -- அனுடநட்சத்திரம், இளம்பனை, பனை

*சாந்தை* -- பூமி, கங்கை
*தந்தை* -- பிதா, பிரமன்
*சாந்திரம்* -- பூரணம், நெருக்குதல்

243. **சேந்து** தீ, சிவப்பு, அசோகு; **சிந்தனே** சிதகன், குள்ளன்;
**சாந்தமே** பொறுமை, சாணி, சந்தனம், குளிர்ச்சி என்ப;
**காந்தலே** முதிரவேதல், சினக்குறிப்பு இருபேர் காட்டும்;
**சாந்து** சந்தனம், பராகம், சாந்தமும் சாற்றும் முப்பேர்.

**சேந்து** : 1. தீ 2. சிவப்பு 3. அசோகு
**சிந்தன்** : 1. சிதகன் 2. குள்ளன்
**சாந்தம்** : 1. பொறுமை 2. சாணி 3. சந்தனம் 4. குளிர்ச்சி
**காந்தல்** : 1. முதிரவேதல் 2. சினக்குறிப்பு
**சாந்து** : 1. சந்தனம் 2. பராகம் 3. சாந்தம்

*சேந்து* -- நெருப்பு, சிவப்பு, அசோகமரம்
*சிந்தன்* -- தூக்கணாங்குருவி, குள்ளன்
*சாந்தம்* -- பொறுமை, சாணி, சந்தனம், குளிர்மை
*காந்தல்* -- முதிரவேதல், சினக்குறிப்பு
*சாந்து* -- சந்தனம், துகள், சாந்து

244. **மாந்தல்** உள்ளழிதல், உண்டல்; பருகலும் வகுக்கும் நாமம்.
**காந்தி** ஏர், பிரவையோடு, காவி, வைடூரியப் பேர்;
**ஆந்திரம்** மரணமே, ஓர்தேயம், அந்நிலத்துப் பாடை;
**சாந்தாற்றி** கால்செய்வட்டம், சமாலமும் இருபேர் ஆமே.

**மாந்தல்** : 1. உள்ளழிதல் 2. உண்டல் 3. பருகல்
**காந்தி** : 1. ஏர் 2. பிரவை 3. காவி 4. வைடூரியம்
**ஆந்திரம்** : 1. மரணம் 2. ஓர்தேயம் 3. அந்நிலத்துப்பாடை
**சாந்தாற்றி** : 1. கால்செய் வட்டம் 2. சமாலம்

*மாந்தல்* -- உள்ளழிதல், புசித்தல், குடித்தல்
*காந்தி* -- அழகு, ஒளி, காவி, வைடூரியம்
*ஆந்திரம்* -- மரணம், ஓர்தேயம், அத்தேயத்துப் பாடை
*சாந்தாற்றி* -- சிற்றாலவட்டம், பீலிக்குஞ்சம்

245. **கந்தமே** கரணை, பங்கு, கழுத்தடி, கிழங்கு, நாற்றம்,
இந்திய முடனே, பொன் என்று இயம்பிய எழுபேர் ஆகும்;
**பந்தம்** ஏர், சிவிறி, கொண்டை, பதணம், கட்டு, உறவு, புஞ்சம்
முந்திய முடிப்பு, நார், கைவிளக்கு என மொழியும் பேரே.

**கந்தம்** : 1. கரணை 2. பங்கு 3. கழுத்தடி 4. கிழங்கு 5. நாற்றம் 6. இந்தியம் 7. பொன்

**பந்தம்** : 1. ஏர் 2. சிவிறி 3. கொண்டை 4. பதணம் 5. கட்டு 6. உறவு 7. புஞ்சம் 8. முடிப்பு 9. நார் 10. கைவிளக்கு

***கந்தம்*** -- கருணைச்செடி, பங்கு, கழுத்தடி, கிழங்குப்பொது, வாசம், இந்திரியம், பொன்.

***பந்தம்*** -- அழகு, பெருந்துருத்தி, கொண்டை, மதில், கட்டு, சுற்றம், திரட்சி, முடிப்பு, ஒழுங்கு, கைவிளக்கு

246. **கந்து** தூண், யானைத் தம்பம், கழுத்தடி, யாக்கைமூட்டோடு,
உந்திய சகடம், பற்றுக்கோல் இருசு ஓதும் ஏழ் பேர்;
**சிந்து** நீர், கடல், ஓர்பா, முச்சீரடி, ஓர்தேயத்தோடு,
அந்த நன்னிலத்துப் பாடை, யாறு, வாமனன் ஏழ் பேர் ஆம்.

**கந்து** : 1. தூண் 2. யானைத்தம்பம் 3. கழுத்தடி 4. யாக்கைமூட்டு 5. சகடம் 6. பற்றுக்கோல் 7. இருசு

**சிந்து** : 1. நீர் 2. கடல் 3. ஓர்பா 4. முச்சீரடி 5. ஓர் தேயம் 6. அந்த நன்னிலத்துப் பாடை 7. யாறு 8. வாமனன்

***கந்து*** -- தூண், யானைகட்டுந்தறி, கழுத்தடி, யாக்கையின்மூட்டு, பண்டி, பற்றுக்கோடு, பண்டியுளிரும்பு

***சிந்து*** -- நீர், சமுத்திரம், ஓர்பா, முச்சீரடி, சிந்துதேயம், சிந்து தேயத்துப் பாடை, யாறு, குறளன்

247. **உந்தி** தேர்உருள், ஆன் கூடம், உயர்ச்சி, நீர்ச்சுழி, பரப்பு,
சிந்து, நள், இதலையோடு, திரைக்கடல், யாழ் உறுப்பும் ஆம்;
**நந்தி**யே குண்டை, செக்கான், நந்தி ஈச்சுரன், ஏறோடு,
சந்திரமவுலி அண்ணல், சிறுபறை அறுபேர் சாற்றும்.

**உந்தி** : 1. தேர்உருள் 2. ஆன்கூடம் 3. உயர்ச்சி 4. நீர்ச்சுழி 5. பரப்பு 6. சிந்து 7. நள் 8. இதலை 9. திரைக்கடல் 10. யாழ் உறுப்பு.

**நந்தி** : 1. குண்டை 2. செக்கான் 3. நந்தி ஈச்சுரன் 4. ஏறு 5. சந்திரமவுலி அண்ணல் 6. சிறுபறை.

***உந்தி*** -- தேருருளை, ஆன்கூடம், உயர்ச்சி, நீர்ச்சுழி, பரப்பு, யாறு, நடு, கொப்பூழ், கடல், யாழினுறுப்பு

***நந்தி*** -- இடபம், செக்கான், நந்திதேவன், இடபராசி, சிவன், சிறு பறை

248. **அந்தரம்** இடை, ஆகாயம், அளவு, இருள், தனிமை, கூட்டம், வெந்தொழில், தேவர் கோயில், வேறுபாடு; ஈறு ஈர் ஐந்து ஆம்; **மந்திரி** தனதன், புந்தி, வருமுறை உரைப்போன், வெள்ளி, தந்திரி, வியாழம் என்னச் சாற்றும் மூவிரு பேர் ஆமே.

**அந்தரம்** : 1. இடை 2. ஆகாயம் 3. அளவு 4. இருள் 5. தனிமை 6. கூட்டம் 7. வெந்தொழில் 8. தேவர்கோயில் 9. வேறுபாடு 10. ஈறு
**மந்திரி** : 1. தனதன் 2. புந்தி 3. வருமுறை உரைப்போன் 4. வெள்ளி 5. தந்திரி 6. வியாழம்.

***அந்தரம்*** -- இடை, ஆகாயம், அளவு, இருள், தனிமை, கூட்டம், தீமை, தேவர்கோயில், பேதம், முடிவு
***மந்திரி*** -- குபேரன், புதன், வருங்காரியஞ்சொல்வோன், சுக்கிரன், தந்திரி, வியாழன்

249. **மந்திரம்** தேவர் கோயில், மன்னர் வாழ் இல்லம், வீடு, கந்திருவத்தின் கூட்டம், கருதுதல், மது, ஓர்தேயம், மந்தணம், புடை, நாப் பேரா வகையின் உச்சரித்தல், வாசிப் பந்தி, நீர்க்கடல், உள் என்னப் பகர்பெயர் முந்நான்கு ஆமே.

**மந்திரம்** : 1. தேவர் கோயில் 2. மன்னர் வாழ் இல்லம் 3. வீடு 4. கந்தருவத்தின் கூட்டம் 5. கருதுதல் 6. மது 7. ஓர்தேயம் 8. மந்தணம் 9. புடைநாப் பேரா வகையின் உச்சரித்தல் 10. வாசிப்பந்தி 11. கடல் 12. உள்

***மந்திரம்*** -- தேவர்கோயில், அரசர்மனை, வீடு, குதிரைக்கூட்டம், எண்ணல், மது, ஓர்தேயம், ஆலோசனை, மறை, குதிரைப்பந்தி, கடல், உள்.

**(நகர எதுகை முற்றிற்று)**

## பகர எதுகை

250. **நிபம்** ஏது, உவமை ஆகும்; **நீப்பு** என்ப துறவு, நீத்தல்; **அபயமே** அச்சமின்மை, அடைக்கலம், தயை முப்பேர் ஆம்; **சபலமே** ஆயம், சூதம், சம்பலை, நிறைவேறல் பேர். **அபரம்** வெந், கவசம், ஊழல், மறல், யானைப் பின்கால், பக்கம்.

**நிபம்** : 1. ஏது 2. உவமை
**நீப்பு** : 1. துறவு 2. நீத்தல்
**அபயம்** : 1. அச்சமின்மை 2. அடைக்கலம் 3. தயை

**சபலம்** : 1. ஆயம் 2. சூதம் 3. சம்பலை 4. நிறைவேறல்
**அபரம்** : 1. வெந் 2. கவசம் 3. ஊழல் 4. மறல் 5. யானைப் பின்கால் 6. பக்கம்.

***நிபம்*** -- காரணம், உவமை
***நீப்பு*** -- துறவு, பிரிவு
***அபயம்*** -- பயமின்மை, அடைக்கலம், தயை
***சபலம்*** -- இலாபம், இரதம், மின்னல், நிறைவேறுதல்
***அபரம்*** -- முதுகு, சட்டை, நரகம், பிணக்கு, யானைப்பின்கால், பக்கம்

251. **தபம்** தவம், மாசிமாதம்; **சபம்** என்ப விழுது, மூங்கில்;
**உபலம்** கல், சிறுகல் ஆகும்; **உபகாரம்** சகாயம், ஈகை;
**நபம்** என்பது ஆகாயப்பேர், நாட்டும் ஆவணி, களாசி;
**விபுதரே** அறிஞர், வானோர், மிகக்கற்றோர் மேவும் நாமம்.

**தபம்** : 1. தவம் 2. மாசிமாதம்
**சபம்** : 1. விழுது 2. மூங்கில்
**உபலம்** : 1. கல் 2. சிறுகல்
**உபகாரம்** : 1. சகாயம் 2. ஈகை
**நபம்** : 1. ஆகாயம் 2. ஆவணி 3. களாசி
**விபுதர்** : 1. அறிஞர் 2. வானோர் 3. மிகக்கற்றோர்.

***தபம்*** -- தவம், மாசிமாதம்
***சபம்*** -- விழுது, மூங்கில்
***உபலம்*** -- கல், சிறுகல்
***உபகாரம்*** -- சகாயம், கொடை
***நபம்*** -- ஆகாயம், ஆவணிமாதம், களாசி
***விபுதர்*** -- அறிவுடையோர், தேவர், மிகக்கற்றவர்

252. **உப்பு** உவர், அராகம், வாரி, உறுசுவை, மகளிர் ஆடல்;
**செப்பமே** நெஞ்சு, பாதை, தெரு, நடுநிலை, செப்பு ஆகும்;
**தப்பு** என்ப குற்றம், பொய் ஆம்; **தபனன்** செந்தீயே, பானு;
**கப்பணம்** இரும்பிற் செய்த நெருஞ்சில்முள், கைவேல் ஆமே.

**உப்பு** : 1. உவர் 2. அராகம் 3. வாரி 4. சுவை 5. மகளிர் ஆடல்
**செப்பம்** : 1. நெஞ்சு 2. பாதை 3. தெரு 4. நடுநிலை 5. செப்பு
**தப்பு** : 1. குற்றம் 2. பொய்
**தபனன்** : 1. செந்தீ 2. பானு
**கப்பணம்** : 1. இரும்பிற் செய்த நெருஞ்சில் முள் 2. கைவேல்

*உப்பு* -- இலவணம், அராகம், கடல், இனிமை, மகளிர்விளையாட்டு
*செப்பம்* -- மார்பு, வழி, வீதி, மத்தியம், செப்பு
*தப்பு* -- குற்றம், பொய்
*தபனன்* -- நெருப்பு, சூரியன்
*கப்பணம்* -- இரும்பினியற்றியமுள், கைவேல்

253. **இப்பர்** செட்டிகள், வேளாளர், இடையர், வைசியர் பொதுப்பேர்;
**கொப்பு** என்பது ஓர் கன்னப்பூண்,கொண்டையும், மரக் கொம்பும் [பேர்,
**துப்பை** போர், வெற்றிலைப் பேர்; **சுப்பிரம்** ஒளியே, வெண்மை;
**குப்பை** என்பதுவே கூட்டம், குவிவொடு, மேடும் ஆமே.

**இப்பர்** : 1. செட்டிகள் 2. வேளாளர் 3. இடையர் 4. வைசியர் பொதுப்பெயர்
**கொப்பு** : 1. கன்னப்பூண் 2. கொண்டை 3. மரக்கொம்பு
**துப்பை** : 1. போர் 2. வெற்றிலை
**சுப்பிரம்** : 1. ஒளி 2. வெண்மை
**குப்பை** : 1. கூட்டம் 2. குவிவு 3. மேடு

*இப்பர்* -- தனவைசியர், பூவைசியர், கோவைசியர், வைசியர்பொது
*கொப்பு* -- மாதர்காதணி, மயிர்முடி, மரக்கொப்பு
*துப்பை* -- யுத்தம், தாம்பூலம்
*சுப்பிரம்* -- பிரகாசம், வெண்ணிறம்
*குப்பை* -- கூட்டம், குவிவு, மேடு

254. **பப்பு** என்ப பரப்பு, ஒப்பு ஆகும்; **பப்பரம்** பணம், ஓர்தேயம்;
**ஒப்பு** அழகொடு, பொருந்தல்; உவமையும் உரைக்கும் முப்பேர்.
**வெப்பம்** உட்டணம், அவாவாம்; **விபுலம்** பார், விரிவு, பீடு;
**துப்புரவு** அணி, துவ்வு என்ப; **சுபம்** வெண்மை, அழகும் ஆமே.

**பப்பு** : 1. பரப்பு 2. ஒப்பு
**பப்பரம்** : 1. பணம் 2. ஓர்தேயம்
**ஒப்பு** : 1. அழகு 2. பொருந்தல் 3. உவமை
**வெப்பம்** : 1. உட்டணம் 2. அவா
**விபுலம்** : 1. பார் 2. விரிவு 3. பீடு
**துப்புரவு** : 1. அணி 2. துவ்வு
**சுபம்** : 1. வெண்மை 2. அழகு

*பப்பு* -- பரப்பு, ஒப்பு
*பப்பரம்* -- பருப்பம், பப்பரதேயம்
*ஒப்பு* -- அழகு, பொருந்தல், உவமை

***வெப்பம்*** -- வெம்மை, விருப்பம்
***விபுலம்*** -- பூமி, அகலம், பெருமை
***துப்புரவு*** - அலங்காரம், ஐம்பொறிநுகர்ச்சி
***சுபம்*** -- வெண்மை அழகு

255 **தாபரம்** அகமம், பூமி, ததல், உடல், சைலம், கோயில்,
**நீபம்** பிற்கொழுங்கோலோடு, நிமித்தமும், கடம்பும் ஆகும்;
**யூபமே** கவந்தம், வேள்விக்குறுதம்பம், கிருது, யூகம்;
**சாபமே** தனுவும், வில்லும், சபித்தலும் சாற்றும் முப்பேர்.

**தாபரம்** : 1. அகமம் 2. பூமி 3. ததல் 4. உடல் 5. சைலம் 6. கோயில்
**நீபம்** : 1. பிற்கொழுங்கோல் 2. நிமித்தம் 3. கடம்பு
**யூபம்** : 1. கவந்தம் 2. வேள்விக்குறுதம்பம் 3. கிருது 4. யூகம்
**சாபம்** : 1. தனு 2. வில் 3. சபித்தல்

***தாபரம்*** -- மரப்பொது, பூமி, நிலை, உடம்பு, மலை, கோயில்
***நீபம்*** -- உத்திரட்டாதி, சகுனம், கடப்பமரம்
***யூபம்*** -- உடற்குறை, யாகத்தம்பம், யாகம், படைவகுப்பு
***சாபம்*** -- தனுவிராசி, வில்லு, சபிப்பு

256. **சிபதி** கடவுள், மாயன், சிவன், அயன், அருகன் ஐம்பேர்;
**கோபதி** வலாரி, ஏறு; **கோபமே** சினம், மூதா ஆம்;
**சோபம்** ஆலசியம், தேறல், சோர்வுடன், அழகு நாற்பேர்;
**தாபமே** அடவி, கோரம்; இடும்பையும் சாற்றும் நாமம்.

**சிபதி** : 1. கடவுள் 2. மாயன் 3. சிவன் 4. அயன் 5. அருகன்
**கோபதி** : 1. வலாரி 2. ஏறு
**கோபம்** : 1. சினம் 2. மூதா
**சோபம்** : 1. ஆலசியம் 2. தேறல் 3. சோர்வு 4. அழகு
**தாபம்** : 1. அடவி 2. கோரம் 3. இடும்பை

***சிபதி*** -- கடவுள், திருமால், சிவன், பிரமன், அருகதேவன்
***கோபதி*** -- இந்திரன், இடபம்
***கோபம்*** -- சினம், தம்பலப்பூச்சி
***சோபம்*** -- சோம்பு, கள், சோர்வு, அழகு
***தாபம்*** -- காடு, வெப்பம், துன்பம்

257. **தீபமே** விளக்கு, வீழ்க்கை; **செப்பு** என்ப கரண்டகம், சொல்;
**தாபிதம்** தூபிதப் பேர்; தாபித்தல் எனவும் சாற்றும்.
**கோபி** ஓர்மண், சினத்தோன்; **குபேரனே** தனதன், சோமன்;
**நூபுரம்** ஞெகிழியோடு, பரியகம் நொடித்த பேரே.

**தீபம்** : 1. விளக்கு 2. வீழ்க்கை
**செப்பு** : 1. கரண்டகம் 2. சொல்
**தாபிதம்** : 1. தூபிதம் 2. தாபித்தல்
**கோபி** : 1. ஓர்மண் 2. சினத்தோன்
**குபேரன்** : 1. தனதன் 2. சோமன்
**நூபுரம்** : 1. ஞெகிழி 2. பரியகம்

***தீபம்*** -- விளக்கு, சோதிநாள்
***செப்பு*** -- கரண்டகம், சொல்
***தாபிதம்*** -- சூடு, தாபித்தல்
***கோபி*** -- ஓர்மண், கோபமுள்ளோன்
***குபேரன்*** -- வடதிசைப்பாலன், சந்திரன்
***நூபுரம்*** -- காற்சிலம்பு, பாதகிண்கிணி

258. **சீப்பு** என்ப கதவின்தாழும், சீத்தலும், சீப்பும் முப்பேர்.
**நாப்பண்** என்பது தேர்த்தட்டு; நடுவும், யாழ்உறுப்பும் அப்பேர்.
**காப்பு** அரண், காவல், ஆடை, கதவு, வெண்ணீறும் ஆகும்;
**யாப்பு** என்ப கவிதை, கட்டு ஆம்; **இபம்** கரி, மரக்கோடு ஆமே.

**சீப்பு** : 1. கதவின்தாழ் 2. சீத்தல் 3. சீப்பு
**நாப்பண்** : 1. தேர்த்தட்டு 2. நடு 3. யாழ் உறுப்பு
**காப்பு** : 1. அரண் 2. காவல் 3. ஆடை 4. கதவு 5. வெண்ணீறு
**யாப்பு** : 1. கவிதை 2. கட்டு
**இபம்** : 1. கரி 2. மரக்கோடு.

***சீப்பு*** -- கதவுறுதாழ், சீக்குதல், மயிர்வாரி
***நாப்பண்*** -- தேர்த்தட்டு, நடு, வீணையினுறுப்பு
***காப்பு*** -- அரணம், காவல், புடைவை, கதவு, திருநீறு
***யாப்பு*** -- பாட்டு, கட்டு
***இபம்*** -- யானை, மரக்கொம்பு

259. **துப்பு** அரக்கு, அடிசில், வண்ணம், துகிர், பகை, போகம், சுத்தம்,
தப்பு, வன்படை, சிவப்பு, சகாயம், பூரிப்பு, வெள்ளம்,
செப்புறு துணை, அநேகம், சேர்துணைக்காரணத்தோடு,
ஒப்பரும் இழுது, ஆகாரம் ஒன்பதிற்று இரட்டி ஆமே.

**துப்பு** : 1. அரக்கு 2. அடிசில் 3. வண்ணம் 4. துகிர் 5. பகை 6. போகம் 7. சுத்தம் 8. தப்பு 9. வன்படை 10. சிவப்பு 11. சகாயம் 12. பூரிப்பு 13. வெள்ளம் 14. துணை 15. அநேகம் 16. துணைக்காரணம் 17. இழுது 18. ஆகாரம்.

***துப்பு*** -- அரக்கு, சோறு, வண்ணம், பவளம், பகை, அனுபோகம், சுத்தம், குற்றம், படைக்கலம், சிவப்பு, சகாயம், பொலிவு மிகுதி, துணை, அநேகம், துணைக்காரணம், நெய், உணவு

**(பகர எதுகை முற்றும்)**

## மகர எதுகை

260. **சமன்** யமன், நடுவே, காலன்; **தமரமே** அரக்கு, உரற்றல்;
**கமலமே** வனசம், நீர், அஞ்செம் படாம் கருதும் முப்பேர்;
**குமரி** கற்றாழை, கன்னி, கொற்றவை, காளி, கோணை;
**ஞமலி**, நாய், மயில், கள் ஆகும்; **நாமம்** பேர், தீட்டு நாமம்.

**சமன்** : 1. யமன் 2. நடு 3. காலன்
**தமரம்** : 1. அரக்கு 2. உரற்றல்
**கமலம்** : 1. வனசம் 2. நீர் 3. செம்படாம்
**குமரி** : 1. கற்றாழை 2. கன்னி 3. கொற்றவை 4. காளி 5. கோணை
**ஞமலி** : 1. நாய் 2. மயில் 3. கள்
**நாமம்** : 1. பேர் 2. தீட்டு 3. நாமம்

***சமன்*** -- யமன், நடு, காலன்
***தமரம்*** -- அரக்கு, பேரொலி
***கமலம்*** -- தாமரை, நீர், சிவந்தசீலை
***குமரி*** -- கற்றாழை, கன்னி, துர்க்கை, காளி, அழிவின்மை
***ஞமலி*** -- நாய், மயில், கள்
***நாமம்*** -- பெயர், ஊர்த்துவபுண்டரம்

261. **அமரர்** மாற்றலர், விண்ணோர் ஆம்; **அமிழ்து** பால், சுவை, மருந்து;
**சிமிலி** சிள் வீடு, பூளை, சிகை, உறி செப்பும் நாற்பேர்;
**தமம்** அகக்கரண தண்டம், இராகு, இருள் முப்பேர் சாற்றும்;
**அமலை** சால்பு, அடிசில், ஓதை, அம்பிகை நாற்பேர் ஆமே.

**அமரர்** : 1. மாற்றலர் 2. விண்ணோர்
**அமிழ்து** : 1. பால் 2. சுவை 3. மருந்து
**சிமிலி** : 1. சிள்வீடு 2. பூளை 3. சிகை 4. உறி
**தமம்** : 1. அகக்கரண தண்டம் 2. இராகு 3. இருள்
**அமலை** : 1. சால்பு 2. அடிசில் 3. ஓதை 4. அம்பிகை

***அமரர்*** -- பகைவர், தேவர்
***அமிழ்து*** -- பால், இனிமை, அமுதம்
***சிமிலி*** -- சிள்வண்டு, பூளை, குடுமி, உறி
***தமம்*** -- உட்கரணநிபாதம், இராகு, இருள்
***அமலை*** -- மிகுதி, சோறு, ஒலி, பார்வதி

262. **விமலை** கோகநகை, ஐயை, வீரி என்று ஆகும் முப்பேர்;
**அமலனே** கடவுள், ஈசன், அருகன் என்று அறையல் ஆகும்;
**நிமிர்தலே** உயர்தல், ஓடல், நெருங்குதல் வளர்தல், சோறு ஆம்;
**அமரியே** விடமே, துற்கை; அமிழ்தொடு, சிறுநீர் ஆமே.

**விமலை** : 1. கோகநகை 2. ஐயை 3. வீரி
**அமலன்** : 1. கடவுள் 2. ஈசன் 3. அருகன்
**நிமிர்தல்** : 1. உயர்தல் 2. ஓடல் 3. நெருங்குதல் 4. வளர்தல் 5. சோறு
**அமரி** : 1. விடம் 2. துற்கை 3. அமிழ்து 4. சிறுநீர்.

***விமலை*** -- இலக்குமி, பார்வதி, துற்கை
***அமலன்*** -- கடவுள், சிவன், அருகதேவன்
***நிமிர்தல்*** -- உயர்தல், ஓடல், நெருங்கல், வளர்தல், சோறு
***அமரி*** -- நஞ்சு, துற்காதேவி, அமிழ்தம், சிறுநீர்

263. **இமை** மயில், கரடி, கண்ணினிமை, நொடிப்பொழுதே, அற்பம்;
**விமலனே** கடவுள், ஈசன்; **விம்மலே** ஒலித்தல், ஏங்கல்;
**திமிர்தலே** வளர்தல், பூசல்; **தீம்** என்பது இமிழ், சுவாது;
**உமிழ்தல்** கொப்பளித்தல், சோனை; ஒலித்தலும், தெவிட்டலும் [பேர்.

**இமை** : 1. மயில் 2. கரடி 3. கண்ணின் இமை 4. நொடிப் பொழுது 5. அற்பம்
**விமலன்** : 1. கடவுள் 2. ஈசன்
**விம்மல்** : 1. ஒலித்தல் 2. ஏங்கல்
**திமிர்தல்** : 1. வளர்தல் 2. பூசல்
**தீம்** : 1. இமிழ் 2. சுவாது
**உமிழ்தல்** : 1. கொப்பளித்தல் 2. சோனை 3. ஒலித்தல் 4. தெவிட்டல்

***இமை*** -- மயில், கரடி, கண்ணிமை, மாத்திரைப்பொழுது, சிறுமை
***விமலன்*** -- கடவுள், சிவன்
***விம்மல்*** -- ஒலித்தல், அழுதல்
***திமிர்தல்*** -- வளர்தல், பூசுதல்
***தீம்*** -- இனிமை, தித்திப்பு
***உமிழ்தல்*** -- கொப்பளித்தல், சொரிதல், ஒலித்தல், கக்கல்

264. **அமுது** பால், சுவை, நீர், மூரல், அமுதமும் அறையும் ஐம்பேர்;
**நிமிலமே** பெருமீன், ஆர்ப்பு; **சிமயமே** குவடு, வெற்பு ஆம்;
**அமலமே** ஏர், அழுக்கின்மைப்பேர்; **அமுதமே** அமிழ்தம், கீரம்;
**அமர்தலே** மிகுதி, வைகல், அமருதல், பெருமை ஆமே.

**அமுது** : 1. பால் 2. சுவை 3. நீர் 4. மூரல் 5. அமுதம்
**திமிலம்** : 1. பெருமீன் 2. ஆர்ப்பு
**சிமயம்** : 1. குவடு 2. வெற்பு
**அமலம்** : 1. ஏர் 2. அழுக்கின்மை
**அமுதம்** : 1. அமிழ்தம் 2. ஈரம்
**அமர்தல்** : 1. மிகுதி 2. வைகல் 3. அமருதல் 4. பெருமை

***அமுது*** -- பால், இனிமை, நீர், சோறு, அமுதம்
***திமிலம்*** -- பெருமீன், பேரொலி
***சிமயம்*** -- மலைமுடி, மலை
***அமலம்*** -- அழகு, அழுக்கின்மை
***அமுதம்*** -- அமுதம், பால்
***அமர்தல்*** -- மிகுதி, இருத்தல், கீழமர்தல், பெருமை

265. **சமி** வன்னிமரம், விராகன்; **சமமே** போர், சமானம், நாப்பண்,
**சமர்** செரு, முள்மா என்ப; **சமரியே** அரவம், துர்க்கை;
**இமிழ்** ஒலி, இனிமை ஆகும்; **ஏமாப்பு** களிப்பே, எண்ணம்;
**தமிழே** ஓர்பாடை, நீர்மை, இனிமையும் முப்பேர் சாற்றும்.

**சமி** : 1. வன்னிமரம் 2. விராகன்
**சமம்** : 1. போர் 2. சமானம் 3. நாப்பண்
**சமர்** : 1. செரு 2. முள்மா
**சமரி** : 1. அரவம் 2. துர்க்கை
**இமிழ்** : 1. ஒலி 2. இனிமை
**ஏமாப்பு** : 1. களிப்பு 2. எண்ணம்
**தமிழ்** : 1. ஓர்பாடை 2. நீர்மை 3. இனிமை

***சமி*** -- வன்னிமரம், அருகன்
***சமம்*** -- யுத்தம், ஒப்பு, நடு
***சமர்*** -- போர், முட்பன்றி
***சமரி*** -- பாம்பு, துர்க்காதேவி
***இமிழ்*** -- ஒலி, இனிமை
***ஏமாப்பு*** -- எக்களிப்பு, எண்ணம்
***தமிழ்*** -- தமிழ்ப்பாடை, நீர்மை, இனிமை

266. **கம்பலந்தான்** மேற்கட்டி, கம்பளி, செய்ய வாடை;
**சம்பரம்** எண்காற்புள்ளும், சலமும், நற்சிலையும் பேர்;
**பம்பலே** வலி, எழுச்சி, பரவலே, நெருங்கல் என்ப;
**சம்பளம்** கரை, பண்டாரம், அதருணா, பொறாமை சாற்றும்.

**கம்பலம்** : 1. மேற்கட்டி 2. கம்பளி 3. செய்யவாடை
**சம்பரம்** : 1. எண்காற்புள் 2. சலம் 3. நற்சீலை
**பம்பல்** : 1. வலி 2. எழுச்சி 3. பரவல் 4. நெருங்கல்
**சம்பளம்** : 1. கரை 2. பண்டாரம் 3. அதருண்ணா 4. பொறாமை.

***கம்பலம்*** -- மேற்கட்டி, கம்பிளி, செவ்வாடை
***சம்பரம்*** -- எண்காற்புள், நீர், நற்சீலை
***பம்பல்*** -- வலி, எழுச்சி, பரவல், நெருங்குதல்
***சம்பளம்*** -- கரை, பலபண்டம், வழிக்குவேண்டுமுணா, பொறாமை

267. **கம்பு** செந்தினையே, நந்து, கம்பு, கோடரமே நாற்பேர்;
**தும்பை** ஓர் செடி, ஓர்மாலை, தொழுதி, மெல்லிலை, உடன்றல்;
**சம்பை** ஓர்தாளம், மின்னல்; **சமயமே** மதம், மற்று அப்பேர்;
**விம்பமே** கோவை, வட்டம், விக்கிரகம், பிரதிவிம்பம்.

**கம்பு** : 1. செந்தினை 2. நந்து 3. கம்பு 4. கோடரம்
**தும்பை** : 1. ஓர்செடி 2. ஓர்மாலை 3. தொழுதி 4. மெல்லிலை 5. உடன்றல்
**சம்பை** : 1. ஓர்தாளம் 2. மின்னல்
**சமயம்** : 1. மதம் 2. சமயம்
**விம்பம்** : 1. கோவை 2. வட்டம் 3. விக்கிரகம் 4. பிரதிவிம்பம்

***கம்பு*** -- செந்தினை, சங்கு, கம்பம்புல், மரக்கொம்பு
***தும்பை*** -- தும்பைச்செடி, போர்வென்றோர்க்குமாலை, கூட்டம், வெற்றிலை, போர்
***சம்பை*** -- ஓர்தாளம், மின்னல்
***சமயம்*** -- சமயமதம், தற்காலம்
***விம்பம்*** -- கொவ்வைக்கொடி, விருத்தம், உரு, பிரதிவிம்பம்

268. **இம்மியே** பொன்மை, நுண்மை, புலம், ஒரெண் இசைக்கலாகும்;
**அம்மியம்** சிறுசின்னத்தோடு, ஆசவம், காளம் என்ப;
**உம்மை** முற்பிறப்பினோடு, வருபிறப்பு எனவும் ஓதும்;
**வெம்மையே** கடுமை, ஆர்வம், வெப்பமும் முப்பேர் ஆமே.

**இம்மி** : 1. பொன்மை 2. நுண்மை 3. புலம் 4. ஒரெண்
**அம்மியம்** : 1. சிறுசின்னம் 2. ஆசவம் 3. காளம்
**உம்மை** : 1. முற்பிறப்பு 2. வருபிறப்பு
**வெம்மை** : 1. கடுமை 2. ஆர்வம் 3. வெப்பம்

***இம்மி*** -- பிங்கலம், நுண்மை, புலம், ஒரெண்
***அம்மியம்*** -- சிறுசின்னம், கள், காளம்

***உம்மை*** -- கழிபிறப்பு, வருபிறப்பு
***வெம்மை*** -- குரூரம், விருப்பம், உட்டணம்

269. **அம்பகம்** எழுச்சி, கண் ஆம்; **அம்பலம்** சமுகம், தெற்றி;
**வம்பு** என்ப புதுமை, கச்சு, மணம், மிடா, நிலையின்மைப்பேர்;
**கும்பம்** ஓர் ராசி, யானை மத்தகம், குடம் முப்பேர் ஆம்;
**தும்பு** என்ப சிம்பு, தோடு ஆம்; **சுமடு** சிம்புரி, எய்யாமை.

**அம்பகம்** : 1. எழுச்சி 2. கண்
**அம்பலம்** : 1. சமுகம் 2. தெற்றி
**வம்பு** : 1. புதுமை 2. கச்சு 3. மணம் 4. மிடா 5. நிலையின்மை
**கும்பம்** : 1. ஓர்ராசி 2. யானை மத்தகம் 3. குடம்
**தும்பு** : 1. சிம்பு 2. தோடு
**சுமடு** : 1. சிம்புரி 2. எய்யாமை

***அம்பகம்*** -- எழுச்சி, கண்
***அம்பலம்*** -- சவை, சித்திரகூடம்
***வம்பு*** -- புதுமை, கச்சு, வாசம், மிடா, நிலையின்மை
***கும்பம்*** -- கும்பவிராசி, யானைமத்தகம், குடம்
***தும்பு*** -- சிம்பு, பனைமுதலியவற்றினேடு
***சுமடு*** -- சும்மாடு, அறிவின்மை

270. அம்மை ஏர், மறுமை, கந்தி, ஆய், உமை, இயக்கி என்ப;
சும்மை ஊர், நகரம், நெற்போர், நாடு, ஒலி, சமையும் சொல்லும்;
செம்மையே சிவப்பு, பீடு, செப்பம் முப்பேரே என்ப;
கொம்மை ஏர், இளமை, வட்டம், கொங்கை, கைகுவித்துக்
[கொட்டல்.

அம்மை : 1. ஏர் 2. மறுமை 3. கந்தி 4. ஆய் 5. உமை 6. இயக்கி
சும்மை : 1. ஊர் 2. நகரம் 3. நெற்போர் 4. நாடு 5. ஒலி 6. சுமை
செம்மை : 1. சிவப்பு 2. பீடு 3. செப்பம்
கொம்மை : 1. ஏர் 2. இளமை 3. வட்டம் 4. கொங்கை 5. கை குவித்துக்கொட்டல்.

***அம்மை*** -- அழகு, வருபிறப்பு, தவப்பெண், தாய், பார்வதி, தருமதேவதை
***சும்மை*** -- ஊர், நகரம், நெற்போர், நாடு, ஒலி, சுமை
***செம்மை*** -- செந்நிறம், பெருமை, செப்பம்
***கொம்மை*** -- அழகு, இளமை, வட்டம், முலை, கைகுவித்துக் கொட்டல்

271. **அம்பரம்** ககனம், திக்கோடு, அறுவை, ஆர்கலி என்று ஆகும்;
**கம்புளே** சம்பங்கோழி, காருணி, நந்து முப்பேர்;
**தும்பி** வண்டு, ஒருத்தல் என்ப; சுரையும், ஆண்வண்டும் ஆகும்;
**அம்** பயோதரம், நீர், ஏரோடு, அசைச்சொல், சாரியையும் ஆமே.

**அம்பரம்** : 1. ககனம் 2. திக்கு 3. அறுவை 4. ஆர்கலி
**கம்புள்** : 1. சம்பங்கோழி 2. காருணி 3. நந்து
**தும்பி** : 1. வண்டு 2. ஒருத்தல் 3. சுரை 4. ஆண்வண்டு
**அம்** : 1. பயோதரம் 2. நீர் 3. ஏர் 4. அசைச்சொல் 5. சாரியை

***அம்பரம்*** -- ஆகாயம், திசை, சீலை, கடல்
***கம்புள்*** -- சம்பங்கோழி, வானம்பாடி, சங்கு
***தும்பி*** -- வண்டு, யானை, சுரை, வண்டினாண்
***அம்*** -- மேகம், நீர், அழகு, அசைச்சொல், சாரியை

272. **கிம்புரி** முடி, தந்தப்பூண், கேயூரமொடு, பூண் என்ப;
**கும்பியே** சிவதை, சேறு, குஞ்சரம், நிரயம் நாற்பேர்;
**சம்பமே** குலிசம், காழ் ஆம்; **சமழ்த்தலே** வருத்தம், நாணம்;
**அம்பலே** பழிச்சொல், சில்லோர் அறிந்து அலர் தூற்றல் ஆமே.

**கிம்புரி** : 1. முடி 2. தந்தப்பூண் 3. கேயூரம் 4. பூண்
**கும்பி** : 1. சிவதை 2. சேறு 3. குஞ்சரம் 4. நிரயம்
**சம்பம்** : 1. குலிசம் 2. காழ்
**சமழ்த்தல்** : 1. வருத்தம் 2. நாணம்
**அம்பல்** : 1. பழிச்சொல் 2. சில்லோர் அறிந்து அலர் தூற்றல்

***கிம்புரி*** -- முடி, யானைக்கொம்பிற்பூண், கேயூரம், பூண்
***கும்பி*** -- சிவதை, சேறு, யானை, நரகம்
***சம்பம்*** -- வச்சிராயுதம், மரவயிரம்
***சமழ்த்தல்*** -- வருத்தம், வெட்கம்
***அம்பல்*** -- பழிச்சொல், சிலரறிந்து தம்முட்புறங்கூறல்

273. **கம்பலை** ஒலி பீர் அச்சம் கவலை, செய், அகணி, வருத்தம்
**செம்புலம்** சுடலை பாலை நிலம் செருக்களம் முப்பேர் ஆம்
**தம்பம்** தூண் பற்றுக்கோடு சங்கீதம், நிலையே, அங்கி;
**கம்பமே** விளக்குத்தண்டு கம்பிதம் அசைவு தூண் ஆம்.

**கம்பலை** : 1. ஒலி 2. பீர் 3. அச்சம் 4. கவலை 5. செய் 6. அகணி 7. வருத்தம்
**செம்புலம்** : 1. சுடலை 2. பாலை நிலம் 3. செருக்களம்
**தம்பம்** : 1. தூண் 2. பற்றுக்கோடு 3. சங்கீதம் 4. நிலை 5. அங்கி
**கம்பம்** : 1. விளக்குத்தண்டு 2. கம்பிதம் 3. அசைவு 4. தூண்

***கம்பலை*** -- ஒலி, நடுக்கம், பயம், துயரம், வயல், மருதநிலம், வருத்தம்
***செம்புலம்*** -- சுடுகாடு, பாலைநிலம், பொருகளம்
***தம்பம்*** -- தூண், பற்றுக்கோல், சங்கீதம், நிலை, கவசம்
***கம்பம்*** -- விளக்குத்தண்டு, நடுக்கம், அசைவு, தூண்

274. **அம்பி** தாம்பணியே, ஓடம், கிழார், மிடா அறையும் நாற்பேர்
**அம்பு** சம்பிரமே, மூங்கில், அத்திரம், கிசம், நீர், மேகம்;
**கொம்பு** கோடரம், விலங்கின் கொம்பு, ஊதுங்கொம்பு முப்பேர்;
**அம்பிகை** உமை, இயக்கி, அந்தரி முப்பேர் ஆமே.

**அம்பி** : 1. தாம்பணி 2. ஓடம் 3. கிழார் 4. மிடா
**அம்பு** : 1. சம்பிரம் 2. மூங்கில் 3. அத்திரம் 4. கிசம் 5. நீர் 6. மேகம்
**கொம்பு** : 1. கோடரம் 2. விலங்கின் கொம்பு 3. ஊதுங்கொம்பு
**அம்பிகை** : 1. உமை 2. இயக்கி 3. அந்தரி.

***அம்பி*** -- தாமணி, ஓடம், இறைகூடை, மிடா
***அம்பு*** -- எலுமிச்சு, மூங்கில், கணை, தளிர், நீர், முகில்
***கொம்பு*** -- மரக்கொம்பு, விலங்கின் கொம்பு, ஊதுங்கொம்பு
***அம்பிகை*** -- பார்வதி, தருமதேவதை, காளி

275. **கம்பளம்** தகர், செவ்வாடை, கம்பளி, துருவாட்டேறு;
**நம்பல்** நம்புதல், அவாவாம்; **நாம்** அச்சமொடு, தன்மைப்பேர்;
**வெம்பலே** உருத்திரத்தோடு, உணங்கலும் விளம்பற் பாற்று ஆம்;
**பம்பை** ஓர்நதியே, முல்லைப் பறை, பம்பை வாச்சியப் பேர்.

**கம்பளம்** : 1. தகர் 2. செவ்வாடை 3. கம்பளி 4. துருவாட்டேறு
**நம்பல்** : 1. நம்புதல் 2. அவா
**நாம்** : 1. அச்சம் 2. தன்மைப்பேர்
**வெம்பல்** : 1. உருத்திரம் 2. உணங்கல்
**பம்பை** : 1. ஓர்நதி 2. முல்லைப்பறை 3. பம்பை வாச்சியம்

***கம்பளம்*** -- செம்மறிக்கடா, செவ்வாடை, கம்பளி, துருவாட்டேறு
***நம்பல்*** -- நம்புதல், அவா
***நாம்*** -- பயம், தன்மைப்பன்மைப்பெயர்
***வெம்பல்*** -- பெருங்கோபம், வாட்டல்
***பம்பை*** -- பம்பையாறு, முல்லைநிலப்பறை, பம்பை வாச்சியம்

276. **சாமம்** ஓர் உபாயம், மை, ஓர் வேதம், சாமளமே, யாமம்;
**வாமனம்** சிந்து, தென்பால் வாரணம், ஓர் புராணம்;
**காமரம்** சுல்லி, ஐம்மீன், இசைப்பொது, இசை, பூங்கா ஆம்;
**கோமளம்** இளமைச்செவ்வி, கொம்மை, ஆன், உவகையும் பேர்.

**சாமம்** : 1. ஓர் உபாயம் 2. மை 3. ஓர் வேதம் 4. சாமளம் 5. யாமம்
**வாமனம்** : 1. சிந்து 2. தென்பால் வாரணம் 3. ஓர் புராணம்
**காமரம்** : 1. சுல்லி 2. ஐம்மீன் 3. இசைப்பொது 4. இசை 5. பூங்கா
**கோமளம்** : 1. இளமைச்செவ்வி 2. கொம்மை 3. ஆன் 4. உவகை.

***சாமம்*** -- அரசர்க்குரிய நான்குபாயத்தொன்று, கருமை, சாமவேதம், பச்சை, சாமம்
***வாமனம்*** --குறள், தென்றிசையானை, அட்டாதசபுராணத்தொன்று
***காமரம்*** -- அடுப்பு, அத்தநாள், இசைப்பொது, இசை, சோலை
***கோமளம்*** -- இளமைச்செவ்வி, இளமை, பசு, களிப்பு

277. **சோமன்** ஓர்வள்ளல், இந்து, துகில் எனச் சொல்லும் முப்பேர்;
**காமமே** குடி, அன்பு, ஆசை, காமநோய், ஊரும் ஆகும்;
**பூமனே** விரிஞ்சன், ஆரல்; **பொம்மலே** பொலிவு, சோறு ஆம்;
**காமனே** வாசவன், வேள்; கருது திப்பிலியும் ஆமே.

**சோமன்** : 1. ஓர் வள்ளல் 2. இந்து 3. துகில்
**காமம்** : 1. குடி 2. அன்பு 3. ஆசை 4. காமநோய் 5. ஊர்
**பூமன்** : 1. விரிஞ்சன் 2. ஆரல்
**பொம்மல்** : 1. பொலிவு 2. சோறு
**காமன்** : 1. வாசவன் 2. வேள் 3. திப்பிலி.

***சோமன்*** -- ஓர் வள்ளல், சந்திரன், சீலை
***காமம்*** -- குடி, அன்பு, ஆசை, காமநோய், ஊர்
***பூமன்*** -- பிரமன், செவ்வாய்
***பொம்மல்*** -- பொலிவு, சோறு
***காமன்*** -- இந்திரன், மன்மதன், திப்பிலி

278. **தூமமே** தூமம், சுள்ளை; **சோம்பலே** அழுங்கல், சோம்பு;
**கோமயம்** ஆநீர், சாணம், கோவினுக்குரிய பண்டம்;
**மாமையே** நிறம், வனப்பு, **மம்மரே** மயக்கம், துன்பம்;
**காமுகன்** விடன், மால் என்ப; **காமர்** ஏர், ஒளி, அவாவே.

**தூமம்** : 1. தூமம் 2. சுள்ளை
**சோம்பல்** : 1. அழுங்கல் 2. சோம்பு
**கோமயம்** : 1. ஆநீர் 2. சாணம் 3. கோவினுக்குரிய பண்டம்
**மாமை** : 1. நிறம் 2. வனப்பு
**மம்மர்** : 1. மயக்கம் 2. துன்பம்
**காமுகன்** : 1. விடன் 2. மால்
**காமர்** : 1. ஏர் 2. ஒளி 3. அவா.

***தூமம்*** -- புகை, மட்கலஞ்சுடுசூளை
***சோம்பல்*** -- அழுங்கல், மடிமை
***கோமயம்*** -- ஆனீர், சாணம், பசுவிற்குரியபண்டம்
***மாமை*** -- நிறம், அழகு
***மம்மர்*** -- மயக்கம், துன்பம்
***காமுகன்*** -- தூர்த்தன், திருமால்
***காமர்*** -- அழகு, ஒளி, அவா

279. **சாமனே** காமன் தம்பி, சௌமியன் இருபேர் சாற்றும்;
**ஊமனே** பெரும்புள், மூகை; **ஓமமே** மகம், ஓர் பூண்டு ஆம்;
**பூமகள்** பொறி, பூமின் ஆம்; **போம்** அச்சம், அசைச்சொல் ஆகும்;
**ஆம்** என்பது இடைச்சொல், ஈரம், ஆம் எனல்; நீரும் ஆமே.

**சாமன்** : 1. காமன்தம்பி 2. சௌமியன்
**ஊமன்** : 1. பெரும்புள் 2. மூகை
**ஓமம்** : 1. மகம் 2. ஓர்பூண்டு
**பூமகள்** : 1. பொறி 2. பூமின்
**போம்** : 1. அச்சம் 2. அசைச்சொல்
**ஆம்** : 1. இடைச்சொல் 2. ஈரம் 3. ஆம்எனல் 3. நீர்

**சாமன்** -- காமன்தம்பி, புதன்
**ஊமன்** -- கூகை, ஊமை
**ஓமம்** -- யாகம், ஓர்பூண்டு
**பூமகள்** -- இலக்குமி, பூமிதேவி
**போம்** -- அச்சம், அசைச்சொல்
**ஆம்** -- இடைச்சொல், ஈரம், ஆம் எனல், நீர்

280. **ஆம்பிலம்** எகினம், கள்ளோடு, ஆமிலம் ஆகும் முப்பேர்;
**சாம்பவன்** எண்கின் வேந்தன், சங்கரன் இருபேர் சாற்றும்;
**தூம்பு** வேய், வழி, மரக்கால், சுருங்கொடு, புழையே, வாயில்;
**கோம்பலே** சினக்குறிப்பு, பெரும்கோபம் இருபேர் கூறும்.

**ஆம்பிலம்** : 1. எகினம் 2. கள் 3. ஆமிலம்
**சாம்பவன்** : 1. எண்கின்வேந்தன் 2. சங்சரன்
**தூம்பு** : 1. வேய் 2. வழி 3. மரக்கால் 4. சுருங்கு 5. புழை 6. வாயில்
**கோம்பல்** : 1. சினக்குறிப்பு 2. பெருங்கோபம்

***ஆம்பிலம்*** -- புளியமரம், மது, புளிப்பு
***சாம்பவன்*** -- இராமன்படைத்தலைவர்களிலொருவன், சிவன்
***தூம்பு*** -- மூங்கில், பாதை, மரக்கால், சலதாரை, உட்டுளை, வாயில்
***கோம்பல்*** -- சினக்குறிப்பு, பெருங்கோபம்

281. **கூம்பலே** குவிவு, ஒடுங்கல், கடம்பலும் முப்பேர் கூறும்;
**தேம்பலே** பழம்பூ, வாடல்; மெலிதலும் செப்பும் அப்பேர்,
**சாம்பல்** கூம்புதல், பழம்பூ, சாம்பரும் முப்பேர் சாற்றும்;
**காம்பு** வேய், மலர்த்தாள், பட்டு, கடி மரக்கொம்பு நாற்பேர்.

**கூம்பல்** : 1. குவிவு 2. ஒடுங்கல் 3. கடம்பல்
**தேம்பல்** : 1. பழம்பூ 2. வாடல் 3. மெலிதல்
**சாம்பல்** : 1. கூம்புதல் 2. பழம்பூ 3. சாம்பர்
**காம்பு** : 1. வேய் 2. மலர்த்தாள் 3. பட்டு 4. மரக்கொம்பு

***கூம்பல்*** -- குவிதல், ஒடுங்குதல், குமிழமரம்
***தேம்பல்*** -- பழம்பூ, வாடுதல், மெலிதல்
***சாம்பல்*** -- கூம்பல், பழம்பூ, சாம்பல்
***காம்பு*** -- மூங்கில், பூந்தாள், பட்டுச்சீலை, மரக்கொம்பு

282. **ஆம்பிரம்** புளிமா, தேமா ஆம்; புளிப்பினுக்கும் அப்பேர்.
**சாம்பு** பொன், பறையும் ஆகும்; **தாம்பு** தாமணியே, நாண் ஆம்;
**பாம்பு** என்ப கரை, மராளம், அரவின் நாள் பகரும் முப்பேர்;
**ஆம்பியே** ஒலி, காளான் ஆம்; **அமர்** எயில், இரணம் ஆமே.

**ஆம்பிரம்** : 1. புளிமா 2. தேமா 3. புளிப்பு
**சாம்பு** : 1. பொன் 2. பறை
**தாம்பு** : 1. தாமணி 2. நாண்
**பாம்பு** : 1. கரை 2. மராளம் 3. அரவின்நாள்
**ஆம்பி** : 1. ஒலி 2. காளான்
**அமர்** : 1. எயில் 2. இரணம்

***ஆம்பிரம்*** -- புளிமா, மாமரம், புளிப்பு
***சாம்பு*** -- பொன், பறை
***தாம்பு*** -- தாமணி, கயிறு
***பாம்பு*** -- அணை, சர்ப்பம், ஆயிலியநாள்
***ஆம்பி*** -- ஒலி, காளான்
***அமர்*** -- மதில், போர்

283. **அமுதமே** தேவருண்டி, அவுடதம், சலிலம், முத்தி,
அமிழ்தம், மாட்சிமையே, மேகம், விசும்பு இவையாகும் எண்பேர்;
**குமுதமே** தென்மேல் திக்கின் குஞ்சரம், குசை, வெண்ணெய்தல்,
தமரமும், படையினுற்ற தொகை ஒன்றும் சாற்றும் நாமம்.

**அமுதம்** : 1. தேவருண்டி 2. அவுடதம் 3. சலிலம் 4. முத்தி
5. அமிழ்தம் 6. மாட்சிமை 7. மேகம் 8. விசும்பு

**குமுதம்** : 1. தென்மேற்திக்கின் குஞ்சரம் 2. குசை 3. வெண்ணெய்தல் 4. தமரம் 5. படையினுற்ற தொகை.

***அமுதம்*** -- தேவருணவு, மருந்து, நீர், மோக்கம், பால், பெருமை, மேகம், ஆகாயம்

***குமுதம்*** -- தென்மேற்றிசையானை, தருப்பை, வெள்ளாம்பல், பேரொலி, படையினோர் தொகை

284. **கம்** பயோதரமே, வேணி, கால், சிரம், பாண்டரத்தோடு,
அம்புதம், பதுமபீடத்து அயனும் என்று அறைவர் நூலோர்;
**சம்பு** நேரேடம், ஓர்புல், சதுமுகன், முகுந்தன், ஈசன்;
சம்பம், என்றூழ், குரோட்டம், சதாபலம்; அருகனும் பேர்.

**கம்** : 1. பயோதரம் 2. வேணி 3. கால் 4. சிரம் 5. பாண்டரம் 6. அம்புதம் 7. பதுமபீடத்து அயன்

**சம்பு** : 1. நேரேடம் 2. ஓர்புல் 3. சதுமுகன் 4. முகுந்தன் 5. ஈசன் 6. சம்பம் 7. என்றூழ் 8. குரோட்டம் 9. சதாபலம் 10. அருகன்

***கம்*** -- மேகம், ஆகாயம், காற்று, தலை, வெண்மை, நீர், பிரமன்

***சம்பு*** -- நாவன்மரம், ஓர்புல், பிரமன், திருமால், சிவன், வச்சிரம், சூரியன், நரி, எலுமிச்சை, அருகதேவன்

285. **ஏமமே** இரா, உன்மத்தம், இன்பம், பொன், விசிதம், காவல்;
சேமம், ஆமோதம், கட்டுந்திரை, வலி இவை ஈர் ஐந்து ஆம்;
**வாமமே** தொடை, இடப்பால், வனப்பு, அரன் ஐம்முகத்து ஒன்று
ஆம், ஒளி, சிந்து என்னும் அறுபெயர் அறையலாமே.

**ஏமம்** : 1. இரா 2. உன்மத்தம் 3. இன்பம் 4. பொன் 5. விசிதம் 6. காவல் 7. சேமம் 8. ஆமோதம் 9. கட்டுந்திரை 10. வலி.

**வாமம்** : 1. தொடை 2. இடப்பால் 3. வனப்பு 4. அரன் ஐம்முகத்து ஒன்று 5. ஒளி 6. சிந்து

***ஏமம்*** -- இரா, மத்தம், சுகம், பொன், விபூதி, காவல், புதையல், களிப்பு, திரைச்சீலை, வலி

***வாமம்*** -- தொடை, இடப்பக்கம், அழகு, சிவனைம்முகத்தொன்று, ஒளி, குறள்

286. **நேமி** தேருருளை, ஆழி, நெட்டில், வட்டணை, நேமிப்புள்,
ஆமமார் வேலை, ஞாலம், சகுனமும் எண்பேர் ஆகும்;

**சாமி** வேள், அசோகன், ஆசான், தலைவன், கோமான், குரத்தி,
ஏமம், பொன், கடவுள், வேந்தன் என ஒலை ஈர் ஐம்பேரே.

**நேமி** : 1. தேருருளை 2. ஆழி 3. நெட்டில் 4. வட்டணை
5. நேமிப்புள் 6. வேலை 7. ஞாலம் 8. சகுனம்

**சாமி** : 1. வேள் 2. அசோகன் 3. ஆசான் 4. தலைவன்
5. கோமான் 6. குரத்தி 7. ஏமம் 8. பொன் 9. கடவுள்
10. வேந்தன்

***நேமி*** -- தேர்ச்சில், சக்கரம், மூங்கில், வட்டம், சக்கரவாகப்புள்,
கடல், பூமி, சகுனம்
***சாமி*** -- முருகன், அருகன், குரு, தலைவன், மூத்தோன், தலைவி,
பொன், வியாழன், கடவுள், அரசன்

287. **ஆம்பலே** கவ்வை, ஓரெண், அம்புலி, ஊதுங்கொம்பு,
காம்பு, கள், அல்லி, ஓர்பண், கரி, இசைக்குழலும் ஆகும்;
**தேம்** பிழி, வளாகம், கொங்கு, தேசம், மாதிரத்தினோடு,
தீம், பச்சையுடனே, ஏழன்உருபு இருநாற் பேர் செப்பும்.

**ஆம்பல்** : 1. கவ்வை 2. ஓரெண் 3. அம்புலி 4. ஊதுங்கொம்பு
5. காம்பு 6. கள் 7. அல்லி 8. ஓர்பண் 9. கரி
10. இசைக்குழல்
**தேம்** : 1. பிழி 2. வளாகம் 3. கொங்கு 4. தேசம் 5. மாதிரம்
6. தீம் 7. பச்சை 8. ஏழன்உருபு

***ஆம்பல்*** -- துன்பம், ஓரெண், சந்திரன், ஊதுங்கொம்பு, மூங்கில்,
கள், ஆம்பல், ஓர்பண், யானை, இசைக்குழல்
***தேம்*** -- கள், இடம், தேன், தேசம், திக்கு, தித்திப்பு, வாசம்,
ஏழனுருபு

288. **உம்பல்** ஆன், எருமை, யானை, யாடு, இவற்று ஆண், ஒருத்தல்
அம்பகம், குலம், யானை, மகன், முறை அறையும் ஏழ்பேர்;
**உம்பரே** வானோர், பார்ப்பார், உயர்ச்சி, உவ்வித்தினோடே,
அம்பரம், மேக்கும் என்ன அறு பெயர் அறையல் ஆமே.

**உம்பல்** : 1. ஆன், எருமை, யானை, யாடு இவற்று ஆண்
2. ஒருத்தல் 3 அம்பகம் 4. குலம் 5. யானை 6. மகன்
7. முறை
**உம்பர்** : 1. வானோர் 2. பார்ப்பார் 3. உயர்ச்சி 4. உவ்விடம்
5. அம்பரம் 6. மேற்கு

***உம்பல்*** -- பசு, எருமை, யானை, ஆடு - இவையினாண், விலங்கேற்றின் பொது, எழுச்சி, கோத்திரம், யானை, புத்திரன், முறைமை

***உம்பர்*** -- தேவர், முனிவர், உயர்ச்சி, உவ்விடம், ஆகாயம், மேல்

289. செம்மலே பழம்பூ, வாடாமலர், மகன், சிறந்தோன், வீரன்,
செம்முதல், கைகுவித்துக் கொட்டுதல், திறல், வனப்பு,
அம்மம், மண்டலம், கங்காளன், அதிபதி, வாரி, மாண்பு,
செம்மலர்ப் பிண்டி நீழற் சினன் இவை ஈர் எண் பேரே.

செம்மல் : 1. பழம்பூ 2. வாடாமலர் 3. மகன் 4. சிறந்தோன் 5. வீரன் 6. செம்முதல் 7. கைகுவித்துக் கொட்டுதல் 8. திறல் 9. வனப்பு 10. அம்மம் 11. மண்டலம் 12. கங்காளன் 13. அதிபதி 14. வாரி 15. மாண்பு 16. சினன்

*செம்மல்* -- பழம்பூ, வாடாப்பூ, புத்திரன், சிறப்புற்றோன், வீரன், செம்முதல், கைகுவித்துக்கொட்டல், வலி, அழகு, முலை, வட்டம், சிவன், அரசன், வாரி, பெருமை, அருகன்

290. தாம்மே முடிஉறுப்பு, தார், உடல், பிறப்பு, சாந்தம்,
தேம், அணை கயிறு, ஒழுங்கு, சீர்த்தி, வெற்பு, இதழி, இல்லம்,
மாமணிக் கோவை, இன்பம், மலர், ஒளி, நகரமோடு,
தாமணி, தந்தி, பீடு சாற்றும் நாலைந்து பேரே.

தாமம் : 1. முடிஉறுப்பு 2. தார் 3. உடல் 4. பிறப்பு 5. சாந்தம் 6. தேம் 7. அணைகயிறு 8. ஒழுங்கு 9. சீர்த்தி 10. வெற்பு 11. இதழி 12. இல்லம் 13. மணிக்கோவை 14. இன்பம் 15. மலர் 16. ஒளி 17. நகரம் 18. தாமணி 19. தந்தி 20. பீடு

*தாமம்* -- முடியுறுப்பு, மாலை, உடல், பிறப்பு, சாந்து, இடம், அணைகயிறு, ஒழுங்கு, கீர்த்தி, மலை, கொன்றைமரம், வீடு, மணிவடம், சுகம், பூ, ஒளி, நகர், தாமணி, யானை, பெருமை

**(மகர எதுகை முற்றிற்று)**

## யகர எதுகை

291. இயவையே துவரை, பாதை, இயம்பிய தோரை நெல் ஆம்;
**வியவனே** பதிகன், ஏவுவானொடு, மீளியும் பேர்;
**அயர்வு** உயவ, ஆதி, சோம்போடு, அகலம், உன்மத்தம் என்ப;
**இயவர்** தோற்கருவியாளர், இழிஞர், சண்டாளர் ஆமே.

**இயவை** : 1. துவரை 2. பாதை 3. தோரை நெல்
**வியவன்** : 1. பதிகன் 2. ஏவுவான் 3. மீளி
**அயர்வு** : 1. உயவு 2. ஆதி 3. சோம்பு 4. அகலம் 5. உன்மத்தம்
**இயவர்** : 1. தோற்கருவியாளர் 2. இழிஞர் 3. சண்டாளர்.

***இயவை*** -- துவரை, வழி, தோரைநெல்
***வியவன்*** -- வழிச்செல்வான், ஏவுவான், திண்ணியன்
***அயர்வு*** -- வருத்தம், வெறுப்பு, சோம்பு, அகலம், உன்மத்தம்
***இயவர்*** -- தோற்கருவியாளர், கீழ்மக்கள், சண்டாளர்

92. **வியம்** பக்கி, மூர்த்தம் என்ப; வியத்திகை எனவும் ஆகும்.
**சயம்பு**வே அருகன், ஈசன்; அரி என்றும் சாற்றும் முப்பேர்.
**இயங்கலே** உலாவல், சேறல், இலகுதல், இறுத்தல் என்ப;
**சுயம்பு**வே அருகனோடு, துய்யதற்பரன், வேதாவே.

**வியம்** : 1. பக்கி 2. மூர்த்தம் 3. வியத்திகை
**சயம்பு** : 1. அருகன் 2. ஈசன் 3. அரி
**இயங்கல்** : 1. உலாவல் 2. சேறல் 3. இலகுதல் 4. இறுத்தல்
**சுயம்பு** : 1. அருகன் 2. தற்பரன் 3. வேதா.

***வியம்*** -- பறவை, உடல், பெருமை
***சயம்பு*** -- அருகதேவன், அரன், நாராயணன்
***இயங்கல்*** -- உலாவல், நடத்தல், ஒளிசெய்தல், தங்கல்
***சுயம்பு*** -- அருகன், கடவுள், பிரமன்

93. **வயம்** அசம், பரி, இரும்பு, வலி, நீர், புட்பொது, வசப்பேர்;
**சயம்** குழு, விறல், கை, மாலை, சருக்கரை, இரவி, நெய்தல்;
**இயம்** என்ப ஒலியே, வார்த்தை, வாச்சியம், ஈ நாற்பேர் ஆம்;
**அயனம்** உற்பவமே, பாதை; ஆண்டினிற் பாதிக்கும் பேர்.

**வயம்** : 1. அசம் 2. பரி 3. இரும்பு 4. வலி 5. நீர் 6. புட்பொது
7. வசம்
**சயம்** : 1. குழு 2. விறல் 3. கை 4. மாலை 5. சருக்கரை 6. இரவி
7. நெய்தல்
**இயம்** : 1. ஒலி 2. வார்த்தை 3. வாச்சியம் 4. ஈ
**அயனம்** : 1. உற்பவம் 2. பாதை 3. ஆண்டினிற் பாதி

***வயம்*** -- ஆடு, குதிரை, கரும்பொன், வலி, நீர், பறவைப்பொது,
வசம்
***சயம்*** -- கூட்டம், வெற்றி, கை, மாலை, சருக்கரை, சூரியன், ஆம்பல்
***இயம்*** -- ஓசை, சொல், வாச்சியம், ஈ
***அயனம்*** -- பிறப்பு, வழி, ஆண்டினிற்பாதி

294. **பயிர்** ஒலி, கலகலம், பைங்கூழ், பயில், விலங்கொலிப் பேர்;
**கயினி** ஐவிரலே, கைமை; **கயவாயே** வலியான், கூடல்;
**வயிரம்** ஓர் மணி, வை, சேகு, வச்சிரம், ஓணம், செற்றம்;
**கயில்** பிடர், மடையும் ஆகும்; **கையரே** திருடர், நீசர்.

**பயிர்** : 1. ஒலி 2. கலகலம் 3. பைங்கூழ் 4. பயில் 5. விலங்கொலி
**கயினி** : 1. ஐவிரல் 2. கைமை
**கயவாய்** : 1. வலியான் 2. கூடல்
**வயிரம்** : 1. ஓர்மணி 2. வை 3. சேகு 4. வச்சிரம் 5. ஓணம் 6. செற்றம்
**கயில்** : 1. பிடர் 2. மடை
**கையர்** : 1. திருடர் 2. நீசர்.

***பயிர்*** -- ஒலி, பறவைக்குரல், பயிர், பயில், விலங்கினொலி
***கயினி*** -- அத்தநாள், கைம்பெண்
***கயவாய்*** -- காரிப்புள், கழிமுகம்
***வயிரம்*** -- ஒரிரத்தினம், கூர்மை, வயிரம், குலிசம், திருவோணம், சலஞ்சாதித்தல்
***கயில்*** -- பிடரி, ஆபரணக்கடைப்புணர்வு
***கையர்*** -- சோரர், கீழ்மக்கள்

295. **வயவனே** வீரனொடு, வலியான், காதலனே, மிண்டன்;
**குயிறலே** செறிதல், கூவல், குடைதல், பண்ணுதல், விளம்பல்;
**வயின்** இடம், உதரம், வீடு ஆம்; **வயா** கர்ப்பம், வருத்தம், காதல்;
**மயல்** செத்தை, மயக்கம், சோகோடு, உன்மத்தம் வகுக்கும் [நாற்பேர்.

**வயவன்** : 1. வீரன் 2. வலியான் 3. காதலன் 4. மிண்டன்
**குயிறல்** : 1. செறிதல் 2. கூவல் 3. குடைதல் 4. பண்ணுதல் 5. விளம்பல்
**வயின்** : 1. இடம் 2. உதரம் 3. வீடு
**வயா** : 1. கர்ப்பம் 2. வருத்தம் 3. காதல்
**மயல்** : 1. செத்தை 2. மயக்கம் 3. சோகு 4. உன்மத்தம்

***வயவன்*** -- வீரன், கரிக்குருவி, தலைவன், திண்ணியன்
***குயிறல்*** -- நெருங்கல், அழைத்தல், துளைத்தல், செய்தல், சொல்லுதல்
***வயின்*** -- இடம், வயிறு, இல்லம்
***வயா*** -- கருப்பம், வருத்தம், அவா
***மயல்*** -- நரல், மயக்கம், பிசாசம், பைத்தியம்

296. **குயிலே** கோகிலமும், சொல்லும், கொண்மூவும், தொளையும் [நாற்பேர்;
**வயமா**வே குதிரை, சீயம், மதகரி, புலியும் ஆகும்;
**வியல்** என்ப விசாலம், பீடு, விபினமும் விளம்பும் முப்பேர்;
**மயிலை**யே மீனராசி, மீன், இருவாட்சி ஆமே.

**குயில்** : 1. கோகிலம் 2. சொல் 3. கொண்மூ 4. தொளை
**வயமா** : 1. குதிரை 2. சீயம் 3. கரி 4. புலி
**வியல்** : 1. விசாலம் 2. பீடு 3. விபினம்
**மயிலை** : 1. மீனராசி 2. மீன் 3. இருவாட்சி

***குயில்*** -- குயிற்பட்சி, வார்த்தை, முகில், உட்டுளை
***வயமா*** -- பரி, சிங்கம், யானை, வேங்கை
***வியல்*** -- அகலம், பெருமை, காடு
***மயிலை*** -- மீனவிராசி, மச்சம், கருமுகை

297. **சயிந்தவம்** குதிரையோடு தலையும், இந்துப்பும் ஆகும்;
**குயம்** தனம், இளமையோடு, கூர் அரிவாளும் முப்பேர்,
**நயந்தோ**னே நண்பன், கொண்கன், நசையினன் நாட்டும் முப்பேர்;
**பயம்பு** என்பது ஆனை வீழும் படுகுழி, பள்ளம் ஆமே.

**சயிந்தவம்** : 1. குதிரை 2. தலை 3. இந்துப்பு
**குயம்** : 1. தனம் 2. இளமை 3. அரிவாள்
**நயந்தோன்** : 1. நண்பன் 2. கொண்கன் 3. நசையினன்
**பயம்பு** : 1. ஆனை வீழும் படுகுழி 2. பள்ளம்

***சயிந்தவம்*** -- பரி, சிரசு, இந்துப்பு
***குயம்*** -- முலை, இளமை, அரிவாள்
***நயந்தோன்*** -- மித்திரன், தலைவன், விருப்பினன்
***பயம்பு*** --யானைபடுகுழி, தாழ்வு

298. **அயிர்** கரும்பின் தீங்கட்டி ஆன்ற நுண்மணலே, நுண்மை;
**செயல்** என்பது ஒழுக்கம், காவல், சேறோடு, தொழிலும் ஆகும்;
**நயம்** இன்பம், மகிழ்வு, நீதி, உபசாரம், அபயம், நன்மைப் பேர்;
**பெயர்** புகழ், பெருமை யோடு, பேர் எனப் பேசும் முப்பேர்.

**அயிர்** : 1. கரும்பின் தீங்கட்டி 2. நுண்மணல் 3. நுண்மை
**செயல்** : 1. ஒழுக்கம் 2. காவல் 3. சேறு 4. தொழில்
**நயம்** : 1. இன்பம் 2. மகிழ்வு 3 நீதி 4. உபசாரம் 5. அபயம் 6. நன்மை
**பெயர்** : 1. புகழ் 2. பெருமை 3. பேர்

***அயிர்*** -- சருக்கரை, நுண்மணல், நுண்மை
***செயல்*** -- ஒழுக்கம், காவல், சேறு, தொழில்
***நயம்*** -- சுகம், களிப்பு, நீதி, உபசாரம், அபயம், நன்மை
***பெயர்*** -- கீர்த்தி, பெருமை, நாமம்

299. **இயைபு** என்ப பொருத்தம், யாப்பினோருறுப்பு, இசைப்பு முப்பேர்;
**கயவர்** கீழ்மக்கள், மிக்கோர், கள்வரும் கருதல் ஆகும்;
**உயவை** காக்கணம், கான்யாறோடு, ஊதிகை எனவும் ஓதும்;
**குயவு** என்ப கறி கரிப்பு, குளிர்நறும்புகை, தேர் ஆமே.

**இயைபு** : 1. பொருத்தம் 2. யாப்பினோருறுப்பு 3. இசைப்பு
**கயவர்** : 1. கீழ்மக்கள் 2. மிக்கோர் 3. கள்வர்
**உயவை** : 1. காக்கணம் 2. கான்யாறு 2. ஊதிகை
**குயவு** : 1. கறிகரிப்பு 2. நறும்புகை 3. தேர்.

***இயைபு*** -- பொருத்தம், செய்யுளினோருறுப்பு, இசைத்தல்
***கயவர்*** -- இழிஞர், உயர்ந்தோர், கரவடர்
***உயவை*** -- கருவிளை, கான்யாறு, முல்லை
***குயவு*** -- கறிகரிப்பு, நறும்புகை, இரதம்

300. **அயன்** விதி, அசோகன் ஆகும்; **அயல்** இடம், அருகிடப் பேர்;
**பயன்** இடம்பாடு, இலாபம்; பாகு, சொல்லுரையும் ஆகும்.
**நயன்** இன்பம், பயன், மகிழ்ச்சி, நன்மையும் நவிலற்பாற்று ஆம்,
**பயம்** என்ப சுதை, நீர், அச்சம், பால், குளம் பகரும் ஐம்பேர்.

**அயன்** : 1. விதி 2. அசோகன்
**அயல்** : 1. இடம் 2. அருகிடம்
**பயன்** : 1. இடம்பாடு 2. இலாபம் 3. பாகு 4. சொல்லுரை
**நயன்** : 1. இன்பம் 2. பயன் 3. மகிழ்ச்சி 4. நன்மை
**பயம்** : 1. சுதை 2. நீர் 3. அச்சம் 4. பால் 5. குளம்

***அயன்*** -- பிரமன், அருகன்
***அயல்*** -- இடம், அருகிடம்
***பயன்*** -- அகலம், பொலிசை, பால், அருத்தம்
***நயன்*** -- இன்பம், பயன், மகிழ்ச்சி, நன்மை
***பயம்*** -- சுதை, புனல், கலக்கம், பால், வாவி

301. **வயங்கலே** தயங்கல், சேறல்; **மயம்** என்பது அழகு, ஒட்டைப் [பேர்;
**தயங்கலே** ஒளி செய்தற்பேர்; அசைதலும் சாற்றல் ஆகும்.
**வியங்கோள்** என்பதுவே ஐம்பான் மூவிடம் விளக்கும் ஏவல்;
**முயங்கலே** தழுவவோடு, புணர்தலும் மொழியல் ஆமே.

**வயங்கல்** : 1. தயங்கல் 2. சேறல்
**மயம்** : 1. அழகு 2. ஒட்டை
**தயங்கல்** : 1. ஒளிசெய்தல் 2. அசைதல்
**வியங்கோள்** : 1. ஐம்பால் மூவிடம் விளக்கும் ஏவல்
**முயங்கல்** : 1. தழுவல் 2. புணர்தல்

***வயங்கல்*** -- ஒளிசெய்தல், நடத்தல்
***மயம்*** -- அழகு, ஒட்டை
***தயங்கல்*** -- ஒளிசெய்தல், அசைதல்
***வியங்கோள்*** -- ஐம்பான் மூவிடத்தையுங் காட்டுமேவல்
***முயங்கல்*** -- சேருதல், ஆலிங்கனம்

302. **இயக்கனே** தனதன், ஞாளி; **இயவு** என்ப சுரம், ஊர், மார்க்கம்;
**பயப்பு** என்ப தயாளம், சாயல், பசப்பு எனப் பகரும் முப்பேர்.
**வியத்தலே** அதிசயித்தல், துதித்தலும் விளம்பல் ஆகும்;
**உயிர்த்தல்** வாய்விடல், விடுத்தல், பயத்தலும் முப்பேர் ஓதும்.

**இயக்கன்** : 1. தனதன் 2. ஞாளி
**இயவு** : 1. சுரம் 2. ஊர் 3. மார்க்கம்
**பயப்பு** : 1. தயாளம் 2. சாயல் 3. பசப்பு
**வியத்தல்** : 1. அதிசயித்தல் 2. துதித்தல்
**உயிர்த்தல்** : 1. வாய்விடல் 2. விடுத்தல் 3. பயத்தல்

***இயக்கன்*** -- குபேரன், நாய்
***இயவு*** -- நாடு, ஊர், வழி
***பயப்பு*** -- கிருபை, நிறம், பசப்பு
***வியத்தல்*** -- அதிசயப்படல், வணங்கல்
***உயிர்த்தல்*** -- வாய்விடல், விடுத்தல், ஈனுதல்

303. **இயல்** நடை, பண்பு, சாயல், இயற்றமிழ், இசை, ஒத்து ஆகும்;
**முயல்** செரு, சசமும் ஆகும்; **மொய்த்தலே** நெருங்கல், மூடல்;
**பயல்** பள்ளம், பாதி, சிற்றாள்; **பயசு** என்ப சலிலம், பால் ஆமே;
**வயல்** வெளி, ஆலவாலம், மருத நன்னிலமும் ஆமே.

**இயல்** : 1. நடை 2. பண்பு 3. சாயல் 4. இயற்றமிழ் 5. இசை 6. ஒத்து
**முயல்** : 1. செரு 2. சசம்
**மொய்த்தல்** : 1. நெருங்கல் 2. மூடல்
**பயல்** : 1. பள்ளம் 2. பாதி 3. சிற்றாள்
**பயசு** : 1. சலிலம் 2. பால்
**வயல்** : 1. வெளி 2. ஆலவாலம் 3. மருத நிலம்.

***இயல்*** -- நடை, குணம், சாயல், இயற்றமிழ், இசை, ஒத்து
***முயல்*** -- போர், முயல்
***மொய்த்தல்*** -- நெருங்கல், மூடல்
***பயல்*** -- பள்ளம், பாதி, சிறுபையன்
***பயசு*** -- சலிலம், பால்
***வயல்*** -- வெளி, வயல், மருதநிலம்

304. **கயவு** என்ப களவு, மேன்மை, கழிமுகம், மிகுதி, பீடு ஆம்;
**இயறலே** முத்தி, போதல்; **எயிறே** பல், யானைத் தந்தம்;
**வியம்** உடல், விகங்கம், பீடு ஆம்; **மெய்** உடல், சரதம், ஒற்று,
**பெயர்தலே** துடங்கல், போகல்; பேதித்தல், உரிஞ்சலும் பேர்.

**கயவு** : 1. களவு 2. மேன்மை 3. கழிமுகம். 4. மிகுதி 5. பீடு
**இயறல்** : 1. முத்தி 2. போதல்
**எயிறு** : 1. பல் 2. யானைத்தந்தம்
**வியம்** : 1. உடல் 2. விகங்கம் 3. பீடு
**மெய்** : 1. உடல் 2. சரதம் 3. ஒற்று
**பெயர்தல்** : 1. நுடங்கல் 2. போகல் 3. பேதித்தல் 4. உரிஞ்சல்

***கயவு*** -- கரவடம், மேன்மை, கழிமுகம், மிகுதி, பெருமை
***இயறல்*** -- முத்தி, செல்லல்
***எயிறு*** -- பல், யானைக்கோடு
***வியம்*** -- உடல், பறவை, பெருமை
***மெய்*** -- உடம்பு, உண்மை, ஒற்றெழுத்து
***பெயர்தல்*** -- அசைதல், போகல், வேறுபடல், உரிஞ்சல்

305. **குயிறலே** இழைத்தல், சொல்லல்; **குயிற்றலே** கசிதம், பண்ணல்;
**பயிலல்** கூடுதலே, சொல்லல், பழகுதல், படித்தலும் பேர்;
**அயில்** கைவேல், இரும்பு, கூர்மை, அழகொடு, கோரை, நாஞ்சில்;
**எயில்** மதில், திரிபுரத்தோடு, இயம்பும் ஊர்ப்பொதுவும் ஆமே.

**குயிறல்** : 1. இழைத்தல் 2. சொல்லல்
**குயிற்றல்** : 1. கசிதம் 2. பண்ணல்
**பயிலல்** : 1. கூடுதல் 2. சொல்லல் 3. பழகுதல் 4. படித்தல்
**அயில்** : 1. கைவேல் 2. இரும்பு 3. கூர்மை 4. அழகு 5. கோரை 6. நாஞ்சில்
**எயில்** : 1. மதில் 2. திரிபுரம் 3. ஊர்ப்பொது

***குயிறல்*** -- இழைத்தல், சொல்லல்
***குயிற்றல்*** -- பதித்தல், செய்தல்
***பயிலல்*** -- கூடுதல், சொல்லுதல், பழகல், படிக்குதல்
***அயில்*** -- கைவேல், இரும்பு, கூர்மை, அழகு, கோரை, நாஞ்சில்
***எயில்*** -- மதில், முப்புரம், ஊர்ப்பொது

306. **வெய்யில்** ஆதபம், என்றூழ் ஆம்; **வியப்பு** விம்மிதம், துதிப் பேர்;
**பையுள்** நோய், சிறுமை ஆகும்; **பயில்** மொழி, சைகை என்ப;
**தையலே** அழகு, துன்னம்; சாற்றிடில் வனிதைக்கும் பேர்.
**குய்யமே** மறைவு, யோனி, குத்திரம் முப்பேர் கூறும்.

**வெய்யில்** : 1. ஆதபம் 2. என்றூழ்
**வியப்பு** : 1. விம்மிதம் 2. துதி
**பையுள்** : 1. நோய் 2. சிறுமை
**பயில்** : 1. மொழி 2. சைகை
**தையல்** : 1. அழகு 2. துன்னம் 3. வனிதை
**குய்யம்** : 1. மறைவு 2. யோனி 3. குத்திரம்

***வெய்யில்*** -- ஒளி, சூரியன்
***வியப்பு*** -- அதிசயம், துதி
***பையுள்*** -- துன்பம், சிறுமை
***பயில்*** -- சொல், சைகை
***தையல்*** -- அழகு, தையல், ஸ்திரி
***குய்யம்*** -- இராசியம், பெண்குறி, வஞ்சகம்

307. **நெய்** என்பது இழுது,நெய்த்தோர், நிணமொடு, துவட்டாநாள் ஆம்;
**பொய்** மரப்பொந்து, பொக்கம்; **புயல்** என்பது எழிலி, விசுங்கன்;
**செய்தியே** ஒழுக்கம், செய்தி; **செய்யலே** செயல், சேறு ஆகும்;
**ஐயரே** முனிவர், வானோர், அந்தணர் முப்பேர் ஆமே.

**நெய்** : 1. இழுது 2. நெய்த்தோர் 3. நிணம் 4. துவட்டாநாள்
**பொய்** : 1. மரப்பொந்து 2. பொக்கம்
**புயல்** : 1. எழிலி 2. விசுங்கன்
**செய்தி** : 1. ஒழுக்கம் 2. செய்தி
**செய்யல்** : 1. செயல் 2. சேறு
**ஐயர்** : 1. முனிவர் 2. வானோர் 3. அந்தணர்

***நெய்*** -- நெய், இரத்தம், நிணம், சித்திரைநாள்
***பொய்*** -- மரப்போர், இழுக்கு
***புயல்*** -- மேகம், சுக்கிரன்
***செய்தி*** -- ஒழுக்கம், செய்தி
***செய்யல்*** -- செய்தல், சேறு
***ஐயர்*** -- முனிவர், தேவர், பார்ப்பார்

308. **செய்கையே** தொழில், ஒழுக்கம்; **தியக்கமே** வெறி, உலோலம்;
**எய்தலே** அடைதல், உய்த்தல்; **இயக்கமே** தகை, இயங்கல்;
**பொய்தலே** இகுளை, ஆயம், பூவையராடல் முப்பேர்;
**குய்யே** இந்தனம், தாளித்த கறியென இருபேர் கூறும்.

**செய்கை** : 1. தொழில் 2. ஒழுக்கம்
**தியக்கம்** : 1. வெறி 2. உலோலம்
**எய்தல்** : 1. அடைதல் 2. உய்த்தல்
**இயக்கம்** : 1. தசை 2. இயங்கல்
**பொய்தல்** : 1. இகுளை 2. ஆயம் 3. பூவையராடல்
**குய்** : 1. இந்தனம் 2. தாளித்த கறி

***செய்கை*** -- தொழில், செயல்
***தியக்கம்*** -- கலக்கம், அசைவு
***எய்தல்*** -- சேர்தல், அம்புசெலுத்தல்
***இயக்கம்*** -- பெருமை, இயங்கல்
***பொய்தல்*** -- தோழி, மகளிர்கூட்டம், மகளிர்விளையாட்டு
***குய்*** -- நறும்புகை, தாளித்தகறி

309. **சையமே** மலை, கல் ஆகும்; **சாயமே** அந்தி, சந்தம்;
**மையல்** என்பதுவே பேது, மயக்கம் என்று இருபேர் ஓதும்;
**ஐயனே** குரவன், அப்பன், ஆசான், மாசாத்தன், மூத்தோன்;
**கையறல்** ஒழுக்கமின்மை, செயலின்மை இருபேர் காட்டும்.

**சையம்** : 1. மலை 2. கல்
**சாயம்** : 1. அந்தி 2. சந்தம்
**மையல்** : 1. பேது 2. மயக்கம்
**ஐயன்** : 1. குரவன் 2. அப்பன் 3. ஆசான் 4. மாசாத்தன் 5. மூத்தோன்
**கையறல்** : 1. ஒழுக்கமின்மை 2. செயலின்மை

***சையம்*** -- பருப்பதம், கல்
***சாயம்*** -- மாலைநேரம், நிறம்
***மையல்*** -- மயக்கம், உன்மத்தம்
***ஐயன்*** -- குரு, தந்தை, உபாத்தியாயன் ஐயனார், மூத்தோன்
***கையறல்*** -- ஒழுக்கமின்மை, செயலின்மை

310. **செய்யலே** ஒழுக்கம், காவல், சேறு, செய்வினை நாற்பேரே;
**நெய்தலே** நிலமே, ஓர்பூ, நெய்குதல், சாப்பறைப் பேர்;
**வெய்யோன்** ஆதவனே, தீயோன், விரும்பினனொடு, மும்மீன் ஆம்;
**ஐயையே** காளி, துர்க்கை, உமை, மகள், தலைவி, ஆசாள்.

**செய்யல்** : 1. ஒழுக்கம் 2. காவல் 3. சேறு 4. செய்வினை
**நெய்தல்** : 1. நிலம் 2. ஓர்பூ 3. நெய்குதல் 4. சாப்பறை
**வெய்யோன்** : 1. ஆதவன் 2. தீயோன் 3. விருப்பினன் 4. மும்மீன்
**ஐயை** : 1. காளி 2. துர்க்கை 3. உமை 4. மகள் 5. தலைவி 6. ஆசாள்

***செய்யல்*** -- ஒழுக்கம், காவல், அளறு, செய்தொழில்
***நெய்தல்*** -- நெய்தனிலம், ஆம்பல், நெய்தல், சாப்பறை
***வெய்யோன்*** -- சூரியன், தீயோன், விருப்புற்றோன், மிருகசீரிடநாள்
***ஐயை*** – காளி, துர்க்காதேவி, பார்வதி, மகள், த்லைவி, தவப்பெண்

311. **ஐய**மே பொழுது, பிச்சை, அனுமானம், கடிஞை என்ப;
**பெய்த**லே விடுதல், மாரி பெய்தல், போடுதல், செறித்தல்;
**மொய்** செருக்களம், போர், கூட்டம், மூசல், ஆர்பதம், மாதங்கம்;
**தொய்யி**லே எழுதுந் தொய்யில், உழுநிலம் இருபேர் சொல்லும்.

**ஐயம்** : 1. பொழுது 2. பிச்சை 3. அனுமானம் 4. கடிஞை
**பெய்தல்** : 1. விடுதல் 2. மாரிபெய்தல் 3. போடுதல் 4. செறித்தல்
**மொய்** : 1. செருக்களம் 2. போர் 3. கூட்டம் 4. மூசல் 5. ஆர்பதம் 6. மாதங்கம்
**தொய்யில்** : 1. எழுதுந்தொய்யில் 2. உழுநிலம்

***ஐயம்*** -- பொழுது, பிச்சை, சந்தேகம், இரப்போர்கலம்
***பெய்தல்*** -- விடுதல், மழைபெய்தல், போடுதல், செறிக்குதல்
***மொய்*** -- இரணகளம், யுத்தம், கூட்டம், மொய்த்தல், வண்டு, யானை
***தொய்யில்*** -- சாந்தினாலுடலிலிடுங்கோலம், உழுநிலம்

312. **தாயம்** வல், உரித்து, துன்பம்; தந்தை தன் வழியிற் சுற்றம்;
**சாயை** சூரியன்றன் தேவி, நிழல், நிறம் முப்பேர் சாற்றும்;
**ஆய்** அயர்வு அன்னை என்ப; **ஆயுதம்** படை, அரங்கம்;
**சாய**மே அந்திநேரம், சந்தமோடு இருபேர் ஆமே.

**தாயம்** : 1. வல் 2. உரித்து 3. துன்பம் 4. தந்தைவழிச் சுற்றம்
**சாயை** : 1. சூரியன்றன் தேவி 2. நிழல் 3. நிறம்
**ஆய்** : 1. அயர்வு 2. அன்னை
**ஆயுதம்** : 1. படை 2. அரங்கம்
**சாயம்** : 1. அந்திரேநம் 2. சந்தம்

***தாயம்*** -- சூதாடுகருவி, உரித்து, துன்பம், தந்தைவழிச் சுற்றம்
***சாயை*** -- சூரியன்மனைவி, நிழல், நிறம்
***ஆய்*** -- சோர்வு, தாய்
***ஆயுதம்*** -- படைக்கலம், கூத்துப்பயிலிடம்
***சாயம்*** -- அந்தியாகாலம், நிறம்

313. **காயம்** மெய், விண், வெண்காயம், பெருங்காயம், மரிசம், கார்ப்பு;
**நேயம்** நெய், எண்ணெய், அன்பு, நன்மையும் நிகழ்த்தும் அப்பேர்;

**மாயம்** பொய், கறுப்பு, தீமை; வஞ்சமும், அழகும் ஆகும்.
**காயல்** ஓர் நகரம், கானல், கழிமுகம் முப்பேர் காட்டும்.

**காயம்** : 1. மெய் 2. விண் 3. வெண்காயம் 4. பெருங்காயம் 5. மரிசம் 6. கார்ப்பு
**நேயம்** : 1. நெய் 2. எண்ணெய் 3. அன்பு 4. நன்மை
**மாயம்** : 1. பொய் 2. கறுப்பு 3. தீமை 4. வஞ்சம் 5. அழகு
**காயல்** : 1. ஓர்நகரம் 2. கானல் 3. கழிமுகம்

***காயம்*** -- உடல், ஆகாயம், வெண்காயம், பெருங்காயம், மிளகு, காழ்ப்பு
***நேயம்*** -- நெய், எண்ணெய், சிநேகம், நன்மை
***மாயம்*** -- பொய், கறுப்பு, தீமை, வஞ்சகம், அழகு
***காயல்*** -- ஓர்பட்டினம், உப்பளம், கழி

314. **வாயில்** காரணமே, தூது, வாசல், ஐம்பொறியும் ஆகும்;
**தேயம்** நாடு, இடம், மெய், சோரம்; **தீயரே** கிராதர், நீசர்;
**பாயசம்** பாளிதப்பேர்; பாற்சோற்றிச் செடியும் ஆகும்.
**மாயை** பொன், இரதி, காளி, வஞ்சம், ஓர்புரி, பொய் ஆமே.

**வாயில்** : 1. காரணம் 2. தூது 3. வாசல் 4. ஐம்பொறி
**தேயம்** : 1. நாடு 2. இடம் 3. மெய் 4. சோரம்
**தீயர்** : 1. கிராதர் 2. நீசர்
**பாயசம்** : 1. பாளிதம் 2. பாற்சோற்றிச் செடி
**மாயை** : 1. பொன் 2. இரதி 3. காளி 4. வஞ்சம் 5. ஓர்புரி 6. பொய்

***வாயில்*** -- காரணம், தூது, வாசல், பஞ்சப்பொறி
***தேயம்*** -- நாடு, இடம், உடல், களவு
***தீயர்*** -- வேடர், கீழ்மக்கள்
***பாயசம்*** -- பாற்சோறு, பாற்சோற்றிச்செடி
***மாயை*** -- இலக்குமி, இரதிதேவி, காளி, வஞ்சம், ஓர்புரம், பொய்

315. **சேய்**குகன்,இளமை,தூரம்,செம்மை,வேய், மகன், சேண், செவ்வாய்;
**வாய்** குழல் இடமே, வாக்கு; வாய்மையும், வாயும் அப்பேர்.
**ஆய்தலே** நுணுக்கம், தேர்தல்; ஒடித்தலும் அப்பேர் ஆகும்.
**வேய்தலே** அணிதல், சூடல், வேயுள், மூடுதலும் ஆமே.

**சேய்** : 1. குகன் 2. இளமை 3. தூரம் 4. செம்மை 5. வேய் 6. மகன் 7. சேண் 8. செவ்வாய்
**வாய்** : 1. குழல் 2. இடம் 3. வாக்கு 4. வாய்மை 5. வாய்
**ஆய்தல்** : 1. நுணுக்கம் 2. தேர்தல் 3. ஒடித்தல்
**வேய்தல்** : 1. அணிதல் 2. சூடல் 3. வேயுள் 4. மூடுதல்

*சேய்* -- குகன், இளமை, தூரம், செம்மை, மூங்கில், சுதன், நீளம், செவ்வாய்
*வாய்* -- குழல், இடம், பேச்சு , உண்மை, வாய்
*ஆய்தல்* -- நுண்மை, ஆராய்தல், ஒடிக்குதல்
*வேய்தல்* -- அணிதல், சூடுதல், வேயுள், மூடல்

316. **தேய்வு** எச்சம், பழங்கண் ஆகும்; **சேய்மை**யே நீளம், தூரம்;
**ஆய்வு** என்ப வருத்தம், தேர்ச்சி; அகலமும், நுணுக்கமும் பேர்.
**மாய்வு** என்ப மறைவு, சோர்வு ஆம்; **மாயன்** மால், கருநிறத்தோன்;
**வாய்மை**யே உண்மை, சொல்லு, வலி முப்பேர் வகுக்கற் பாற்றே.

**தேய்வு** : 1. எச்சம் 2. பழங்கண்
**சேய்மை** : 1. நீளம் 2. தூரம்
**ஆய்வு** : 1. வருத்தம் 2. தேர்ச்சி 3. அகலம் 4. நுணுக்கம்
**மாய்வு** : 1. மறைவு 2. சோர்வு
**மாயன்** : 1. மால் 2. கருநிறத்தோன்
**வாய்மை** : 1. உண்மை 2. சொல்லு 3. வலி

*தேய்வு* -- குறைவு, துன்பம்
*சேய்மை* -- நீளம், தூரம்
*ஆய்வு* -- வருத்தம், ஆராய்வு, அகலம், நுண்மை
*மாய்வு* -- மறைவு, சோர்வு
*மாயன்* -- திருமால், கரியநிறமுடையோன்
*வாய்மை* -- உண்மை, சொல், வலி

317. **வேய்** துளை, ஒற்று, வேரல்; வீணையும் விளம்பும் நாற்பேர்.
**காய்தலே** துணித்தல், கோபம்; **காய்ப்பு** என்ப வடு, வெறுப்பு [ஆம்;
**தோய்தலே** புல்லல் நீரிற்குடைதலும், துழாவலும் பேர்.
**பாய்தலே** குதித்தலோடு, பரவல், தாண்டுதலும் ஆமே.

**வேய்** : 1. துளை 2. ஒற்று 3. வேரல் 4. வீணை
**காய்தல்** : 1. துணித்தல் 2. கோபம்
**காய்ப்பு** : 1. வடு 2. வெறுப்பு
**தோய்தல்** : 1. புல்லல் 2. நீரிற்குடைதல் 3. துழாவல்
**பாய்தல்** : 1. குதித்தல் 2. பரவல் 3. தாண்டுதல்

*வேய்* -- துளையுடைப்பொருள், வேவு, மூங்கில், வீணை
*காய்தல்* -- வெட்டடல், கோபித்தல்
*காய்ப்பு* -- தழும்பு, வெறுப்பு
*தோய்தல்* -- புணர்தல், நீராடல், துழாவல்
*பாய்தல்* -- குதிக்குதல், பரவுதல், தாண்டல்

318. **கயம்** ஒரு நோய், கீழ், ஆழம், கரி, குளம், இளமை, கேடு, வியல், அகழ், மேன்மை, நீர், ஏர் விளம்பு ஈர் அறு பேர் ஆகும்; **அயம்** நிலன், இரும்பு, பங்கம், ஆடு, நல்வினை, விழா, நீர், வயமுறு புரவி, பொய்கை, வருபெயர் ஒன்பான் ஆமே.

**கயம்** : 1. ஒருநோய் 2. கீழ் 3. ஆழம் 4. கரி 5. குளம் 6. இளமை 7. கேடு 8. வியல் 9. அகழ் 10. மேன்மை 11. நீர் 12. ஏர்.
**அயம்** : 1. நிலன் 2. இரும்பு 3. பங்கம் 4. ஆடு 5. நல்வினை 6. விழா 7. நீர் 8. புரவி 9. பொய்கை.

***கயம்*** -- கயரோகம், கீழ், ஆழம், யானை, தடாகம், இளமை, கேடு, பெருமை, அகழி, மேன்மை, நீர், அழகு
***அயம்*** -- நிலம், கரும்பொன், சேறு, ஆடு, நல்வினை, விழவு, சலம், குதிரை, குளம்

319. **தொய்யலே** உழவினோடு, துயர், அகமகிழ்ச்சி, இன்பம், துய்ய பொற்பு, அள்ளல், ஈடு சொற்றிடும் எழு பேர் ஆகும்; **வையமே** உரோணி, ஏறு, வசுந்தரை, சகடமோடு, செய்யதேர், பாண்டில் பூண்ட ஊர்தியும், சிவிகையும் பேர்.

**தொய்யல்** : 1. உழவு 2. துயர் 3. அகமகிழ்ச்சி 4. இன்பம் 5. பொற்பு 6. அள்ளல் 7. ஈடு
**வையம்** : 1. உரோணி 2. ஏறு 3. வசுந்தரை 4. சகடம் 5. தேர் 6. பாண்டில் பூண்ட ஊர்தி 7. சிவிகை

***தொய்யல்*** -- உழவு, துயரம், அகமகிழ்ச்சி, சுகம், அழகு, சேறு, குழைவு
***வையம்*** -- உரோகிணிநாள், எருது, பூமி, பண்டி, தேர், பாண்டில் பூண்டவூர்தி, தண்டிகை

320. **ஆயம்** ஆதாயம், நாணி, அன்னை, மெல்லரி, கவற்றிற் தாயமோடு, இகுளை, சுங்கம், ஓரையும் எண்பேர் சாற்றும்; **சாயலே** மேன்மை, நுண்மை, சந்தம், மேம் பாட்டினோடே, வேயு நல்லழகு, ஒப்பும் இயம்பிய நாமம் ஆமே.

**ஆயம்** : 1. ஆதாயம் 2. நாணி 3. அன்னை 4. மெல்லரி 5. கவற்றுத்தாயம் 6. இகுளை 7. சுங்கம் 8. ஓரை
**சாயல்** : 1. மேன்மை 2. நுண்மை 3. சந்தம் 4. மேம்பாடு 5. அழகு 6. ஒப்பு.

***ஆயம்*** -- ஆதாயம், நாணி, தாய், பம்பைமேளம், சூதாடுகருவி தோழி, ஆயம், மகளிர்கூட்டம்
***சாயல்*** -- மேன்மை, நுண்மை, நிறம், மேம்பாடு, அழகு, ஒப்பு

321. **நியமம்** அங்காடி, வீதி, நெடுந்தெரு, நியதி, யோகம்,
பயமுறு அகணி, கோயில், பரியம், நிச்சயம், வளாகம்,
வியனகர் குருவி, வெய்ய பிதிர், வனம், விரதம் என்ன
இயலும் ஈரேழு பேரும் எய்திய நாமம் ஆமே.

**நியமம்** : 1. அங்காடி 2. வீதி 3. நெடுந்தெரு 4. நியதி 5. யோகம் 6. அகணி 7. கோயில் 8. பரியம் 9. நிச்சயம் 10. வளாகம் 11. வியனகர் 12. குருவி 13. பிதிர்வனம் 14. விரதம்.

***நியமம்*** -- கடைவீதி, தெரு, நெடுந்தெரு, செய்கடன், அட்டாங்க யோகத்தொன்று, மருதநிலம், தேவர்கோயில்), முறைமை, நிச்சயம், இடம், நகரம், குருவி, சுடுகாடு, விரதம்.

**(யகர எதுகை முற்றிற்று)**

## ரகர எதுகை

322. **சிரகமே** கரகம் ஆகும்; சென்னியிற் சோடும் அப்பேர்.
**கரகமே** ஆலங்கட்டி, கமண்டலம், துளிநீர், கங்கை;
**மரபு**நீர், முறைமை, தொன்மை, வமிசமும் வழங்கும் நாற்பேர்;
**சரபமே** வருடையாடு, சம்பரம், குறும்பாடு ஆமே.

**சிரகம்** : 1. கரகம் 2. சென்னியிற் சோடு
**கரகம்** : 1. ஆலங்கட்டி 2. கமண்டலம் 3. துளிநீர் 4. கங்கை
**மரபு** : 1. நீர் 2. முறைமை 3. தொன்மை 4. வமிசம்
**சரபம்** : 1. வருடையாடு 2. சம்பரம் 3. குறும்பாடு

***சிரகம்*** -- கரகம், தலைச்சீரா
***கரகம்*** -- மழைக்கட்டி, கமண்டலம், நீர்த்துளி, கங்கை
***மரபு*** -- குணம், முறைமை, பழமை, வமிசம்
***சரபம்*** -- வரையாடு, எண்காற்புள், குறும்பாடு

323. **இரதமே** புணர்ச்சி, சூதம், இன்சுவை, அரைஞாண், பொற்றேர்,
**சரணமே** புகல், கலாபம், தாள், மனை, மருதத்து ஊர் ஆம்;
**தரளம்** முத்து, அசைவே, உண்டை; **சரளமே** தகுதி, தாரை;
**இரதனம்** பரியகத்தோடு, எயிறு, அரைநூல் முப்பேரே.

**இரதம்** : 1. புணர்ச்சி 2. சூதம் 3. இன்சுவை 4. அரைஞாண் 5. தேர்
**சரணம்** : 1. புகல் 2. கலாபம் 3. தாள் 4. மனை 5. மருதத்து ஊர்
**தரளம்** : 1. முத்து 2. அசைவு 3. உண்டை
**சரளம்** : 1. தகுதி 2. தாரை
**இரதனம்** : 1. பரியகம் 2. எயிறு 3. அரைநூல்

***இரதம்*** -- புணர்ச்சி, மாமரம், இனிமை, அரைஞாண், தேர்
***சரணம்*** -- அடைக்கலம், மயிற்றோகை, கால், வீடு, மருதநிலத்தூர்
***தரளம்*** -- முத்து, அசைவு, திரட்சி
***சரளம்*** -- தகுதி, ஒழுங்கு
***இரதனம்*** -- கிண்கிணி, பல், அரைஞாண்

324. **உரம்** மதில், வலியே, ஞானம், ஊக்கம், மார்போடு ஐம்பேர்;
**சிரம்** நெடுங்காலம், சென்னி; உயரமும் செப்பல் ஆகும்.
**புரம்** உடல், புரி, முன், ஊர் ஆம்; **புரவலன்** வள்ளல், வேந்தன்;
**கரம்** என்ப கிரணம், செங்கை, கழுதை, நஞ்சு, இறையும் ஆமே.

**உரம்** : 1. மதில் 2. வலி 3. ஞானம் 4. ஊக்கம் 5. மார்பு
**சிரம்** : 1. நெடுங்காலம் 2. சென்னி 3. உயரம்
**புரம்** : 1. உடல் 2. புரி 3. முன் 4. ஊர்
**புரவலன்** : 1. வள்ளல் 2. வேந்தன்
**கரம்** : 1. கிரணம் 2. கை 3. கழுதை 4. நஞ்சு 5. இறை.

***உரம்*** -- மதில், வலி, ஞானம், ஊக்கம், மார்பு
***சிரம்*** -- நெடுங்காலம், தலை, உயர்ச்சி
***புரம்*** -- உடம்பு, நகரம், முன், ஊர்
***புரவலன்*** -- ஈகையாளன், அரசன்
***கரம்*** -- கிரணம், கை, கழுதை, விடம், இறை

325. **அரவம்** நூபுரம், பாம்பு, ஓசை, ஆயில்நாள் ஆகும் நாற்பேர்;
**பரவை** வாருதி, பரப்பு, பங்கயமாதின் கூத்து ஆம்;
**இரலை**யே கலை, ஊதுங்கொம்புஇரண்டுடன், முதல்நாள், புல்வாய்;
**அரசு** மன், வியாழம், நாடு, ஓர்தரு, இராச்சியமும் ஆமே.

**அரவம்** : 1. நூபுரம் 2. பாம்பு 3. ஓசை 4. ஆயில்நாள்
**பரவை** : 1. வாருதி 2. பரப்பு 3. பங்கயமாதின் கூத்து
**இரலை** : 1. கலை 2. ஊதுங்கொம்பு 3. முதல்நாள் 4. புல்வாய்
**அரசு** : 1. மண் 2. வியாழம் 3. நாடு 4. ஓர்தரு 5. இராச்சியம்.

***அரவம்*** -- சிலம்பு, சர்ப்பம், ஒலி, ஆயிலியநாள்
***பரவை*** -- கடல், பரப்பு, இலக்குமிகூத்து
***இரலை*** -- கலைமான், ஊதிடுகொம்பு, அச்சுவினிநாள், புல்வாய்
***அரசு*** -- இராசா, வியாழம், நாடு, அரசமரம், இராச்சியம்

326. **அரம்பை**யே அமரர் மாதோடு, அரலை, சேகிலி என்று ஆகும்;
**சரம்** கணை, கொறுக்கை, நாணல், தனிமணிவடம், தொடைப்பேர்;

**நரந்தம்** வாசனையே, காக்கை, நாரங்கமொடு, கத்தூரி;
**சுருங்கை**யே கரந்து பண்ணும் கற்படை, நுழைவாயில் பேர்.

**அரம்பை** : 1. அமரர் மாது 2. அரலை 3. சேகிலி
**சரம்** : 1. கணை 2. கொறுக்கை 3. நாணல் 4. மணிவடம் 5. தொடை
**நரந்தம்** : 1. வாசனை 2. காக்கை 3. நாரங்கம் 4. கத்தூரி
**சுருங்கை** : 1. கரந்து பண்ணும் கற்படை 2. நுழைவாயில்

***அரம்பை*** -- தேவப்பெண், மரல், வாழை
***சரம்*** -- அம்பு, கொறுக்கைச்சி, நாணல், மணிவடம், மாலை
***நரந்தம்*** -- வாசனை, காகம், நாரத்தைமரம், கத்தூரி
***சுருங்கை*** -- கோட்டையிற்கள்ளவழி, சாளரம்

327. **அரலை**யே கழலைக் கட்டி, அம்புதி, மரலே, கோட்டை;
**சிரல்** முடிவிடமே, பொன்வாய்ப்புள் என இருபேர் செப்பும்;
**தரவு** என்ப கலியுறுப்பு, தலைவன், கட்டளை, பிடர்ப்பேர்;
**பரவல்** சொல்லுதல், இறைஞ்சல்; பரத்தல், ஏத்துதலும் ஆமே

**அரலை** : 1. கழலைக்கட்டி 2. அம்புதி 3. மரல் 4. கோட்டை
**சிரல்** : 1. முடிவிடம் 2. பொன்வாய்ப்புள்
**தரவு** : 1. கலியுறுப்பு 2. தலைவன் 3. கட்டளை 4. பிடர்
**பரவல்** : 1. சொல்லுதல் 2. இறைஞ்சல் 3. பரத்தல் 4. ஏத்துத

***அரலை*** -- கழலைக்கட்டி, கடல், மரல், கோட்டை
***சிரல்*** -- முடிவிடம், சிச்சிலிக்குருவி
***தரவு*** -- கலிப்பாலினோருறுப்பு, தலைவன் கட்டளை, பிடரி
***பரவல்*** -- சொல்லல், வணங்கல், பரக்குதல், புகழ்தல்

328. **சிரவம்** கோரசமே, அள் ஆம்; **சிரவணம்** கேள்வி, ஓணம்;
**இரவு** யாமினி, இரத்தல்; **இரவி**யே சயிலம், வெய்யோன்;
**புரவி** முன்னாளே, பாய்மா; **புரத்த**லே அளித்தல், ஈதல்;
**குரவை** வாருதியே, அங்கை கோத்தாடல், கூத்தும் ஆமே.

**சிரவம்** : 1. கோரசம் 2. அள்
**சிரவணம்** : 1. கேள்வி 2. ஓணம்
**இரவு** : 1. யாமினி 2. இரத்தல்
**இரவி** : 1. சயிலம் 2. வெய்யோன்
**புரவி** : 1. முன்னாள் 2. பாய்மா
**புரத்தல்** : 1. அளித்தல் 2. ஈதல்
**குரவை** : 1. வாருதி 2. அங்கை கோத்தாடல் 3. கூத்து

*சிரவம்* -- கவுதாரி, காது
*சிரவணம்* -- காது, திருவோணநாள்
*இரவு* -- இரா, இரப்பு
*இரவி* -- மலை, சூரியன்
*புரவி* -- அசுவதிநாள், குதிரை
*புரத்தல்* -- காத்தல், கொடுத்தல்
*குரவை* -- கடல், கைகோத்தாடல், கூத்து

329. **இரத்தம்** வித்துருமம் செம்பால்; இராகமும் இயம்பும் முப்பேர்.
**கரத்தலே** மறைப்பு, ஈயாமை, கள்ளலும் முப்பேர் காட்டும்;
**சிரத்தலே** அழித்தல், ஆர்ப்பு ஆம்; **சீரை** வற்கலை, துகில் பேர்;
**சுரத்தலே** பயத்தல், ஆதல்; ஈதலும் அப்பேர் சொல்லும்.

**இரத்தம்** : 1. வித்துருமம் 2. செம்பால் 3. இராகம்
**கரத்தல்** : 1. மறைப்பு 2. ஈயாமை 3. கள்ளல்
**சிரத்தல்** : 1. அழித்தல் 2. ஆர்ப்பு
**சீரை** : 1. வற்கலை 2. துகில்
**சுரத்தல்** : 1. பயத்தல் 2. ஆதல் 3. ஈதல்

*இரத்தம்* -- பவளம், உதிரம், சிவப்பு
*கரத்தல்* -- மறைத்தல், கொடாமை, களவுசெய்தல்
*சிரத்தல்* -- அழித்தல், ஒலித்தல்
*சீரை* -- மரவுரி, புடைவை
*சுரத்தல்* -- பயத்தல், உண்டாதல், கொடுத்தல்

330. **பரம்** தனு, கடவுள், அங்கி, பல்லணம், மிகுதி, பாரம்;
**குரம்பையே** முட்டை, தேகம், குயிலாயம், குடிஞை என்ப;
**வரம்பு** அணை, வழியே, எல்லை; **வரிதலே** வரைதல், கட்டல்;
**குரம்** பவித்திரியே, தேனு, குதிரையின் குழம்பும் ஆமே.

**பரம்** : 1. தனு 2. கடவுள் 3. அங்கி 4. பல்லணம் 5. மிகுதி 6. பாரம்
**குரம்பை** : 1. முட்டை 2. தேகம் 3. குயிலாயம் 4. குடிஞை
**வரம்பு** : 1. அணை 2. வழி 3. எல்லை
**வரிதல்** : 1. வரைதல் 2. கட்டல்
**குரம்** : 1. பவித்திரி 2. தேனு 3. குதிரையின் குழம்பு

*பரம்* -- உடல், கடவுள், கவசம், குதிரைக்கல்லணை, மிகுதி, பாரம்
*குரம்பை* -- முட்டை, உடம்பு, பறவைக்கூடு, சிறுகுடில்
*வரம்பு* -- அணை, வழி, எல்லை
*வரிதல்* -- எழுதல், கட்டுதல்
*குரம்* -- தருப்பை, பசு, குதிரைக்குழம்பு

331. **புரணி** ஊன், சருமம் ஆகும்; **புரிதலே** இயற்றல், ஓம்பல்;
**பரணமே** கவசம், பட்டு ஆம்; **பரிசனம்** உழையோர், சுற்றம்;
**அரணியே** ஞெலிகோல், அங்கி, ஆரை என்று ஆகும் முப்பேர்,
**தரணி** பூதலமே, வெய்ய தபனன், வேதண்டம் ஆமே.

**புரணி** : 1. ஊன் 2. சருமம்
**புரிதல்** : 1. இயற்றல் 2. ஓம்பல்
**பரணம்** ; 1. கவசம் 2. பட்டு
**பரிசனம்** : 1. உழையோர் 2.. சுற்றம்
**அரணி** : 1. ஞெலிகோல் 2. அங்கி 3. ஆரை
**தரணி** : 1. பூதலம் 2. தபனன் 3. வேதண்டம்

***புரணி*** -- ஊன், தோல்
***புரிதல்*** -- செய்தல், விரும்பல்
***பரணம்*** -- கவசம், பட்டுச்சீலை
***பரிசனம்*** -- ஏவல்செய்வோர், உறவோர்
***அரணி*** -- தீக்கடைகோல், கவசம், மதில்
***தரணி*** -- பூமி, சூரியன், மலை

332. **பிரசம்** தேன், சாகம், கள்ளு; பிருங்கமோடு, இறாலும் ஐம்பேர்.
**குரகம்** நீர்ப்பறவை, பூவை; **குரங்கமே** விலங்கு, மான் ஆம்;
**சுரசமே** இரதம், சாறு, சிறுகிழங்கு எனவும் சொல்லும்.
**வரதனே** அருகன், ஈசன், மாயவன் முப்பேர் ஆமே.

**பிரசம்** : 1. தேன் 2. சாகம் 3. கள்ளு 4. பிருங்கம் 5. இறால்
**குரகம்** : 1. நீர்ப்பறவை 2. பூவை
**குரங்கம்** : 1. விலங்கு 2. மான்
**சுரசம்** : 1. இரதம் 2. சாறு 3. சிறுகிழங்கு
**வரதன்** : 1. அருகன் 2. ஈசன் 3. மாயவன்

***பிரசம்*** -- தேன், தேனீ, மது, வண்டு, தேன்கூடு
***குரகம்*** -- நீர்வாழ்பறவை, நாகணவாய்ப்புள்
***குரங்கம்*** -- விலங்கின்பொது, மான்
***சுரசம்*** -- பாதரசம், சாறு, சிறுகிழங்கு
***வரதன்*** -- அருகதேவன், சிவன், திருமால்

333. **திரள்** என்பது உண்டை, கூட்டம்; சேனையும் முப்பேர் செப்பும்.
**தரம்** அச்சம், கூட்டம் வெற்பு, சமானம், பக்குவம், வலிப்பேர்;
**குரவர்** மந்திரியர், மூத்தோர்; குருக்களோடு, அன்னை தந்தை.
**வரம்** நவநிதியில் ஒன்று, வழங்கு அருள், மேன்மை யாமே.

**திரள்** : 1. உண்டை 2. கூட்டம் 3. சேனை
**தரம்** : 1. அச்சம் 2. கூட்டம் 3. வெற்பு 4. சமானம் 5. பக்குவம் 6. வலி
**குரவர்** : 1. மந்திரியர் 2. மூத்தோர் 3. குருக்கள் 4. அன்னைதந்தை
**வரம்** : 1. நவநிதியில் ஒன்று 2. அருள் 3. மேன்மை.

***திரள்*** -- உண்டை, கூட்டம், சேனை
***தரம்*** -- அச்சம், கூட்டம், மலை, ஒப்பு, பக்குவம், வலி
***குரவர்*** -- மந்திரியர், மூத்தோர், குருக்கள், மாதாபிதா
***வரம்*** -- நவநிதியிலொன்று, அனுக்கிரகம், மேன்மை

334. **முரண்** பகை, திரிபினோடு, மொய்ம்பு என மொழியும் முப்பேர்;
**சுரம்** அருநெறி, காடு, ஓர்நோய், துறை எனச் சொல்லல் ஆகும்.
**அரண்** என்பது அழகு, காவல், அணி மதில், காவற்காடு ஆம்;
**பரணி** தூம்பு, ஓர்நாள், கூத்து, ஓர்பாமாலை; கடிப்பமும் பேர்.

**முரண்** : 1. பகை 2. திரிபு 3. மொய்ம்பு
**சுரம்** : 1. அருநெறி 2. காடு 3. ஓர்நோய் 4. துறை
**அரண்** : 1. அழகு 2. காவல் 3. மதில் 4. காவற்காடு
**பரணி** : 1. தூம்பு 2. ஓர்நாள் 3. கூத்து 4. ஓர்பாமாலை 5. கடிப்பம்

***முரண்*** -- பகை, திரிபு, வலி
***சுரம்*** -- அரும்வழி, காடு, சுரநோய், வழி
***அரண்*** -- அழகு, காவல், மதில், காவற்காடு
***பரணி*** -- மதகு, பரணிநாள், கூத்து, ஆயிரம்யானை கொன்ற தலைவனைப் பாடும் பிரபந்தம், ஆபரணப்பெட்டி

335. **அரங்கு** போர்க்களம், வட்டாடுமிடம், சபை, மனை விகற்பம்;
**குரங்கு** மர்க்கடம், விலங்கின் பொதுவொடு, கோணலும் பேர்;
**எருந்து** உரல், ஏரல் என்ப; **ஏரியே** குளம், பிண்டிப்பேர்,
**அரந்தை** என்பது குறிஞ்சி யாழிசை, துன்பம் ஆமே.

**அரங்கு** : 1. போர்க்களம் 2. வட்டாடுமிடம் 3. சபை 4. மனை விகற்பம்
**குரங்கு** : 1. மர்க்கடம் 2. விலங்கின்பொது 3. கோணல்
**எருந்து** : 1. உரல் 2. ஏரல்
**ஏரி** : 1. குளம் 2. பிண்டி
**அரந்தை** : 1. குறிஞ்சி யாழிசை 2. துன்பம்

***அரங்கு*** -- இரணகளம், சூதாடுமிடம், சபை, மனைவிகற்பம்
***குரங்கு*** -- வானரம், விலங்கின்பொது, கோணல்
***எருந்து*** -- உரல், கிழிஞ்சில்
***ஏரி*** -- தடாகம், புநர்பூசம்
***அரந்தை*** -- குறிஞ்சியாழிசை, வருத்தம்

336. **இராசியம்** புதை, உள்வீடும், யோனியும் இயம்பும் நாமம்;
**பராகமே** இரேணு ஆகும்; பரிமள மலர்த்தூளும் பேர்.
**துரோணமே** சரபம், காக்கை, தும்பை, வில், தனு, பதக்கு ஆம்;
**இராகமே** கீதம், செம்மை; இச்சையும், நிறமும் ஆமே.

**இராசியம்** : 1. புதை 2. உள்வீடு 3. யோனி
**பராகம்** : 1. இரேணு 2. பரிமள மலர்த்தூள்
**துரோணம்** : 1. சரபம் 2. காக்கை 3. தும்பை 4. வில் 5. தனு 6. பதக்கு
**இராகம்** : 1. கீதம் 2. செம்மை 3. இச்சை 4. நிறம்

***இராசியம்*** -- மறைவு, உள்வீடு, யோனி
***பராகம்*** -- அணு, பூஞ்சுண்ணம்
***துரோணம்*** -- எண்காற்புள், காகம், தும்பைச்செடி, வில், தனுவிராசி, பதக்கு
***இராகம்*** -- கீதம், சிவப்பு, ஆசை, நிறம்

337. **அராமம்** ஆராமம், பைங்கூழ்; **அரற்றலே** அழல், ஒலித்தல்;
**தராவே** காற்குளம், ஓர்கீரை, சங்கொடு, மதுகம் என்ப;
**மராளமே** எகினம், போகி, மாதளை வகுக்கும் முப்பேர்;
**குரால்** என்ப கபிலை, புற்கு; கோட்டானும் குறித்த பேரே.

**அராமம்** : 1. ஆராமம் 2. பைங்கூழ்
**அரற்றல்** : 1. அழல் 2. ஒலித்தல்
**தரா** : 1. காற்குளம் 2. ஓர்கீரை 3. சங்கு 4. மதுகம்
**மராளம்** : 1. எகினம் 2. போகி 3. மாதளை
**குரால்** : 1. கபிலை 2. புற்கு 3. கோட்டான்.

***அராமம்*** -- சோலை, பைங்கூழ்
***அரற்றல்*** -- அழுதல், ஒலித்தல்
***தரா*** -- பூசநாள், ஓர்கீரை, சங்கு, தரா
***மராளம்*** -- அன்னம், பாம்பு, மாதளை
***குரால்*** -- பசு, கபிலநிறம், கோட்டான்

338. **துரால்** என்ப நரலே, துன்பம்; **சுரியே** ஆணரி, சுழற்சி;
**சராவமே** அகல், சலாகை; **தரணமே** தரித்தல், தாண்டல்;
**அராகமே** செம்பொன், பாலையாழ், முடுகியலே, ஆசை;
**மராமரம்** ஆச்சா, அச்சுவதத்தமும், நீபமும் பேர்.

**துரால்** : 1. நரல் 2. துன்பம்
**சுரி** : 1. ஆணரி 2. சுழற்சி

**சராவம்** : 1. அகல் 2. சலாகை
**தரணம்** : 1. தரித்தல் 2. தாண்டல்
**அராகம்** : 1. செம்பொன் 2. பாலையாழ் 3. முடுகியல் 4. ஆசை
**மராமரம்** : 1. ஆச்சா 2. அச்சுவத்தம் 3. நீபம்

***துரால்*** -- செத்தை, துன்பம்
***சுரி*** -- ஓரி, சுழற்சி
***சராவம்*** -- அகல், சலாகை
***தரணம்*** -- தரித்தல், தாண்டல்
***அராகம்*** -- பொன், பாலையாழ், முடுகியல், ஆசை
***மராமரம்*** -- ஆச்சாமரம், அரசமரம், கடம்பு

339. **இராடம்** சுத்தவம், ஓர்தேயம்; **இரணமே** புண், போர் என்ப;
**புராணம்** காவியமே, காதை, பழைமையும் போற்றும் முப்பேர்;
**வராகம்** ஓர்புராணம், கேழல்; **மரகதம்** பசுமை, பச்சை;
**இராசி** நண்பகல், மேடாதி, ஈட்டமோடு, ஒழுங்கும் ஆமே.

**இராடம்** : 1. சுத்தவம் 2. ஓர்தேயம்
**இரணம்** : 1. புண் 2. போர்
**புராணம்** : 1. காவியம் 2. காதை 3. பழைமை
**வராகம்** : 1. ஓர்புராணம் 2. கேழல்
**மரகதம்** : 1. பசுமை 2. பச்சை
**இராசி** : 1. நண்பகல் 2. மேடாதி 3. ஈட்டம் 4. ஒழுங்கு

***இராடம்*** -- கழுதை, ஓர்தேயம்
***இரணம்*** -- புண், யுத்தம்
***புராணம்*** -- காவியம், கதை, பழமை
***வராகம்*** -- வராகபுராணம், பன்றி
***மரகதம்*** -- பச்சை, மரகத ரத்தினம்
***இராசி*** -- மத்தியானம், மேடாதியிராசிகள், கூட்டம், ஒழுங்கு

340. **சிராவணம்** நபம், சிலைப்பேர்; **திரங்கலே** திரைதல், காயம்;
**கிராணம்** ஆக்கிராணம், கிண்ணம்; கிரகணம் கிளத்தும் முப்பேர்.
**தராசு** என்பது துலை, துலாக்கோல்; தருமநாள் எனவும் சாற்றும்
**மராடம்** பெண்மயிர், வளாகம்; புறமயிர் வகுத்த பேரே.

**சிராவணம்** : 1. நபம் 2. சிலை
**திரங்கல்** : 1. திரைதல் 2. காயம்
**கிராணம்** : 1. ஆக்கிராணம் 2. கிண்ணம் 3. கிரகணம்
**தராசு** : 1. துலை 2. துலாக்கோல் 3. தருமநாள்
**மராடம்** : 1. பெண்மயிர் 2. வளாகம் 3. புறமயிர்

*சிராவணம்* -- ஆவணிமாதம், கல்
*திரங்கல்* -- திரைதல், காயம்
*கிராணம்* -- மூக்கு, சிறுவட்டில், கிரகணம்
*தராசு* -- துலாராசி, துலாக்கோல், பரணிநாள்
*மராடம்* -- பெண்மயிர், இடம், புறமயிர்

341. **சரி** கரவளை, ஒப்பு, ஈட்டம், சாரலும், தரம் என்று ஆகும்;
**கரியவன்** சனி, மால், ஈசன்; கள்வன், இந்திரனும் என்ப.
**பரிகமே** கிடங்கு, மேடை, பகர்மதில், கணையம் நாற்பேர்;
**கரில்** குற்றம், காழ்த்தல் என்ப; கொடுமையும் கருதல் ஆமே.

**சரி** : 1. கரவளை 2. ஒப்பு 3. ஈட்டம் 4. சாரல் 5. தரம்
**கரியவன்** : 1. சனி 2. மால் 3. ஈசன் 4. கள்வன் 5. இந்திரன்
**பரிகம்** : 1. கிடங்கு 2. மேடை 3. மதில் 4. கணையம்
**கரில்** : 1. குற்றம் 2. காழ்த்தல் 3. கொடுமை

*சரி* -- கைவளை, ஒப்பு, கூட்டம், மலைச்சாரல், வழி
*கரியவன்* -- சனி, விட்டுணு, சிவன், கள்வன், தேவேந்திரன்
*பரிகம்* -- அகழ், மதிலுண்மேடை, மதில், வளைதடி
*கரில்* -- குற்றம், கார்ப்பு, கொடுமை

342. **குரை** என்பது ஒலியே, வாசி; **கூர்** என்ப மிகுதி, கூர்மை;
**கிரி** மருட்பன்றி, ஓங்கல்; கிருட்டியும் கிளத்தும் முப்பேர்.
**பரிகையே** மதிலுண்மேடை, பரிவு அகழ் பகரும் நாமம்;
**அரிதம்** புன்னிலமே, பொன்மை, ஆசை, சாமளம் நாற்பேர்.

**குரை** : 1. ஒலி 2. வாசி
**கூர்** : 1. மிகுதி 2. கூர்மை
**கிரி** : 1. மருட்பன்றி 2. ஓங்கல் 3. கிருட்டி
**பரிகை** : 1. மதிலுண்மேடை 2. பரிவு 3. அகழ்
**அரிதம்** : 1. புன்னிலம் 2. பொன்மை 3. ஆசை 4. சாமளம்

*குரை* -- ஒலி, குதிரை
*கூர்* -- மிகுதி, கூர்மை
*கிரி* -- மருட்பன்றி, மலை, பன்றி
*பரிகை* -- மதிலுண்மேடை, பரிதல், அகழ்
*அரிதம்* -- பசும்புன்னிலம், பொன்னிறம், திசை, பச்சை

343. **துரிதமே** கலக்கம், பாவம், துன்பம், சீக்கிரம், கேடு ஆகும்;
**இரிதலே** கெடுதல், ஓடல், இடைதல், அஞ்சுதலும் என்ப;

சொரிதலே சுழலல், ஈதல், பொழிதலும் சொல்லும் முப்பேர்,
திரிதலே இயங்கல், சூர்த்தல், செல்லுதல், கெடுதல் ஆமே.

**துரிதம்** : 1. கலக்கம் 2. பாவம் 3. துன்பம் 4. சீக்கிரம் 5. கேடு
**இரிதல்** : 1. கெடுதல் 2. ஓடல் 3. இடைதல் 4. அஞ்சுதல்
**சொரிதல்** : 1. சுழலல் 2. ஈதல் 3. பொழிதல்
**திரிதல்** : 1. இயங்கல் 2. சூர்த்தல் 3. செல்லுதல் 4. கெடுதல்

***துரிதம்*** -- கலக்கம், பாவம், துன்பம், வேகம், கேடு
***இரிதல்*** -- கெடல், ஓடுதல், சாய்தல், பயப்படல்
***சொரிதல்*** -- சுழலல், கொடுத்தல், பொழிதல்
***திரிதல்*** -- உலாவல், சுழலல், நடத்தல், கெடுதல்

344. தெரியலே காணல், ஆய்தல், தேமலர்த் தொடையலும்பேர்.
**துரியம்** ஓர் அவத்தையோடு, தூர்வகம், சுமத்தலும் பேர்;
**பிரியையே** சிலதி, தாரம், பெண் என முப்பேர் பேசும்;
**சுரியலே** உந்தி, ஐம்பால், சுழலுதல், சுரித்தல் ஆமே.

**தெரியல்** : 1. காணல் 2. ஆய்தல் 3. தொடையல்
**துரியம்** : 1. ஓர் அவத்தை 2. தூர்வகம் 3. சுமத்தல்
**பிரியை** : 1. சிலதி 2. தாரம் 3. பெண்
**சுரியல்** : 1. உந்தி 2. ஐம்பால் 3. சுழலுதல் 4. சுரித்தல்

***தெரியல்*** -- தோற்றுதல், ஆராய்தல், மாலை
***துரியம்*** -- நான்காமவத்தை, பொதியெருது, சுமத்தல்
***பிரியை*** -- தோழி, மனைவி, பெண்
***சுரியல்*** -- நீர்ச்சுழி, பெண்மயிர், சுழலுதல், சுரித்தல்

345. **பரிவு** இன்பம், துன்பம், அன்பு ஆம்; **பரிசு** என்ப குணமே, ஈகை;
**இரியல்** வென்னிடல், நல்லாடை; **இரத்தியே** பதரி, இத்தி;
**சரியை** நன்னிலை, பிச்சைப்பேர்; **சரவணம்** கொறுக்கை, நாணல்;
**அரில்** பகை, பிணக்கு, குற்றம் ஆம்; சிறு தூறும் ஆமே.

**பரிவு** : 1. இன்பம் 2. துன்பம் 3. அன்பு
**பரிசு** : 1. குணம் 2. ஈகை
**இரியல்** : 1. வென்னிடல் 2. நல்லாடை
**இரத்தி** : 1. பதரி 2. இத்தி
**சரியை** : 1. நன்னிலை 2. பிச்சை
**சரவணம்** : 1. கொறுக்கை 2. நாணல்
**அரில்** : 1. பகை 2. பிணக்கு 3. குற்றம் 4. சிறுதூறு

***பரிவு*** -- இன்பம், துன்பம், சிநேகம்
***பரிசு*** -- குணம், தியாகம்
***இரியல்*** -- புறங்கொடுத்தல், நற்சீலை
***இரத்தி*** -- இலந்தை, இத்திமரம்
***சரியை*** -- ஒழுக்கம், பிச்சை
***சரவணம்*** -- கொறுக்கைச்சி, நாணல்
***அரில்*** -- பகை, பிணக்கு, குற்றம், சிறுதூறு

346. அருகலே வீதல், சார்தல், அஃகுதல், விடல் என்று ஆகும்;
கருமையே பெருமை, ஆலம், கறுப்பொடு, வலியும் ஆகும்;
அருணம் ஓர்தேயம், செம்மை, ஆடு, செம்பீரமே, நவ்வி
இருசு பண்டியுளிரும்பு, செவ்வையும் இருபேர் ஆமே.

**அருகல்** : 1. வீதல் 2. சார்தல் 3. அஃகுதல் 4. விடல்
**கருமை** : 1. பெருமை 2. ஆலம் 3. கறுப்பு 4. வலி
**அருணம்** : 1. ஓர்தேயம் 2. செம்மை 3. ஆடு 4. செம்பீரம் 5. நவ்வி
**இருசு** : 1. பண்டியுளிரும்பு 2. செவ்வை..

***அருகல்*** -- சாதல், கிட்டல், குறைதல், விடுதல்
***கருமை*** -- பெருமை. நஞ்சு, கறுப்பு, வலி
***அருணம்*** -- தேய[illegible]த்தாறினொன்று, சிவப்பு, ஆடு, எலுமிச்சு, மான்
***இருசு*** -- பண்டியுளிரும்பு, செப்பம்

347. கிருத்திமம் தோலே பண்ணல், கெட்டபொய், விட்டபூதம்;
விருத்தி தொண்டு, இலாபம், பத்தி, விரிபொருள், வளர்தல், [செல்வம்;
துருத்தி அத்திரி இலங்கை, ஆற்றிடைக்குறை, தோல், துட்டை,
அருத்தியே நிருத்தம், பாதம், ஆசையும் முப்பேர் ஆமே.

**கிருத்திமம்** : 1 தோல் 2. பண்ணல் 3. பொய் 4. பூதம்
**விருத்தி** : 1. தொண்டு 2. இலாபம் 3. பத்தி 4. விரிபொருள் 5. வளர்தல் 6. செல்வம்
**துருத்தி** : 1. அத்திரி 2. இலங்கை 3. ஆற்றிடைக்குறை 4. தோல் 5. துட்டை
**அருத்தி** : 1. நிருத்தம் 2. பாதம் 3. ஆசை.

***கிருத்திமம்*** -- தோல், செய்தல், பொய், பூதகணம்
***விருத்தி*** -- அடிமை, இலாபம், ஒழுக்கம், விருத்தியுரை, வளர்தல், செல்வம்
***துருத்தி*** -- ஊதுந்துருத்தி, இலங்கை, ஆற்றிடைக்குறை, தோல், துட்டை
***அருத்தி*** -- கூத்து, பாதம், ஆசை

348. **அருணன்** சூரியன் தேர்ப்பாகன், ஆதித்தன், புதன் முப்பேரே;
**வருணமே** குலம், எழுத்து, மாமை, நீர் என நாற்பேர் ஆம்;
**கரிணியே** முழையும், வெற்பும்; களிறொடு, பிடியும் ஆகும்.
**அருவியே** புகார், தினைத்தாள், உவதையும் முப்பேர் ஆமே.

**அருணன்** : 1. சூரியன் தேர்ப்பாகன் 2. ஆதித்தன் 3. புதன்
**வருணம்** : 1. குலம் 2. எழுத்து 3. மாமை 4. நீர்
**கரிணி** : 1. முழை 2. வெற்பு 3. களிறு 4. பிடி
**அருவி** : 1. புகார் 2. தினைத்தாள் 2. உவதை

***அருணன்*** -- ஆதித்தன்றேர்ப்பாகன், சூரியன், புதன்
***வருணம்*** -- குலம், எழுத்து, நிறம், புனல்
***கரிணி*** -- மலையின்முழை, மலை, யானை, யானைப்பிடி
***அருவி*** -- கழிமுகம், தினைத்தாள், மலையின்வீழாறு

349. **எருக்கலே** சுமத்தல், கொல்லல்; வெட்டலும் முப்பேர் என்ப;
**முருக்கு** கஞ்சுகமே, நூழில், சதாபலம் மொழியும் முப்பேர்;
**துருக்கம்** காடு, அரண் கலக்கம், குங்குமமரம், கத்தூரி;
**நிரப்பு** என்ப மிடிமை, குன்றல், நிறைத்தலும் உரைத்த பேரே.

**எருக்கல்** : 1. சுமத்தல் 2. கொல்லல் 3. வெட்டல்
**முருக்கு** : 1. கிஞ்சுகம் 2. நூழில் 3. சதாபலம்
**துருக்கம்** : 1. காடு 2. அரண் 3. கலக்கம் 4. குங்குமமரம் 5. கத்தூரி
**நிரப்பு** : 1. மிடிமை 2. குன்றல் 3. நிறைத்தல்

***எருக்கல்*** -- சுமத்தல், கொல்லல், வெட்டுதல்
***முருக்கு*** -- முருக்கமரம், கொலை, எலுமிச்சை
***துருக்கம்*** -- காடு, அரண், கலக்கம், குங்குமமரம், கத்தூரி
***நிரப்பு*** -- தரித்திரம், குறைதல், நிறைத்தல்

350. **குருதியே** சிவப்பு, இரத்தம், குசன் எனக் கூறும் முப்பேர்;
**பருதி** சக்கரமே, பானு, பரிவேடம், உருள், கேழ், வட்டம்;
**இரதியே** மதனன்தேவி, இச்சை, பித்தளை, பெண்யானை;
**சுருதி** ஆரணமே, காதோடு, ஒலி என முப்பேர் சொல்லும்.

**குருதி** : 1. சிவப்பு 2. இரத்தம் 3. குசன்
**பருதி** : 1. சக்கரம் 2. பானு 3. பரிவேடம் 4. உருள் 5. கேழ் 6. வட்டம்
**இரதி** : 1. மதனன்தேவி 2. இச்சை 3. பித்தளை 4. பெண்யானை
**சுருதி** : 1. ஆரணம் 2. காது 3. ஒலி

*குருதி* -- சிவப்பு, இரத்தம், செவ்வாய்
*பருதி* -- சக்கரம், சூரியன், பரிவேடம், சில், நிறம், வட்டம்
*இரதி* -- மன்மதன்றேவி, இச்சை, பித்தளை, பெண்யானை
*சுருதி* -- வேதம், காது, ஒலி

351. **மருள்** மயல், குறிஞ்சி யாழின் திறமொடு, மயக்கம் என்ப;
**இருள்** கரி, கறுப்பு, உன்மத்தம், ஏமமோடு, இருள் நிலப்பேர்;
**பொருநர்** போர்த் தலைவர், வீரர் புரவலர், பாணர், கூத்தர்;
**இருபிறப்பு** இந்து, பார்ப்பார், அண்டசம், இறகு, பல்லே.

**மருள்** : 1. மயல் 2. குறிஞ்சியாழ்த்திறம் 3. மயக்கம்
**இருள்** : 1. கரி 2. கறுப்பு 3. உன்மத்தம் 4. ஏமம் 5. இருள் நிலம்
**பொருநர்** : 1. போர்த்தலைவர் 2. வீரர் 3. புரவலர் 4. பாணர் 5. கூத்தர்
**இருபிறப்பு** : 1. இந்து 2. பார்ப்பார் 3. அண்டசம் 4. இறகு 5. பல்

***மருள்*** -- பிசாசம், குறிஞ்சியாழ்த்திறம், மயக்கம்
***இருள்*** -- யானை, கறுப்பு, மயக்கம், இருட்டு, நரகம்
***பொருநர்*** -- போர்த்தலைவர், வீரர், அரசர், பாணர், கூத்தர்
***இருபிறப்பு*** --சந்திரன்,பிராமணர்,முட்டையிற்பிறப்பன,இறகு, பல்

352. **மருதம்** மீக்குவம், செய், மென்பால், மருத நன்னிலத்திற் பாடல்;
**எருவை** செம்பு, யானை, கோரை, இரத்தம், கர்த்தபம், சகுந்தம்;
**தருமராசன்** தான் புத்தன், சமன், அறன்மைந்தன் என்ப;
**கரி** கடு, இருந்தை, சான்று, கறையடி, சேகு ஐம்பேரே.

**மருதம்** : 1. மீக்குவம் 2. செய் 3. மென்பால் 4. மருத நிலத்திற் பாடல்
**எருவை** : 1. செம்பு 2. யானை 3. கோரை 4. இரத்தம் 5. கர்த்தபம் 6. சகுந்தம்
**தருமராசன்** : 1. புத்தன் 2. சமன் 3. அறன்மைந்தன்
**கரி** : 1. கடு 2. இருந்தை 3. சான்று 4. கறையடி 5. சேகு

***மருதம்*** -- மருதமரம், வயல், மருதநிலம், மருதநிலத்துப்பாடல்
***எருவை*** -- செம்பு, யானை, கோரை, இரத்தம், கழுதை, கழுகு
***தருமராசன்*** -- புத்ததேவன், யமன், குருகுலவரசரிலொருவன்
***கரி*** -- நஞ்சு, எரிந்தகரி, சாட்சி, யானை, மரவயிரம்

353. **எரி** புநர்பூசம், அங்கி, இந்திரநாள், பவர்க்கம்;
**சுரிகையே** உடைவாள், அங்கி; **சுரும்பு** என்ப ஞிமிறு, வெற்பு [ஆம்;

விரிதலே அலர்தல், மின்னல், அகலமும், பரவலும் பேர்.
பரிதலே அறுத்தல், வேட்டல் ; பற்று, இரங்குதலும் ஆமே.

எரி : 1. புநர்பூசம் 2. அங்கி 3. இந்திரநாள் 4. பவர்க்கம்
சுரிகை : 1. உடைவாள் 2. அங்கி
சுரும்பு : 1. ஞிமிறு 2. வெற்பு
விரிதல் : 1. அலர்தல் 2. மின்னல் 3. அகலம் 4. பரவல்
பரிதல் : 1. அலுத்தல் 2. வேட்டல் 3. பற்று 4. இரங்குதல்

*எரி* -- புநர்பூசநாள், தீ, கேட்டைநாள், நரகம்
***சுரிகை*** -- உடைவாள், கவசம்
***சுரும்பு*** -- வண்டு, மலை
***விரிதல்*** -- அலருதல், ஒளிசெய்தல், அகலம், பரத்தல்
***பரிதல்*** -- அறுக்குதல், வெட்டுதல், அன்பு, இரக்கம்

354. கரு நடு, கருப்பத்தோடு, கருப்பொருள், முட்டை, மேடு ஆம்;
திரு என்ப செல்வம், செய்யாள், சிறப்பு எனச் செப்பும் முப்பேர்;
இருமையே துக்கம், இம்மை மறுமை, பீடு, இருதன்மைப் பேர்;
உருஉடல், சளுகம், சந்தம், உள், வடிவொடு, நோய் ஆமே.

கரு : 1. நடு 2. கருப்பம் 3. கருப்பொருள் 4. முட்டை 5. மேடு
திரு : 1. செல்வம் 2. செய்யாள் 3. சிறப்பு
இருமை : 1. துக்கம் 2. இம்மை மறுமை 3. பீடு 4. இருதன்மை
உரு : 1. உடல் 2. சளுகம் 3. சந்தம் 4. உள் 5. வடிவு 6. நோய்

*கரு* -- மத்தி, கருப்பம், கருப்பொருள், முட்டை, மேடு
*திரு* -- செல்வம், இலக்குமி, சிறப்பு
*இருமை* -- துக்கம், இம்மைமறுமை, பெருமை, இருதன்மை
*உரு* -- உடல், அட்டை, நிறம், உள், வடிவு, நோய்

355. அருந்தலே பருகல், உண்டல், அருமையும் முப்பேர் ஆகும்;
செருந்தி வாட்கோரையோடு, செங்கோடு, மணித்தக்காளி;
விருந்தம் என்பது விலங்கின் கூட்டமே, கிளையின் கூட்டம்;
முருந்து இறகு அடியில் உற்ற முதல் முள்ளு, தவளம் ஆமே.

அருந்தல் : 1. பருகல் 2. உண்டல் 3. அருமை
செருந்தி : 1. வாட்கோரை 2. செங்கோடு 3. மணித்தக்காளி
விருந்தம் : 1. விலங்கின் கூட்டம் 2. கிளையின் கூட்டம்
முருந்து : 1. இறகடியில் உற்ற முதல் முள்ளு 2. தவளம்

***அருந்தல்*** -- குடித்தல், புசித்தல், அருமை
***செருந்தி*** -- வாட்கோரை, செருந்திமரம், மணித்தக்காளி
***விருந்தம்*** -- விலங்கின்கூட்டம், சுற்றத்தின்கூட்டம்
***முருந்து*** -- இறகடியின்முதன்முள், வெண்மை

356. **உருளே** தேருருளை, பன்றி, உரோகணி ஓது முப்பேர்;
**கருள்** என்பது இருள், நல்லாடை, கறுப்பு என முப்பேர் காட்டும்;
**பொருள்** பலபண்டம், வாய்மை, பொன், மகவு, அர்த்தம் என்ப;
**ஒருவந்தம்** சம்பந்தத்தோடு, ஒற்றுமை, ஏகாந்தப் பேர்.

**உருள்** : 1. தேருருளை 2. பன்றி 3. உரோகணி
**கருள்** : 1. இருள் 2. நல்லாடை 3. கறுப்பு
**பொருள்** : 1. பலபண்டம் 2. வாய்மை 3. பொன் 4. மகவு 5. அர்த்தம்
**ஒருவந்தம்** : 1. சம்பந்தம் 2. ஒற்றுமை 3. ஏகாந்தம்

***உருள்*** -- தேருருளை, பன்றி, உரோகணிநாள்
***கருள்*** -- இருள், நற்சீலை, கறுப்பு
***பொருள்*** --பலபண்டம், உண்மை, பொன், பிள்ளை, சொற்பொருள்
***ஒருவந்தம்*** -- சம்பந்தம், ஒற்றுமை, தனித்திருக்குமிடம்

357. **மருளலே** மயங்கல், அஞ்சல்; **வரிசையே** முறைமை, ஈகை;
**முருகனே** இளையோன், வேலன், முருகவேள் மொழியும் முப்பேர்;
**அருள்** சிவசத்தி, ஈகை, அபயமும் முப்பேர் ஆகும்,
**அரிவை** ஐயைந்தாம் ஆண்டிற் பெண், அரமகள், மாது ஆமே.

**மருளல்** : 1. மயங்கல் 2. அஞ்சல்
**வரிசை** : 1. முறைமை 2. ஈகை
**முருகன்** : 1. இளையோன் 2. வேலன் 3. முருகவேள்
**அருள்** : 1. சிவசத்தி 2. ஈகை 3. அபயம்
**அரிவை** : 1. ஐயைந்தாம் ஆண்டிற்பெண் 2. அரமகள் 3. மாது.

***மருள்*** -- மயங்குதல், பயப்படல்
***வரிசை*** -- ஒழுங்கு, தியாகம்
***முருகன்*** -- இளையோன், வெறியாட்டாளன், கந்தன்
***அருள்*** -- சிவசத்தி, கொடை, கிருபை
***அரிவை*** -- இருபத்தைந்துவயதிற்பெண், தேவப்பெண், பெண்

358. **புரை** குற்றம், உவமை, இல்லம், புழையுடன், உயர்ச்சி ஐம்பேர்;
**விரை** மணம், சாந்து, தூபம், வித்து என விளம்பற் பாறு ஆம்;

**சுரை** ஆவின்முலை, கள், அம்பின்றலை, சுரைக்கொடி, புழைப்பேர்;
**நரை** சரை கவரி, வெண்மை, நாரை, வெண்பரி, ஏறு ஆமே.

**புரை** : 1. குற்றம் 2. உவமை 3. இல்லம் 4. புழை 5. உயர்ச்சி
**விரை** : 1. மணம் 2. சாந்து 3. தூபம் 4. வித்து
**சுரை** : 1. ஆவின்முலை 2. கள் 3. அம்பின்றலை 4. சுரைக்கொடி 5. புழை
**நரை** : 1. சரை 2. கவரி 3. வெண்மை 4. நாரை 5. வெண்பரி 6. ஏறு

***புரை*** -- குற்றம், உவமை, வீடு, உட்டுளை, உயர்ச்சி
***விரை*** -- வாசனை, சாந்து, தூபம், வித்து
***சுரை*** --பசுவின்முலை, கள், அம்பின்றலை, சுரைக்கொடி, உட்டுளை
***நரை*** -- சரை, சாமரை, வெண்மை, நாரை, வெண்குதிரை, இடபம்

359. **வரைவு** அளவு, எல்லை, நீங்கல்; மாறுபாடு எனவும் நாற்பேர்.
**திரை** கடல், எழினி, யாறு, திரைதல், நீர்த்திரையும் என்ப;
**கரை** முடிவு, எல்லை, நீரின்கரை, மொழியொடு சேர்வு ஆகும்;
**நுரை** நவநீதம், பேனம், குமிழியும் நுவலல் ஆமே.

**வரைவு** : 1. அளவு 2. எல்லை 3. நீங்கல் 4. மாறுபாடு
**திரை** : 1. கடல் 2. எழினி 3. யாறு 4. திரைதல் 5. நீர்த்திரை
**கரை** : 1. முடிவு 2. எல்லை 3. நீரின்கரை 4. மொழி 5. சேர்வு
**நுரை** : 1. நவநீதம் 2. பேனம் 3. குமிழி

***வரைவு*** -- அளவு, எல்லை, பிரிவு, மாறுபாடு
***திரை*** -- சமுத்திரம், திரைச்சீலை, யாறு, திரைவு, நீர்த்திரை
***கரை*** -- முடிவு, எல்லை, நீர்க்கரை, சொல், சேர்வு
***நுரை*** -- வெண்ணெய், நுரை, நீர்க்குமிழி

360. **வரை** கரை, அளவு, வேரல், மலை, விரலிறை, வரம்பு ஆம்;
**உரை** ஒலி, அருத்தம், தேய்வோடு, உயர்ச்சி,பொன், சொல்லும்ஆகும்.
**வரைதலே** எழுதல், கொள்ளல், நீக்குதல், மன்றல், மாற்றல்;
**நிரை** தொறு, ஒழுங்கு, தூசி, நிரையசை நிகழ்த்தும் நாற்பேர்.

**வரை** : 1. கரை 2. அளவு 3. வேரல் 4. மலை 5. விரலிறை 6. வரம்பு
**உரை** : 1. ஒலி 2. அருத்தம் 3. தேய்வு 4. உயர்ச்சி 5. பொன் 6. சொல்
**வரைதல்** : 1. எழுதல் 2. கொள்ளல் 3. நீக்குதல் 4. மன்றல் 5. மாற்றல்
**நிரை** : 1. தொறு 2. ஒழுங்கு 3. தூசி 4. நிரையசை

***வரை*** -- கரை, அளவு, மூங்கில், மலை, விரலிறை, வரம்பு
***உரை*** -- ஒலி, சொற்பொருள், தேய்வு, உயர்ச்சி, பொன், வார்த்தை
***வரைதல்*** -- எழுதல், கொள்ளல், நீக்கல், விவாகம், மாற்றல்
***நிரை*** -- ஆன்கூட்டம், ஒழுங்கு, முற்படை, யாப்பினோருறுப்பு

361. **நாரி** நெய்யரி, வில்நாணி, நறுநாற்றம், சிவையே, பெண் ஆம்;
**பாரி** ஓர்வள்ளல், இல்லாள். பார், கடல், மஞ்சம், ஆடை;
**காருகர்** நெய்வோர், தூசர், கடுங்கொலையாளர் என்ப;
**மாரி** நீர், மழை, சா, மேகம், வடுகி, நோய், மதுவும் ஆமே.

**நாரி** : 1. நெய்யரி 2. வில்நாணி 3. நறுநாற்றம் 4. சிவை 5. பெண்
**பாரி** : 1. ஓர்வள்ளல் 2. இல்லாள் 3. பார் 4. கடல் 5. மஞ்சம் 6. ஆடை
**காருகர்** : 1. நெய்வோர் 2. தூசர் 3. கொலையாளர்
**மாரி** : 1. நீர் 2. மழை 3. சா 4. மேகம் 5. வடுகி 6. நோய் 7. மது

***நாரி*** -- பன்னாடை, வின்னாண், நறுமணம், பார்வதி, பெண்
***பாரி*** -- கடையெழுவள்ளலிலொருவன், மனையாட்டி, பூமி, சமுத்திரம், கட்டில், சீலை
***காருகர்*** -- நெய்பவர், வண்ணார், கொலையாளர்
***மாரி*** -- சலம், மழை, சாவு, முகில், காடுகாள், நோய், கள்

362. **ஆரை**யே நீருள் ஆரை, அரணம், கொத்தளியும் முப்பேர்;
**கீர**மே பாகு, தீபம், கருங்கிளி, கிள்ளை என்ப
**வீரை** அன்னவம், ஓர்தாரு, வேதனை விளம்பும் முப்பேர்;
**சூரன்** ஓர் அசுரன், வீரன், சுவா, அனலி, ரவி ஆமே.

**ஆரை** : 1. நீருள் ஆரை 2. அரணம் 3. கொத்தளி
**கீரம்** : 1. பாகு 2. தீபம் 3. கருங்கிளி 4. கிள்ளை
**வீரை** : 1. அன்னவம் 2. ஓர்தாரு 3. வேதனை
**சூரன்** : 1. ஓர் அரசன் 2. வீரன் 3. சுவா 4. அனலி 5. ரவி

***ஆரை*** -- நீராரை, மதில், பாய்
***கீரம்*** -- பால், தீபம், கருங்கிளி, கிளி
***வீரை*** -- கடல், வீரைமரம், வேதனை
***சூரன்*** -- சூரபன்மன், வீரவான், நாய், தீ, சூரியன்

363. **ஆரல்** கார்த்திகை நாள், செவ்வாய், ஆரன், ஒருமீனே, தீ ஆம்;
**சாரலே** மருதயாழினிசை, வரைச்சாரல், கிட்டல்;
**மூரலே** நகையும், சோறும், மொழியுடன், எயிறும் ஆகும்;
**கூரல்** புட்சிறகு மாதர்ஓதியும் இருபேர் கூறும்.

**ஆரல்** : 1. கார்த்திகை நாள் 2. செவ்வாய் 3. அரண் 4. ஒருமீன் 5. தீ
**சாரல்** : 1. மருத யாழினிசை 2. வரைச்சாரல் 3. கிட்டல்
**மூரல்** : 1. நகை 2. சோறு 3. மொழி 4. எயிறு
**கூரல்** : 1. புட்சிறகு 2. மாதர்ஓதி

*ஆரல்* -- கார்த்திகைநட்சத்திரம், செவ்வாய், மதில், ஆரால், மீன், நெருப்பு
*சாரல்* -- மருதயாழினிசை, மலைச்சாரல், சார்தல்
*மூரல்* -- சிரிப்பு, சோறு, சொல், பல்
*கூரல்* -- புள்ளினிறகு, அளகம்

364. **சாரிகை** பூவை, சுங்கம், தைப்பை, வல், மாதி, சூறை;
**காரிகை** அழகு, பெண், ஓர்நூல், கலித்துறையும் ஆகும்;
**ஆரி** ஏர் கொடுமை, மேன்மை, அபயனும், புதனும் என்ப,
**ஆரியர்** மிலேச்சர், நல்லோர், கவிஞர், ஆசிரியர் ஆமே.

**சாரிகை** : 1. பூவை 2. சுங்கம் 3. தைப்பை 4. வல் 5. மாதி 6. சூறை
**காரிகை** : 1. அழகு 2. பெண் 3. ஓர்நூல் 4. கலித்துறை
**ஆரி** : 1. ஏர் 2. கொடுமை 3. மேன்மை 4. அபயன் 5. புதன்
**ஆரியர்** : 1. மிலேச்சர் 2. நல்லோர் 3. கவிஞர் 4. ஆசிரியர்.

*சாரிகை* -- நாகணவாய்ப்புள், இறை, கவசம், சூதாடுகருவி, மண்டிலமாயோடல், சூறைக்காற்று
*காரிகை* -- அழகு, பெண், ஓர்நூல், கலிப்பாவின்மூன்றனுளொன்று
*ஆரி* -- அழகு, கோடுமை, மேன்மை, சோழன், புதன்
*ஆரியர்* -- மிலேச்சர், நல்லோர், புலவர், குரவர்

365. சாரசமே வெண்ணாரை, தாமரை, குருகும் ஆகும்;
கூரமே பொறாமை, ஓர் ஊர், கொடுமையும், பாகலும் பேர்;
சாரம் மேடு, இனிமை, சேகு, சகோரம், ஓர்மருந்து, ஒழுக்கம்;
வீரம் வீரியம், தற்செல்வம், வெற்பு, சைவீரம் ஆமே.

**சாரசம்** : 1. வெண்ணாரை 2. தாமரை 3. குருகு
**கூரம்** : 1. பொறாமை 2. ஓர்ஊர் 3. கொடுமை 4. பாகல்
**சாரம்** : 1. மேடு 2. இனிமை 3. சேகு 4. சகோரம் 5. ஓர்மருந்து 6. ஒழுக்கம்
**வீரம்** : 1. வீரியம் 2. தற்செல்வம் 3. வெற்பு 4. சைவீரம்

*சாரசம்* -- வெண்ணாரை, தாமரை, தாரா
*கூரம்* -- பொறாமை, ஓரூர், கொடுமை, பாகல்
*சாரம்* -- மேடு, சுவை, மாவயிரம், நிலாமுகிப்புள், ஓர்மருந்து, நடை
*வீரம்* -- வீரியம், வலி, மலை, ஓர்மருந்து

366. **ஆரியன்** கவிஞன், பானு, ஐயன், ஆசிரியன், சான்றோன்;
**வாருணி**, சதயம், மேக்கு; மது, அகத்தியனும் நாற்பேர்.
**பூரி**, ஓரிசை, பொன், நாணி, கலப்புநெல், பொம்மல் என்ப;
**ஆரிடம்**, இழுக்கல், பூசை, ஆகமம், மணம், நூல் ஆமே.

**ஆரியன்** : 1. கவிஞன் 2. பானு 3. ஐயன் 4. ஆசிரியன் 5. சான்றோன்
**வாருணி** : 1. சதயம் 2. மேக்கு 3. மது 4. அகத்தியன்
**பூரி** :1. ஓர் இசை 2. பொன் 3. நாணி 4. கலப்புநெல் 5. பொம்மல்
**ஆரிடம்** : 1. இழுக்கல் 2. பூசை 3. ஆகமம் 4. மணம் 5. நூல்

***ஆரியன்*** – புலவன், சூரியன், ஐயனார், ஆசிரியன், அறிவுடையோன்
***வாருணி*** -- சதயநாள், மேற்றிசை, கள், அகத்தியன்
***பூரி*** -- ஓர்பண், பொன், நாணி, கலப்புநெல், மிகுதி
***ஆரிடம்*** -- வழுக்குநிலம், பூசை, ஆகமம், ஆரிடமணம், நூல்

367. **பீரமே** சிரீடமோடு, பீர்க்கு, பூவரசும் ஆகும்;
**சூரமே** கடலை, வீரம், அச்சமும் சொல்லும் முப்பேர்,
**நாரம்** சைவலம், நீர், அன்பு, நாரங்கமொடு, நார் ஆகும்.
**ஊரல்** ஊருதல், கிளிஞ்சில், உரிஞ்சலும் முப்பேர் ஆமே.

**பீரம்** : 1. சிரீடம் 2. பீர்க்கு 3. பூவரசு
**சூரம்** : 1. கடலை 2. வீரம் 3. அச்சம்
**நாரம்** : 1. சைவலம் 2. நீர் 3. அன்பு 4. நாரங்கம் 5. நார்
**ஊரல்** : 1. ஊருதல் 2. கிளிஞ்சில் 3. உரிஞ்சல்

***பீரம்*** -- வாகைமரம், பீர்க்கு, பூவரசு
***சூரம்*** -- கடலை, வீரம், அச்சம்
***நாரம்*** -- பாசி, சலம், சிநேகம், நாரத்தை, கயிறு
***ஊரல்*** -- ஊருதல், கிளிஞ்சில், உரிஞ்சுதல்

368. **சாரியை** பவனி, சூறை, தாயமும் சாற்றும் முப்பேர்;
**சூரியே** வடுகி, கற்றோர், சூலியும் முப்பேர் சொல்லும்;
**வேரியே** மூலகந்தம், விரை, மது விளம்பல் பாற்று ஆம்;
**ஆரியை** காளி, துர்க்கை, அம்பிகை முப்பேர் ஆமே.

**சாரியை** : 1. பவனி 2. சூறை 3. தாயம்
**சூரி** : 1. வடுகி 2. கற்றோர் 3. சூலி
**வேரி** : 1. மூலகந்தம் 2. விரை 3. மது
**ஆரியை** : 1. காளி 2. துர்க்கை 3. அம்பிகை

***சாரியை*** -- உலாப்போதல், சூறைக்காற்று, சூதாடுகருவி
***சூரி*** -- காடுகாள், புலவர், காளி
***வேரி*** -- வெட்டுவேர் வாசனை, கள்
***ஆரியை*** -- காளி, துர்க்காதேவி, பார்வதி

369. **சாரணர்** ஒற்றர் என்ப; சமண் முனிவருக்கும் ஆகும்.
**வாருணம்** ஓர் புராணம், மறிகடலொடு, மேக்கு என்ப;
**வேர்** என்ப சுவேதம், மூலம்; **வீரனே** அசோகன், மீளி;
**பூருவம்** பழமை, ஆதி, இந்திரி முப்பேர் போற்றும்.

**சாரணர்** : 1. ஒற்றர் 2. சமண்முனிவர்
**வாருணம்** : 1. ஓர்புராணம் 2. கடல் 3. மேக்கு
**வேர்** : 1. சுவேதம் 2. மூலம்
**வீரன்** : 1. அசோகன் 2. மீளி
**பூருவம்** : 1. பழமை 2. ஆதி 3. இந்திரி

***சாரணர்*** -- ஒற்றர், சமணமுனிவர்
***வாருணம்*** -- ஓர்புராணம், கடல், மேற்றிசை
***வேர்*** -- வியர்வு, வேர்
***வீரன்*** -- அருகன், வீரவான்
***பூருவம்*** -- பழமை, ஆதி, கிழக்கு

370. **வார்** நேர்மை, கச்சு, நீளம்; வாரி, கொண்மூவும் ஆகும்.
**பீர்** என்ப முலைப்பாலோடு, பீர்க்கு, அச்சம், பசலையும் பேர்;
**சார்வு** என்பது இடமும், பற்றும், சார்தலும் முப்பேர் சாற்றும்;
**பார்** புவி, உரோணி, தேரின்பரப்பு, வேதியரும் ஆமே.

**வார்** : 1. நேர்மை 2. கச்சு 3. நீளம் 4. வாரி 5. கொண்மூ
**பீர்** : 1. முலைப்பால் 2. பீர்க்கு 3. அச்சம் 4. பசலை
**சார்வு** : 1. இடம் 2. பற்று 3. சார்தல்
**பார்** : 1. புவி 2. உரோணி 3. தேரின் பரப்பு 4. வேதியர்

***வார்*** -- நேர்மை, கச்சு, நீளம், நீர், முகில்
***பீர்*** -- முலைப்பால், பீர்க்கு, பயம், பசப்பு
***சார்வு*** -- இடம், பற்று, சார்தல்
***பார்*** -- பூமி, உரோகிணிநாள், தேரின்பரப்பு, பிராமணர்

371. **ஊர்தி** கூவிரியே, பாண்டில், உம்பல், ஏறு, அணிகம், வாசி;
**ஆர்வமே** நிரையம், அன்போடு, ஆசை, தூசு, ஒலி, வில் ஆகும்;
**கார்** முகில், பள்ளை, ஓர்நெல், கருமை, ஓர்பருவம், நீர் ஆம்;
**பீருவே** அச்சம் உற்றோன் பெயரொடு, புருவம் ஆமே.

**ஊர்தி** : 1. கூவிரி 2. பாண்டில் 3. உம்பல் 4. ஏறு 5. அணிகம் 6. வாசி
**ஆர்வம்** : 1. நிரையம் 2. அன்பு 3. ஆசை 4. தூசு 5. ஒலி 6. வில்
**கார்** : 1. முகில் 2. பள்ளை 3. ஓர்நெல் 4. கருமை 5. ஓர்பருவம் 6. நீர்
**பீரு** : 1. அச்சம் உற்றோன் 2. புருவம்

***ஊர்தி*** -- இரதம், பண்டி, யானை, எருது, தண்டிகை, குதிரை
***ஆர்வம்*** -- நரகம், அன்பு, ஆசை, புடைவை, ஒலி, வில்
***கார்*** -- மேகம், வெள்ளாடு, கார்நெல்லு, கறுப்பு, கார்காலம், சலம்
***பீரு*** -- பயமுற்றோன், புருவம்

372. ஏர் அழகு, உழு பெற்றப்பேர்; **இராசி**யே ஓரை, கூட்டம்;
**சார்** இடம், அழகு, பற்று, ஓர் தாருவும் சாற்றும் நாமம்;
**ஆர்வலன்** நண்பன், கொண்கன்; **அரசனே** மன்னன், பொன்ஆம்,
**சூர்** அரமகளே, அச்சம், துன்பம், தெய்வதமும் ஆமே.

**ஏர்** : 1. அழகு 2. உழுபெற்றம்
**இராசி** : 1. ஓரை 2. கூட்டம்
**சார்** : 1. இடம் 2. அழகு 3. பற்று 4. ஓர்தாரு
**ஆர்வலன்** : 1. நண்பன் 2. கொண்கன்
**அரசன்** : 1. மன்னன் 2. பொன்
**சூர்** : 1. அரமகள் 2. அச்சம் 3. துன்பம் 4. தெய்வதம்

***ஏர்*** -- அழகு, உழுமாடு
***இராசி*** -- இராசி, கூட்டம்
***சார்*** -- இடம், அழகு, பற்று, ஓர்மரம்
***ஆர்வலன்*** -- நண்பன், நாயகன்
***அரசன்*** -- இராசா, வியாழன்
***சூர்*** -- தெய்வப்பெண், பயம், துன்பம், தெய்வம்

373. தேர் உருள், இரதம் ஆகும்; **தீர்க்கம்** நிச்சயமே, நீளம்;
**நீர்** உடைகுளமே, வாரி, நீர்மை, முன்னிலைப் பன்மைப்பேர்;
**போர்** அமர், சதயம், பொள்ளல்; புகலும் நெல்முதலாஞ் சும்மை;
**ஆர்தலே** தங்கல், மல்கல், அருந்தலும், பருகலும் பேர்.

**தேர்** : 1. உருள் 2. இரதம்
**தீர்க்கம்** : 1. நிச்சயம் 2. நீளம்
**நீர்** : 1. உடைகுளம் 2. வாரி 3. நீர்மை 4. முன்னிலைப் பன்மை
**போர்** : 1. அமர் 2. சதயம் 3. பொள்ளல் 4. நெல்முதலாஞ் சும்மை
**ஆர்தல்** : 1. தங்கல் 2. மல்கல் 3. அருந்தல் 4. பருகல்

*தேர்* -- உரோகிணிநாள், தேர்
*தீர்க்கம்* -- நிச்சயம், நீளம்
*நீர்* -- பூராடநாள், சலம், குணம், முன்னிலைப்பன்மை
*போர்* -- யுத்தம், சதயநாள், மரப்பொந்து, நெற்போர் முதலியன
*ஆர்தல்* -- தங்குதல், நிறைதல், புசித்தல், குடித்தல்

374. **ஈரமே** குளிர்ச்சி, அன்போடு, எழிலொடு மிகுதி ஆகும்;
**ஊர்தல்** ஊருதல், பரத்தல், செலுத்தலும் உரைக்கற் பாற்று ஆம்;
**தீர்தலே** துணிவு, நீளம், செவல், விடல்; முடித்தலும் பேர்.
**வார்தலே** தெரிதல், நீளல், வாருதல், உயர்ச்சி ஆமே.

**ஈரம்** : 1. குளிர்ச்சி 2. அன்பு 3. எழில் 4. மிகுதி
**ஊர்தல்** : 1. ஊருதல் 2. பரத்தல் 3. செலுத்தல்
**தீர்தல்** : 1. துணிவு 2. நீளம் 3. செலல் 4. விடல் 5. முடித்தல்
**வார்தல்** : 1. தெரிதல் 2. நீளல் 3. வாருதல் 4. உயர்ச்சி

*ஈரம்* -- குளிர்ச்சி, நட்பு, வனப்பு, மிகுதி
*ஊர்தல்* -- நகர்தல், பரக்குதல், உய்த்தல்
*தீர்தல்* -- துணிவு, நீளுதல், செல்லல், விடுதல், முடிக்குதல்
*வார்தல்* -- தெரிதல், நீளுதல், வாருதல், உயர்தல்

375. **ஆர்த்தலே** பொருத்தல், கட்டல், அணிதலோடு, ஒலித்தல் என்ப;
**மார்க்கம்** மார்கழியினோடு, வழி, நெடுந் தெருவும் ஆகும்;
**தேர்ச்சியே** எண்ணல், கல்வி, தெளிவு என முப்பேர் செப்பும்.
**மூர்த்தம்** ஈர்கடிகைப் போதோடு, உடல் என மொழியல் ஆமே.

**ஆர்த்தல்** : 1. பொருத்தல் 2. கட்டல் 3. அணிதல் 4. ஒலித்தல்
**மார்க்கம்** : 1. மார்கழி 2. வழி 3. நெடுந்தெரு
**தேர்ச்சி** : 1. எண்ணல் 2. கல்வி 3. தெளிவு
**மூர்த்தம்** : 1. ஈர்கடிகைப் போது 2. உடல்

*ஆர்த்தல்* -- பொருத்தல், கட்டுதல், அணிதல், ஒலிதல்
*மார்க்கம்* -- மார்கழிமாதம், பாதை, நெடுந்தெரு
*தேர்ச்சி* -- எண்ணல், கல்வி, தெளிவு
*மூர்த்தம்* -- முகுர்த்தம், சரீரம்

376. **ஈர்த்தலே** அறுத்தல் என்ப; இழுத்தலும், பிளத்தலும் பேர்.
**பார்த்தல்** ஆராய்தல், காணல், வணங்கலும் பகரல் பாற்று ஆம்;
**தீர்த்தனே** அருகன், ஆசான், சிவனொடு, குருவே, மாயோன்;
**மூர்த்தியே** அருகன், புத்தன், முக்கணன் உருவம் ஆமே.

**ஈர்த்தல்** : 1. அறுத்தல் 2. இழுத்தல் 3. பிளத்தல்
**பார்த்தல்** : 1. ஆராய்தல் 2. காணல் 3. வணங்கல்
**தீர்த்தன்** : 1. அருகன் 2. ஆசான் 3. சிவன் 4. குரு 5. மாயோன்
**மூர்த்தி** : 1., அருகன் 2. புத்தன் 3. முக்கணன் 4. உருவம்

*ஈர்த்தல்* -- அறுத்தல், இழுத்தல், பிளக்குதல்
*பார்த்தல்* -- ஆராய்தல், காணல், வணங்குதல்
***தீர்த்தன்*** -- அருகதேவன், உபாத்தியாயன், அரன், குரு, விட்டுணு
*மூர்த்தி* -- அருகதேவன், புத்ததேவன், சிவன், உருவம்

377. **அரங்கமே** சவை, இலங்கை ஆடிடம், சாலை யோடு
பொருங்களம், திருவரங்கம், சத்திரம் போற்றும் ஏழ் பேர்;
**மரக்கால்** ஆயிலியம், வீழ்க்கை, வள்ளம், நாரணியின் கூத்தோடு
உருக்கினர் முகுந்தன் கூத்து, ஓர் அளவை, உப்பளமும் ஆமே.

**அரங்கம்** : 1. சவை 2. இலங்கை 3. ஆடிடம் 4. சாலை 5. பொருங்களம் 6. திருவரங்கம் 7. சத்திரம்
**மரக்கால்** : 1. ஆயிலியம் 2. வீழ்க்கை 3. வள்ளம் 4. நாரணியின் கூத்து 5. முகுந்தன் கூத்து 6. ஓர் அளவை 7. உப்பளம்

*அரங்கம்* -- சவை, ஆற்றிடைக்குறை, நாடகரங்கம், சாலை, ஆகவபூமி, சிறீரங்கம், சத்திரம்.
*மரக்கால்* -- ஆயிலியநாள், சோதிநாள், வள்ளம், துர்க்கைகூத்து, விட்டுணுகூத்து, முகத்தலளவையினொன்று, உப்பளம்.

378. **அரணமே** கணையம், வேலி, ஆரல், வேல், கபாடம், மஞ்சம்,
அரலை, மெய்க்கவசம், பாதகுறடு என அறையும் ஒன்பான்;
**கரணம்** எண், மனாதி, மின்னார் கலவியிற் கொள்ளும் எண்ணம்,
திருமுறு கலவி, கூத்து, ஐம்பொறி, திறம் செப்பும் ஏழ்பேர்.

**அரணம்** : 1. கணையம் 2. வேலி 3. ஆரல் 4. வேல் 5. கபாடம் 6. மஞ்சம் 7. அரலை 8. மெய்க்கவசம் 9. பாதகுறடு
**கரணம்** : 1. எண் 2. மனாதி 3. மின்னார் கலவியிற் கொள்ளும் எண்ணம் 4. கலவி 5. கூத்து 6. ஐம்பொறி 7. திறம்

*அரணம்* -- காவற்காடு, வேலி, மதில், வேல், கதவு, மஞ்சம், கோட்டை, மெய்க்கவசம், தொடுதோல்.
*கரணம்* -- எண்ணிக்கை, அந்தக்கரணம், பெண்கள் கலிவியிற் கொள்ளு நினைவு, சம்போகம், கூத்து, ஐம்பொறி, காரணம்

379. **புரி** கயிறு, ஆசை, கட்டு, ஊர், புரம், புரி அரணமோடு,
சுரிமுகம், மருதத்தூர், நற்சுருள் இவை ஈரைம்பேர் ஆம்;
**கருவி** ஆயுதம், யாழ், நட்பு, கசை, குழு, கவச மோடு,
பரியின் கல்லணை, சீமூதம், பல்லியம், தொடர்பு ஏது ஆமே.

**புரி** : 1. கயிறு 2. ஆசை 3. கட்டு 4. ஊர் 5. புரம் 6. புரி 7. அரணம் 8. சுரிமுகம் 9. மருதத்தூர் 10. சுருள்
**கருவி** : 1. ஆயுதம் 2. யாழ் 3. நட்பு 4. கசை 5. குழு 6. கவசம் 7. பரியின் கல்லணை 8. சீமூதம் 9. பல்லியம் 10. தொடர்பு 11. ஏது.

***புரி*** -- கயிறு, விருப்பு, கட்டு, ஊர், பட்டினம், செய்தல், கோட்டை, சங்கு, மருதநிலத்தூர், சுருள்
***கருவி*** -- ஆயுதம், யாழ், நண்பு, குதிரைச்சம்மட்டி, கூட்டம், கவசம், குதிரைக்கல்லணை, முகில், வாச்சியம், தொடர்பு, காரணம்

380. **குருகு** மாதவி, புள், வெண்மை, குக்குடம், சிவை, வண்டானம்,
சுரவளை, மழவு, மூலநாள் இவை கருதும் ஒன்பான்;
**முருகு** சம்பிரம், எழுச்சி, முருகவேள், இளமை, வேலன்,
தரும் எழில் நாற்றம், கள், உற்சவம், அகில் ஈரைந்து ஆமே.

**குருகு** : 1. மாதவி 2. புள் 3. வெண்மை 4. குக்குடம் 5. சிவை 6. வண்டானம் 8. சுரவளை 8. மழவு 9. மூலநாள்
**முருகு** : 1. சம்பிரம் 2. எழுச்சி 3. முருகவேள் 4. இளமை 5. வேலன் 6. எழில் 7. நாற்றம் 8. கள் 9. உற்சவம் 10. அகில்

**குருகு** -- குருக்கத்தி, பறவை, வெண்மை, கோழி, உலைமூக்கு, நாரை, கைவளை, இளமை, மூலநட்சத்திரம்
***முருகு*** -- எலுமிச்சை, எழுச்சி, குமரன், இளமை, வெறியாட்டாளன், அழகு, வாசனை, தேன், திருவிழா, அகில்

381. **குருளை** புல், யாளி, பன்றி, குரோட்டம், மைமுகன், நாய், சீயம்,
அரிணம் என்று இவற்றின் குட்டி, முயற்குட்டி, இளமை ஆகும்;
**குரு** நிறம், ஓர்நோய், பாரம், குரவன், பீதகன், ஓர்தேயம்,
இருநொடிப் பொழுதினோடு, பெருமையும் எண்பேர் ஆமே.

**குருளை** : 1. புல் 2. யாளி 3. பன்றி 4. குரோட்டம் 5. மைமுகன் 6. நாய் 7. சீயம் 8. அரிணம் என்னும் எட்டன்குட்டி 9. முயற்குட்டி 10. இளமை

**குரு** : 1. நிறம் 2. ஓர்நோய் 3. பாரம் 4. குரவன் 5. பீதகன் 6. ஓர் தேயம் 7. இருநொடிப்பொழுது 8. பெருமை

***குருளை*** -- புலி, யாளி, பன்றி, நரி, மூசு, நாய், சிங்கம், மான் இவற்றின் குட்டி, முயற்குட்டி, இளமை
***குரு*** -- நிறம், ஒருநோய், பாரம், ஆசான், வியாழன், ஒருதேயம், இருநொடிப்பொழுது, பெருமை

382. **அருப்பமே** மருதத்தூர், மோர், ஆரிடம், துக்கம், கோட்டை,
தருக்கு உறுநறவு, மா, ஊர், சங்கிரம், நூழில் ஆகும்;
**அரத்தம்** செங்குவளை, செம்பொன், அலர்த்தகம், செம்மை,
[துப்போடு,
இரத்தம், செம்பரத்தம், நீபம் இருநாற்பேர் இயம்பல் ஆமே.

**அருப்பம்** : 1. மருதத்தூர் 2. மோர் 3. ஆரிடம் 4. துக்கம் 5. கோட்டை 6. நறவு 7. மா 8. ஊர் 9. சங்கிரம் 10. நூழில்
**அரத்தம்** : 1. செங்குவளை 2. செம்பொன் 3. அலர்த்தகம் 4. செம்மை 5. துப்பு 6. இரத்தம் 7. செம்பரத்தம் 8. நீபம்.

***அருப்பம்*** -- மருதநிலத்தூர், மோர், வழுக்குநிலம், துக்கம், கோட்டை, கள், மா, ஊர், காடு, கொலை
***அரத்தம்*** -- செங்குவளை, பொன், செம்பஞ்சு, சிவப்பு, பவளம், உதிரம், செம்பரத்தம், கடம்பு.

383. **பரி** சுமை, வழி, கார்ப்பாசம், பாது, சீக்கிரம், உயர்ச்சி,
புரவி, ஆகுலம், பீடு, அன்பு, பொம்மல், காளிமம், ஈராறு ஆம்,
**வரி** குடியிறை, எழுத்து, வழி, சாலி, சுணங்கு, நீளம்,
விரலிறை, ஒழுக்கம், பாட்டு, வீரை, தீ, வடிவும் ஆமே.

**பரி** : 1. சுமை 2. வழி 3. கார்ப்பாசம் 4. பாது 5. சீக்கிரம் 6. உயர்ச்சி 7. புரவி 8. ஆகுலம் 9. பீடு 10. அன்பு 11. பொம்மல் 12. காளிமம்.
**வரி** : 1. குடியிறை 2. எழுத்து 3. வழி 4. சாலி 5. சுணங்கு 6. நீளம் 7. விரலிறை 8. ஒழுக்கம் 9. பாட்டு 10. வீரை 11. தீ 12. வடிவு

***பரி*** -- சுமை, வழி, பருத்தி, காத்தல், சீக்கிரம், உயர்ச்சி, குதிரை, வருத்தம், பெருமை, அன்பு, மிகுதி, கறுப்பு
***வரி*** -- குடியிறை, எழுத்து, வழி, நெல், தேமல், நீளம், விரலிறை, ஒழுக்கம், பாட்டு, கடல், தீ, வடிவு.

384. **பாரமே** கலணை, அங்கி, பார்த்திவம், சுமை, குரம்பு.
நீரமார்கரை, நவ்வோடு, நிறை, பொறை, நிகழ்த்தும், ஒன்பான்;
**தாரை** கண்மணி, நேரோடல், சாகதம், நடவை, விண்மீன்,
கூர்மை, கண், மழை, ஒழுங்கு, கொடிப்படை, சின்னம், நாவே.

**பாரம்** : 1. கலணை 2. அங்கி 3. பார்த்திவம் 4. சுமை 5. குரம்பு 6. நீரமார்கரை 7. நவ்வு 8. நிறை 9. பொறை
**தாரை** : 1. கண்மணி 2. நேரோடல் 3. சாகதம் 4. நடவை 5. விண்மீன் 6. கூர்மை 7. கண் 8. மழை 9. ஒழுங்கு 10. கொடிப்படை 11. சின்னம் 12. நா.

***பாரம்*** -- கல்லணை, கவசம், பூமி, சுமை, வரம்பு, நீர்க்கரை, மரக்கலம், நிறை, பொறை
***தாரை*** -- கண்மணி, நேரோடல், வலி, வழி, வான்மீன், கூர்மை, விழி, மழை, ஒழுங்கு, கொடிப்படை, காகளம், நா

385. **ஆரமே** தொடை, இரீதி, ஆத்தி, நந்தனம், பூண், முத்தம்.
ஈரம் ஆர்படீரம், நீபம், எழிற்சரம், மதாணி என்ப;
**வாரம்** ஏழ் கிழமை, அன்பு, மலைச்சாரல், உரிமை, பங்கோடு,
ஆர்கலி, பரம்பு, கூலம், அலை இவை ஒன்பான் ஆமே.

**ஆரம்** : 1. தொடை 2. இரீதி 3. ஆத்தி 4. நந்தனம் 5. பூண் 6. முத்தம் 7. படீரம் 8. நீபம் 9. சரம் 10. மதாணி
**வாரம்** : 1. ஏழ்கிழமை 2. அன்பு 3. மலைச்சாரல் 4. உரிமை 5. பங்கு 6. ஆர்கலி 7. பரம்பு 8. கூலம் 9. அலை.

***ஆரம்*** – பூமாலை, பித்தளை, ஆத்திமரம், நந்தனவனம், ஆபரணம், முத்து, சந்தனம், கடம்பு, மணிவடம், பதக்கம்
***வாரம்*** -- ஏழுகிழமை, அன்பு, மலைச்சாரல், உரிமை, பங்கு, கடல், வரம்பு, கரை, திரை.

386. **தாரம்** யாழ்நரம்பில் ஒன்று, தாலு, வல்லிசை, கண், வெள்ளி,
பாரி, ஓர்மருந்து, பச்சைப்பாம்பின் நஞ்சொடு, கஞ்சப் பேர்;
**கோரம்** பூமொட்டு, வாசி, கொடுமை, சீக்கிரமே, சோழன்
ஊர்தியோடு, அச்சம், வட்டில், உட்டண முடன் எண் பேரே.

**தாரம்** : 1. யாழ் நரம்பில் ஒன்று 2. தாலு 3. வல்லிசை 4. கண் 5. வெள்ளி 6. பாரி 7. ஓர்மருந்து 8. பச்சைப் பாம்பின் நஞ்சு 9. கஞ்சம்
**கோரம்** : 1. பூமொட்டு 2. வாசி 3. கொடுமை 4. சீக்கிரம் 5. சோழன் ஊர்தி 6. அச்சம் 7. வட்டில் 8. உட்டணம்.

*தாரம்* -- வீணைநரம்பிலொன்று, நாவு, வல்லிசை, கண், வெள்ளி, மனைவி, ஓர்மருந்து, பச்சைப்பாம்பின் நஞ்சு, வெண்கலம்
*கோரம்* -- பூவரும்பு, குதிரை, கொடுமை, சீக்கிரம், சோழன்குதிரை, பயம், வட்டில், உட்டணம்

387. **மூரி** ஏறு, எருமை, சோம்பல், முந்தும் ஊழ், இடபராசி,
தீரம், மாட்சிமை, எருத்துத்திமில், நெரிவு இவை ஒன்பான் ஆம்;
**வாரி** நீர், பயம்பு, வாய்தல், மதில், வழி, பகுதி, வெள்ளம்,
வீரை, நூல், உழி, கபாடம், இசைக்குழல் விளம்பும் பேரே.

**மூரி** : 1. ஏறு 2. எருமை 3. சோம்பல் 4. ஊழ் 5. இடபராசி 6. தீரம் 7. மாட்சிமை 8. எருத்துத்திமில் 9. நெரிவு
**வாரி** : 1. நீர் 2. பயம்பு 3. வாய்தல் 4. மதில் 5. வழி 6. பகுதி 7. வெள்ளம் 8. வீரை 9. நூல் 10. உழி 11. கபாடம் 12. இசைக்குழல்

*மூரி* -- எருது, எருமை, சோம்பு, பழமை, இடபவிராசி, வலி, பெருமை, எருத்துத்திமில், நெரிவு
*வாரி* -- சலம், யானைபடுக்குங்குழி, வாயில், மதில், பாதை, பகுதி, வெள்ளம், கடல், நூல், இடம், கதவு, இசைக்குழல்

388. **ஓரியே** விலங்கின் சேக்கை, ஊளன், ஆண் முசு, உரோமம்,
சாரும் ஆண்மயிர், ஓர் வள்ளல், முதுநரி எழுபேர் சாற்றும்;
**தூரியம்** முரசம், ஓகைப்பறை, துகிலிகை, நாற்றூசு,
மூரி, கப்பணமோடு, ஈயம், எறிபடை மொழியும் பேரே.

**ஓரி** : 1. விலங்கின் சேக்கை 2. ஊளன் 3. ஆண்முசு 4. உரோமம் 5. ஆண்மயிர் 6. ஓர்வள்ளல் 7. முதுநரி
**தூரியம்** : 1. முரசம் 2. ஓகைப்பறை 3. துகிலிகை 4. நற்றூசு 5. மூரி 6. கப்பணம் 7. ஈயம் 8. எறிபடை

*ஓரி* -- விலங்கின்படுக்கை, ஆணரி, முசுவினாண், புறமயிர், ஆண்மயிர், கடையெழுவள்ளலிலொருவன், கிழநரி
*தூரியம்* -- முரசம், உவகைப்பறை, எழுதுகோல், நல்லாடை, எருது, கைவேல், ஈயம், எறிபடை.

389. **வாரணம்** விடுதல், கோழி, வளை, கடல், ஆணை, அங்கி,
பார மாதங்கம், தட்டு, பன்றி, உன்மத்தம் என்ப;
**சீர்** அணி, செல்வம், நன்மை, சித்திரம், தண்டை, சீர்த்தி,
பாரம், காத்தண்டு, யாப்பின் உறுப்பொடு, சதி பத்து ஆமே

**வாரணம்** : 1. விடுதல் 2. கோழி 3. வளை 4. கடல் 5. ஆணை 6. அங்கி 7. மாதங்கம் 8. தட்டு 9. பன்றி 10. உன்மத்தம்

**சீர்** : 1. அணி 2. செல்வம் 3. நன்மை 4. சித்திரம் 5. தண்டை 6. சீர்த்தி 7. பாரம் 8. காத்தண்டு 9. யாப்பின் உறுப்பு 10. சதி.

***வாரணம்*** -- விடுதல், கோழி, சங்கு, கடல், தடுத்தல், கவசம், யானை, கேடகம், பன்றி, உன்மத்தம்

***சீர்*** -- அழகு, செல்வம், நன்மை, சித்திரம், காற்றண்டை, கீர்த்தி, பாரம், காவடித்தண்டு, செய்யுளினோருறுப்பு, தாளவொத்து

390. **ஓரை**யே கலன்கள், வண்டல், உண்டாட்டு, பவனம், கூட்டம்,
நாரியர் தொகுதி, அற்றம் என இவை நவிலும் ஏழ்பேர்;
**தோரை** வேயரிசி, ஓர்நெல், சோணிதம், ஒரெண், அங்கை,
சார்தரு வரையினோடு, சரமணிக்கோவை ஆமே.

**ஓரை** : 1. கலன்கள் 2. வண்டல் 3. உண்டாட்டு 4. பவனம் 5. கூட்டம் 6. நாரியர் தொகுதி 7. அற்றம்

**தோரை** : 1. வேயரிசி 2. ஓர்நெல் 3. சோணிதம் 4. ஓர்எண், 5. அங்கை சார் தரு வரை 6. சரமணிக்கோவை

***ஓரை*** -- கலன்கள், மகளிர்விளையாட்டு, விளையாட்டு, இராசி, கூட்டம், மகளிர்கூட்டம், சமயம்

***தோரை*** -- மூங்கிலரிசி, தோரைநெல், இரச்தம், ஓரிலக்கம், விரலிறை, சரமணிக்கோவை

391. **தார்** படை, முகிழம், போது, தாமம், கிண்கிணியின் கோவை,
சார்தரும் ஒழுங்கு, தூசி, சத்திரம் எண்பேர் சாற்றும்;
**காரி**யே வடுகன், காக்கை, கருமை, நோய்முகன், காரி புள்,
பூரணை கேள்வன், நஞ்சு, போற்றும் ஓர் வள்ளல் எண் பேர்.

**தார்** : 1. படை 2. முகிழம் 3. போது 4. தாமம் 5. கிண்கிணியின் கோவை 6. ஒழுங்கு 7. தூசி 8. சத்திரம்

**காரி** : 1. வடுகன் 2. காக்கை 3. கருமை 4. நோய்முகன் 5. காரிப்புள் 6. பூரணை கேள்வன் 7. நஞ்சு 8. ஓர் வள்ளல்

***தார்*** -- படை, பூவரும்பு, பூ, மாலை, கிண்கிணிமாலை, ஒழுங்கு, கொடிப்படை, குடை

***காரி*** -- வயிரவன், காக்கை, கருமை, சனி, கரிக்குருவி, ஐயன், விடம், கடையெழுவள்ளலிலொருவன்

392. **நேர்** உடன்பாடு, பாதி, நெடில், சமம், செவ்வை, நுட்பம்,
சேர் பொலிவு, எதிரினோடு, ஓர்அசை இவைசெப்பும் ஒன்பான்;
**ஆர்** கமம், கூர்மையும், தேராழியுட்செறி உறுப்பும்
பாரும் சல்லகியும் பாகுஞ் சோதியும் பகரும் ஏழ் பேர்.

**நேர்** : 1. உடன்பாடு 2. பாதி 3. நெடில் 4. சமம் 5. செவ்வை 6. நுட்பம் 7. பொலிவு 8. எதிர் 9. ஓர் அசை
**ஆர்** : 1. கமம் 2. கூர்மை 3. தேராழியுட்செறி உறுப்பு 4. பார் 5. சல்லகி 6. பாகு 7. சோதி

***நேர்*** -- உடன்பாடு, பாதி, நீளம், சமானம், செவ்வை, நுட்பம், பொலிவு, எதிர், செய்யுளினோருறுப்பு
***ஆர்*** -- நிறைவு, கூர்மை, தேராழியுட்செறி உறுப்பு, பூமி, ஆத்தி, பாகு, சோதி

393. **பிரமமே** முத்தி, ஞானம், பிஞ்ஞகன், மாயன், வேள்வி,
இரவி, மந்திரம், வேதாந்தம், எண்கணன், செந்தீ, வேதம்,
பரவு சந்திரிகை, மாயை, பயம், நடு, ஓர்புராணம்,
இருடி, தத்துவம், குற்றத்தோடு, ஈறிலி என நாலைந்தே.

**பிரமம்** : 1. முக்தி 2. ஞானம் 3. பிஞ்ஞகன் 4. மாயன் 5. வேள்வி 6. இரவி 7. மந்திரம் 8. வேதாந்தம் 9. எண்கணன் 10. தீ 11. வேதம் 12. சந்திரிகை 13. மாயை 14. பயம் 15. நடு 16. ஓர்புராணம் 17. இருடி 18. தத்துவம் 19. குற்றம் 20. ஈறிலி

***பிரமம்*** -- மோக்கம், ஞானம், சிவன், அரி, வேள்வி, சூரியன், மந்திரம், வேதாந்தம், பிரமன், தீ, வேதம், நிலவு, மாயை, பயம், நடு, பதினெண்புராணத்தொன்று, இருடி, தத்துவம், தோஷம், கடவுள்

394. **அரி** கடல், பன்றி, மாயோன், ஆயுதம், நெருக்கம், கூர்மை,
எரி, விசி, வலி கள், ஈர்வாள், எறிபறை, தொடையல், மஞ்சம்,
பரிபுர மதனுள் உய்த்த பருக்கைக்கல், பகை, தேர், கண்ணில்
வரி, நமன், தவளை, செம்பொன், வானரம், படுக்கை, தூவல்.

**அரி** : 1. கடல் 2. பன்றி 3. மாயோன் 4. ஆயுதம் 5. நெருக்கம் 6. கூர்மை 7. எரி 8. விசி 9. வலி 10. கள் 11. ஈர்வாள் 12. பறை 13. தொடையல் 14. மஞ்சம் 15. பரிபுரமதனுள் உய்த்த பருக்கைக்கல் 16. பகை 17. தேர் 18. கண்ணில்வரி 19. நமன் 20. தவளை 21. பொன் 22. வானரம் 23. படுக்கை 24. தூவல்

*அரி* -- சமுத்திரம், பன்றி, விட்டுணு, ஆயுதம், செருக்கம், கூர்மை, தீ, கட்டு, வலி, மது, ஈர்வாள், பறை, மாலை, கட்டில், சிலம்பின் பருக்கைக்கல், பகை, தேர், கண்வரி, யமன், தவளை, பொன், குரங்கு, படுக்கை, மழைத்துளி

**(ரகர எதுகை முற்றிற்று)**

## லகர எதுகை

395. **சிலம்பு** ஒளி, அரிசி, பச்சை, சேகும், மேழகம், பாம்பு, ஊதை,
விலங்கல், கேழ், அடர்பு, தூமம், வேணு, நெற்கதிர், கா, ஐமை;
**அலங்கு**, உளைஅரி, களங்கம், அளி, மரகதம், மா, கிள்ளை,
இலங்கு செங்கதிரோன், ஆழி, இந்து, தூம்பு எனப் பத்து ஆமே.

**சிலம்பு** : 1. ஒளி 2. அரிசி 3. பச்சை 4. சேகு 5. மேழகம் 6. பாம்பு 7. ஊதை 8. விலங்கல் 9. கேழ் 10. அடர்பு 11. தூமம் 12. வேணு 13. நெற்கதிர் 14. கா 15. ஐமை
**அலங்கு** : 1. உளையரி 2. களங்கம் 3. அளி 4. மரகதம் 5. மா 6. கிள்ளை 7. கதிரோன் 8. ஆழி 9. இந்து 10. தூம்பு

***சிலம்பு*** -- ஒளி, அரிசி, பச்சை, மரவயிரம், செம்மறிக்கடா, சர்ப்பம், காற்று, மலை, நிறம், நெருக்கம், புகை, மூங்கில், நெற்கதிர், சோலை, தட்டு வடிவு
***அலங்கு*** -- சிங்கம், குற்றம், வண்டு, மரகதம், குதிரை, கிளி, சூரியன், சக்கரம், சந்திரன், உட்டுளை

396. **புலவர்** பாடுநரே, கூத்தர், புத்தேளிர், கவிகள், ஓவர்;
**வலவனே** வெற்றியாளன், மாயன், தேர்ப்பாகன் ஆகும்;
**அலம்** என்ப சுழற்சி, நாஞ்சில், அமைவு, சஞ்சலம், தேள் ஆகும்;
**வலம்** இடம், கனமே, வெற்றி, வலப்புறம், வலி, மேல் ஆமே.

**புலவர்** : 1. பாடுநர் 2. கூத்தர் 3. புத்தேளிர் 4. கவிகள் 5. ஓவர்
**வலவன்** : 1. வெற்றியாளன் 2. மாயன் 3. தேர்ப்பாகன்
**அலம்** : 1. சுழற்சி 2. நாஞ்சில் 3. அமைவு 4. சஞ்சலம் 5. தேள்
**வலம்** : 1. இடம் 2. கனம் 3. வெற்றி 4. வலப்புறம் 5. வலி 6. மேல்.

*புலவர்* -- பாடுவோர், கூத்தர், வானோர், நாவலர், கம்மாளர்
*வலவன்* -- வெற்றியுடையோன், திருமால், சூதன்
*அலம்* -- சுழலல், உழுபடை, அமைவு, சஞ்சலம், ஓர்செந்து
*வலம்* -- இடம், கனம், வென்றி, வலப்பக்கம், வன்மை, மேல்

397. **இலம்பகம்** அத்தியாயம், நுதற்சூட்டுத் தெரியல் என்ப
**பலம்** கனி, கிழங்கு, ஊன்,நெற்றி,படை, பயன், வலி, பொன் ஆகும்;
**இலஞ்சி** மா,மகிழ், புன்கு, ஏரி, எயில், கொப்பூழ், குணமும் ஏற்கும்;
**அலங்கலே** கலுழ்தல், மாலை, அசைவு, இலங்குதல், தளிர்ப்பேர்.

**இலம்பகம்** : 1. அத்தியாயம் 2. நுதற்கட்டுத் தெரியல்
**பலம்** : 1. கனி 2. கிழங்கு 3. ஊன் 4. நெற்றி 5. படை 6. பயன் 7. வலி 8. பொன்
**இலஞ்சி** : 1. மா 2. மகிழ் 3. புன்கு 4. ஏரி 5. எயில் 6. கொப்பூழ் 7. குணம்
**அலங்கல்** : 1. கலுழ்தல் 2. மாலை 3. அசைவு 4. இயங்குதல் 5. தளிர்

***இலம்பகம்*** -- அத்தியாயம், நுதலணிமாலை
***பலம்*** -- பழம், கிழங்கு, ஊன், நுதல், படை, பலன், வன்மை, பொன்
***இலஞ்சி*** -- மாமரம், மகிழமரம், புன்கமரம், தடாகம், மதில், நரபி, குணம்
***அலங்கல்*** -- கலுழ்தல், பூமாலை, அசைவு, ஒளிசெய்தல், தளிர்

398. **ஒலி** இடி, ஒளி, ஆர்ப்பு ஓசை, ஊதையும் ஓதும் ஐம்பேர்;
**ஒலியல்** நோய், ஆறு, சீலை, உரிவை, பூந்தாரே, வீதி;
**எலி** பூரம், களிமம் என்ப; **ஏல்வையே** தடாகம், காலம்;
**கலுழியே** கான்யாறோடு, கலங்கல்நீர் எனவும் காட்டும்.

**ஒலி** : 1. இடி 2. ஒளி 3. ஆர்ப்பு 4. ஓசை 5. ஊதை
**ஒலியல்** : 1. நோய் 2. ஆறு 3. சீலை 4. உரிவை 5. பூந்தார் 6. வீதி
**எலி** : 1. பூரம் 2. களிமம்
**ஏல்வை** : 1. தடாகம் 2. காலம்
**கலுழி** : 1. கான்யாறு 2. கலங்கல்நீர்

***ஒலி*** -- இடியேறு, பிரகாசம், ஆரவாரம், ஓசை, காற்று
***ஒலியல்*** -- வியாதி, யாறு, புடைவை, தோல், பூமாலை, வீதி
***எலி*** -- பூரநாள், எலி
***ஏல்வை*** -- வாவி, பொழுது
***கலுழி*** -- கான்யாறு, கலங்கியநீர்

399. **வலம்புரி** சங்கு, ஓர்தாரு, நந்தியாவர்த்தம் ஆகும்;
**புலம்பு** ஒலி, தனிமை, துன்பம், புலம்புறல், அச்சம் என்ப;
**சிலம்பே** நூபுரம், சிலம்பல், சிலோச்சயம் முப்பேர் செப்பும்;
**விலங்கு** காற்றளை, குறுக்கம், மிருகத்தின் பொதுவும் ஆமே.

**வலம்புரி** : 1. சங்கு 2. ஓர்தாரு 3. நந்தியாவர்த்தம்
**புலம்பு** : 1. ஒலி 2. தனிமை 3. துன்பம் 4. புலம்புறல் 5. அச்சம்
**சிலம்பு** : 1. நூபுரம் 2. சிலம்பல் 3. சிலோச்சயம்
**விலங்கு** : 1. காற்றளை 2. குறுக்கம் 3. மிருகத்தின் பொது

***வரலம்புரி*** -- வலம்புரிச்சங்கு, ஓர்மரம், நந்தியாவர்த்தம்
***புலம்பு*** -- ஒலி, தனிமை, துன்பம், புலம்பல், பயம்
***சிலம்பு*** -- பாதசிலம்பு, ஒலித்தல், மலை
***விலங்கு*** -- தளை, குறுக்கு, மிருகப்பொது

400. **உலகமே** திசை, விண், பூமி, உயர்குணம், சனம், உயர்ந்தோர்;
**அலவனே** ஞெண்டு, பூஞை, அம்புலி, கடகராசி;
**இலயமே** கூத்து, கூத்தின் விகற்பமும், இறப்பும் முப்பேர்;
**வலவை**யே காளி, வல்லோன், இடாகினி, வஞ்சப்பெண் ஆம்.

**உலகம்** : 1. திசை 2. விண் 3. பூமி 4. குணம் 5. சனம் 6. உயர்ந்தோர்
**அலவன்** : 1. ஞெண்டு 2. பூஞை 3. அம்புலி 4. கடகராசி
**இலயம்** : 1. கூத்து 2. கூத்தின் விகற்பம் 3. இறப்பு
**வலவை** : 1. காளி 2. வல்லோன் 3. இடாகினி 4. வஞ்சப்பெண்.

***உலகம்*** -- திக்கு, ஆகாயம், பூமி, குணம், சனம், உயர்ந்தோர்
***அலவன்*** -- நண்டு, பூனை, சந்திரன், கற்கடகவிராசி
***இலயம்*** -- கூத்து, கூத்தின்விகற்பம், சாவு
***வல்வை*** -- காளி, வலவன், இடாகினி, காளியேவல்செய்மகள்

401. **தலம்** இடம், இலையினோடு, தரை, உலகின் பொதுப்பேர்;
**கலகம்** பேராலி, போர் என்ப; **கலசமே** கும்பம், பால் ஆம்
**இலகு** என்பது அகரு, நுண்மை; **இலந்தை**யே பதரி, வாவி;
**திலகம்** மஞ்சாடி, பொட்டு, சிந்தூரம் முப்பேர் ஆமே.

**தலம்** : 1. இடம் 2. இலை 3. தரை 4. உலகின் பொது
**கலகம்** : 1. பேரொலி 2. போர்
**கலசம்** : 1. கும்பம் 2. பால்
**இலகு** : 1. அகரு 2. நுண்மை
**இலந்தை** : 1. பதரி 2. வாவி
**திலகம்** : 1. மஞ்சாடி 2. பொட்டு 3. சிந்தூரம்

***தலம்*** -- இடம், இலை, பூமி, உலகப்பொது
***கலகம்*** -- பேரொலி, யுத்தம்
***கலசம்*** -- கும்பம், பால்
***இலகு*** -- அகில், நுட்பம்
***இலந்தை*** -- இலந்தைமரம், தடாகம்
***திலகம்*** -- மஞ்சாடி, திலதம், சிந்தூரம்

402. **குலம்** மனை, கடைநாள், கூட்டம்; சாதியும் கூறும் நாமம்,
**சலம்** நீர், பொய், அசைவு, முள்மா, தணியாத கோபம் ஆகும்;
**அலமரல்** சுழலல், அச்சம்; துன்பமும் அப்பேர் என்ப.
**கலம்பகம்** கலப்பு, சாந்து, ஓர்பிரபந்தம் முப்பேர் காட்டும்.

**குலம்** : 1. மனை 2. கடைநாள் 3. கூட்டம் 4. சாதி
**சலம்** : 1. நீர் 2. பொய் 3. அசைவு 4. முள்மா 5. தணியாத கோபம்.
**அலமரல்** : 1. சுழலல் 2. அச்சம் 3. துன்பம்
**கலம்பகம்** : 1. கலப்பு 2. சாந்து 3. ஓர் பிரபந்தம்.

***குலம்*** -- வீடு, இரேவதிநாள், கூட்டம், சாதி
***சலம்*** -- புனல், பொய், அசைவு, முட்பன்றி, தணியாக்கோபம்
***அலமரல்*** -- சுழல்தல், பயம், துயரம்
***கலம்பகம்*** -- கலப்பு, சாந்து, ஒரு பிரபந்தம்.

403. **கலக்கம்** பேரோதை, துன்பம், அச்சமும் கருதும் முப்பேர்;
**வலத்த**லே நிணத்தல், சொல்லல்; வளைத்தலும் வருக்கல் ஆகும்.
**இலக்க**மே ஒளி, கணக்கு, ஓர் எண், குறிப்பு என நாற்பேர் ஆம்,
**உலக்கை**யே அழிவு, சோனை, உரோங்கலும் முப்பேர் ஆமே.

**கலக்கம்** : 1. பேரோதை 2. துன்பம் 3. அச்சம்
**வலத்தல்** : 1. நிணத்தல் 2. சொல்லல் 3. வளைத்தல்
**இலக்கம்** : 1. ஒளி 2. கணக்கு 3. ஓர் எண் 4. குறிப்பு
**உலக்கை** : 1. அழிவு 2. சோனை 3. உரோங்கல்

***கலக்கம்*** -- பேரொலி, துயரம், பயம்
***வலத்தல்*** -- நிணத்தல், சொல்லல், வளைத்தல்
***இலக்கம்*** -- ஒளி, கணக்கு, நூறாயிரம், குறிப்பு
***உலக்கை*** -- அழிவு, திருவோணநாள், உலக்கை

404. **நலம்** உபகாரம், இன்பம், நன்மை, கண்ணோட்டம், ஏர் ஆம்;
**உலைவு** என்ப நடுக்கம், அச்சம், உலைதல் என்று ஓதும் முப்பேர்;
**பில**மே கீழறை யினோடு, பாதலம், குகை முப்பேர் ஆம்;
**புலம்** இடம், அறிவு, செய் ஐம்புலன் திசை போற்றும் ஐம்பேர்.

**நலம்** : 1. உபகாரம் 2. இன்பம் 3. நன்மை 4. கண்ணோட்டம் 5. ஏர்
**உலைவு** : 1. நடுக்கம் 2. அச்சம் 3. உலைதல்
**பிலம்** : 1. கீழறை 2. பாதலம் 3. குகை
**புலம்** : 1. இடம் 2. அறிவு 3. செய் 4. ஐம்புலன் 5. திசை

**நலம்** -- உபகாரம், இன்பம், நன்மை, கண்ணோட்டம், அழகு
**உலைவு** -- நடுக்கம், பயம், உலைதல்
**பிலம்** -- கீழறை, பாதாளக் குகை
**புலம்** -- இடம், அறிவு, வயல், பஞ்சப்புலன், திக்கு

405. **அலம்பலே** ததும்பலோடு, கழுவுதல், ஒலித்தல் ஆகும்;
**சிலம்பனே** குறிஞ்சி வேந்தன், முருகனும் இருபேர் செப்பும்;
**விலங்கலே** கலுழி வெற்பு, விலங்குதல் விளம்பும் முப்பேர்;
**கலங்கலே** சேற்று நீரும், கலுழல், அஞ்சுதலும் ஆமே.

**அலம்பல்** : 1. ததும்பல் 2. கழுவுதல் 3. ஒலித்தல்
**சிலம்பல்** : 1. குறிஞ்சி வேந்தன் 2. முருகன்
**விலங்கல்** : 1. கலுழி 2. வெற்பு 3. விலங்குதல்
**கலங்கல்** : 1 சேற்று நீர் 2. கலுழல் 3. அஞ்சுதல்

***அலம்பல்*** -- ததும்பல், கழுவல், ஒலித்தல்
***சிலம்பல்*** -- குறிஞ்சித்தலைவன், சுப்பிரமணியன்
***விலங்கல்*** -- கலங்கனீர், மலை, விலகுதல்
***கலங்கல்*** -- சேற்றுநீர், கலக்கம், பயப்படல்

406. **விலகலே** எறிதல், நீங்கல்; மறைதலும் விளம்பும் முப்பேர்
**நிலயம்** பார், தேவர் கோவில், நிருத்தமே மருதத்தூர் ஆம்;
**வலயம்** கைக்கடகம், சுற்று, வட்டம், வாருதி, தடாகம்;
**மலைதலே** அணிதல், பூசல், மறுத்தலும் வகுக்கல் ஆமே.

**விலகல்** : 1. எறிதல் 2. நீங்கல் 3. மறைதல்
**நிலயம்** : 1. பார் 2. தேவர் கோவில் 3. நிருத்தம் 4. மருதத்தூர்
**வலயம்** : 1. கைக்கடகம் 2. சுற்று 3. வட்டம் 4. வாருதி 5. தடாகம்
**மலைதல்** : 1. அணிதல் 2. பூசல் 3. மறுத்தல்.

***விலகல்*** -- எறிதல், நீங்குதல், மறைவாதல்
***நிலயம்*** -- பூமி, தேவர்கோயில், கூத்து, மருதநிலத்தூர்
***வலயம்*** -- அத்தகடகம், சுற்று, வட்டம், கடல், வாவி
***மலைதல்*** -- அணிதல், போர், மறுத்தல்

407. **அலரி** கண்வரி, நீர் வாவி, அருக்கன், ஓர்மரம், ஏர், தேனீ;
**மலர்தலே** விரிதல், தோன்றல், மல்கலோடு, எதிர்தல் ஆகும்;
**கலவையே** அழறு, சாந்து, கலப்பு என முப்பேர் காட்டும்;
**இலவம்** சான்மினி, ஓர்தீவோடு, எண்கணப்போதும் ஆமே.

**அலரி** : 1. கண்வரி 2 நீர் 3. வாவி 4. அருக்கன் 5. ஓர்மரம் 6. ஏர் 7. தேனீ
**மலர்தல்** : 1. விரிதல் 2. தோன்றல் 3. மல்கல் 4. எதிர்தல்
**கலவை** : 1. அழறு 2. சாந்து 3. கலப்பு
**இலவம்** : 1. சான்மினி 2. ஓர்தீவு 3. எண்குணப்போது

***அலரி*** -- கண்ணில்வரி, சலம், தடாகம், சூரியன், அலரி மரம், அழகு, தேனீ
***மலர்தல்*** -- அலர்தல், தோன்றல், நிறைதல், எதிர்தல்
***கலவை*** -- சேறு, சாந்து, கலப்பு
***இலவம்*** -- இலவமரம், இலவத்தீவு, எட்டுக் கணங்கொண்ட காலப்பிரமாணம்

408. **அலர்** பழிச்சொல், நீர், மாலை, அலர்ந்தபூ எனவும் ஆகும்;
**பொலம்** அழகொடு,பொன் ஆகும்; **புலவு** என்ப நரகம், ஊன்ஆம்,
**மலங்கல்** குண்டு, அலைதல் என்ப; **வல்லரி** தளிர், பூங்கொத்து;
**இலிங்கம்** இங்குலிகம், கோசம், இலாஞ்சனை, சிவலிங்கப்பேர்.

**அலர்** : 1. பழிச்சொல் 2. நீர் 3. மாலை 4. அலர்ந்தபூ
**பொலம்** : 1. அழகு 2. பொன்
**புலவு** : 1. நரகம் 2. ஊன்
**மலங்கல்** : 1. குண்டு 2. அலைதல்
**வல்லரி** : 1. தளிர் 2. பூங்கொத்து
**இலிங்கம்** : 1. இங்குலிகம் 2. கோசம் 3. இலாஞ்சனை 4. சிவலிங்கம்

***அலர்*** -- பழிச்சொல், சலம், பூமாலை, மலர்ந்தபூ
***பொலம்*** -- அழகு, பொன்
***புலவு*** -- நரகம், புலால்
***மலங்கல்*** -- குளம், அலைதல்
***வல்லரி*** -- தளிர், பூங்கொத்து
***இலிங்கம்*** -- சாதிலிங்கம், ஆண்குறி, அடையாளம், சிவலிங்கம்

409. **அலி** செலு, வெளிறு, பேடி
ஆகும், செந்தீயும் என்ப;
**குலிகம்** இங்குலிகம், செம்மை,
மதுகமும் முப்பேர் கூறும்;
**பலி** காய்த்தமரம், விண்ணோர், ஊண்
பைக்கம், சோறொடு, நீறு ஆகும்;
**புலியே** நால் வகையிற் சாந்து,
கொடும்புலி, புல்லும் ஆமே.

**அலி** : 1. செலு 2. வெளிறு 3. பேடி 4. தீ
**குலிகம்** : 1. இங்குலிகம் 2. செம்மை 3. மதுகம்

**பலி** : 1. காய்த்தமரம் 2. விண்ணோர் ஊண் 3. பைக்கம் 4. சோறு 5. நீறு
**புலி** : 1. நால்வகையிற் சாந்து 2. கொடும்புலி 3. புல்

*அலி* -- நறுவிலிமரம், வயிரமில்லா மரம், பேடி, தீ
*குலிகம்* -- சாதிலிங்கம், சிவப்பு, இலுப்பை
*பலி* -- காய்த்தமரம், தேவருணவு, பிச்சை, சோறு, சாம்பல்
*புலி* -- நால்வகைச்சாந்து, சிங்கவிராசி, புலி

410. வலி வன்மை, பற்றிரும்பு, வலிப்பு என வகுக்கும் முப்பேர்;
குலிசம் வச்சிரம் இருப்பை, தமனியும் முப்பேர் கூறும்;
பொலிதலே வீற்றிருத்தல், பொம்மலோடு, எழுச்சி என்ப;
நலிதலே வருந்தல், வாடல், அழிதலும் நவிலல் ஆமே.

**வலி** : 1. வன்மை 2. பற்றிரும்பு 3. வலிப்பு
**குலிசம்** : 1. வச்சிரம் 2. இருப்பை 3. தமனி
**பொலிதல்** : 1. வீற்றிருத்தல் 2. பொம்மல் 3. எழுச்சி
**நலிதல்** : 1. வருந்தல் 2. வாடல் 3. அழிதல்

*வலி* -- திண்மை, பற்றிரும்பு, வலிப்பு
*குலிசம்* -- வச்சிராயுதம், இலுப்பை, வன்னிமரம்
*பொலிதல்* -- எழுந்தருளியிருத்தல், மிகல், எழுச்சி
*நலிதல்* -- வருந்துதல், வாடுதல், அழிதல்

411. கலித்தலே பொலிவு, எழுச்சி, கனைத்தலும், தழைத்தலும் பேர்,
சலித்தல் சஞ்சலித்தல் எய்த்தல், ஒலித்தலும் அப்பேர் சாற்றும்;
பலித்தல் ஊதிபம், சித்தித்தல்; **பலன்** என்ப கனி, இலாபம்,
வலித்தலே வலிப்போடு, எண்ணல், உடன்படல் வகுத்த பேரே.

**கலித்தல்** : 1. பொலிவு 2. எழுச்சி 3. கனைத்தல் 4. தழைத்தல்
**சலித்தல்** : 1. சஞ்சலித்தல் 2. எய்த்தல் 3. ஒலித்தல்
**பலித்தல்** : 1. ஊதிபம் 2. சித்தித்தல்
**பலன்** : 1. கனி 2. இலாபம்
**வலித்தல்** : 1. வலிப்பு 2. எண்ணல் 3. உடன்படல்.

*கலித்தல்* -- பொலிவு, எழுச்சி, ஒலித்தல், தழைக்குதல்
*சலித்தல்* -- சஞ்சலமுறல், இளைத்தோய்தல், ஒலித்தல்
*பலித்தல்* -- இலாபம், சித்தியாதல்
*பலன்* -- பழம், ஊதியம்
*வலித்தல்* -- வலிப்பு, எண்ணுதல், உடன்படுதல்

412. **சிலீமுகம்** முலைக்கண், வண்டு, தெறுகணை செப்பும் முப்பேர்;
**சலாகையே** சராவம், ஈட்டி, சலாகு, ஊசிக்காந்தம் என்ப,
**விலோதமே** அளகம், ஐம்பால் விலோதனம் விளம்பு முப்பேர்.
**பலாசமே** இலை, முருக்கு; பைமையும் பகரல் ஆமே.

**சிலீமுகம்** : 1. முலைக்கண் 2. வண்டு 3. கணை
**சலாகை** : 1. சராவம் 2. ஈட்டி 3. சலாகு 4. ஊசிக்காந்தம்
**விலோதம்** : 1. அளகம் 2. ஐம்பால் 3. விலோதனம்
**பலாசம்** : 1. இலை 2. முருக்கு 3. பைமை.

***சிலீமுகம்*** -- முலைக்கண், வண்டு, அத்திரம்
***சலாகை*** -- நாராசம், ஈட்டி, சலாகு, ஊசிக்காந்தம்
***விலோதம்*** -- மயிர்க்குழற்சி, பெண்மயிர், கொடி
***பலாசம்*** -- இலை, முருக்கு, பச்சைநிறம்

413. **அலை** கருமணல், நீரினலையும், அம்புதியும் ஆகும்;
**குலை** அம்பின்குதை, நடுக்கம், சேது, விற்குதை, காய்க்கொத்து [ஆம்;
**சிலை** ஒலி, கல், வில், வெற்பு, தேட்கடை செப்பும் ஐம்பேர்;
**தலை** மிசை, இடம், பீடு, ஆதி, தலைமை, விண், சிரமும் ஆமே.

**அலை** : 1. கருமணல் 2. நீரினலை 3. அம்புதி
**குலை** : 1. அன்பின் குதை 2. நடுக்கம் 3. சேது 4. விற்குதை 5. காய்க்கொத்து
**சிலை** : 1. ஒலி 2. கல் 3. வில் 4. வெற்பு 5. தேட்கடை
**தலை** : 1. மிசை 2. இடம் 3. பீடு 4. ஆதி 5. தலைமை 6. விண் 7. சிரம்

***அலை*** -- கருமணல், புனற்றிரை, கடல்
***குலை*** -- அம்பின்குதை, நடுக்கம், செய்கரை, விற்குதை, காய்க்குலை
***சிலை*** -- ஒலி, கல், வில்லு, மலை, மூலநாள்
***தலை*** -- மேல், இடம், பெருமை, முதல், தலைமை, ஆகாயம், சிரசு

414. **துலை** கனம், நிறையினோடு, துலாம், ஏற்றமரமே, தூரம்;
**நிலை** பொழுது, இடம், பார், நீர்மை, நெறி, பூணின் தொங்கலும் [பேர்;
**மலைவு** என்ப மயக்கம், வெம்போர், மாறுபாடு, உவமை ஆகும்,
**அலைதலே** துன்பம், சோம்பல்; வருந்தலும் அப்பேர் ஆமே.

**துலை** : 1. கனம் 2. நிறை 3. துலாம் 4. ஏற்றமரம் 5. தூரம்
**நிலை** : 1. பொழுது 2. இடம் 3. பார் 4. நீர்மை 5. நெறி 6. பூணின் தொங்கல்

**மலைவு** : 1. மயக்கம் 2. போர் 3. மாறுபாடு 4. உவமை
**அலைதல்** : 1. துன்பம் 2. சோம்பல் 3. வருந்தல்

***துலை*** -- கனம், நிறை, துலாக்கோல், ஏற்றமரம், தூரம்
***நிலை*** -- பொழுது, இடம், பூமி, குணம், முறைமை, ஆபரணத்திற் றொங்கணி
***மலைவு*** -- மயக்கம், யுத்தம், மாறுபாடு, உவமை
***அலைதல்*** -- துன்பம், சோப்பம், வருந்துதல்

415. **அல்லி** வெள்ளாம்பல், காயா, அகவிதழ், இரா, பூந்தாது ஆம்;
**அல்** இரா, இருள், மார்த்தாண்டன், ஆரையோடு, இடைச்சொல் [ஐம்பேர்;
**சில்லி** சிள்வீடு, வட்டம், சிறுகீரை, தேரின்சில்லு;
**வல்லியே** கொடி, ஆய்ப்பாடி, வரைவு, கால்விலங்கும் ஆமே.

**அல்லி** : 1. வெள்ளாம்பல் 2. காயா 3. அகவிதழ் 4. இரா 5.பூந்தாது
**அல்** : 1. இரா 2. இருள் 3. மார்த்தாண்டன் 4. ஆரை 5. ஓர்இடைச்சொல்
**சில்லி** : 1. சிள்வீடு 2. வட்டம் 3. சிறுகீரை 4. தேரின்சில்லு
**வல்லி** : 1. கொடி 2. ஆய்ப்பாடி 3. வரைவு 4. கால்விலங்கு

***அல்லி*** -- வெள்ளாம்பல், காயாமரம், பூவினகவிதழ், இரவு, பூஞ்சுண்ணம்
***அல்*** -- இரவு, இருள், சூரியன், மதில், ஓர் இடைச்சொல்
***சில்லி*** -- சிள்வண்டு, வட்டம், சிறுகீரை, தேர்ச்சில்
***வல்லி*** -- படர்கொடி, இடைச்சேரி, அளவு, காற்றளை

416. **இல்** இல்லாள், இல்லையென்றல், இராசி, சா, இடம், வீடு என்ப;
**மல்** வண்மை, மாயோன் ஆடல், வலி, கூத்தின் விகற்பம் ஆகும்;
**சில்லை** என்பது பிரண்டை, சிள்வீடு, தூர்த்தை என்ப;
**ஒல்லையே** தொல்லை, வல்லை, கடுப்பொடு, சிறுபோதும் பேர்.

**இல்** : 1. இல்லாள் 2. இல்லையென்றல் 3. இராசி 4. சா 5. இடம் 6. வீடு
**மல்** : 1. வண்மை 2. மாயோன் ஆடல் 3. வலி 4. கூத்தின் விகற்பம்
**சில்லை** : 1. பிரண்டை 2. சிள்வீடு 3. தூர்த்தை
**ஒல்லை** : 1. தொல்லை 2. வல்லை 3. கடுப்பு 4. சிறுபோது

***இல்*** -- மனைவி, இல்லையெனல், இராசி, சாவு, இடம், வீடு
***மல்*** -- வளமை, திருமால்கூத்து, வன்மை, கூத்தின்விகற்பம்
***சில்லை*** -- பிரண்டை, சிள்வண்டு, தூர்த்தை
***ஒல்லை*** -- பழமை, காலவிரைவு, கதி, சிறுபோது

417. **தில்** ஒழியிசையே, சாலம், விழைவு என முப்பேர் செப்பும்;
**வல்** என்ப விரைவு, தாயம், வலியொடு, மேடும் ஆகும்;
**அல்கலே** வறுமை, தங்கல், ஆனியம், சுருங்கல், நத்தம்;
**ஒல்கலே** தளர்தலோடு, குழைதலும், துவளலும் பேர்.

**தில்** : 1. ஒழியிசை 2. காலம் 3. விழைவு
**வல்** : 1. விரைவு 2. தாயம் 3. வலி 4. மேடு
**அல்கல்** : 1. வறுமை 2. தங்கல் 3. ஆனியம் 4. சுருங்கல் 5. நத்தம்
**ஒல்கல்** : 1. தளர்தல் 2. குழைதல் 3. துவளல்

***தில்*** -- ஒழியிசை, காலம், விழைவு
***வல்*** -- சீக்கிரம், சூதாடுகருவி, வன்மை, மேடு
***அல்கல்*** -- வறுமை, தங்குதல், நாள், குன்றல், இரவு
***ஒல்கல்*** -- தளருதல், குழைதல், துவளல்

418. செல் இடியேறு, மேகம், சிதலை, விண், அயிலும் ஐம்பேர்;
**எல்** ஒளி, பகல், இகழ்ச்சி, இரவு, நாள், வெயில், என்றூழ் ஆம்;
**கல்** ஒலி, சிலை, வேதண்டம்; **கலாம்** என்ப கொடுமை, கோபம்;
சொல் உரை, கீர்த்தி, செந்நெல், சுலோகி, நெற்கதிரும் ஆமே.

செல் : 1. இடியேறு 2. மேகம் 3. சிதலை 4. விண் 5. அயில்
**எல்** : 1. ஒளி 2. பகல் 3. இகழ்ச்சி 4. இரவு 5. நாள் 6. வெயில் 7. என்றூழ்
**கல்** : 1. ஒலி 2. சிலை 3. வேதண்டம்
**கலாம்** : 1. கொடுமை 2. கோபம்
சொல் : 1. உரை 2. கீர்த்தி 3. நெல் 4. சுலோகி 5. நெற்கதிர்

*செல்* -- இடி, முகில், கறையான், ஆகாயம், வேல்
***எல்*** -- ஒளி, பகல், இகழ்ச்சி, இரா, நாள், வெயில், சூரியன்
***கல்*** -- ஒலி, கல்லு, மலை
***கலாம்*** -- கொடுமை, கோபம்
*சொல்* -- வார்த்தை, புகழ், நெல், கள், நெற்கதிர்

419. **வில்** ஒளி, மூலம், சேரன் பதாகையே, வேணு என்ப;
**வல்லவன்** புருடன், வல்லோன், இடையனும் வகுக்கும் முப்பேர்;
**புல்** புலி, புணர்ச்சி, புன்மை, புதல், பனை, அனுடநாள் ஆம்;
கொல் என்பது அசைச்சொல் ஐயம், வருத்தமும் கூறல் ஆமே.

**வில்** : 1. ஒளி 2. மூலம் 3. சேரன் பதாகை 4. வேணு
**வல்லவன்** : 1. புருடன் 2. வல்லோன் 3. இடையன்
**புல்** : 1. புலி 2. புணர்ச்சி 3. புன்மை 4. புதல் 5. பனை 6. அனுடநாள்
கொல் : 1. அசைச்சொல் 2. ஐயம் 3 வருத்தம்

***வில்*** -- பிரகாசம், மூலநாள், சேரன்கொடி, தனு
***வல்லவன்*** -- புருடன், வல்லவன், இடையன்
***புல்*** -- புலி, புல்லல், புன்மை, புதர், பனை, அனுடநட்சத்திரம்
***கொல்*** -- அசைச்சொல், சந்தேகம், வருத்தம்

420. **வல்லை** கான், விரைவு, மேடு, வட்டம், ஓர்நோய், கோட்டை
**மல்லலே** வளமை, வன்மை, மிகுதியும் வகுக்கல் ஆகும்;
**முல்லையே** தளவம், வென்றி, மொழியும் ஓர்நிலம், கற்பு என்ப;
**பல்லம்** ஓர்கணக்கு, பாணம், பல்லணம், கரடி ஆமே.

**வல்லை** : 1. கான் 2. விரைவு 3. மேடு 4. வட்டம் 5. ஓர்நோய் 6. கோட்டை
**மல்லல்** : 1. வளமை 2. வன்மை 3. மிகுதி
**முல்லை** : 1. தளவம் 2. வென்றி 3. ஓர்நிலம் 4. கற்பு
**பல்லம்** : 1. ஓர்கணக்கு 2. பாணம் 3. பல்லணம் 4. கரடி

***வல்லை*** -- பெருங்காடு, காலவிரைவு, மேடு, வட்டம், ஓர்நோய், கோட்டை
***மல்லல்*** -- வளம், வலி, மிகுதி
***முல்லை*** -- முல்லைக்கொடி, வெற்றி, முல்லைநிலம், கற்பு
***பல்லம்*** -- ஒரெண், அம்பு, குதிரைக்கல்லணை, கரடி

421. **சில்லிகை** துகில், நல்லாடை, சிள்வீடு தானும் ஆகும்;
**மல்லிகை** கடிஞை, தீபமத்திகை யொடு, பூருண்டி;
**சல்லியம்** ஆயுதத்தின் நுதியின் முள், சரம், என்பு ஆகும்;
**வல்லியம்** கொல்லி வெற்பு, வரிப்புலி, இடையர் ஊரே.

**சில்லிகை** : 1. துகில் 2. நல்லாடை 3. சிள்வீடு
**மல்லிகை** : 1. கடிஞை 2. தீபமத்திகை 3. பூருண்டி
**சல்லியம்** : 1. ஆயுதத்தின் நுதியின் முள் 2. சரம் 3. என்பு
**வல்லியம்** : 1. கொல்லிவெற்பு 2. புலி 3. இடையர் ஊர்.

***சில்லிகை*** -- சீலை, நல்லாடை, சிள்வீடு
***மல்லிகை*** -- இரப்போர்கலன், விளக்குத்தண்டு, மல்லிகைக்கொடி
***சல்லியம்*** -- ஆயுதநுனிமுள், பாணம், எலும்பு
***வல்லியம்*** -- கொல்லிமலை, புலி, இடையரூர்

422. **மல்லையே** கடிஞை, வட்டம்; **மலைப்பு** என்ப மலைவு, ஞாட்புஆம்;
**கொல்லை** ஊர்ப்புறமே, சோலை; படப்பையும் குறிக்கல் ஆகும்.
**குல்லையே** துளவு, கஞ்சம், வெட்சியும் குறிக்கும் முப்பேர்;
**எல்லையே** அளவு, நாளோடு, இரவியும், முடிவும் ஆமே.

**மல்லை** : 1. கடிஞை 2. வட்டம்
**மலைப்பு** : 1. மலைவு 2. ஞாட்பு
**கொல்லை** : 1. ஊர்ப்புறம் 2. சோலை 3. படப்பை
**குல்லை** : 1. துளவு 2. கஞ்சம் 3. வெட்சி
**எல்லை** : 1. அளவு 2. நாள் 3. இரவி 4. முடிவு.

***மல்லை*** -- இரப்போர்கலன். வட்டம்
***மலைப்பு*** -- மலைவு, போர்
***கொல்லை*** -- ஊர்ப்புறம், சோலை. தோட்டம்
***குல்லை*** -- துளசி, கஞ்சம், வெட்சி
***எல்லை*** -- அளவு, நாள், சூரியன். முடிவு

423. **வல்லிகை** காதணிக்கு வகுத்த பேர், யாழும் ஆகும்;
**வில்லி** அங்கசன், குரோதன், வில்லாளன் விளம்பும் முப்பேர்
**இல்லமே** சில்லம், புக்கில்; **எல்லியே** நிசி, வெய்யோன் ஆம்;
**புல்லலே** அமைதல், சார்தல்; புணர்தல், கூடுதலும் ஆமே.

**வல்லிகை** : 1. காதணி 2. யாழ்
**வில்லி** : 1. அங்கசன் 2. குரோதன் 3. வில்லாளன்
**இல்லம்** : 1. சில்லம் 2. புக்கில்
**எல்லி** : 1. நிசி 2. வெய்யோன்
**புல்லல்** : 1. அமைதல் 2. சார்தல் 3. புணர்தல் 4. கூடுதல்

***வல்லிகை*** -- காதணி, யாழ்
***வில்லி*** -- மன்மதன், வீரபத்திரன். வில்லாளன்
***இல்லம்*** -- தேற்றா, வீடு
***எல்லி*** -- இரா, சூரியன்
***புல்லல்*** -- அமைதல், சார்தல், புணருதல், கூடுதல்

424. **ஆலம்** தொன்மரமே. தூறல். அரவினஞ்சு, அலர்ந்தபூ, நீர்;
**மூலம்** ஓர்நோய். கிழங்கு. முதல், வேர், ஏது, ஓர்நாள் ஆகும்;
**சீலம்** பண்பு, அறம், ஒழுக்கம், சீந்தில், கையாறு, காட்சி;
**வேல்** அயில், கைவேல், எஃகு, வேணு, முள்வேலும் ஆமே.

**ஆலம்** : 1. தொன்மரம் 2. தூறல் 3. அரவினஞ்சு 4. அலர்ந்தபூ 5. நீர்
**மூலம்** : 1. ஓர்நோய் 2. கிழங்கு 3. முதல் 4. வேர் 5. ஏது 6. ஓர்நாள்
**சீலம்** : 1. பண்பு 2. அறம் 3. ஒழுக்கம் 4. சீந்தில் 5. கையாறு 6. காட்சி
**வேல்** : 1. அயில் 2. கைவேல் 3. எஃகு 4. வேணு 5. முள்வேல்

***ஆலம்*** -- ஆலமரம், மழை, பாம்பினஞ்சு, அலர்ந்தபூ, நீர்
***மூலம்*** -- மூலரோகம், கிழங்கு, முதல், வேர், ஏது, மூலநாள்
***சீலம்*** -- குணம், தருமம், ஒழுக்கம், சீந்தில், சரித்திரம், அறிவு
***வேல்*** -- வேலாயுதம், கைவேல், ஆயுதப்பொது, மூங்கில், வேலமரம

425. காலமே பொழுது, வைகல்; கலுழ்தலே அழல், கலங்கல்;
சாலகம் வலை, புட்கூடு, சலதாரை, சாலம், போகில்;
தாலம் உண்கலம், நாவு, ஆனைச்செவி, புவி, தாழி ஐம்பேர்
ஆலலே ஒலித்தல், ஏங்கல், ஆடுதல் முப்பேர் ஆமே.

**காலம்** : 1. பொழுது 2. வைகல்
**கலுழ்தல்** : 1. அழல் 2. கலங்கல்
**சாலகம்** : 1. வலை 2. புட்கூடு 3. சலதாரை 4. சாலம் 5. போகில்
**தாலம்** : 1. உண்கலம் 2. நாவு 3. ஆனைச்செவி 4. புவி 5. தாழி
**ஆலல்** : 1. ஒலித்தல் 2. ஏங்கல் 3. ஆடுதல்

***காலம்*** -- போது, விடியல்
***கலுழ்தல்*** -- அழுதல், கலங்கல்
***சாலகம்*** -- வலை, பறவைக்கூடு, சலதாரை, பலகணி, இளம்பூவரும்பு
***தாலம்*** -- உண்கலம், நாவு, யானைச்செவி, பூமி, பனை
***ஆலல்*** -- ஒலித்தல், மயிற்குரல், ஆடல்

426. சாலியே கவசம், செந்நெல், அருந்ததி, சாயனப்பேர்;
பாலிகை உதடு, வட்டம், பாலிகை, படைவாள், முட்டி;
வேலி ஊர், அரணம், காவல், விளைநிலத்து அளவை என்ப
மாலி கள், இரவியோடு, ஓர் அரக்கனும் வகுக்கல் ஆமே.

**சாலி** : 1. கவசம் 2. நெல் 3. அருந்ததி 4. சாயனம்
**பாலிகை** : 1. உதடு 2. வட்டம் 3. பாலிகை 4. படைவாள் 5. முட்டி
**வேலி** : 1. ஊர் 2. அரணம் 3. காவல் 4. விளைநிலத்து அளவை
**மாலி** : 1. கள் 2. இரவி 3. ஓர் அரக்கன்.

***சாலி*** -- கவசம், நெல், அருந்ததி, கள்
***பாலிகை*** – உதடு, வட்டம், முளைதெளிக்கும்பாலிகை, படைவாள் முட்டி
***வேலி*** -- ஊர், மதில், காவல், ஓரளவைநிலம்
***மாலி*** -- கள், சூரியன், ஒரிராக்கதன்

427. ஆலயம் இல்லம், கோயில், ஆனையின் குழாமும் ஆகும்;
பாலமே ஆற்றுப்பாலம், மழு, நுதல், சினையே, பார் ஆம்;
ஏலமே மயிர்ச் சாந்தோடு, வாசனைப் பண்டம் என்ப;
சீலமே பிசின், சுவாலை, ஆணியும் கிளத்தல் ஆமே.

**ஆலயம்** : 1. இல்லம் 2. கோயில் 3. ஆனையின் குழாம்
**பாலம்** : 1. ஆற்றுப்பாலம் 2. மழு 3. நுதல் 4. சினை 5. பார்
**ஏலம்** : 1. மயிர்ச்சாந்து 2. வாசனைப் பண்டம்
**சீலம்** : 1. பிசின் 2. சுவாலை 3. ஆணி

*ஆலயம்* -- வீடு, தேவர்கோயில், யானைக்கூட்டம்
*பாலம்* -- யாற்றுப்பாலம், மழு, நெற்றி, மரக்கொம்பு, பூமி
*ஏலம்* -- மயிர்ச்சாந்து, வாசனைப்பண்டம்
*சீலம்* -- பிசின், சுவாலை, ஆணி

428. **சூலியே** சூரி, மாரி, சுந்தரி, சினையாள், ஈசன்;
**வாலியே** அலாயுதன், கிட்கிந்தையின் மன்னன் என்ப;
**பாலி** தொன்மரம், கள் ஆகும்; **பாலித்தல்** புரத்தல், ஈதல்;
**காலிலி** அருணன், பாம்பு, காற்று என முப்பேர் ஆமே.

**சூலி** : 1. சூரி 2. மாரி 3. சுந்தரி 4. சினையாள் 5. ஈசன்
**வாலி** : 1. அலாயுதன் 2. கிட்கிந்தையின் மன்னன்
**பாலி** : 1. தொன்மரம் 2. கள்
**பாலித்தல்** : 1. புரத்தல் 2. ஈதல்
**காலிலி** : 1. அருணன் 2. பாம்பு 3. காற்று

*சூலி* -- காளி, காடுகாள், துர்க்கை, கருப்பிணி, சிவன்
*வாலி* -- பலதேவன், ஓர் குரக்குவேந்தன்
*பாலி* -- ஆலமரம், கள்
*பாலித்தல்* -- காத்தல், கொடுத்தல்
*காலிலி* -- அருணன், சர்ப்பம், வாயு

429. **மாலதி** தளவு, சாதி மல்லிகை வகுக்கும் முப்பேர்;
**ஓலமே** பாரா வாரம், ஒலியும், சிம்மகமும் ஆகும்.
**தூலமே** பருமை, இல்லினுத்திரம், பஞ்சும் சொல்லும்,
**நீலம்** நஞ்சு, இருள், கறுப்பு, நீல் நிறம், பனை, காற்று ஆமே.

**மாலதி** : 1. தளவு 2. சாதி 3. மல்லிகை
**ஓலம்** : 1. பாராவாரம் 2. ஒலி 3. சிம்மகம்
**தூலம்** : 1. பருமை 2. இல்லினுத்திரம் 3. பஞ்சு
**நீலம்** : 1. நஞ்சு 2. இருள் 3. கறுப்பு 4. நீல்நிறம் 5. பனை 6. காற்று

*மாலதி* -- முல்லை, சிறுசண்பகம், மல்லிகை
*ஓலம்* -- சமுத்திரம், ஒலி, பாம்பு
*தூலம்* -- பருமை, வீட்டுத்திரம், பஞ்சி
*நீலம்* -- நஞ்சு, இருள், கறுப்பு, நீலநிறம், பனை, வாயு

430. **கோலல்** சூழ்ந்திடல், வளைத்தல், முகத்தலும் குறிக்கல் ஆகும்;
**கீலாலம்** காடி, செம்பால், உதகமும் கிளத்தற் பாற்று ஆம்.
**ஆலாலம்** விடமே, வௌவால்; **அலந்தையே** தடாகம், துன்பம்,
**மாலம்** குங்கும மரம், பேய்; **வாலமே** மயிர், வால் ஆமே.

**கோலல்** : 1. சூழ்ந்திடல் 2. வளைத்தல் 3. முகத்தல்
**கிலாலம்** : 1. காடி 2. செம்பால் 3. உதகம்
**ஆலாலம்** : 1. விடம் 2. வௌவால்
**அலந்தை** : 1. தடாகம் 2. துன்பம்
**மாலம்** : 1. குங்கும மரம் 2. பேய்
**வாலம்** : 1. மயிர் 2. வால்

***கோலல்*** -- சூழ்தல், வளைக்குதல், முகத்தல்
***கிலாலம்*** -- காடி, இரத்தம், நீர்
***ஆலாலம்*** -- நஞ்சு, வாவற்பட்சி
***அலந்தை*** -- வாவி, துன்பம்
***மாலம்*** -- குங்குமமரம், பேய்
***வாலம்*** -- தலைமயிர், வால்

431. **ஆலி** காற்று, அமுதம், ஆலாங்கட்டி, கள், மழை துமிப் பேர்;
**காலியே** தொறு, விரேயம், கழிவுநாள் முப்பேர் காட்டும்;
**கோலி** கோற்கொடி, மயிர்ப் பேர்; **குலிங்கம்** ஓர்தேயம், கல்லி;
**சாலினி** என்ப தேவர்க்காடுவாள், படுவி தானே.

**ஆலி** : 1. காற்று 2. அமுதம் 3. ஆலாங்கட்டி 4. கள் 5. மழை 6. துமி
**காலி** : 1. தொறு 2. விரேயம் 3. கழிவுநாள்
**கோலி** : 1. கோற்கொடி 2. மயிர்
**குலிங்கம்** : 1. ஓர்தேயம் 2. கல்லி
**சாலினி** : 1. தேவர்க்காடுவாள் 2. படுவி

***ஆலி*** -- காற்று, அமுதம், ஆலாங்கட்டி, கள், மழை, மழைத்துளி
***காலி*** -- பசுக்கூட்டம், கள், கழிவுநாள்
***கோலி*** -- இலந்தைமரம், மயிர்
***குலிங்கம்*** -- குலிங்கதேயம், ஊர்க்குருவி
***சாலினி*** -- தேவர்க்காடுவாள், கள்வாணிச்சி

432. **சாலையே** குதிரைப்பந்தி, அறப்புறம், மன்னர்தம் இல்;
**வேலையே** பாராவாரம், வினை, கடல், காலமும் பேர்;
**சாலேகம்** சாளரம், பூவரும்பு, சந்தனம், சிந்தூரம்;
**காலேயம்** அருப்பம், காலி, கத்தூரி மஞ்சள் ஆமே.

**சாலை** : 1. குதிரைப்பந்தி 2. அறப்புறம் 3. மன்னர்தம் இல்
**வேலை** : 1. பாராவாரம் 2. வினை 3. கடல் 4. காலம்
**சாலேகம்** : 1. சாளரம் 2. பூவரும்பு 3. சந்தனம் 4. சிந்தூரம்
**காலேயம்** : 1. அருப்பம் 2. காலி 3. கத்தூரி மஞ்சள்.

*சாலை* -- குதிரைப்பந்தி, அறத்தின்சாலை, இராசமனை
*வேலை* -- கடற்கரை, தொழில், சமுத்திரம், காலம்
*சாலேகம்* -- பலகணி, பூவரும்பு, சந்தனம், சிந்தூரம்
*காலேயம்* -- மோர், பசுக்கூட்டம், கத்தூரி மஞ்சள்

433. ஆலையே கருப்ப மாலை, அம்மியம், கழையும் ஆகும்;
ஓலை தென்பனை இவற்றின் இலை, ஒலி, திருமுகப் பேர்;
காலையே விடியற்காலம், பொழுது என இருபேர் காட்டும்;
சேலேகம் சந்தனம், சிந்தூரமும் செப்பல் ஆமே.

**ஆலை** : 1. கருப்பமாலை 2. அம்மியம் 3. கழை
**ஓலை** : 1. தென்பனை இவற்றின் இலை 2. ஒலி 3. திருமுகம்
**காலை** : 1. விடியற்காலம் 2. பொழுது
**சேலேகம்** : 1. சந்தனம் 2. சிந்தூரம்

*ஆலை* -- கரும்பாலை, கள், கரும்பு
*ஓலை* -- தென்குபனையிவற்றினோலை, ஒலி, நிருபம்
*காலை* -- விடியல், வேளை
*சேலேகம்* -- சந்தனம், சிந்தூரம்

434. நூலோர் மந்திரிகள், பார்ப்பார், அறிஞரும் நுவலும் முப்பேர்
மேலோர் புத்தேளிர், சான்றோர்; மேற்குலத்தவரும் ஆகும்.
ஆலோலம் நீரொலிப்பேர், புள்ளோச்சல் தானும் ஆகும்;
வேலாவலயம் தான் பூமி, விரிகடல் இருபேர் ஆமே.

நூலோர் : 1. மந்திரிகள் 2. பார்ப்பார் 3. அறிஞர்
மேலோர் : 1. புத்தேளிர் 2. சான்றோர் 3. மேற்குலத்தவர்
ஆலோலம் : 1. நீரொலி 2. புள்ளோச்சல்
**வேலாவலயம்** : 1. பூமி 2. விரிகடல்

*நூலோர்* -- அமைச்சர், பிராமணர், சான்றோர்
*மேலோர்* -- வானோர், அறிஞர், மேற்குலத்தவர்
*ஆலோலம்* -- நீரோலி, பறவையோச்சல்
*வேலாவலயம்* -- பூமி, சமுத்திரம்

435. ஆல் பழுமரம், அசைச்சொல், ஆம் என்பது, அல்ல வென்றல்;
சால்பு மாட்சிமை, சான்றாண்மை, தகுதி, ஊதியமும் ஆகும்;
வால் வெண்மை, மிகுதி, தூய்மை, வாலகம், இளமை ஐம்பேர்;
சால் படைச் சாலே, நீர்ச்சால், சால்பு என முப்பேர் சாற்றும்.

**ஆல்** : 1. பழுமரம் 2. அசைச்சொல் 3. ஆம் என்பது 4. அல்ல என்றல்
**சால்பு** : 1. மாட்சிமை 2. சான்றாண்மை 3. தகுதி 4. ஊதியம்

**வால்** : 1. வெண்மை 2. மிகுதி 3. தூய்மை 4. வாலகம் 5. இளமை
**சால்** : 1. படைச்சால் 2. நீர்ச்சால் 3. சால்பு

***ஆல்*** -- ஆலமரம், ஓரசைச்சொல், ஆமெனல், அல்லவெனல்
***சால்பு*** -- மாட்சிமை, ஊக்கம், தகுதி, கல்வி
***வால்*** -- வெண்மை, மிகுதி, சுத்தம், வால், இளமை
***சால்*** -- உழவுசால், நீர்ச்சால், மிகுதி

436. **நூல்** என்பது எண்ணல், பஞ்சினூல், கல்விநூலும் ஆகும்;
**நீல்** என்ப நீலம், காற்று ஆம்; **நிலவு** சந்திரிகை, ஆலோன்.
**மேல்** இனி, அகலம், மேக்கு, மேற்றிசையுடன், ஆகாயம்.
**போல்** என்ப பதரே, மூங்கில், உவமையும் புகலல் ஆமே.

**நூல்** : 1. எண்ணல் 2. பஞ்சினூல் 3. கல்விநூல்
**நீல்** : 1. நீலம் 2. காற்று
**நிலவு** : 1. சந்திரிகை 2. ஆலோன்
**மேல்** : 1. இனி 2. அகலம் 3. மேக்கு 4. மேற்றிசை 5. ஆகாயம்
**போல்** : 1. பதர் 2. மூங்கில் 3. உவமை.

***நூல்*** -- எண்ணல், பஞ்சினூல், கல்விநூல்
***நீல்*** -- நீலம், காற்று
***நிலவு*** -- நிலா, சந்திரன்
***மேல்*** -- இனியென்பது, அகலம், மேல், மேற்றிசை, ஆகாயம்
***போல்*** -- பதர், மூங்கில், உவமை

437. **உலவை** கான்யாறு, வள்ளி,
ஊதை, கோடரம், மருப்பு,
குலம், மரப்பொந்து, ஊர், ஓடைக்
கொடி, தழை, குடிபன் னொன்று ஆம்.
**பலம்** ஒருநிறை, ஊன், நெற்றி,
படை, கனி, பயன், கிழங்கு,
வலமொடு, செம்பொன், காயும்
வழங்கும் ஐயிரு பேர் ஆமே.

**உலவை** : 1. கான்யாறு 2. வள்ளி 3. ஊதை 4. கோடரம் 5. மருப்பு 6. குலம் 7. மரப்பொந்து 8. ஊர் 9. ஓடைக்கொடி 10. தழை 11. குடி
**பலம்** : 1. ஒருநிறை 2. ஊன் 3. நெற்றி 4. படை 5. கனி 6. பயன் 7. கிழங்கு 8. வலம் 9. பொன் 10. காய்

***உலவை*** -- கான்யாறு, வள்ளி, காற்று, மரக்கொம்பு, விலங்கின் கொம்பு, குலம், மரப்பொந்து, ஊர், ஓடைக்கொடி, தழை, குடி
***பலம்*** -- ஒருநிறை, ஊன், நெற்றி, படை, பழம், பயன், கிழங்கு, வலி, பொன், காய்

438. **அலகு** எண், நெற்கதிரே ஆதி, ஆயுதம், மகிழின் வித்து,
பலகறை, துடைப்பம், நுண்மை, பறவை மூக்கு எண்பேர் பன்னும்;
**கலம்** அலம், அகலம், பாண்டம், உண்கலன், யாழ், நாவாயோடு,
இலகு பூண், கடைநாள் என்ப, ஓர்அளவு எனவும் ஆமே.

**அலகு** : 1. எண் 2. நெற்கதிரே ஆதி 3. ஆயுதம் 4. மகிழின் வித்து 5. பலகறை 6. துடைப்பம் 7. நுண்மை 8. பறவை மூக்கு
**கலம்** : 1. அலம் 2. அகலம் 3. பாண்டம் 4. உண்கலன் 5. யாழ் 6. நாவாய் 7. பூண் 8. கடைநாள் 9. ஓர் அளவு

***அலகு*** -- எண், நெற்கதிர்முதலியகதிர்கள், ஆயுதப்பொது, மகிழம் வித்து, சோகி, துடைப்பம், நுண்மை, பறவைமூக்கு
***கலம்*** -- கலப்பை, அகலம், மட்கலம், உண்கலம், யாழ், மரக்கலம், ஆபரணம், இரேவதிநாள், கலனென்னுமளவு

439. **கலை** சுறா, மகரம், கல்வி, காழ், விலங்கேறு, தூசு,
குலவும் ஆண்முசு, நூல், காலநுட்பம், பட்டிகை, கூறு ஆகும்;
**கலி** வளம், ஞாட்பு, வஞ்சம், கடையுகம், முந்நீர், ஓர் பா,
ஒலி, முதுமகன், விதப்போடு உறுகணும் ஒரு பான் ஆமே.

**கலை** : 1. சுறா 2. மகரம் 3. கல்வி 4. காழ் 5. விலங்கேறு 6. தூசு 7. ஆண்முசு 8. நூல் 9. காலநுட்பம் 10. பட்டிகை 11. கூறு
**கலி** : 1. வளம் 2. ஞாட்பு 3. வஞ்சம் 4. கடையுகம் 5. முந்நீர் 6. ஓர்பா 7. ஒலி 8. முதுமகன் 9. விதப்பு 10. உறுகண்

***கலை*** -- சுறாமீன், மகரவிராசி, கல்வி, வயிரம், விலங்கினாண், புடைவை, முசுவினாண், நூல், காலநுட்பம், அரை ஞாண், பங்கு
***கலி*** -- வலி, போர், வஞ்சம், கலியுகம், கடல், கலிப்பா, ஒலி, சனி, மிகுதி, துன்பம்

440. **கோலம்** ஒப்பனையே,கேழல், கொண்டை, யௌவனம், பல்வேடம்,
சாலும் நீரோட்டம், ஓடம், சகுனம், பீர்க்கொடு, துவர்க்காய்;
**கூலமே** பண்ணிகாரம், குரங்கு, கோ, அணை, விலங்கின்
வாலொடு, ஆவணமே, பாகல், வார்புனற்கரையும் ஆமே.

**கோலம்** : 1. ஒப்பனை 2. கேழல் 3. கொண்டை 4. யௌவனம் 5. பல்வேடம் 6. நீரோட்டம் 7. ஓடம் 8. சகுனம் 9. பீர்க்கு 10. துவர்க்காய்
**கூலம்** : 1. பண்ணிகாரம் 2. குரங்கு 3. கோ 4. அணை 5. விலங்கின் வால் 6. ஆவணம் 7. பாகல் 8. புனற்கரை.

***கோலம்*** -- அலங்காரம், பன்றி, இலந்தைக்கனி, அழகு, பல வேஷங்கள், நீரோட்டம், தெப்பம், பறவை, பீர்க்கு, பாக்கு
***கூலம்*** -- பலபண்டம், வானரம், பசு, வரம்பு, விலங்கின்வால், அங்காடி, பாகல், நீர்க்கரை

441. **சாலமே** விசாலம், கூட்டம், சபை, மரப்பொது, பூமொட்டு,
சாலகம், விலங்கின் கூட்டம், யாலமும், அரணும் சாற்றும்;
**பீலி** பொன், ஆலவட்டம், பிறங்கல், வாச்சியம், கலாபி,
கோலம் ஆர் மயூரம், மாதர் காலணி, அரணும் கூறும்.

**சாலம்** : 1. விசாலம் 2. கூட்டம் 3. சபை 4. மரப்பொது 5. பூமொட்டு 6. சாலகம் 7. விலங்கின் கூட்டம் 8. யாலம் 9. அரண்
**பீலி** : 1. பொன் 2. ஆலவட்டம் 3. பிறங்கல் 4. வாச்சியம் 5. கலாபி 6. மயூரம் 7. மாதர்காலணி 8. அரண்

***சாலம்*** -- விசாலம், கூட்டம், சபை, மரப்பொது, பூமொட்டு, பலகணி, விலங்கின் கூட்டம், ஆச்சாமரம், அரண்
***பீலி*** -- பொன், ஆலவட்டம், மலை, வாச்சியம், மயிற்றோகை, மயில், மகளிர்காலணி, மதில்

442. **பாலை** ஓர் நிலமே, மற்று அந்நிலத்தினிற்பாடல், மும்மீன்,
வேலையோடு, அதிதிநாள், ஓர்தரு என்ப; வெம்மையும் பேர்.
**மாலை** பூவாதிகொண்டு வகுத்திடுந் தொடை, பாமாலை,
மேலும் நோய், இயல்பு, ஒழுங்கு, வேந்தன்இல், இரா ஏழ் பேரே.

**பாலை** : 1. ஓர் நிலம் 2. அந்நிலத்தினிற் பாடல் 3. மும்மீன் 4. வேலை 5. அதிதிநாள் 6. ஓர்தரு 7. வெம்மை
**மாலை** : 1. பூவாதிகொண்டு வகுத்திடுந் தொடை 2. பாமாலை 3. நோய் 4. இயல்பு 5. ஒழுங்கு 6. வேந்தன் இல் 7. இரா.

***பாலை*** -- பாலைநிலம், பாலைநிலத்துப்பாடல், மிருகசீரிடநாள், கடல், புநர்பூசநாள், பாலைமரம், வெம்மை
***மாலை*** -- புட்பமுதலியவற்றாற்றொடுக்குமாலை, பாமாலை, நோய், இயல்பு, ஒழுங்கு, அரமனை, இரா

443. **மால்** புயல், கருமை, புந்தி, மாயவன், மயக்கம், பீடு,
கால், வரை, தொன்மை, வேட்கை, கௌசிகன், வளவனும் பேர்;
**பால்** என்ப வளாகம், பங்கு, பக்கம், பண்பு உரிமை, பாதி,
வாலொடு, சுவைசேர் கீரம், மாதிரம் இவை ஒன்பானே.

**மால்** : 1. புயல் 2. கருமை 3. புந்தி 4. மாயவன் 5. மயக்கம் 6. பீடு 7. கால் 8. வரை 9. தொன்மை 10. வேட்கை 11. கௌசிகன் 12. வளவன்
**பால்** : 1. வளாகம் 2. பங்கு 3. பக்கம் 4. பண்பு 5. உரிமை 6. பாதி 7. வால் 8. கீரம் 9. மாதிரம்.

***மால்*** -- முகில், கருமை, புதன், விட்டுணு, மயக்கம், பெருமை, காற்று, மலை, பழமை, வேட்கை, இந்திரன், சோழன்
***பால்*** -- இடம், பங்கு, பக்கம், குணம், உரிமை, பாதி, வெண்மை, பால், திசை

444. **கோல்** என்பது துலை, சம்மட்டி, கொண்டை, யாழ்நரம்பு, தெப்பம்,
நீலஅஞ்சனக்கோல், ஈட்டி, நீண்ட கோடரம், தராசு,
கோலுறு படிசம், ஊற்றுக்கோல், அளந்திடு கோலோடு,
சீலமார் மன்னர் செங்கோல், துகிலிகை எனவும் செப்பும்.

**கோல்** : 1. துலை 2. சம்மட்டி 3. கொண்டை 4. யாழ்நரம்பு 5. தெப்பம் 6. அஞ்சனக்கோல் 7. ஈட்டி 8. கோடரம் 9. தராசு 10. படிசம் 11. ஊற்றுக்கோல் 12. அளந்திடுகோல் 13. செங்கோல் 14. துகிலிகை.

***கோல்*** -- துலாக்கோல், சம்மட்டி, இலந்தை, யாழ்நரம்பு, மிதவை, அஞ்சனக்கோல், ஈட்டி, மரக்கொம்பு, தராசு, தூண்டில், ஊன்றுகோல், அளக்குங்கோல், அரசன்செங்கோல், எழுதுகோல்.

**(லகர எதுகை முற்றிற்று)**

## வகர எதுகை

445. **உவணமே** கலுழன், சேனம், உயர்ச்சியும், கழுகும் என்ப;
**கவனமே** கலக்கம், வெம்மை, கடுப்பு, மாக்கதி, போர், காடு ஆம்;
**நுவணை** நூல், நுண்மை, பிண்டி, பஞ்சின்நூல் நுவலல் பாற்றுஆம்;
**தவ** குன்றல், மிகுதி என்ப; **தவனன்** தீ, அனலி ஆமே.

**உவணம்** : 1. கலுழன் 2. சேனம் 3. உயர்ச்சி 4. கழுகு
**கவனம்** : 1. கலக்கம் 2. வெம்மை 3. கடுப்பு 4. மாக்கதி 5. போர் 6. காடு
**நுவணை** : 1. நூல் 2. நுண்மை 3. பிண்டி 4. பஞ்சின்நூல்
**தவ** : 1. குன்றல் 2. மிகுதி
**தவனன்** : 1. தீ 2. அனலி

***உவணம்*** -- கருடன், பருந்து, உயர்ச்சி, கழுகு
***கவனம்*** -- கலக்கம், வெப்பம், சீக்கிரம், குதிரையின்கதி, யுத்தம், காடு
***நுவணை*** -- கல்விநூல், நுட்பம், தினைமா, பஞ்சிநூல்
***தவ*** -- குறைதல், மிகுதி
***தவனன்*** -- நெருப்பு, சூரியன்

446. **இவறலே** மறவி, ஆசை என்ப; பேரிச்சைக்கும் பேர்.
**இவர்தலே** எழுச்சி, ஆசை, ஏறுதல், மேவல் என்ப;
**குவவு** என்ப திரட்சி, பூமி, கூம்பல், மாண்புடனே, கூட்டம்;
**சுவவு** என்ப புள்ளின் மூக்கு; சுவர்க்கமும், சுண்டனும் பேர்.

**இவறல்** : 1. மறவி 2. ஆசை 3. பேரிச்சை
**இவர்தல்** : 1. எழுச்சி 2. ஆசை 3. ஏறுதல் 4. மேவல்
**குவவு** : 1. திரட்சி 2. பூமி 3. கூம்பல் 4. மாண்பு 5. கூட்டம்
**சுவவு** : 1. புள்ளின் மூக்கு 2. சுவர்க்கம் 3. சுண்டன்.

***இவறல்*** -- மறப்பு, ஆசை, பேரவா
***இவர்தல்*** -- எழுச்சி, ஆசை, ஏறுதல், மேவுதல்
***குவவு*** -- திரட்சி, பூமி, குவிதல், பெருமை, கூட்டம்
***சுவவு*** -- பறவைமூக்கு, தேவலோகம், மூஞ்சூறு

447. **நவிரே** ஆண்மயிர், பண், வாள்ஆம்; **நவிலலே**, பண்ணல் சொல்லல்;
**சவி** மணிக்கோவை, செவ்வி, சாற்றிய வனப்பு, காந்தி;
**நவிரம்** வாள், மஞ்ஞை, புன்மை, நகம், உச்சி, பிச்சம், சென்னி;
**தவிசு** என்ப தடுக்கு, மெத்தை இலகடம் முப்பேர் தானே.

**நவிர்** : 1. ஆண்மயிர் 2. பண் 3. வாள்
**நவிலல்** : 1. பண்ணல் 2. சொல்லல்
**சவி** : 1. மணிக்கோவை 2. செவ்வி 3. வனப்பு 4. காந்தி
**நவிரம்** : 1. வாள் 2. மஞ்ஞை 3. புன்மை 4. நகம் 5. உச்சி 6. பிச்சம் 7. சென்னி
**தவிசு** : 1. தடுக்கு 2. மெத்தை 3. இலகடம்.

***நவிர்*** -- ஆண்மயிர், மருதயாழ்த்திறம், வாள்
***நவிலல்*** -- செய்தல், சொல்லுதல்
***சவி*** -- சரமணிக்கோவை, செவ்வை, அழகு, ஒளி
***நவிரம்*** -- வாள், மயில், புன்மை, மலை, உச்சி, ஆண்மயிர், தலை
***தவிசு*** -- தடுக்கு, மெத்தை, யானைமேற்றவிசு

448. **துவக்கு** உடல், பிணக்கு, தோல் ஆம்;**துவசம்** கேதனமே, சின்னம்;
**சவட்டலே** துவட்டல், மெல்லல், காதுதல் முப்பேர் சாற்றும்;

**சிவப்பு** என்ப சினமே செம்மையுடன், சினக்குறிப்பும் ஆகும்;
**உவப்பு** என்ப மகிழ்ச்சி, பொம்மல், உயரமும், விளையாட்டும் பேர்.

**துவக்கு** : 1. உடல் 2. பிணக்கு 3. தோல்
**துவசம்** : 1. கேதனம் 2. சின்னம்
**சவட்டல்** : 1. துவட்டல் 2. மெல்லல் 3. காதுதல்
**சிவப்பு** : 1. சினம் 2. செம்மை 3. சினக்குறிப்பு
**உவப்பு** : 1. மகிழ்ச்சி 2. பொம்மல் 3. உயரம் 4. விளையாட்டு

***துவக்கு*** -- உடல், பிணக்கு, தோல்
***துவசம்*** -- விருதுக்கொடி, அடையாளம்
***சவட்டல்*** -- துவட்டல், மெல்லுதல், அழித்தல்
***சிவப்பு*** -- கோபம், செந்நிறம், சினக்குறிப்பு
***உவப்பு*** -- மகிழ்ச்சி, பொலிவு, உயரம், **விளை**யாட்டு.

449. **சுவல்** பிடர், தோள் மேல், மேடு, துரகதக் குசை, வென் என்ப;
**கவி** என்ப பா, குரங்கு, கவிஞன், பார்க்கவன் என்று ஆகும்;
**நவியமே** குடாரம், தண்ணம், புதுமையும், நவிலல் பாற்று ஆம்;
**கவிகை**யே குடை, கவித்தல், ஈதலும் முப்பேர் காட்டும்.

**சுவல்** : 1. பிடர் 2. தோள்மேல் 3. மேடு 4. துரகத குசை 5. வென்
**கவி** : 1. பா 2. குரங்கு 3. கவிஞன் 4. பார்க்கவன்
**நவியம்** : 1. குடாரம் 2. தண்ணம் 3. புதுமை
**கவிகை** : 1. குடை 2. கவித்தல் 3. ஈதல்

***சுவல்*** -- பிடர், தோண்மேல், மேடு, குதிரைமயிர், முதுகு
***கவி*** -- பா, வானரம், புலவன், சுக்கிரன்
***நவியம்*** -- கோடாலி, மழு, புதுமை
***கவிகை*** -- குடை, கவித்தல், கொடை

450. **தவர்** என்ப முனிவர், சாபம்; **தவற**லே கடத்தல், வீதல்;
**துவரை**யே அவரையோடு, **து**வாரகை எனவுஞ் சொல்லும்;
**கவரி**யே சவரம், பொற்றேர், மானமாவோடு, காரான்;
**புவனமே** புவியும், நீரும், உலகத்தின் பொதுவும் ஆமே.

**தவர்** : 1. முனிவர் 2. சாபம்
**தவறல்** : 1. கடத்தல் 2. வீதல்
**துவரை** : 1. அவரை 2. துவாரகை
**கவரி** : 1. சவரம் 2. தேர் 3. மானமா 4. காரான்
**புவனம்** : 1. புவி 2. நீர் 3. உலகத்தின் பொது.

***தவர்*** -- இருடிகள், வில்
***தவறல்*** -- தவறுதல், கெடுதல்

***துவரை*** -- ஓரவரை, துவாரகாபுரி
***கவரி*** -- சாமரம், தேர், கவரிமா, எருமை
***புவனம்*** -- பூமி, சலம், உலகப்பொது

451. **நுவணம்** சாத்திரமே, தந்து, நுண்மை, பிண்டியும் ஆம் என்ப;
**உவணை** உவ்விடம், துறக்கம்; **உவட்டலே** பெருக்கு, ஒல்லாமை;
குவடு உண்டை, சிகரம், வெற்பு, கோடரம் எனவும் கூறும்.
**கவடு** கோடரம், புரோசை, கழுத்திடு கயிறும் ஆமே.

**நுவணம்** : 1. சாத்திரம் 2. தந்து 3. நுண்மை 4. பிண்டி
**உவணை** : 1. உவ்விடம் 2. துறக்கம்
**உவட்டல்** : 1. பெருக்கு 2. ஒல்லாமை
குவடு : 1. உண்டை 2. சிகரம் 3. வெற்பு 4. கோடரம்
**கவடு** : 1. கோடரம் 2. புரோசை 3. கழுத்திடு கயிறு

***நுவணம்*** -- சாத்திரம், பஞ்சினூல், நுண்மை, தினைமா
***உவணை*** -- உவ்விடம், தேலோகம்
***உவட்டல்*** -- பெருக்கு, வெறுப்பு
***குவடு*** -- திரட்சி, மலையுச்சி, மலை, மரக்கொம்பு
***கவடு*** -- மரக்கொம்பு, யானைக்கழுத்திற்கயிறு, கழுத்திடுகயிறு

452. அவலே சிற்றுண்டி, பள்ளம்; நீர்நிலை தானும் அப்பேர்.
செவிலியே வளாத்தகைத்தாய்; முன்பிறந்தாளும் செப்பும்.
**கவுரி** சாம்பவி, பத்தாண்டுப் பெண்ணொடு, காளி என்ப;
**கவுடம்** ஓர்கொடி, ஓர்தேயம் இருபெயர் கழறல் ஆமே.

அவல் : 1. சிற்றுண்டி 2. பள்ளம் 3. நீர்நிலை
செவிலி : 1. வளர்த்தகைத்தாய் 2. முன்பிறந்தாள்
**கவுரி** : 1. சாம்பவி 2. பத்தாண்டுப்பெண் 3. காளி
**கவுடம்** : 1. ஓர்கொடி 2. ஓர்தேயம்.

*அவல்* -- சிற்றுண்டி, பள்ளம், குளம்
*செவிலி* -- வளர்த்ததாய், அக்காள்
*கவுரி* -- பார்வதி, பத்துவயதுப்பெண், காளி
*கவுடம்* -- ஓர்கொடி, ஓர்தேயம்

453. **பவும்** என்ப சனனம், நாசம் , பாவம் என்று ஆகும் முப்பேர்;
**சுவடு** என்ப குறியோடு, ஓர்எண், தழும்பு என முப்பேர் சொல்லும்;
**யவம்** ஒருதானியப்பேர் என்ப, நெல்லிற்கும் ஆகும்.
**யவனர்** சோனகர் கண்ணாளர், சித்திரகாரர் ஆமே.

**பவம்** : 1. சனனம் 2. நாசம் 3. பாவம்
**சுவடு** : 1. குறி 2. ஓர்எண் 3. தழும்பு
**யவம்** : 1. ஒரு தானியப்பேர் 2. நெல்
**யவனர்** : 1. சோனகர் 2. கண்ணாளர் 3. சித்திரகாரர்

***பவம்*** -- பிறப்பு, நாசம், பாவம்
***சுவடு*** -- குறி, ஓர்நெல்லிலக்கம், தழும்பு
***யவம்*** -- ஓர்தானியம், நெல்
***யவனர்*** -- சோனகர், கம்மாளர், சித்திரகாரர்

454. **அவரை**யே துவரை, கொள்ளு; முதிரையும் அறையல் ஆகும்,
**சவம்** என்ப குணவம், சோகு, சடிதியும் முப்பேர் சாற்றும்;
**கவ்ர்தல்** ஆசைப் பெருக்கம், கடைதல், வாருதலே, கள்ளல்;
**சிவம்** என்ப குறுணி, நன்மை, முத்தியும் செப்பல் ஆமே.

**அவரை** : 1. துவரை 2. கொள்ளு 3. முதிரை
**சவம்** : 1. குணவம் 2. சோகு 3. சடிதி
**கவர்தல்** : 1.ஆசைப் பெருக்கம் 2. கடைதல் 3. வாருதல் 4. கள்ளல்
**சிவம்** : 1. குறுணி 2. நன்மை 3. முத்தி

***அவரை*** -- துவரை, கொள்ளு, முதிரை
***சவம்*** -- பிணம், பிசாசம், சடிதி
***கவர்தல்*** -- ஆசைப்பெருக்கம், கடைதல், வாருதல், திருடல்
***சிவம்*** -- குறுணி, நன்மை, மோக்கம்

455.* **திவலை**யே உதகத்தோடு, சிதறுநீர்த்துளியும் ஆகும்,
**அவை** என்ப சவையே, கூட்டம்; அறிஞரும் ஆகும் முப்பேர்.
**நவை** குற்றம், இகழ்ச்சி என்ப; **நாவலர்** புலவர், கற்றோர்,
**குவை** குப்பை, திரட்சி, மேடு; கூட்டமும் நாற்பேர் கூறும்.

**திவலை** : 1. உதகம் 2. நீர்த்துளி
**அவை** : 1. சவை 2. கூட்டம் 3. அறிஞர்
**நவை** : 1. குற்றம் 2. இகழ்ச்சி
**நாவலர்** : 1. புலவர் 2. கற்றோர்
**குவை** : 1. குப்பை 2. திரட்சி 3. மேடு 4. கூட்டம்.

***திவலை*** -- மழை, நீர்த்துளி
***அவை*** -- சவை, கூட்டம், அறிவுடையோர்
***நவை*** -- குற்றம், இகழ்ச்சி
***நாவலர்*** -- புலவர், கற்றோர்
***குவை*** -- குப்பை, திரட்சி, மேடு, கூட்டம்

456. **கவுசிகம்** விளக்குத்தண்டு, ஓர்பண், பட்டு, கடிய கோட்டான்;
**சவுரி** மால், அங்கர் கோமான், சனி, நமன், கலுழன், கள்வன்;
**மவுலி**யே சிகை, கோடீரம், மகுடம், பாடலியும் ஆகும்.
**அவி** தேவருணவு, துப்போடு, அன்னமும் முப்பேர் ஆமே.

**கவுசிகம்** : 1. விளக்குத்தண்டு 2. ஓர்பண் 3. பட்டு 4. கோட்டான்
**சவுரி** : 1. மால் 2. அங்கர் கோமான் 3. சனி 4. நமன் 5. கலுழன் 6. கள்வன்
**மவுலி** : 1. சிகை 2. கோடீரம் 3. மகுடம் 4. பாடலி
**அவி** : 1. தேவருணவு 2. துப்பு 3. அன்னம்

***கவுசிகம்*** -- விளக்குத்தண்டு, ஓர்பண், பட்டுச்சீலை, கூகை
***சவுரி*** -- திருமால், கன்னன், சனி, யமன், கருடன், கள்வன்
***மவுலி*** -- சிகை, சடை, கிரீடம், கள்
***அவி*** -- தேவருணவு, நெய், சோறு

457. **செவி** காது, கேள்வி ஆகும்; **சீவனம்** புனல், வாழ்தல் பேர்;
**குவிதல்** கூடுதல் திரட்சி, கூம்புதல் முப்பேர் கூறும்,
**அவிர்த**லே ஒளிர்தல், பீறல்; **அவா** என்பது இறங்கல், ஆசை;
**துவர்** பகை, பவளம், செம்மை, துவர்ப்பொடு, விறகும் ஆமே.

**செவி** : 1. காது 2. கேள்வி
**சீவனம்** : 1. புனல் 2. வாழ்தல்
**குவிதல்** : 1. கூடுதல் 2. திரட்சி 3. கூம்புதல்
**அவிர்தல்** : 1. ஒளிர்தல் 2. பீறல்
**அவா** : 1. இறங்கல் 2. ஆசை
**துவர்** : 1. பகை 2. பவளம் 3. செம்மை 4. துவர்ப்பு 5. விறகு

***செவி*** -- காது, கேள்வி
***சீவனம்*** -- நீர், உயிர் வாழ்தல்
***குவிதல்*** -- கூடுதல், உண்டை, கூம்பல்
***அவிர்தல்*** -- ஒளிசெய்தல், பீறல்
***அவா*** -- இறங்கல், ஆசை
***துவர்*** -- பகை, பவளம், சிவப்பு, துவர்ப்பு, விறகு

458. **கவை** மரக்கப்பு, கோட்டை; கவர்வழி, காடும் ஆகும்.
**சிவை** பதித்திரி, வேர், நாரி; குருகு, ஓரி எனவும் செப்பும்.
**சவை** கூட்டம், புலவர் என்ப; **தவாவினை** வரையே, முத்தி;
**துவை** புளிங்கறியும், ஊனும், துழனியும், வறையலும் பேர்.

**கவை** : 1. மரக்கப்பு 2. கோட்டை 3. கவர்வழி 4. காடு
**சிவை** : 1. பதித்திரி 2. வேர் 3. நாரி 4. குருகு 5. ஓரி
**சவை** : 1. கூட்டம் 2. புலவர்

**தவாவினை** : 1. வரை 2. முத்தி
**துவை** : 1. புளிங்கறி 2. ஊன் 3. துழனி 4. வறையல்

***கவை*** -- மரக்கொம்பு, கோட்டை, கவர்வழி, காடு
***சிவை*** -- உலைத்துருத்தி, வேர், பார்வதி, உலைமூக்கு, ஆணரி
***சவை*** -- கூட்டம், புலவர்
***தவாவினை*** -- மலை, முத்தி
***துவை*** -- புளிங்கறி, இறைச்சி, ஒலி, பிண்ணாக்கு

459. **அவ்வை**யே பகவற்கு ஆதி தருஞ்சுதை, ஆய், தவப்பெண்;
**செவ்வி** ஏர், பொழுதினோடு, சித்திரை, பருவம் ஆகும்;
**தெவ்வு** அமர், பகை, கொள்கைப்பேர்; **தீவினை** கொடுமை, பாவம்;
**சைவம்** ஓர் புராணம், ஈசன் சமயமோடு, இளமை ஆமே.

**அவ்வை** : 1. பகவற்கு ஆதி தருஞ்சுதை 2. ஆய் 3. தவப்பெண்
**செவ்வி** : 1. ஏர் 2. பொழுது 3. சித்திரை 4. பருவம்
**தெவ்வு** : 1. அமர் 2. பகை 3. கொள்கை
**தீவினை** : 1. கொடுமை 2. பாவம்
**சைவம்** : 1. ஓர்புராணம் 2. ஈசன் சமயம் 3. இளமை.

***அவ்வை*** -- பகவனுக்கு ஆதி பெற்ற மகள், மாதா, தவப்பெண்
***செவ்வி*** -- அழகு, காலம், சித்திரை, பருவம்
***தெவ்*** -- போர், பகை, கொள்கை
***தீவினை*** -- கொடுமை, பாவம்
***சைவம்*** -- ஓர்புராணம், சிவசமயம், இளமை

460. **கவ்வை** கள், எள்ளிளங்காய், கம்பலை, பழிச்சொல், துன்பம்;
**பவ்வமே** குமிழி, வாரி, பருமரக் கணு, உவா ஆம்;
**நவ்வி** ஏர், இளமை, அத்தநாளொடு, தோணி, மான் ஆம்;
**தவ்வை** முன்பிறந்தாளோடு, தாயும், மூதேவியும் பேர்.

**கவ்வை** : 1. கள் 2. எள்ளிளங்காய் 3. கம்பலை 4. பழிச்சொல் 5. துன்பம்
**பவ்வம்** : 1. குமிழி 2. வாரி 3. மரக்கணு 4. உவா
**நவ்வி** : 1. ஏர் 2. இளமை 3. அந்தநாள் 4. தோணி 5. மான்
**தவ்வை** : 1. முன்பிறந்தாள் 2. தாய் 3. மூதேவி

***கவ்வை*** -- மது, எள்ளிளங்காய், ஒலி, பழிமொழி, துன்பம்
***பவ்வம்*** -- புற்புதம், கடல், மரக்கணு, பூரணை
***நவ்வி*** -- அழகு, இளமை, அத்தநட்சத்திரம், இரேவதிநாள், மான்
***தவ்வை*** -- அக்காள், தாய், மூதேவி

461.* **எவ்வமே** தனிமை, தீராநோய், துன்பம் இயம்பும் முப்பேர்;
**வவ்வலே** கொள்ளை செய்தல், வாருதல், பிடித்தல் என்ப;
**துவ்வு** அனுபவத்தினோடு, சொல்லும் ஐம்பொறி நுகர்ச்சி;
**கெவ்** என்ப சங்கிராமம்; விரோதமும் கிளத்தல் ஆமே.

**எவ்வம்** : 1. தனிமை 2. தீராநோய் 3. துன்பம்
**வவ்வல்** : 1. கொள்ளை செய்தல் 2. வாருதல் 3. பிடித்தல்
**துவ்வு** : 1. அனுபவம் 2. ஐம்பொறி 3. நுகர்ச்சி
**கெவ்** : 1. சங்கிராமம் 2. விரோதம்

***எவ்வம்*** -- தனிமை, தீராதநோய், துன்பம்
***வவ்வல்*** -- கொள்ளைசெய்தல், வாருதல், பிடிக்குதல்
***துவ்வு*** -- அனுபவம், ஐம்பொறிநுகர்ச்சி
***கெவ்*** -- போர், விரோதம்

462.* **தாவம்** வேசத்தினோடு, சங்கிரம், காட்டுத்தீ ஆம்;
**காவலே** சிறைசெய்சாலை, காத்தலோடு, அரண், மதில் பேர்,
**கூவலே** கிணறு, பள்ளங், கூறுதல், விரித்தல் என்ப;
**தூவலே** சொரிதல், சிந்தல், மழைத் தூவல் எனவும் சொல்லும்.

**தாவம்** : 1. வேசனம் 2. சங்கிரம் 3. காட்டுத்தீ
**காவல்** : 1. சிறைசெய்சாலை 2. காத்தல் 3. அரண் 4. மதில்
**கூவல்** : 1. கிணறு 2. பள்ளம் 3. கூறுதல் 4. விளித்தல்
**தூவல்** : 1. சொரிதல் 2. சிந்தல் 3. மழைத்தூவல்

***தாவம்*** -- மருதநிலத்தூர், காடு, காட்டுத்தீ
***காவல்*** -- சிறைச்சாலை, காப்பு, அரண், மதில்
***கூவல்*** -- கிணறு, பள்ளம், சொல்லல், அழைத்தல்
***தூவல்*** -- சொரிதல், சிந்துதல், மழைத்தூவல்

463. **சேவல்** பாது, அளறு, புள்ளின் ஆண், கோழிச் சேவல் நாற்பேர்,
**கேவலம்** தனிமை, முத்தி, ஒருங்கு எனக் கிளத்தல் ஆகும்.
**பூவை** சாரிகை, பெண், காயா, கிளி, பரபுட்டம் என்ப;
**வாவலே** நசை, கடத்தல், துரிஞ்சிலும் வகுத்தபேரே.

**சேவல்** : 1. பாது 2. அளறு 3. புள்ளின் ஆண் 4. கோழிச் சேவல்
**கேவலம்** : 1. தனிமை 2. முத்தி 3. ஒருங்கு
**பூவை** : 1. சாரிகை 2. பெண் 3. காயா 4. கிளி 5. பரபுட்டம்
**வாவல்** : 1. நசை 2. கடத்தல் 3. துரிஞ்சில்

***சேவல்*** -- காவல், சேறு, பறவையாண், கோழிச்சேவல்
***கேவலம்*** -- தனிமை, முத்தி, ஒருங்கு
***பூவை*** -- நாகணவாய்ப்புள், பெண், காயாமரம், கிளி, குயில்
***வாவல்*** -- ஆசை, கடத்தல், வாவற்பறவை

464. **ஆவியே** வாவி, நாற்றம், பிட்டு, உயிர், புகை, மூச்சு ஆகும்;
**கூவிரம்** தேர், தேர்மொட்டு, கூவிளை எனவும் கூறும்;
**காவியே** குவளை, காவிக்கல்லொடு, கள்ளும் முப்பேர்,
**நாவிதன்** ஆரல், பூரநாளும், மஞ்சிகனும் ஆமே.

**ஆவி** : 1. வாவி 2. நாற்றம் 3. பிட்டு 4. உயிர் 5. புகை 6. மூச்சு
**கூவிரம்** : 1. தேர் 2. தேர்மொட்டு 3. கூவிளை
**காவி** : 1. குவளை 2. காவிக்கல் 3. கள்
**நாவிதன்** : 1. ஆரல் 2. பூரநாள் 3. மஞ்சிகன்

***ஆவி*** -- தடாகம், மணம், பிட்டு, சீவன், புகை, சுவாசம்
***கூவிரம்*** -- தேர், தேர்மொட்டு, வில்வம்
***காவி*** -- குவளை, காவிக்கல், மது
***நாவிதன்*** -- கார்த்திகைநாள், பூரநட்சத்திரம், மங்கலன்

465. **ஆவரணம்** தான் சட்டை, தடை, மறைவு, அரணம், ஆடை,
**ஏவலே** வியங்கோள், ஆணை, இலம்பாடும் இசைக்கும் முப்பேர்;
**பாவகன்** தூய்மை செய்வோன், உதாசனன் இருபேர் பன்னும்,
**மேவலே** உண்டல், ஆசைப்பெருக்கம், விருப்பமும் பேர்.

**ஆவரணம்** : 1. சட்டை 2. தடை 3. மறைவு 4. அரணம் 5. ஆடை
**ஏவல்** : 1. வியங்கோள் 2. ஆணை 3. இலம்பாடு
**பாவகன்** : 1. தூய்மை செய்வோன் 2. உதாசனன்
**மேவல்** : 1. உண்டல் 2. ஆசைப்பெருக்கம் 3. விருப்பம்

***ஆவரணம்*** -- சட்டை, தடை, மறைவு, கோட்டை, சீலை
***ஏவல்*** -- வியங்கோள், ஆணை, தரித்திரம்
***பாவகன்*** -- தூய்மை செய்பவன், அக்கினி
***மேவல்*** -- உண்டல், ஆசைப்பெருக்கம், விருப்பம்

466.* **ஓவியர்** சிற்ப நூலோர், சித்திர காரரும் பேர்,
**தேவியே** துர்க்கை, காளி, சிவை, வாழ்க்கைத் துணைவி என்ப;
**தூவியே** அன்னத்தூவி, மயிற்றோகை, இறகும் சொல்லும்;
**தீவிரம்** நரகம், கோபம், செங்கதிர்க்கிரணம் ஆமே.

**ஓவியர்** : 1. சிற்ப நூலோர் 2. சித்திரகாரர்
**தேவி** : 1. துர்க்கை 2. காளி 3. சிவை 4. வாழ்க்கைத் துணைவி
**தூவி** : 1. அன்னத்தூவி 2. மயிற்றோகை 3. இறகு
**தீவிரம்** : 1. நரகம் 2. கோபம் 3. செங்கதிர்க்கிரணம்

***ஓவியர்*** -- சிற்பநூலோர், சித்திரகாரர்
***தேவி*** -- துர்க்காதேவி, காளி, பார்வதி, தலைவி
***தூவி*** -- அன்னத்தின் றூவி, மயிற்றூவி, இறகு
***தீவிரம்*** -- நரகம், கோபம், சூரியகிரணம்

467. **ஏவு** என்ப வருத்தம், ஏவல், அத்திரம் முப்பேர் என்ப;
**கோவை** ஓர்கொடி, தார், ஓர்நூல், கோத்தல், ஓர்நகரும் ஆகும்;
**தீவு** இடைக்குறை, சுவைப்பேர்; **சீவனே** உயிர், வியாழம்;
**பாவை** ஓவியமும், பெண்ணும், பதணமும் முப்பேர் பன்னும்.

**ஏவு** : 1. வருத்தம் 2. ஏவல் 3. அத்திரம்
**கோவை** : 1. ஓர்கொடி 2. தார் 3. ஓர்நூல் 4. கோத்தல் 5. ஓர்நகர்
**தீவு** : 1. இடைக்குறை 2. சுவை
**சீவன்** : 1. உயிர் 2. வியாழம்
**பாவை** : 1. ஓவியம் 2. பெண் 3. பதணம்

**ஏவு** -- வருத்தம், ஏவுதல், அம்பு
**கோவை** -- கோவைக்கொடி, கோவை, ஒருநூல், கோக்குதல், கோவை நகரம்.
**தீவு** -- இடைக்குறை, சுவை
**சீவன்** -- உயிர், வியாழம்
**பாவை** -- சித்திரப்பாவை, பெண், மதில்

468. சீவினி ஓர்மருந்து, செவ்வழித் திறத்தோர் ஓசை;
காவலர் புருடர், வேந்தர்; **கவந்தமே** பயசு, முண்டம்,
கோவமே கோபம், பொன் ஆம்; **குவலயம்** குவளை, வையம்;
மாவலர் குதிரைப் பாகர், வாதுவர் இருபேர் ஆமே.

**சீவினி** : 1. ஓர்மருந்து 2. செவ்வழித்திறத்தோர் ஓசை
**காவலர்** : 1. புருடர் 2. வேந்தர்
**கவந்தம்** : 1. பயசு 2. முண்டம்
**கோவம்** : 1. கோபம் 2. பொன்
**குவலயம்** : 1. குவளை 2. வையம்
**மாவலர்** : 1. குதிரைப்பாகர் 2. வாதுவர்

***சீவினி*** -- ஓர்மருந்து, செவ்வழித்திறத்தினோரோசை
***காவலர்*** -- தலைவர், அரசர்
***கவந்தம்*** -- நீர், உடற்குறை
***கோவம்*** -- கோபம், பொன்
***குவலயம்*** -- குவளை, பூமி
***மாவலர்*** -- குதிரைப்பாகர், யானைப்பாகர்

469. வேவு ஒற்று, வேய்தல் ஆகும்; **விவரம்** உள்துளை, பகுப்பு;
தூவே தூவுதல், ஊன் என்ப; **சுவேதமே** கசிவு, வெண்மை;
சாவு என்ப மரணம், சோகு ஆம்; **சவரம்** சாமரம், மயிர்ப்பேர்;
ஓவர் கம்மாளர், பாடற்கீழ்மக்கள் எனவும் ஓதும்.

**வேவு** : 1. ஒற்று 2. வேய்தல்
**விவரம்** : 1. உள்துளை 2. பகுப்பு

**தூவு** : 1. தூவுதல் 2. ஊன்
**சுவேதம்** : 1. கசிவு 2. வெண்மை
**சாவு** : 1. மரணம் 2. சோகு
**சவரம்** : 1. சாமரம் 2. மயிர்
**ஓவர்** : 1. கம்மாளர் 2. பாடற்கீழ்மக்கள்

***வேவு*** -- ஒற்று, வேய்தல்
***விவரம்*** -- உட்டுளை, பகுத்தல்
***தூவு*** -- தூவுதல், ஊன்
***சுவேதம்*** -- வேர்வை, வெண்மை
***சாவு*** -- இறுதி, பைசாசம்
***சவரம்*** -- சாமரை, மயிர்
***ஓவர்*** -- கம்மாளர், பாடற்கீழ்மக்கள்

470. **பவனம்** வானுலகம், இல்லம், பாவனை, விலாளம், கோயில்,
புவனம், கால், ஓரை, நாகலோகமும் புகலும் ஒன்பான்;
**கவலை** ஓர் வல்லி, அச்சம், கம்பு, நோய், துன்பமோடு
கவர்வழி, மரக்கொம்பு என்னக் கருதும் ஓர் எழு பேர் ஆமே.

**பவனம்** : 1. வானுலகம் 2. இல்லம் 3. பாவனை 4. விலாளம் 5. கோயில் 6. புவனம் 7. கால் 8. ஓரை 9. நாகலோகம்
**கவலை** : 1. ஓர்வல்லி 2. அச்சம் 3. கம்பு 4. நோய் 5. துன்பம் 6. கவர்வழி 7. மரக்கொம்பு

***பவனம்*** -- தேவலோகம், வீடு, பாவனை, பூனை, அரமனை, பூமி, காற்று, இராசி, நாகலோகம்
***கவலை*** -- ஓர்கொடி, பயம், செந்தினை, நோய், துன்பம், கவர்வழி, மரக்கொம்பு

471. **நவம்** நடம், ஒன்பான், போகி, நண்பு கார்காலம், தொன்மை,
புவியொடு, புதுமை, தொண்டு, புகன்றிடும் ஒன்பான் ஆகும்,
**உவளகம்** குளம், ஆய்ப்பாடி, ஓர்பக்கம், மதில், இரண்டு,
சவரின் உப்பளம், அந்தப்புரம், பயம்பு எண்பேர் சாற்றும்.

**நவம்** : 1. நடம் 2. ஒன்பான் 3. போகி 4. நண்பு 5. கார்காலம் 6. தொன்மை 7. புவி 8. புதுமை 9. தொண்டு
**உவளகம்** : 1. குளம் 2. ஆய்ப்பாடி 3. ஓர்பக்கம் 4. மதில் 5. இரண்டு 6. உப்பளம் 7. அந்தப்புரம் 8. பயம்பு

***நவம்*** -- கூத்து, ஒன்பது, பாம்பு, கேண்மை, கார்காலம், பழமை, பூமி, புதுமை, தொண்டு
***உவளகம்*** -- குளம், இடைச்சேரி, ஓர்பக்கம், மதில், இரண்டு, உப்பளம், அந்தர்ப்புரம், பள்ளம்

472. **ஆவணம்** தெரு, அங்காடி, அதிதிநாள், உரிமை, சின்னம்,
மேவு சாதனத்தினோடு, பீடிகை விளம்பும் ஏழ்பேர்;
**தாவு** என்பது இகல், வருத்தம், தஞ்சம், தற்செல்வமோடு,
மாவின் நன்னடையே, தாவல் வகுத்த மூவிருபேர் ஆமே.

**ஆவணம்** : 1. தெரு 2. அங்காடி 3. அதிதிநாள் 4. உரிமை 5. சின்னம் 6. சாதனம் 7. பீடிகை
**தாவு** : 1. இகல் 2. வருத்தம் 3. தஞ்சம் 4. தற்செல்வம் 5. மாவின் நன்னடை 6. தாவல்.

***ஆவணம்*** -- வீதி, கடைவீதி, புநர்பூசநாள், உரிமை, அடையாளம், முறிச்சீட்டு, பீடிகை
***தாவு*** -- பகை, வருத்தம், பற்றுக்கோடு, வலி, குதிரையின்நடை, தாவுதல்

**(வகர எதுகை முற்றிற்று)**

## ழகர எதுகை

473. **விழவு** என்ப மிதுனராசி, உற்சவம் விளம்பும் நாமம்;
**கழனி** செய், மருதம், சேறு, கட்டிடு திரையும் ஆகும்,
**கிழமை**யே வாரம், மூப்பு, கெழுதகை, மாட்சி, பண்பு ஆம்;
**கழல்** கழங்கொடு, செருப்பு, காலணி, கால் என்று ஆமே.

**விழவு** : 1. மிதுனராசி 2. உற்சவம்
**கழனி** : 1. செய் 2. மருதம் 3. சேறு 4. கட்டிடு திரை
**கிழமை** : 1. வாரம் 2. மூப்பு 3. கெழுதகை 4. மாட்சி 5. பண்பு
**கழல்** : 1. கழங்கு 2. செருப்பு 3. காலணி 4. கால்

***விழவு*** -- மிதுனவிராசி, திருவிழா
***கழனி*** -- வயல், மருதநிலம், சேறு, திரைச்சீலை
***கிழமை*** -- வாரம், மூப்பு, உரிமை, மாண்பு, குணம்
***கழல்*** -- கழற்சிக்கொடி, தொடுதோல், அணிகழல், கால்

474. **இழும் எனல்** ஓசை என்ப; இனிமையும், இயம்பும் நாமம்.
**விழுமம்**மே சிறப்பு, சீர்மை; விழுப்பமும், இடும்பையும் பேர்.
**தொழு** பெருநாள், ஆன்கோட்டம்; தொழுமரம் எனவும் சொல்லும்.
**செழுமை**யே வளம், கொழுப்பு; செவ்வி மாண்பு எனவும் செப்பும்.

**இழும்எனல்** : 1. ஓசை 2. இனிமை
**விழுமம்** : 1. சிறப்பு 2. சீர்மை 3. விழுப்பம் 4. இடும்பை

**தொழு** : 1. பெருநாள் 2. ஆன்கோட்டம் 3. தொழுமரம்
**செழுமை** : 1. வளம் 2. கொழுப்பு 3. செவ்வி 4. மாண்பு

***இழுமெனல்*** -- அநுகரணவோசை, இனிமை
***விழுமம்*** -- சிறப்பு, சீர்மை, நன்மை, இடும்பை
***தொழு*** -- இரேவதிநாள், பசுக்கோட்டம், தொழுமரம்
***செழுமை*** -- வண்மை, கொழுப்பு, அழகு, மாட்சிமை

475. **தழல்** கிளிகடி கோல், ஆரல், தகனனும், கவணையும் பேர்;
**அழல்** வெப்பம், கேட்டை, செவ்வாய், அள்ளல், செந்தீ ஐம்பேரே;
**கழை** என்ப புணர்தம், மூங்கில், கரும்பு என விரும்பும் முப்பேர்;
**புழல்** ஓர் ஊர், சலதாரைக்கும், புழையுடைப் பொருட்கும் ஆமே.

**தழல்** : 1. கிளிகடிகோல் 2. ஆரல் 3. தகனன் 4. கவணை
**அழல்** : 1. வெப்பம் 2. கேட்டை 3. செவ்வாய் 4. அள்ளல் 5. தீ
**கழை** : 1. புணர்தம் 2. மூங்கில் 3. கரும்பு
**புழல்** : 1. ஓர்ஊர் 2. சலதாரை 3. புழையுடைப்பொருள்.

***தழல்*** -- கிளிகடிகோல், கார்த்திகைநாள், நெருப்பு, கவண்
***அழல்*** -- வெம்மை, கேட்டைநாள், செவ்வாய், நரகம், நெருப்பு
***கழை*** -- புநர்பூசநாள், மூங்கில், கரும்பு
***புழல்*** -- ஒரூர், சலதாரை, துளையுடைப்பொருள்

476. **வழங்கலே** உலாவல், ஈகை, வசனித்தல், நடத்தல் ஆகும்;
**கழங்கே** ஓர் ஆடலோடு, கழற்கொடி, வெறியாட்டு என்ப;
**குழம்பு** என்ப மோழை, ஆணம், குழைசேறு முப்பேர்,
**உழப்பு** என்ப வலி, முயற்சி, ஊக்கமும் முப்பேர் ஆமே.

**வழங்கல்** : 1. உலாவல் 2. ஈகை 3. வசனித்தல் 4. நடத்தல்
**கழங்கு** : 1. ஓர் ஆடல் 2. கழற்கொடி 3. வெறியாட்டு
**குழம்பு** : 1. மோழை 2. ஆணம் 3. குழைசேறு
**உழப்பு** : 1. வலி 2. முயற்சி 3. ஊக்கம்

***வழங்கல்*** -- உலாவல், கொடை, சொல்லல், நடத்தல்
***கழங்கு*** -- ஒராடல், கழற்சிக்கொடி, வெறியாட்டு
***குழம்பு*** -- கஞ்சி, ஆணம், குழைசேறு
***உழப்பு*** -- வன்மை, முயற்சி, உற்சாகம்

477. **கிழக்கு** கீழத்திசை, கீழ் ஆகும்; **கிழவியே** தலைவி, மூப்பாள்;
**உழக்கல்** போர் இயற்றலோடு, கலக்கலும் இருபேர் ஓதும்,

**நிழற்றலே** நுண்மை, மென்சொல், நிழல் செய்தல் நிகழ்த்தும் [முப்பேர்,
**மிழற்றலே** நிரம்பா மென்சொல், விளம்பலும் விளம்பல் பாற்றே.

**கிழக்கு** : 1. கீழத்திசை 2. கீழ்
**கிழவி** : 1. தலைவி 2. மூப்பாள்
**உழக்கல்** : 1. போர் இயற்றல் 2. கலக்கல்
**நிழற்றல்** : 1. நுண்மை 2. மென்சொல் 3. நிழல்செய்தல்
**மிழற்றல்** : 1. நிரம்பாமென்சொல் 2. விளம்பல்

***கிழக்கு*** -- கிழக்குத்திசை, கீழ்
***கிழவி*** -- தலைவி, மூப்புடையாள்
***உழக்கல்*** -- போர்செய்தல், கலக்கல்
***நிழற்றல்*** -- நுண்மை, மென்சொல், நிழலைச் செய்தல்
***மிழற்றல்*** -- குதலைச்சொல், சொல்லல்

478. **எழில்** வலி, அழகு, வண்ணம்; இளமையும் இயம்பும் நாற்பேர்
**கிழி** நிதிப்பொதியினோடு, சித்திரப்படமே, கீற்று ஆம்;
**சுழிகை** ஓர் தலமும், கள்ளும், சுழிதலும் முப்பேர் சொல்லும்.
**கிழவரே** உரியோரோடு, விருத்தரும் கிளத்தல் ஆமே.

**எழில்** : 1. வலி 2. அழகு 3. வண்ணம் 4. இளமை
**கிழி** : 1. நிதிப்பொதி 2. சித்திரப்படம் 3. கீற்று
**சுழிகை** : 1. ஓர்தலம் 2. கள் 3. சுழிதல்
**கிழவர்** : 1. உரியோர் 2. விருத்தர்

***எழில்*** -- வன்மை, அழகு, வண்ணம், இளமை
***கிழி*** -- நிதிப்பொதி, சித்திரப்படம், கீற்று
***சுழிகை*** -- ஒருதலம், கள், சுழிதல்
***கிழவர்*** -- உரியோர், முதிர்வயதுடையோர்

479. **பொழில்** என்ப படப்பை, நாடு, புடவி, ஆராமம் ஆகும்;
**குழி** குளம், வயிறு, பள்ளம், கூவமும் கூறும் நாற்பேர்;
**இழிவு** என்ப பயம்பு, நிந்தை, ஈனம், தாழ்வொடு, கேடு ஆகும்;
**அழுவம்** கம்பிதம், பரப்பும், அறைமுரசொடு, நாடும் பேர்.

**பொழில்** : 1. படப்பை 2. நாடு 3. புடவி 4. ஆராமம்
**குழி** : 1. குளம் 2. வயிறு 3. பள்ளம் 4. கூவம்
**இழிவு** : 1. பயம்பு 2. நிந்தை 3. ஈனம் 4. தாழ்வு 5. கேடு
**அழுவம்** : 1. கம்பிதம் 2. பரப்பு 3. முரசு 4. நாடு

***பொழில்*** -- தோட்டம், நாடு, பூமி, சோலை
***குழி*** -- குளம், வயிறு, பள்ளம், கிணறு
***இழிவு*** -- பள்ளம், நிந்தை, ஈனம், தாழ்வு, கேடு
***அழுவம்*** -- நடுக்கம், பரப்பு, முரசு, நாடு

480. **வழி** உண்டை, இடம், பின், மார்க்கம்,
மகன், தொன்மை, முறைமை ஆகும்,
**கழி** நனி, காயல் என்ப;
**கழறலே** கஞறல் பன்னல்;
**புழை** குழை, நாளம் ஆகும்;
**பூழிலே** அகரு வையம்;
**மழை** என்ப குளிர்ச்சி, நீரம்,
மங்குலும் வகுக்கல் ஆமே.

**வழி** : 1. உண்டை 2. இடம் 3. பின் 4. மார்க்கம் 5. மகன் 6. தொன்மை 7. முறைமை
**கழி** : 1. நனி 2. காயல்
**கழறல்** : 1. கஞறல் 2. பன்னல்
**புழை** : 1. குழை 2. நாளம்
**பூழில்** : 1. அகரு 2. வையம்
**மழை** : 1. குளிர்ச்சி 2. நீரம் 3. மங்குல்

***வழி*** -- திரட்சி, இடம், பின், பாதை, சுதன், பழமை, முறைமை
***கழி*** -- மிகுதி, உப்பளம்
***கழறல்*** -- நெருங்கல், சொல்லல்
**புழை** -- உட்டுளை, துளையுடைப்பொருள்
***பூழில்*** -- அகில், பூமி
***மழை*** -- குளிர்ச்சி, நீர், முகில்

481. **கழுது** பைசாசம், வண்டு; காவலும், பரணும் ஆகும்.
**கழிதலே** நடத்தல், சாதல், கடந்திடல், மிகுதி என்ப
**அழிவு** என்ப வீதல், கேடு; குற்றமும் அறையல் ஆகும்.
**கழுமலே** நிறைதல், பற்று, கலிப்பொடு, மயக்கம் ஆமே.

**கழுது** : 1. பைசாசம் 2. வண்டு 3. காவல் 4. பரண்
**கழிதல்** : 1. நடத்தல் 2. சாதல் 3. கடந்திடல் 4. மிகுதி
**அழிவு** : 1. வீதல் 2. கேடு 3. குற்றம்
**கழுமல்** : 1. நிறைதல் 2. பற்று 3. கலிப்பு 4. மயக்கம்

***கழுது*** -- பிசாசம், வண்டு, சிறை, பரண்
***கழிதல்*** -- நடத்தல், சாதல், கடத்தல், மிகுதி
***அழிவு*** -- சாவு, கேடு, குற்றம்
***கழுமல்*** -- நிறைதல், பற்று, மிகுதி, மயக்கம்

482. தொழுதி புள்ஒலியே, கூட்டம், திரட்சியும், சொல்லும் முப்பேர்;
கெழுவுதல் மயக்கம், பற்று, மிகுதியும், கிளத்தும் நாமம்.
குழல் மயிர்,இசைக் குழற்கும்,துளையுடைப் பொருட்குக் கூற்றுஆம்;
நிழல் அருள், குளிர்ச்சி, சாயை, நிறை செல்வம், ஒளி, நோய்ஆமே.

**தொழுதி** : 1. புள்ஒலி 2. கூட்டம் 3. திரட்சி
**கெழுவுதல்** : 1. மயக்கம் 2. பற்று 3. மிகுதி
**குழல்** : 1. மயிர் 2. இசைக்குழல் 3. துளையுடைப்பொருள்
**நிழல்** : 1. அருள் 2. குளிர்ச்சி 3. சாயை 4. செல்வம் 5. ஒளி 6. நோய்

***தொழுதி*** -- பறவையொலி, கூட்டம், திரட்சி
***கெழுவுதல்*** -- மயக்கம், பற்று, மிகுதி
***குழல்*** -- மயிர், இசைக்குழல், துளையுடைப்பொருள்
***நிழல்*** -- கிருபை, குளிர்மை, நிழல், செல்வம், ஒளி, நோய்

483. ஒழுகலே உயர்ச்சி, நீளம்; ஒழுக்கமும், பாய்தலும் பேர்.
இழுதை பொய், அறிவிலான் பேர்;இழை என்ப பணி, நூல் ஆகும்;
உழுவலே தொடர்ந்த அன்போடு, உயர்குணம், முறைமையும் பேர்;
கொழுமையே வளமை, சந்தம், கொழுப்பு என முப்பேர் கூறும்.

**ஒழுகல்** : 1. உயர்ச்சி 2. நீளம் 3. ஒழுக்கம் 4. ப்ாய்தல்
**இழுதை** : 1. பொய் 2. அறிவிலான்
**இழை** : 1. பணி 2. நூல்
**உழுவல்** : 1. தொடர்ந்த அன்பு 2. குணம் 3. முறைமை
**கொழுமை** : 1. வளமை 2. சந்தம் 3. கொழுப்பு

***ஒழுகல்*** -- உயர்ச்சி, நீளம், ஒழுக்கம், பாய்தல்
***இழுதை*** -- பொய், மூடன்
***இழை*** -- ஆபரணம், நூல்
***உழுவல்*** -- விடாதுதொடர்ந்தவன்பு, குணம், முறைமை
***கொழுமை*** -- வளமை, நிறம், கொழுப்பு

484. உழை என்பது இடம், மான், யாழில் ஓர் நரம்பிற்கும் ஆகும்;
குழை என்ப தளிர், துவாரம், குண்டலம், சேறும் அப்பேர்.
விழைவு என்ப புணர்ச்சி, காதல், உள்ளோசை விளம்பும் நாமம்;
தழை இலை, மயிலின் தோகை, தளிர், பீலிக்குடையும் ஆமே.

**உழை** : 1. இடம் 2. மான் 3. யாழில் ஓர் நரம்பு
**குழை** : 1. தளிர் 2. துவாரம் 3. குண்டலம் 4. சேறு
**விழைவு** : 1. புணர்ச்சி 2. காதல் 3. உள்ளோசை
**தழை** : 1. இலை 2. மயிலின் தோகை 3. தளிர் 4. பீலிக்குடை

***உழை*** -- இடம், மான், யாழினோர்நரம்பு
***குழை*** -- தளிர், துவாரம், குண்டலம், குழைசேறு
***விழைவு*** -- கலத்தல், விருப்பம், உள்ளோசை
***தழை*** -- இலை, மயிற்றோகை, தளிர், பீலிக்குடை

485. **அழுங்கல்** கேடு, இரங்கல், சோம்பல்,
அச்சம், நோய், ஒலித்தல், மட்கல்;
**பழங்கணே** புன்கண், ஓசை,
பயனின்மை, பழுதும் ஆகும்;
**விழைச்சு** என்பது இளமையோடு,
புணர்ச்சியும் விளம்பல் பாற்று ஆம்;
**ஒழுக்கமே** வழி, ஆசாரம்,
ஒழுங்கு, உயர்குலம், பண்பு ஆமே.

**அழுங்கல்** : 1. கேடு 2. இரங்கல் 3. சோம்பல் 4. அச்சம் 5. நோய் 6. ஒலித்தல் 7. மட்கல்
**பழங்கண்** : 1. புன்கண் 2. ஓசை 3. பயனின்மை 4. பழுது
**விழைச்சு** : 1. இளமை 2. புணர்ச்சி
**ஒழுக்கம்** : 1. வழி 2. ஆசாரம் 3. ஒழுங்கு 4. உயர்குலம் 5. பண்பு

***அழுங்கல்*** – கேடு, அழுதல், சோம்பல், அச்சம், துன்பம், ஒலித்தல், ஒளிமழுங்கல்
***பழங்கண்*** -- துன்பம், ஓசை, பயனின்மை, பழுது
***விழைச்சு*** -- இளமை, புணர்ச்சி
***ஒழுக்கம்*** -- வழி, ஆசார்ம், ஒழுங்கு, உயர்ந்தகுலம், குணம்

486. **மேழகம்** துருவாட்டேறு, மெய்யுறை, திண்ணகப் பேர்;
**ஞாழலே** கன்னிகாரம், நறவமும் இருபேர் சாற்றும்;
**ஊழியே** உறைகாலத்தோடு, உகமுடிவு, உலகம் என்ப;
**தாழியே** பரணி நாளும், சாடியும், குடமும் ஆமே.

**மேழகம்** : 1. துருவாட்டேறு 2. மெய்யுறை 3. திண்ணகம்
**ஞாழல்** : 1. கன்னிகாரம் 2. நறவம்
**ஊழி** : 1. உறைகாலம் 2. உகமுடிவு 3. உலகம்
**தாழி** : 1. பரணிநாள் 2. சாடி 3. குடம்

***மேழகம்*** -- துருவாட்டேறு, கவசம், செம்மறிக்கடா
***ஞாழல்*** -- கோங்கமரம், குங்குமமரம்
***ஊழி*** -- உறைகாலம், யுகாந்தம், உலகம்
***தாழி*** -- பரணிநட்சத்திரம், சாடி, குடம்

487. **பூழியே** பராகம், சேறு, புழுதி, சேற்று எழுந்த கொப்புள்;
**ஏழையே** அறிவிலான்,பெண், இலம்பாட்டோன் எனமுப்பேர் ஆம்;

**கோழையே** கொடுமை, காசம்; **கோழியே** குருகு, ஓர் ஊர் ஆம்;
**வேழமே** கழை, கொறுக்கை, வேணு, மாதங்கம் ஆமே.

**பூழி** : 1. பராகம் 2. சேறு 3. புழுதி 4. சேற்று எழுந்த கொப்புள்
**ஏழை** : 1. அறிவிலான் 2. பெண் 3. இலம்பாட்டோன்
**கோழை** : 1. கொடுமை 2. காசம்
**கோழி** : 1. குருகு 2. ஓர் ஊர்
**வேழம்** : 1. கழை 2. கொறுக்கை 3. வேணு 4. மாதங்கம்

***பூழி*** -- துகள், சேறு, புழுதி, சேற்றெழுங்குமிழி
***ஏழை*** -- அறிவீனன், பெண், வறிஞன்
***கோழை*** -- கொடுமை, கோழைநோய்
***கோழி*** -- குக்குடம், உறையூர்
***வேழம்*** -- கரும்பு, கொறுக்கைச்சி, மூங்கில், யானை

488. **சூழியே** முச்சி, சிக்கம், சுனை, குளம், கடல், படப்பேர்;
**நாழி** நாழிகை, அளக்கும் நாழி, உட்டுளை, புரட்டை;
**காழியர்** தூசர், உப்பு வாணிகர் இருபேர் காட்டும்;
**மூழி** கோரிகையும் உண்ணும் மூரலும் வாவியும் பேர்.

**சூழி** : 1. முச்சி 2. சிக்கம் 3. சுனை 4. குளம் 5. கடல் 6. படம்
**நாழி** : 1. நாழிகை 2. அளக்கும் நாழி 3. உட்டுளை 4. புரட்டை
**காழியர்** : 1. தூசர் 2. உப்பு வாணிகர்
**மூழி** : 1. கோரிகை 2. உண்ணும் மூரல் 3. வாவி

***சூழி*** -- உச்சி, உச்சிக்கொண்டை, சுனை, குளம், சமுத்திரம், யானைமுகபடாம்
***நாழி*** -- நாழிகை, படி, உட்டுளை, பூரட்டாதி
***காழியர்*** -- வண்ணார், உப்புவாணிகர்
***மூழி*** -- அகப்பை, சோறு, தடாகம்

489. **காழகம்** கருமை, தூசு கத்தபம் முப்பேர் காட்டும்;
**மூழையே** துடுப்பு, மத்தும், முகவையும் மொழியும் முப்பேர்;
**தாழையே** நாளிகேரம், கேதகை இருபேர் சாற்றும்;
**சூழலே** இடம், ஆராய்தல், குறிப்பு என முப்பேர் சொல்லும்.

**காழகம்** : 1. கருமை 2. தூசு 3. கத்தபம்
**மூழை** : 1. துடுப்பு 2. மத்து 3. முகவை
**தாழை** : 1. நாளிகேரம் 2. கேதகை
**சூழல்** : 1. இடம் 2. ஆராய்தல் 3. குறிப்பு

***காழகம்*** -- கறுப்பு, ஆடை, கழுதை
***மூழை*** -- துடுப்பு, மத்து, அகப்பை
***தாழை*** -- தெங்கு, தாழைமரம்
**சூழல்** -- இடம், ஆராய்தல், குறிப்பு

490. **கீழ்** என்ப மறதி, பள்ளம், கிழக்கு, ஈனம், கடிவாளப் பேர்;
**கூழ்** என்பது உணவும்,பொன்னும்;பயிர் என்றும் கூறற்பாற்று ஆம்.
**யாழ்** என்ப முதல்நாள், வீணை, ஈசர்நாள், மிதுனம் என்ப;
**ஊழ்** முறை, பான்மை, தொன்மை; உறுபகை, வெயிலும் ஆமே.

**கீழ்** : 1. மறதி 2. பள்ளம் 3. கிழக்கு 4. ஈனம் 5. கடிவாளம்
**கூழ்** : 1. உணவு 2. பொன் 3. பயிர்
**யாழ்** : 1. முதல் நாள் 2. வீணை 3. ஈசர்நாள் 4. மிதுனம்
**ஊழ்** : 1. முறை 2. பான்மை 3. தொன்மை 4. பகை 5. வெயில்

***கீழ்*** -- மறவி, பள்ளம், கீழ்த்திசை, கீழ்மை, கடிவாளம்
***கூழ்*** -- உணவு, பொன், மயிர்
***யாழ்*** -- அச்சுவினிநாள், வீணை, திருவாதிரைநாள், மிதுனவிராசி
***ஊழ்*** -- முறை, குணம், பழமை, பகை, வெயில்

491. **வாழ்க்கை** ஊர், செல்வம், வாழ்தல், மனைவி, நன்மருதத்தூர் ஆம்;
**வீழ்க்கையே** சோதி நாளும், வீழ்த்தலும் விளம்பல் ஆகும்;
**ஆழ்த்தல்** தாழ்த்துதல், கட்டல் பேர்;**அழகு** சர்க்கரை,வனப்பு ஆம்;
**ஊழ்த்தலே** நினைத்தல், செவ்வி ஊன், பதனழிவும் ஆமே.

**வாழ்க்கை** :1. ஊர் 2. செல்வம் 3. வாழ்தல் 4. மனைவி 5. மருதத்தூர்
**வீழ்க்கை** : 1. சோதிநாள் 2. வீழ்த்தல்
**ஆழ்த்தல்** : 1. தாழ்த்துதல் 2. கட்டல்
**அழகு** : 1. சர்க்கரை 2. வனப்பு
**ஊழ்த்தல்** : 1. நினைத்தல் 2. செவ்வி 3. ஊன் 4. பதனழிவு

***வாழ்க்கை*** -- ஊர், செல்வம், வாழ்வு, தலைவி, மருதநிலத்தூர்
***வீழ்க்கை*** -- சோதிநட்சத்திரம், வீழ்த்தல்
***ஆழ்த்தல்*** -- தாழ்த்தல், கட்டல்
***அழகு*** -- சர்க்கரை, வனப்பு
***ஊழ்த்தல்*** -- நினைத்தல், செவ்வி, ஊன், பதனழிவு

492. **ஆழி** அங்குலியம் , நேமி, அணை, வட்டம், வாரணத்தின்
நீள்கரம், பௌவம், தேர்ச்சில் நிகழ்த்திய எழு பேர் ஆகும்;
**நாழிலே** குவிதல், செக்கு, நுண்கொடி, திரை, விநாசம்
வேழமும், கொடிக்கொத்தானும் விளம்பிய எழுபேர் ஆமே.

**ஆழி** : 1. அங்குலியம் 2. நேமி 3. அணை 4. வட்டம் 5. வாரணத்தின் நீள்கரம் 6. பௌவம் 7. தேர்ச்சில்

**நூழில்** : 1. குவிதல் 2. செக்கு 3. நுண்கொடி 4. திரை 5. விநாசம் 6. வேழம் 7. கொடிக்கொத்தான்.

***ஆழி*** -- மோதிரம், சக்கரம், கரை, வட்டம், யானைக்கை, கடல், தேருருள்.

***நூழில்*** -- குவிதல், செக்கு, படர்கொடி, திரை, கொலை, யானை, கொடிக்கொத்தான்

493. **கூழை**யே நாப்பண், மாதர்கூந்தல், சேறு, உரகம், பீலி,
மாழை, வெம்படைஉறுப்பு, சிறகொடு வகுக்கும் எண்பேர்;
**மாழை**யே புளிமா, உண்டை மாமரம், உலோகக்கட்டி,
ஈழம், ஏர், மடமை இன்ன எழுபேர் இயம்பல் ஆமே.

**கூழை** : 1. நாப்பண் 2. மாதர்கூந்தல் 3. சேறு 4. உரகம் 5. பீலி 6. மாழை 7. படை உறுப்பு 8. சிறகு

**மாழை** : 1. புளிமா 2. உண்டை 3. மாமரம் 4. உலோகக்கட்டி 5. ஈழம் 6. ஏர் 7. மடமை.

***கூழை*** – நடு, பெண்மயிர், சேறு, பாம்பு, பீலி, பொன், படையுறுப்பு, சிறகு

***மாழை*** -- புளிமா, திரட்சி, மாமரம், உலோகக்கட்டி, பொன், அழகு, மடமை.

494. **பாழி** ஊர், அகலம், பாயல், காடு, பற்றில்லார் தம் ஊர்,
ஆழ்வலி, விலங்கின் சேக்கை, தாபதம், உரை, ஆகாசம்,
நீள்கடல், மருதத்தூர், நன்னிகேதனம், குகையினோடு,
பாழ், சிறுகுளம், என்று இன்ன பதினாறு நாமம் ஆமே.

**பாழி** : 1. ஊர் 2. அகலம் 3. பாயல் 4. காடு 5. பற்றில்லார் தம் ஊர் 6. வலி 7. விலங்கின் சேக்கை 8. தாபதம் 9. உரை 10. ஆகாசம் 11. கடல் 12. மருதத்தூர் 13. நிகேதனம் 14. குகை 15. பாழ் 16. சிறுகுளம்

***பாழி*** -- ஊர், விசாலம், சயனம், பெருமை, பகைவரூர், வன்மை, விலங்கின்படுக்கை, முனிவர்வாசம், உரை, ஆகாயம்,கடல், மருதநிலத்தூர், தேவர்கோயில், குகை, பாழ், சிறுகுளம்.

**(ழகர எதுகை முற்றிற்று)**

## ளகர எதுகை

495. **குளம்** நுதல், கரும்பின் கட்டி, குட்டமும் முப்பேர் கூறும்.
**களம்** மொய், நெற்களம், நஞ்சு, இல்லாள், கழுத்து, மை, களா,
[பரப்பு ஆம்;
**வளமை** மாட்சிமை, கொழுப்போடு, உபகாரம் வகுக்கும் முப்பேர்;
**விளவு** என்ப சாறு, வெள்ளில்; **வெள்ளி**லே விளவு, பாடை.

**குளம்** : 1. நுதல் 2. கரும்பின்கட்டி 3. குட்டம்
**களம்** : 1. மொய் 2. நெற்களம் 3. நஞ்சு 4. இல்லாள் 5. கழுத்து 6. மை 7. களா 8. பரப்பு
**வளமை** : 1. மாட்சிமை 2. கொழுப்பு 3. உபகாரம்
**விளவு** : 1. சாறு 2. வெள்ளில்
**வெள்ளில்** : 1. விளவு 2. பாடை.

***குளம்*** -- நெற்றி, வெல்லம், தடாகம்
***களம்*** -- போர்க்களம், நெற்களம், நஞ்சு, மனைவி, கழுத்து, கருமை, களாமரம், பரப்பு
***வளமை*** -- மாண்பு, கொழுப்பு, உபகாரம்
***விளவு*** -- நிலப்பிளப்பு, விளாமரம்
***வெள்ளில்*** -- விளாமரம், பாடை

496. **களர்** என்ப மிடறு, கோட்டி, களர்நிலம், கருமை நாற்பேர்;
**தளம்** இலை, படை, சாந்தோடு, தாழி, பூவிதழே, மேடை;
**அளகமே** மாதரோதி, அறல், பன்றிமுள், விலோதம்;
**தளை** விலங்கொடு, தொடர்ச்சி, தாட்சிலம்பு, ஆண்மயிர்ப்பேர்.

**களர்** : 1. மிடறு 2. கோட்டி 3. களர்நிலம் 4. கருமை
**தளம்** : 1. இலை 2. படை 3. சாந்து 4. தாழி 5. பூவிதழ் 6. மேடை
**அளகம்** : 1. மாதரோதி 2. அறல் 3. பன்றிமுள் 4. விலோதம்
**தளை** : 1. விலங்கு 2. தொடர்ச்சி 3. தாட்சிலம்பு 4. ஆண்மயிர்

***களர்*** -- கழுத்து, கூட்டம், களர்நிலம், கறுப்பு
***தளம்*** -- இலை, படை, சாந்து, சாடி, பூமடல், மேடை
***அளகம்*** -- பெண்மயிர், நீர், பன்றிமுள், மயிர்க்குழற்சி
***தளை*** -- விலங்கு, தொடர்பு, காற்சிலம்பு, ஆண்மயிர்

497. **முளரி** முட்செடி, காடு, அங்கி, முண்டகம், விறகு, நுண்மை;
**விளர்** நிணம், இளமையோடு, வெளுப்பு எனக் கொழுப்பும் ஆகும்;
**களபமே** கலவை, பீதம், கயமுனி, சுதை நாற்பேர் ஆம்,
**உளர்தலே** சிதறலோடு, தடவலும் உரைக்கற்பாற்றே.

**முளரி** : 1. முட்செடி 2. காடு 3. அங்கி 4. முண்டகம் 5. விறகு 6. நுண்மை
**விளர்** : 1. நிணம் 2. இளமை 3. வெளுப்பு 4. கொழுப்பு
**களபம்** : 1. கலவை 2. பீதம் 3. கயமுனி 4. சுதை.
**உளர்தல்** : 1. சிதறல் 2. தடவல்.

***முளரி*** -- முட்செடி, காடு, தீ, தாமரை, விறகு, நுண்மை
***விளர்*** -- நிணம், இளமை, வெளுப்பு, கொழுமை
***களபம்*** -- கலப்பு, கலவைச்சாந்து, யானைக்கன்று, சுண்ணச் சாந்து
***உளர்தல்*** -- சிதறல், தடவல்

498. **சுளகு** என்ப விசாக நாளும், சூர்ப்பமும் இருபேர் ஆகும்;
**அளம்** என்ப நெருக்கம், கூர்மை, உப்பளம் அறையும் முப்பேர்;
**களன்** என்ப மருதப்பூமி, கம்பலை இடம், உன்மத்தம்;
**நளம்** என்ப நியக்குரோதம், நளினமும் இருபேர் ஆமே.

**சுளகு** : 1. விசாக நாள் 2. சூர்ப்பம்
**அளம்** : 1. நெருக்கம் 2. கூர்மை 3. உப்பளம்
**களன்** : 1. மருதப்பூமி 2. கம்பலை 3. இடம் 4. உன்மத்தம்
**நளம்** : 1. நியக்குரோதம் 2. நளினம்

***சுளகு*** -- விசாகநட்சத்திரம், முறம்
***அளம்*** -- நெருக்கம், கூர்மை, உப்பளம்
***களன்*** -- மருதநிலம், ஒலி, இடம், உன்மத்தம்
***நளம்*** -- அகலம், தாமரை

499. இளமை உன்மத்தம், தாழ்மை, இளமையின் பருவம் முப்பேர்,
அளவையே எல்லை, நாளோடு, அளவும் என்று அறையற் பாற்று [ஆம்,
கிளர் என்பது ஒளியினோடு, கிளர்தல், பூந்தாதும் ஆகும்,
வளம் என்ப பதவி, செல்வம், வனப்பு, பல்பண்டம் ஆமே.

**இளமை** : 1. உன்மத்தம் 2. தாழ்மை 3. இளமையின் பருவம்
**அளவை** : 1. எல்லை 2. நாள் 3. அளவு
**கிளர்** : 1. ஒளி 2. கிளர்தல் 3. பூந்தாது
**வளம்** : 1. பதவி 2. செல்வம் 3. வனப்பு 4. பல்பண்டம்

***இளமை*** -- உன்மத்தம், தாழ்மை, இளமைப்பருவம்
***அளவை*** -- எல்லை, நாள், அளவு
***கிளர்*** -- ஒளி, கிளர்ச்சி, பூஞ்சுண்ணம்
***வளம்*** -- பதவி, செல்வம், அழகு, பல்பண்டம்

500. **களவு** என்ப திருட்டு, உன்மத்தம் களா என முப்பேர் காட்டும்;
**புளகம்** கஞ்சனம், உரோமச் சிலிர்ப்பொடு, புடைப்பு, சோறு ஆம்;
**அளகு** என்ப கோழி, கூகை, அல்லாப் புட்பெண்ணோடு, ஆரல்,
**குளவி** ஓர் வண்டு சாகம்; மலைப்பச்சை எனவும் கூறும்.

**களவு** : 1. திருட்டு 2. உன்மத்தம் 3. களா
**புளகம்** : 1. கஞ்சனம் 2. உரோமச் சிலிர்ப்பு 3. புடைப்பு 4. சோறு
**அளகு** : 1. கோழி கூகை அல்லாப்புட்பெண் 2. ஆரல்
**குளவி** : 1. ஓர் வண்டு 2. சாகம் 3. மலைப்பச்சை

***களவு*** -- திருட்டு, உன்மத்தம், களாமரம்
***புளகம்*** -- கண்ணாடி, உரோமச்சிலிர்ப்பு, புடைப்பு, சோறு
***அளகு*** – கோழிகூகையொழிந்தபறவையின்பெண், கார்த்திகைநாள்
***குளவி*** -- ஓர்வண்டு, தேனீ, மலைப்பச்சை

501. **விளக்கு** ஒளி, சோதி நாள் ஆம்;**வேளாண்மை** நலம், மெய், ஈகை;
**அளக்கர்** நீள்வழியே, சேறு, உப்பளம், கடல், ஆரல், பூமி;
**திளைத்தலே** அனுபவித்தல், செறிதலும் நிறைதலும் பேர்;
**இளைத்தல்** எய்ப்பு, இரங்கலொடு, மெலிதலும் இயம்பல் பாற்றே.

**விளக்கு** : 1. ஒளி 2. சோதிநாள்
**வேளாண்மை** : 1. நலம் 2. மெய் 3. ஈகை
**அளக்கர்** :1. நீள்வழி 2. சேறு 3. உப்பளம் 4. கடல் 5.ஆரல் 6. பூமி
**திளைத்தல்** : 1. அனுபவித்தல் 2. செறிதல் 3. நிறைதல்
**இளைத்தல்** : 1. எய்ப்பு 2. இரங்கல் 3. மெலிதல்

***விளக்கு*** -- ஒளி, சோதிநட்சத்திரம்
***வேளாண்மை*** -- உபகாரம், மெய், கொடை
***அளக்கர்*** – நீள்வழி, குழைசேறு, உப்பளம், சமுத்திரம், கார்த்திகை நாள், பூமி
***திளைத்தல்*** -- அனுபவித்தல், நெருங்கல், நிறைதல்
***இளைத்தல்*** -- இளைப்பு, இரங்கல், மெலிவு

502. **களரி** போரிடம், நீள்கானம், கருமம்செய்யிடம், கறுப்பு ஆம்;
**விளரி** யாழ், மிகுதி, யாழில் ஓர் நரம்பு, இளமை, வேட்கை;
**அளறு** என்ப நிரையம், சேறு ஆம்; **அளிகம்** கட்டழகு, நெற்றி;
**இளவலே** குழவி, பின்னோன், இளையோன் என்று இம் முப்பேரே.

**களரி** : 1. போரிடம் 2. கானம் 3. கருமம் செய்யிடம் 4. கறுப்பு
**விளரி** : 1.யாழ் 2.மிகுதி 3.யாழில் ஓர் நரம்பு 4. இளமை 5. வேட்கை
**அளறு** : 1. நிரையம் 2. சேறு

**அளிகம்** : 1. கட்டழகு 2. நெற்றி
**இளவல்** : 1. குழவி 2. பின்னோன் 3. இளையோன்.

***களரி*** -- போர்க்களம், காடு, கருமஞ்செய்யுமிடம், கருமை
***விளரி*** -- நெய்தனிலத்தியாழ், மிகுதி, யாழினோர்நரம்பு, இளமை, வேட்கை
***அளறு*** -- நரகம், சேறு
***அளிகம்*** -- கட்டழகு, நுதல்
***இளவல்*** -- பிள்ளை, தம்பி, இளைமையோன்

503. **நளிர்** குளிர், வெறுப்பு, பீடு, நண்டொடு, செறிவும், ஐம்பேர்;
**இளி** இசை, சிரிப்பு, இணக்கம், இழுத்தல், சையெனல், உரித்தல்;
**தளி** தூவலொடு, விளக்குத் தண்டு என்ப; கோயிலும் பேர்.
**ஒளிவட்டம்** தான் கண்ணாடி, சக்கரம் இருபேர் ஓதும்.

**நளிர்** : 1. குளிர் 2. வெறுப்பு 3. பீடு 4. நண்டு 5. செறிவு
**இளி** : 1. இசை 2. சிரிப்பு 3. இணக்கம் 4. இழுத்தல் 5. சையெனல் 6. உரித்தல்
**தளி** : 1. தூவல் 2. விளக்குத்தண்டு 3. கோயில்
**ஒளிவட்டம்** : 1. கண்ணாடி 2. சக்கரம்.

***நளிர்*** -- குளிர்ச்சி, வெறுப்பு, பெருமை, ஞெண்டு, செறிவு
***இளி*** -- நெற்றியிற்பிறக்குமிசை, சிரிப்பு, இணக்கம், இழுத்தல், இகழ்ச்சி, உரித்தல்
***தளி*** -- தூவல், விளக்குத்தண்டு, கோயில்
***ஒளிவட்டம்*** -- கண்ணாடி, சக்கரம்

504. **பளிதம்** என்பது கர்ப்பூரம், பல்லமென்கணக்கும் ஆகும்,
**வெளில்** அணில், யானைத்தம்பம், வெண்தயிர்கடைதறிப்பேர்;
**களிறு** அத்தம், சுறவின் ஏறு, கறையடி, விலங்கின் ஆண் ஆம்;
**வெளிறு** அலி, செலு, எய்யாமை; வெண்மையும் விளம்பல் ஆமே.

**பளிதம்** : 1. கர்ப்பூரம் 2. பல்லம்என் கணக்கு
**வெளில்** : 1. அணில் 2. யானைத்தம்பம் 3. கடைதறி
**களிறு** : 1. அத்தம் 2. சுறவின்ஏறு 3. கறையடி 4. விலங்கின் ஆண்
**வெளிறு** : 1. அலி 2. செலு 3. எய்யாமை 4. வெண்மை

***பளிதம்*** -- கர்ப்பூரம், பல்லமென்னுமோரெண்
***வெளில்*** -- அணில், யானைத்தறி, மத்து
***களிறு*** -- அத்தநாள், சுறாமட்சத்தினாண், ஆண்யானை, விலங்கினாண்
***வெளிறு*** -- வயிரமில்லாமரம், நறுவிலிமரம், அறிவின்மை, வெண்மை

505. **அளி** மது, குளிர்ச்சி, வண்டோடு, அன்பு, கள், ஈகை, காய் ஆம்;
**நளி** கூட்டம், குளிர்ச்சி, பீடு, நனம், செறிவொடு, தேள் ஆகும்;
**தெளிவு** என்ப துணிவு, ஞானம்; தெளிதலும் செப்பும் முப்பேர்.
**விளிதலே** கெடுதல், சாதல்; மறிதலும் விளம்பல் ஆமே.

**அளி** : 1. மது 2. குளிர்ச்சி 3. வண்டு 4. அன்பு 5. கள் 6. ஈகை 7. காய்
**நளி** : 1. கூட்டம் 2. குளிர்ச்சி 3. பீடு 4. நனம் 5. செறிவு 6. தேள்
**தெளிவு** : 1. துணிவு 2. ஞானம் 3. தெளிதல்
**விளிதல்** : 1. கெடுதல் 2. சாதல் 3. மறிதல்

***அளி*** -- தேன், குளிர், வண்டு, அன்பு, நறவு, கொடை, காய்
***நளி*** -- கூட்டம், குளிர், பெருமை, அகலம், செறிவு, தேன்
***தெளிவு*** -- துணிவு, அறிவு, தெளிதல்
***விளிதல்*** -- கெடுதல், சாவு, மறிதல்

506. **ஒளி** சுடர், புகழ், விளக்கோடு, ஒளிப்பிடம், வெயில், செந்தீ ஆம்;
**களி** மது, மருள், செருக்கு; களிப்பொடு, குளமும் ஆகும்.
**தளிமமே** அழகு, திண்ணை, தவிசு, மக்கட்படுக்கை;
**துளி** மழைத்துளி, பெண்ணாமை; திவலையும் முப்பேர் சொல்லும்.

**ஒளி** : 1. சுடர் 2. புகழ் 3. விளக்கு 4. ஒளிப்பிடம் 5. வெயில் 6. தீ
**களி** : 1. மது 2. மருள் 3. செருக்கு 4. களிப்பு 5. குளம்
**தளிமம்** : 1. அழகு 2. திண்ணை 3. தவிசு 4. மக்கட்படுக்கை
**துளி** : 1. மழைத்துளி 2. பெண்ணாமை 3. திவலை

***ஒளி*** -- சுடர், புகழ், தீபம், ஒளிப்பிடம், வெயில், தீ
***களி*** -- கள், மயக்கம், செருக்கு, களிப்பு, குளம்
***தளிமம்*** -- அழகு, திண்ணை, மெத்தை, மக்கட்படுக்கை
***துளி*** -- மழைத்துளி, பெண்ணாமை, திவலை

507. **அளித்தலே** புரத்தல், ஈகை, அடர்தல், பாதீடும் ஆகும்.
**தெளித்தலே** கொழிப்பு, ஒலித்தல்; சிதறலும், தூவலும் பேர்.
**வளைத்தலே** குனித்தல், கட்டல், வாருதலொடு, தடுத்தல்
**கிளைத்தலே** நெருங்கலோடு, கிண்டலும், நிறைதலும் பேர்.

**அளித்தல்** : 1. புரத்தல் 2. ஈகை 3. அடர்தல் 4. பாதீடு
**தெளித்தல்** : 1. கொழிப்பு 2. ஒலித்தல் 3. சிதறல் 4. தூவல்
**வளைத்தல்** : 1. குனித்தல் 2. கட்டல் 3. வாருதல் 4. தடுத்தல்
**கிளைத்தல்** : 1. நெருங்கல் 2. கிண்டல் 3. நிறைதல்

***அளித்தல்*** -- காத்தல், கொடை, நெருங்கல், பாதீடு
***தெளித்தல்*** -- கொழித்தல், ஒலித்தல், சிதறுதல், தூவுதல்
***வளைத்தல்*** -- வளைக்குதல், கட்டல், வாருதல், தடுத்தல்
***கிளைத்தல்*** -- நெருங்குதல், கிண்டுதல், நிறைதல்

508. **அளை** தயிர், முடுக்கர், புற்றோடு, அருப்பமும், வளையும் ஆகும்.
**உளை** பரிமீது கட்டும் மயிர், நவிர், உரோமமும் பேர்.
**கிளை** தளிர், ஓர்பண், சுற்றம், கீசகம், மரக்கிளைப்பேர்;
**களை** அயர்வுடனே, குற்றம், கவின் என முப்பேர் காட்டும்.

**அளை** : 1. தயிர் 2. முடுக்கர் 3. புற்று 4. அருப்பம் 5. வளை
**உளை** : 1. பரிமீது கட்டும் மயிர் 2. நவிர் 3. உரோமம்
**கிளை** : 1. தளிர் 2. ஓர்பண் 3. சுற்றம் 4. கீசகம் 5. மரக்கிளை
**களை** : 1. அயர்வு 2. குற்றம் 3. கவின்.

***அளை*** -- தயிர், மலைக்குகை, புற்று, மோர், வளை
***உளை*** -- குதிரையிற்கட்டுமயிர், ஆண்மயிர், புறமயிர்
***கிளை*** -- தளிர், ஓர்பண், உறவு, மூங்கில், மரக்கிளை
***களை*** -- அயர்வு, குற்றம், அழகு

509. **துளை** என்ப வெதிரே, வாயில்; துவாரமும் முப்பேர் சொல்லும்.
**முளை** சுதன், கதையினோடு, மூங்கில், அங்குரம், தறிப்பேர்;
**விளைவு** செய், விளைதலோடு, மேகமும் விளம்பும் முப்பேர்;
**வளை** நுழைவளையே, ஆழி, வண்டு, கைவளையும் ஆமே.

**துளை** : 1. வெதிர் 2. வாயில் 3. துவாரம்
**முளை** : 1. சுதன் 2. கதை 3. மூங்கில் 4. அங்குரம் 5. தறி
**விளைவு** : 1. செய் 2. விளைதல் 3. மேகம்
**வளை** : 1. நுழைவளை 2. ஆழி 3. வண்டு 4. கைவளை.

***துளை*** -- மூங்கில், வாயில், துவாரம்
***முளை*** -- மகன், தண்டாயுதம், மூங்கில், முளை, தறி
***விளைவு*** -- வயல், விளைதல், முகில்
***வளை*** -- நுழைவளை, சக்கரம், சங்கு, கைவளை

510. **வெள்ளி**யே மழைக்கோள், வெண்பொன், வெண்மையும் விளம்பும் [முப்பேர்,
**புள்ளி** ஒற்று, இலக்கப்புள்ளி, பொறி, பல்லி, மதிப்பு, ஞெண்டுஆம்;
**நள்ளி** கற்கடகராசி, நண்டு, உறவுடன், ஓர் வள்ளல்;
**சுள்ளி** மா, ஞாழல், ஆச்சா, அனிச்சமும் சொல்லல் ஆமே.

**வெள்ளி** : 1. மழைக்கோள் 2. வெண்பொன் 3. வெண்மை
**புள்ளி** : 1. ஒற்று 2. இலக்கப்புள்ளி 3. பொறி 4. பல்லி 5. மதிப்பு 6. ஞெண்டு
**நள்ளி** : 1. கற்கடகராசி 2. நண்டு 3. உறவு 4. ஓர் வள்ளல்
**சுள்ளி** : 1. மா 2. ஞாழல் 3. ஆச்சா 4. அனிச்சம்

***வெள்ளி*** -- சுக்கிரன், வெள்ளி, வெண்ணிறம்
***புள்ளி*** -- ஒற்றெழுத்து, இலக்கப்புள்ளி, பொறி, பல்லி, மதிப்பு, நண்டு
***நள்ளி***--கற்கடகராசி,ஞெண்டு, உறவு, கடையெழுவள்ளலிலொருவன்
***சுள்ளி*** -- மாமரம், பலினி, ஆச்சாமரம், அனிச்சமரம்

511. **விள்ளலே** மலர்தலோடு, வேறுஆதல், தழுவல், சொல்லல்;
**துள்ளல்** கூத்து, ஆடு, தாண்டல், கொதுகு என நாற்பேர் சொல்லும்;
**தொள்ளமே** சேறு, தெப்பம்; **துளங்கலே** அசைதல், மின்னல்;
**நள்** உச்சி போது, மாயோன் நாளொடு, நடுவும் ஆமே.

**விள்ளல்** : 1. மலர்தல் 2. வேறு ஆதல் 3. தழுவல் 4. சொல்லல்
**துள்ளல்** : 1. கூத்து 2. ஆடு 3. தாண்டல் 4. கொதுகு
**தொள்ளம்** : 1.` சேறு 2. தெப்பம்
**துளங்கல்** : 1. அசைதல் 2. மின்னல்
**நள்** : 1. உச்சி போது 2. மாயோன் நாள் 3. நடு

***விள்ளல்*** -- மலருதல், வேறுபடல், தழுவுதல், சொல்லுதல்
***துள்ளல்*** -- கூத்து, ஆடு, தாண்டுதல், கொதுகு
***தொள்ளம்*** -- சேறு, ஓடம்
***துளங்கல்*** -- அசைதல், மின்னுதல்
***நள்*** -- மத்தியானம், திருவோணநாள், நடு

512. **உள்ளலே** நினைவு,உள்ளான் ஆம்; **உள்ளே** உள்ளிடம், மனப்பேர்;
**எள்ளலே** நகைப்பு, நிந்தை; **எளிமையே** தனிமை, ஏட்டை;
**அள்ளலே** நிரையம், சேறோடு, அள்ளுதல் முப்பேர் ஆகும்.
**ஞொள்கல்** சோம்பு, இளைத்தல்,அச்சக்குறிப்பு என நுவலல் ஆமே.

**உள்ளல்** : 1. நினைவு 2. உள்ளான்
**உள்** : 1. உள்ளிடம் 2. மனம்
**எள்ளல்** : 1. நகைப்பு 2. நிந்தை
**எளிமை** : 1. தனிமை 2. ஏட்டை
**அள்ளல்** : 1. நிரையம் 2. சேறு 3. அள்ளுதல்
**ஞொள்கல்** : 1. சோம்பு 2. இளைத்தல் 3. அச்சக்குறிப்பு

*உள்ளல்* -- நினைத்தல், உள்ளான்குருவி
*உள்* -- உள்ளிடம், மனம்
*எள்ளல்* -- நகைப்பு, நிந்தை
*எளிமை* -- தனிமை, தளர்வு
*அள்ளல்* -- நரகம், சேறு, அள்ளுதல்
*ஞொள்கல்* -- சோம்பு, இளைத்தல், அச்சக்குறிப்பு

513. **பிள்ளை** சேய், வடுகன், காரிப்புள் எனப் பேசும் முப்பேர்,
**மள்ளரே** உழவர், வீரர்; மறவர், குறவரும் பேர்.
**உள்ளமே** மனம், கருத்தோடு, ஊக்கமும் முப்பேர் என்ப,
**வெள்ளமே** கடல், ஓர்எண், நீர்ப்பெருக்கொடு மிகுதி ஆமே.

**பிள்ளை** : 1. சேய் 2. வடுகன் 3. காரிப்புள்
**மள்ளர்** : 1. உழவர் 2. வீரர் 3. மறவர் 4. குறவர்
**உள்ளம்** : 1. மனம் 2. கருத்து 3. ஊக்கம்
**வெள்ளம்** : 1. கடல் 2. ஓர்எண் 3. நீர்ப்பெருக்கு 4. மிகுதி

*பிள்ளை* -- மகவு, வயிரவன், கரிக்குருவி
*மள்ளர்* -- உழவர், வீரர், மறவர், குறவர்
*உள்ளம்* -- மனம், கருத்து, முயற்சி
*வெள்ளம்* -- சமுத்திரம், ஓரெண், நீர்ப்பெருக்கு, மிகுதி

514. **புள்ளு** வண்டு, அவிட்டநாளும், பறவையின் பொதுவும் ஆகும்;
**கள்** என்ப நறவு, பொக்கம், களவொடு, மதுவும் நாற்பேர்;
**அள்** உரம், செறிவு, காதோடு, அயிலும், பற்றிரும்பும் ஆகும்;
**வள்ளூரம்** பசுவிறைச்சி, ஊன்பொது வகுக்கட்ட பாற்றே.

**புள்ளு** : 1. வண்டு 2. அவிட்டநாள் 3. பறவையின் பொது
**கள்** : 1. நறவு 2. பொக்கம் 3. களவு 4. மது
**அள்** : 1. உரம் 2. செறிவு 3. காது 4. அயில் 5. பற்றிரும்பு
**வள்ளூரம்** : 1. பசுவிறைச்சி 2. ஊன்பொது

*புள்ளு* -- வண்டு, அவிட்டநட்சத்திரம், புட்பொது
*கள்* -- மது, பொய், களவு, தேன்
*அள்* -- வலி, நெருக்கம், செவி, கூர்மை, பற்றிரும்பு
*வள்ளூரம்* -- பசுவிறைச்சி, இறைச்சிப்பொது

515. **வள்ளம்** ஓர்மரத்தில் தோண்டும் சிறு தோணி, மரக்கால், வட்டில்;
**பொள்ளலே** அப்பவர்க்கம், பொளிதலும், மரப்பொந்தும் பேர்;
**கள்வனே** கருநிறத்தோன், கரி, முசு, ஞெண்டு, சோரன்;
**வெள்ளை** நந்து, ஓர் பா, வெண்மை வெள்ளாடு, முசலி ஆமே.

**வள்ளம்** : 1. ஓர்மரத்தில் தோண்டும் சிறுதோணி 2. மரக்கால் 3. வட்டில்
**பொள்ளல்** : 1. அப்பவர்க்கம் 2. பொளிதல் 3. மரப்பொந்து
**கள்வன்** : 1. கருநிறத்தோன் 2. கரி 3. முசு 4. ஞெண்டு 5. சோரன்
**வெள்ளை** : 1. நந்து 2. ஓர்பா 3. வெண்மை 4. வெள்ளாடு 5. முசலி

***வள்ளம்*** -- ஒருமரத்திற்றோண்டியசிறுதோணி, மரக்கால், வட்டில்
***பொள்ளல்*** -- அப்பவர்க்கம், பொளிதல், மரப்பொந்து
***கள்வன்*** -- கருநிறத்தவன், யானை, முசு, நண்டு, திருடன்
***வெள்ளை*** -- சங்கு, வெண்பா, வெண்ணிறம், வெள்ளாடு, பலதேவன்

516. **காளமே** கருமை, நஞ்சு, கழு, ஊதுங்கொம்பு, மேகம்;
**வேள்** அலர்க்கணையோனோடு, விசாகன், ஆண்மகனும் ஆகும்;
**கோள்** வலி, கிரகம், ஊறு,கொலை,குணம், பொய்,கோட்பாடு ஆம்,
**நாளியே** சுணங்கன்,கள்ஆம்; **நளினி** பொன், குளம், ஓர்பண் ஆம்.

**காளம்** : 1. கருமை 2. நஞ்சு 3. கழு 4. ஊதுங்கொம்பு 5. மேகம்
**வேள்** : 1. அலர்க்கணையோன் 2. விசாகன் 3. ஆண்மகன்
**கோள்** : 1. வலி 2. கிரகம் 3. ஊறு 4. கொலை 5. குணம் 6. பொய் 7. கோட்பாடு
**நாளி** : 1. சுணங்கன் 2. கள்
**நளினி** : 1. பொன் 2. குளம் 3. ஓர்பண்.

***காளம்*** -- கறுப்பு, விடம், சூலம், ஊதுங்கொம்பு, மேகம்
***வேள்*** -- மன்மதன், கந்தன், ஆண்மகன்
***கோள்*** -- வலி, நவக்கோள், இடையூறு, கொலை, குணம், பொய், கோட்பாடு
***நாளி*** -- நாய், மது
***நளினி*** -- இலக்குமி, குளம், ஓர்பண்

517. **பாளிதம்** அயிரம், சோறு, பளிதம், நற்குழம்பு, பட்டு ஆம்;
**ஓளியே** யானைகூடம், ஒழுங்கு என்றும் வழங்கும் நூலே;
**கோளி** தொன்மரமே, அத்தி, கொள்வோனும், கொழிஞ்சியும் பேர்;
**மீளி** பீடு, அரசன், வன்மை, மேல்மகன், திண்ணியன் பேர்.

**பாளிதம்** : 1. அயிரம் 2. சோறு 3. பளிதம் 4. குழம்பு 5. பட்டு
**ஓளி** : 1. யானைகூடம் 2. ஒழுங்கு
**கோளி** : 1. தொன்மரம் 2. அத்தி 3. கொள்வோன் 4. கொழிஞ்சி
**மீளி** : 1. பீடு 2. அரசன் 3. வன்மை 4. மேன்மகன் 5. திண்ணியன்

*பாளிதம்* -- கண்டசருக்கரை,சோறு, கருப்பூரம், குழம்பு, பட்டுச்சீலை
*ஒளி* -- யானைக்கூடம், ஒழுங்கு
*கோளி* -- ஆலமரம், அத்திமரம், கொள்வோன், கொழிஞ்சிமரம்
*மீளி* -- பெருமை, இராசா, வலி, மேன்மகன், திண்ணியன்

518. காளையே எருது, பாலைக்கதிபன், நல் இளமையோன் பேர்;
கூளியர் நண்பர், பூதகண வீரர், கொலைத் திறத்தோர்,
கோளகை வட்டமோடு, மண்டலிப் பாம்பும் கூறும்;
கேள்வியே செவியே, கல்வி, யாழ் எனக் கிளத்தும் முப்பேர்.

**காளை** : 1. எருது 2. பாலைக்கதிபன் 3. இளமையோன்
**கூளியர்** : 1. நண்பர் 2. பூதகணவீரர் 3. கொலைத்திறத்தோர்
**கோளகை** : 1. வட்டம் 2. மண்டலிப்பாம்பு
**கேள்வி** : 1. செவி 2. கல்வி 3. யாழ்

*காளை* -- ஏறு, பாலைநிலத்தவன், இளமையோன்
*கூளியர்* -- சிநேகிதர், பூதகணவீரர், கொலையாளிகள்
*கோளகை* -- வட்டம், மண்டலிப்பாம்பு
*கேள்வி* -- காது, கல்வி, யாழ்

519. காளி சாமுண்டி, சிங்கம்; கௌரியும் முப்பேர் காட்டும்.
வாளி சாரிகையோடு, அம்பு, மாதர்காதணியுள் ஒன்று ஆம்;
கேளியே மகளிராடல், இலாங்கலி கிளத்தும் நாமம்;
தாளி புற்றாளியோடு, தாலம், ஓர் கொடியும் ஆமே.

**காளி** : 1. சாமுண்டி 2. சிங்கம் 3. கௌரி
**வாளி** : 1. சாரிகை 2. அம்பு 3. மாதர் காதணியுள் ஒன்று
**கேளி** : 1. மகளிராடல் 2. இலாங்கலி
**தாளி** : 1. புற்றாளி 2. தாலம் 3. ஓர்கொடி

*காளி* -- காளியம்மை, சிங்கம், பார்வதி
*வாளி* -- வட்டமாயோடல், அத்திரம், மகளிர்காதணியுளொன்று
*கேளி* -- மகளிராடல், தெங்கு
*தாளி* -- அனுடநாள், பனை, ஓர்கொடி

520. வேள்வியே ஓமகுண்டம், வேட்டுவன், யாகம், ஈகை;
தேள் விருச்சிகமே, போந்தை, தெறுக்கால் என்று ஆகும் முப்பேர்;
தாள் என்பது அடி, முயற்சி, ஆதியும் முப்பேர் சாற்றும்;
பீள் இளங்கதிரினோடு, கருப்பமும் பேசற் பாற்றே.

**வேள்வி** : 1. ஓமகுண்டம் 2. வேட்டுவன் 3. யாகம் 4. ஈகை
**தேள்** : 1. விருச்சிகம் 2. போந்தை 3. தெறுக்கால்
**தாள்** : 1. அடி 2. முயற்சி 3. ஆதி
**பீள்** : 1. இளங்கதிர் 2. கருப்பம்

***வேள்வி*** -- ஓமகுண்டம், மகநாள், யாகம், கொடை
***தேள்*** -- விருச்சிகவிராசி, அனுடநாள், தேள்
***தாள்*** -- பாதம், முயற்சி, ஆதி
***பீள்*** -- இளங்கதிர், கருப்பம்

521. **வள்** என்ப வளம், நெருக்கம், வாளுறை, காது, கூர்மை,
மள்ளலும் வாரும் என்ன எழுபெயர் வகுக்கற் பாற்று ஆம்;
**ஞெள்ளலே** வீதி, மேன்மை, ஞெளிர், உட்னபாடு, பூசல்,
பள்ளமோடு, அதிகம், சோர்வு பகர்ந்திடும் எண்பேர் ஆமே.

**வள்** : 1. வளம் 2. நெருக்கம் 3. வாளுறை 4. காது 5. கூர்மை 6. மள்ளல் 7. வார்
**ஞெள்ளல்** : 1. வீதி 2. மேன்மை 3. ஞெளிர் 4. உடன்பாடு 5. பூசல் 6. பள்ளம் 7. அதிகம் 8. சோர்வு

***வள்*** -- வளம், அடர்பு, வாளுறை, செவி, கூர்மை, வலி, வார்
***ஞெள்ளல்*** -- தெரு, மேன்மை, ஒலி, உடன்படல், பூசல், பள்ளம், மிகுதி, சோர்வு

522. **பள்ளி** கண்படையே, சிற்றூர், பாயல், ஊர், மடம், நற்கோயில்,
வெள்ள நீர் வயல்சூழ் வாழ்க்கை, மிக்க தாபதமும் எண்பேர்;
**வள்ளி** ஓர்கொடி, செங்கையில்வளை, படர்கொடி, ஓர்கூத்தோடு,
அள்இலை வேலோன் தேவி, அணி, இழை, எழுபேர் ஆமே.

**பள்ளி** : 1. கண்படை 2. சிற்றூர் 3. பாயல் 4. ஊர் 5. மடம் 6. கோயில் 7. வெள்ள நீர் வயல் சூழ் வாழ்க்கை 8. தாபதம்
**வள்ளி** : 1. ஓர்கொடி 2. கையில்வளை 3. படர்கொடி 4. ஓர்கூத்து 5. வேலோன்தேவி 6. அணி 7. இளை

***பள்ளி*** -- நித்திரை, சிற்றூர், மக்கட்படுக்கை, ஊர், மடம், தேவர் கோயில், மருதநிலத்தூர், முனிவர்வாசம்
***வள்ளி*** -- வள்ளிக்கொடி, கைவளை, படர்கொடி, ஓர்கூத்து, குமரன்தேவி, ஆபரணம், இழை

523. **ஆளி**யே ஒழுங்கு, சீயம், ஆளுவோன், சேது, வாரம்,
யாளியே, சிங்கராசி என இவை எழுபேர் என்ப;
**கூளி** பேய் தொகுதி, ஏறு, குறள், படைத்தலைவன், குற்றம்,
கேளிரும் மொய்ம்பினோடு, கிருத்திமம் என்வும் ஆமே.

**ஆளி** : 1. ஒழுங்கு 2. சீயம் 3. ஆளுவோன் 4. சேது 5. வாரம் 6. யாளி 7. சிங்கராசி
**கூளி** : 1. பேய் 2. தொகுதி 3. ஏறு 4. குறள் 5. படைத்தலைவன் 6. குற்றம் 7. கேளிர் 8. மொய்ம்பு 9. கிருத்திமம்.

***ஆளி*** -- ஒழுங்கு, சிங்கம், ஆளுவோன், செய்கரை, நீர்க்கரை, யாளி, சிங்கவிராசி.
***கூளி*** -- பேய், குழுஉ. ஏறு, குறள், படைத்தலைவன் குற்றம், சுற்றம், வலி, பூதம்.

**(ளகர எதுகை முற்றிற்று)**

## றகர எதுகை

524. இறவையே கடவை, புட்டில்; **இறப்பே** சா, மிகுதி, போதல்,
குறடு பாதுகமே, திண்ணை; பலகையும், குறிக்கல் ஆகும்.
**புறவமே** குறிஞ்சி, கானம்; புறவொடு, முல்லையும் பேர்.
**புறணி** தோல், குறிஞ்சி, முல்லை நிலம், நிறம் புகலல் ஆமே.

**இறவை** : 1. கடவை 2. புட்டில்
**இறப்பு** : 1. சா 2. மிகுதி 3. போதல்
**குறடு** : 1. பாதுகம் 2. திண்ணை 3. பலகை
**புறவம்** : 1. குறிஞ்சி 2. கானம் 3. புறவு 4. முல்லை
**புறணி** : 1. தோல் 2. குறிஞ்சி 3. முல்லைநிலம் 4. நிறம்.

*இறவை* -- ஏணி, கூடை
*இறப்பு* -- சாவு, மிகுதி, போக்கு
*குறடு* -- பாதகுறடு, திண்ணை, பலகை
*புறவம்* -- குறிஞ்சி, காடு, புறா, முல்லைநிலம்
*புறணி* -- தோல், குறிஞ்சி, முல்லைநிலம், நிறம்

525. **மறம்** சினம், நமன், பிணக்கு, வலி, கொலை, வீரம், பாவம்;
குறிஞ்சி ஓரிசை, செம்முள்ளி, குறிஞ்சி நன்னிலம், ஓர்பண் ஆம்;
**பிறங்கல்** வெற்பு, ஒலி, ஒழுக்கம், பீடொடு, நிறைவு, உயர்ச்சி;
**குறும்பொறை** குன்று காடு, குறிஞ்சி நன்னிலத்து ஊர் ஆமே.

**மறம்** : 1. சினம் 2. நமன் 3. பிணக்கு 4. வலி 5. கொலை 6. வீரம் 7. பாவம்
**குறிஞ்சி** : 1. ஓரிசை 2. செம்முள்ளி 3. குறிஞ்சிநிலம் 4. ஓர்பண்
**பிறங்கல்** : 1. வெற்பு 2. ஒலி 3. ஒழுக்கம் 4. பீடு 5. நிறைவு 6. உயர்ச்சி
**குறும்பொறை** : 1. குன்று 2. காடு 3. குறிஞ்சி நிலத்தூர்

***மறம்*** -- கோபம், நமன், பிணக்கு, வலி, கொலை, வீரம், பாவம்
***குறிஞ்சி*** -- ஓரிசை, செம்முள்ளி, குறிஞ்சிநிலம், ஓர்பண்
***பிறங்கல்*** -- மலை, ஒலி, ஒழுக்கம், பெருமை, நிறைவு, உயர்ச்சி
***குறும்பொறை*** -- மலை, காடு, குறிஞ்சிநிலத்தூர்.

526. **திறல்** பகை, சமரினோடு, திண்மை முப்பேர் ஆகும்;
**நறவம்** குங்குமம், அனிச்சம், ஞாழல், வாசனை, தேன் ஐம்பேர்;
**திறம்** குணம், வகையோடு, ஏது, திடன், நரம்பு எஞ்சி யாழ் ஆம்;
**இறல்** கேடு, கிளிஞ்சில் என்ப; இறுதலும் இயம்பல் ஆமே.

**திறல்** : 1. பகை 2. சமர் 3. திண்மை
**நறவம்** : 1. குங்குமம் 2. அனிச்சம் 3. ஞாழல் 4. வாசனை 5. தேன்
**திறம்** : 1. குணம் 2. வகை 3. ஏது 4. திடன் 5. நரம்பு எஞ்சியாழ்
**இறல்** : 1. கேடு 2. கிளிஞ்சில் 3. இறுதல்

***திறல்*** -- பகை, போர், வலி
***நறவம்*** -- குங்குமமரம், அனிச்சமரம், பலினி, வாசம், தேன்
***திறம்*** -- குணம், வகை, காரணம், திடம், நரம்புகுறைவுள்ளயாழ்
***இறல்*** -- கேடு, கிளிஞ்சில், இறுதல்

527. **உறல்** கிட்டல், வருத்தம் என்ப; **உறுக்கலே** கடத்தல், கோபம்.
**பிறப்பு** அச்சம், பவம், நெருக்கம்; **பிறக்கமே** மரக்கொம்பு, அச்சம்;
**சிறப்பு** அதிகம், விசேடம்; **சீறலே** அதட்டல், கோபம்;
**பறவை** புள்ளிறகு, அவிட்டம், பக்கியும் முப்பேர் ஆமே.

**உறல்** : 1. கிட்டல் 2. வருத்தம்
**உறுக்கல்** : 1. கடத்தல் 2. கோபம்
**பிறப்பு** : 1. அச்சம் 2. பவம் 3. நெருக்கம்
**பிறக்கம்** : 1. மரக்கொம்பு 2. அச்சம்
**சிறப்பு** : 1. அதிகம் 2. விசேடம்
**சீறல்** : 1. அதட்டல் 2. கோபம்
**பறவை** : 1. புள்ளிறகு 2. அவிட்டம் 3. பக்கி

*உறல்* -- கிட்டல், வருத்தம்
*உறுக்கல்* -- கடத்தல், கோபம்
*பிறப்பு* -- பயம், பிறவி, நெருக்கம்
*பிறக்கம்* -- மரக்கொம்பு, பயம்
*சிறப்பு* -- அதிகம், விசேடம்
*சீறல்* -- அதட்டல், கோபம்
*பறவை* -- பக்கியினிற்கு, அவிட்டநாள், புள்

528. **இறத்தலே** நடத்தல், சாதல்; மிகுதியும் இயம்பல் ஆகும்.
**வெறுப்பு** அச்சம், சினம், கலக்கம், வேண்டாமை, செறிவு, துன்பம்;
**இறுத்தலே** ஒடித்தல், சொல்லல், இறையிறுத்திடலே, தங்கல்;
**செறித்தலே** அழித்தல், மூழ்கல்; செகுத்தலும், நெரித்தலும் பேர்.

**இறத்தல்** : 1. நடத்தல் 2. சாதல் 3. மிகுதி
**வெறுப்பு** : 1. அச்சம் 2. சினம் 3. கலக்கம் 4. வேண்டாமை 5. செறிவு 6. துன்பம்
**இறுத்தல்** : 1. ஒடித்தல் 2. சொல்லல் 3. இறையிறுத்திடல் 4. தங்கல்
**செறித்தல்** : 1. அழித்தல் 2. மூழ்கல் 3. செகுத்தல் 4. நெரித்தல்

*இறத்தல்* -- நடத்தல், மரணித்தல், மிகுதி
*வெறுப்பு* -- பயம், கோபம், கலக்கம், வேண்டாமை, செறிவு, துயரம்
*இறுத்தல்* -- முரித்தல், சொல்லுதல், இறையிறுத்தல், தங்குதல்
*செறித்தல்* -- அழித்தல், மூழ்கல், கொல்லல், நெரித்தல்.

529. **உறழ்வு** என்பது உணர்வு, காலம், செறிவு, இடையீடு, ஒப்பு ஐம்பேர்;
**உறவியே** எறும்பு, நீரூற்று, உலைக்களம், உறவு, உயிர்ப் பேர்;
**உறுகண்** என்பதுவே துன்பம், உறுபயம், மிடி, நோய் என்ப;
**உறுவனே** அருகனோடு, முனிவனும் உரைக்கற்பாற்றே.

**உறழ்வு** : 1. உணர்வு 2. காலம் 3. செறிவு 4. இடையீடு 5. ஒப்பு
**உறவி** : 1. எறும்பு 2. நீரூற்று 3. உலைக்களம் 4. உறவு 5. உயிர்
**உறுகன்** : 1. துன்பம் 2. உறுபயம் 3. மிடி 4. நோய்
**உறுவன்** : 1. அருகன் 2. முனிவன்

*உறழ்வு* -- உணர்வு, காலம், செறிவு, இடையீடு, ஒப்பு
*உறவி* -- எறும்பு, நீரூற்று, உலைக்களம், உறவு, உயிர்
*உறுகண்* -- துன்பம், பயம், தரித்திரம், நோய்
*உறுவன்* -- அருகதேவன், முனிவன்

530. **அறல்** கருமணல், தரங்கம், அறுதல், நீர், சிறுதூறு ஆகும்;
**மறலி** அந்தகன், மயக்கம்; **மறு** என்ப மாசு, குற்றம்;
**குறளை** கோட்சொல்லல், குள்ளம்; **குறுகலே** அணுகல், குன்றல்;
**சுறவு** என்ப மகரராசி, சுறா என இருபேர் சொல்லும்.

**அறல்** : 1. கருமணல் 2. தரங்கம் 3. அறுதல் 4. நீர் 5. சிறுதூறு
**மறலி** : 1. அந்தகன் 2. மயக்கம்
**மறு** : 1. மாசு 2. குற்றம்
**குறளை** : 1. கோட் சொல்லல் 2. குள்ளம்
**குறுகல்** : 1. அணுகல் 2. குன்றல்
**சுறவு** : 1. மகரராசி 2. சுறா.

***அறல்*** -- கருமணல், நீர்த்திரை, அறுதல், நீர், சிறுதூறு
***மறலி*** -- யமன், மயக்கம்
***மறு*** -- மாசு, குற்றம்
***குறளை*** -- கோட்சொல்லல், குள்ளம்
***குறுகல்*** -- கிட்டடல், சுருங்கல்
***சுறவு*** -- மகரவிராசி, சுறாமீன்

531. **விறப்பு** அச்சம், செறிவு, ஞாட்பு, வென்றியும், பெருக்கமும் பேர்.
**பொறுத்தல்** தாங்குதல், பொறைப் பேர்; **புறம்** மதில், வெரின்,
[சார், வீரம்;
**உறுத்தல்** ஒற்றுதல், பயத்தல், வருவித்தல் முப்பேர் ஓதும்;
**கறுப்பு** என்ப சினக்குறிப்பு; கருமையும், சினமும் ஆமே.

**விறப்பு** : 1. அச்சம் 2. செறிவு 3. ஞாட்பு 4. வென்றி 5. பெருக்கம்
**பொறுத்தல்** : 1. தாங்குதல் 2. பொறை
**புறம்** : 1. மதில் 2. வெரின் 3. சார் 4. வீரம்
**உறுத்தல்** : 1. ஒற்றுதல் 2. பயத்தல் 3. வருவித்தல்
**கறுப்பு** : 1. சினக்குறிப்பு 2. கருமை 3. சினம்

***விறப்பு*** -- பயம், செறிவு, போர், வெற்றி, பெருக்கம்
***பொறுத்தல்*** -- சுமக்குதல், பொறுக்குதல்
***புறம்*** -- மதில், முதுகு, திடம், வீரம்
***உறுத்தல்*** -- ஒற்றல், பயக்குதல், வருவித்தல்
***கறுப்பு*** -- சினக்குறிப்பு, கருமை, கோபம்

532. **விறல்** வலி, சூரம், பீடு; வென்றியும் விளம்பும் நாமம்,
**நொறில்** என்ப விரைவினோடு, முணங்குஎன நுவலற் பாற்று ஆம்;
**நெறி** என்ப நடவை, செவ்வை, நீதியும் நிகழ்த்தும் முப்பேர்.
**பறையே** வாச்சியம், சொல்லோடு, பக்கியினிற்கும் ஆமே.

**விறல்** : 1. வலி 2. சூரம் 3. பீடு 4. வென்றி
**நொறில்** : 1. விரைவு 2. முணங்கு
**நெறி** : 1. நடவை 2. செவ்வை 3. நீதி
**பறை** : 1. வாச்சியம் 2. சொல் 3. பக்கியின் இறகு

***விறல்*** -- வலி, வீரம், பெருமை, வெற்றி
***நொறில்*** -- சீக்கிரம், நுட்பம்
***நெறி*** -- வழி, செவ்வை, நீதி
***பறை*** -- வாச்சியம், சொல், புள்ளினிறகு

533. **தறி** நெய்யுந்தறியே, கட்டுத்தறி, முளை, தம்பம் ஆகும்;
**முறி** இலை, தளிரினோடு, சாதனம் மொழியும் முப்பேர்;
**எறிதல்** வீசுதல், அடித்தல், குத்தல், வெட்டுதலே என்ப;
**மறி** அளுங்கு, ஆடு, வாசி, மான், மேடராசி ஆமே.

**தறி** : 1. நெய்யுந்தறி 2. கட்டுத்தறி 3. முளை 4. தம்பம்
**முறி** : 1. இலை 2. தளிர் 3. சாதனம்
**எறிதல்** : 1. வீசுதல் 2. அடித்தல் 3. குத்தல் 4. வெட்டுதல்
**மறி** : 1. அளுங்கு 2. ஆடு 3. வாசி 4. மான் 5. மேடராசி.

***தறி*** -- நெய்வார்தறி, கட்டுத்தறி, முளை, தூண்
***முறி*** -- இலை, தளிர், முறிச்சீட்டு
***எறிதல்*** -- வீசல், அறைதல், குத்துதல், வெட்டல்
***மறி*** -- அளுங்கு, ஆடு, குதிரை, மான், மேடவிராசி

534. **குறை** அரசிறையே, குற்றம், குறுவாழ்க்கை, முப்பேர் கூறும்;
**மிறை** குற்றம், அச்சம் என்ப; **விறலோன்** திண்ணியன், அசோகன்,
**துறை** வழி, ஆறு, பாவின்துறை, இடம், நீர்த்துறைப் பேர்.
**நறை** நறும்புகையே, குற்றம்; நறவு, வாசனையும் ஆமே.

**குறை** : 1. அரசிறை 2. குற்றம் 3. குறுவாழ்க்கை
**மிறை** : 1. குற்றம் 2. அச்சம்
**விறலோன்** : 1. திண்ணியன் 2. அசோகன்
**துறை** : 1. வழி 2. ஆறு 3. பாவின்துறை 4. இடம் 5. நீர்த்துறை
**நறை** : 1. நறும்புகை 2. குற்றம் 3. நறவு 4. வாசனை.

***குறை*** -- அரசிறை, குற்றம், தரித்திரம்
***மிறை*** -- குற்றம், பயம்
***விறலோன்*** -- வலியன், அருகன்
***துறை*** -- வழி, ஆறு, பாவின்துறை, இடம், நீரின்துறை
***நறை*** -- பரிமளப்புகை, குற்றம், தேன், வாசம்

535. **அறை** திரை, சிற்றில், பாறை; அறைதல், சொல், முழையும் ஆகும்.
**உறையுளே** நாடு, ஊர் ஆகும்; **உறுதி**யே திடம், நன்மைப் பேர்;
**பொறை** சுமை, துறுகல், பாரம், புவி, மலை, சுமை, கருப்பம்;
**சிறுமை**யே துன்பம், அச்சம், தரித்திரம் முப்பேர் செப்பும்.

**அறை** : 1. திரை 2. சிற்றில் 3. பாறை 4. அறைதல் 5. சொல் 6. முழை
**உறையுள்** : 1. நாடு 2. ஊர்
**உறுதி** : 1. திடம் 2. நன்மை
**பொறை** : 1. சுமை 2. துறுகல் 3. பாரம் 4. புவி 5. மலை 6. கமை 7. கருமம்
**சிறுமை** : 1. துன்பம் 2. அச்சம் 3. தரித்திரம்.

***அறை*** -- திரை, சிற்றில், பாறை, மோதல், சொல், முழை
***உறையுள்*** -- நாடு, ஊர்
***உறுதி*** -- திண்மை, நன்மை
***பொறை*** -- சுமை, சலதாரைமுதலியவடைக்குங்கல், பாரம், பூமி, மலை, பொறுமை, கருமம்
***சிறுமை*** -- துன்பம், பயம், தரித்திரம்

536. **சிறை** இடம், இறகு, காவல், சிறைச்சாலை, மதில் பக்கப் பேர்;
**கறை** குற்றம், உதிரம், மாசு, கறுப்பு, உரல், கடல், நஞ்சு ஆகும்,
**முறை** குணம், ஒழுக்கம், தொன்மை, முறைமை, புத்தகமும் ஐம்பேர்;
**பிறழ்தல்** காய்ப்பு, உரைத்தல், மின்னல், பெயர்தல், கம்பிதமும் [ஆமே.

**சிறை** : 1. இடம் 2. இறகு 3. காவல் 4. சிறைச்சாலை 5. மதில் 6. பக்கம்
**கறை** : 1. குற்றம் 2. உதிரம் 3. மாசு 4. கறுப்பு 5. உரல் 6. கடல் 7. நஞ்சு
**முறை** : 1. குணம் 2. ஒழுக்கம் 3. தொன்மை 4. முறைமை 5. புத்தகம்
**பிறழ்தல்** : 1. காய்ப்பு 2. உரைத்தல் 3. மின்னல் 4. பெயர்தல் 5. கம்பிதம்

***சிறை*** -- இடம், இறகு, காவல், சிறைச்சாலை, மதில், பக்கம்
***கறை*** -- குற்றம், இரத்தம், மாசு, கறுப்பு, உரல், கடல், விடம்
***முறை*** -- குணம், ஒழுக்கம், பழமை, முறைமை, புத்தகம்
***பிறழ்தல்*** -- வெறுப்பு, சொல்லல், ஒளிசெய்தல், திரும்புதல், நடுக்கம்

537. **இறும்பு** என்ப மலை, குறுங்காடு, இராசீவம், வியப்பு, தூறு;
**கறங்கல்** பேய், ஒலி, சுழற்சி; கணையமுங் கருதும் நாற்பேர்
**பறம்பு** என்ப முலை, வெற்பு ஆகும்; **பறந்தலை** விளாகம், ஈமம்;
**நிறம்** என்ப மருமம், காந்தி, குணம் என நிகழ்த்தல் ஆமே.

**இறும்பு** : 1. மலை 2. குறுங்காடு 3. இராசீவம் 4. வியப்பு 5. தூறு
**கறங்கல்** : 1. பேய் 2. ஒலி 3. சுழற்சி 4. கணையம்
**பறம்பு** : 1. முலை 2. வெற்பு
**பறந்தலை** : 1. விளாகம் 2. ஈமம்
**நிறம்** : 1. மருமம் 2. காந்தி 3. குணம்.

***இறும்பு*** -- மலை, குறுங்காடு, தாமரைப்பூ, அதிசயம், தூறு
***கறங்கல்*** -- பேய், ஒலி, சுழலல், வளைதடி
***பறம்பு*** -- தனம், மலை
***பறந்தலை*** -- போர்க்களம், சுடுகாடு
***நிறம்*** -- மார்பு, ஒளி, குணம்

538. **அறுகு** என்ப யாளி, சீயம், ஆனை, வல்லியம், ஓர்புல் ஆம்:
**வறிது** என்பது; அருகல், சற்றோடு, அறியாமை, பயனில் வார்த்தை;
**மறவி**யே மறதி, ஈனம், மது என வகுக்கும் முப்பேர்;
**குறள்** கிருத்திமமே, குள்ளம், குறுமையும் முப்பேர் கூறும்.

**அறுகு** : 1. யாளி 2. சீயம் 3. ஆனை 4. வல்லியம் 5. ஓர்புல்
**வறிது** : 1. அருகல் 2. சற்று 3. அறியாமை 4. பயனில் வார்த்தை
**மறவி** : 1. மறதி 2. ஈனம் 3. மது
**குறள்** : 1. கிருத்திமம் 2. குள்ளம் 3. குறுமை.

***அறுகு*** -- யாளி, சிங்கம், யானை, புலி, அறுகம்புல்
***வறிது*** -- குறைதல், அற்பம், அறியாமை, பயனில்வார்த்தை
***மறவி*** -- மறதி, ஈனம், மது
***குறள்*** -- பூதம், குள்ளம், குறுமை

539. **கற்பே** இல்மகளிர்கற்பு, கல்வியும், முல்லையும் பேர்;
**தற்பம்** மக்கட்படுக்கை, தாரம், மேனிலையும் ஆகும்.
**அற்பமே** சிறுமை, நாய் ஆம்; **அறிவு** உணர்வு, அறிதல், கல்வி;
**அற்புதம்** ஓர்எண், வானோடு, அதிசயம் முப்பேர் ஆமே.

**கற்பு** : 1. மகளிர் கற்பு 2. கல்வி 3. முல்லை
**தற்பம்** : 1. மக்கட் படுக்கை 2. தாரம் 3. மேனிலை
**அற்பம்** : 1. சிறுமை 2. நாய்
**அறிவு** : 1. உணர்வு 2. அறிதல் 3. கல்வி
**அற்புதம்** : 1. ஓர்எண் 2. வான் 3. அதிசயம்

***கற்பு*** -- மகளிரதுகற்பு, கல்வி, முல்லை
***தற்பம்*** -- மக்கட்படுக்கை, மனைவி, மேனிலை
***அற்பம்*** -- சிறுமை, நாய்
***அறிவு*** -- உணர்வு, அறிதல், கல்வி
***அற்புதம்*** -- ஒரெண், வான், அதிசயம்

540. **அற்றம்** அற்றது, மெய், நாய், சோர்வு, அவகாசம், மறைவு, சற்று [ஆம்;
**குற்றல்** குற்றுதல், பறித்தல், நெரித்தலும் முப்பேர் கூறும்;
**எற்று** என்பது இரக்கம், ஒத்தல், எறிதல், எத்தன்மைத்தென்றல்;
**கொற்றி**யே துர்க்கை, மாரி, கோவிளங்கன்றும் ஆமே.

**அற்றம்** : 1. அற்றது 2. மெய் 3. நாய் 4. சோர்வு 5. அவகாசம் 6. மறைவு 7. சற்று.
**குற்றல்** : 1. குற்றுதல் 2. பறித்தல் 3. நெரித்தல்
**எற்று** : 1. இரக்கம் 2. ஒத்தல் 3. எறிதல் 4. எத்தன்மைத்தென்றல்
**கொற்றி** : 1. துர்க்கை 2. மாரி 3. கோவிளங்கன்று

***அற்றம்*** -- அற்றது, உண்மை, நாய், சோர்வு, சமயம், மறைவு, சற்று
***குற்றல்*** -- குற்றுதல், பறிக்குதல், நெரித்தல்
***எற்று*** -- இரக்கம், ஒத்தல், எறிதல், எத்தன்மைத்தென்றல்
***கொற்றி*** -- துர்க்காதேவி, காடுகாள், பசுவினிளங்கன்று

541. **கற்பமே** பிரமன் ஆயுள், கற்பகதரு, சுவர்க்கம்;
**பொற்பு** என்பது அழகினோடு, பொலிவும், ஒப்பனையும் ஆகும்;
**பற்பம்** ஓர்புராணம், நீறு, பதுமமும் முப்பேர் பன்னும்;
**உற்கை** விண் வீழும் கொள்ளி, உடுவும், தீக்கொள்ளியும் பேர்.

**கற்பம்** : 1. பிரமன் ஆயுள் 2. கற்பகதரு 3. சுவர்க்கம்
**பொற்பு** : 1. அழகு 2. பொலிவு 3. ஒப்பனை
**பற்பம்** : 1. ஓர்புராணம் 2. நீறு 3. பதுமம்
**உற்கை** : 1. விண்வீழும்கொள்ளி 2. உடு 3. தீக்கொள்ளி.

***கற்பம்*** -- பிரமன்வாழ்நாள், கற்பகதரு, தேவலோகம்
***பொற்பு*** -- அழகு, மிகுதி, அலங்கரிப்பு
***பற்பம்*** -- ஓர்புராணம், தூள், தாமரை
***உற்கை*** -- விண்வீழுங்கொள்ளி, விண்மீன், தீக்கொள்ளி

542. **முற்றல்** காழ்க்கோடல், மூப்பு, முடிவு, கோண், வளைத்தல் ஐம்பேர்;
**நெற்றி**யே நுதலும், மேலும், நெடும்படை வகுப்பும் ஆகும்.
**கொற்றமே** வன்மை, வென்றி, அரசியல் முப்பேர் கூறும்.
**எற்றுதல்** புடைத்தலோடே, எறிதலும் இயம்பல் ஆமே.

**முற்றல்** : 1. காழ்க்கோடல் 2. மூப்பு 3. முடிவு 4. கோண் 5. வளைத்தல்
**நெற்றி** : 1. நுதல் 2. மேல் 3. நெடும்படை வகுப்பு
**கொற்றம்** : 1. வன்மை 2. வென்றி 3. அரசியல்
**எற்றுதல்** : 1. புடைத்தல் 2. எறிதல் 3. இயம்பல்

*முற்றல்* – வயிரங்கொள்ளல், முதுமை, முடிவு, வளைவு, வளைத்தல்
*நெற்றி* -- நுதல், மிசை, படைவகுப்பு
*கொற்றம்* -- வலிமை, வெற்றி, அரசியல்
*எற்றுதல்* -- அடித்தல், எறிதல்

543. **ஒற்று** மெய்யெழுத்து, வேவோடு, ஒற்றுதல் முப்பேர் ஓதும்;
**தெற்றி** சித்திர கூடப்பேர், திண்ணையும் அப்பேர் ஆகும்;
**துற்றலே** குவிதல், உண்டல், நிறைதலும் முப்பேர் சொல்லும்;
**பொற்றையே** சிறுதூறோடு, பொருப்பு எனப் புகலல் ஆமே.

**ஒற்று** : 1. மெய்யெழுத்து 2. வேவு 3. ஒற்றுதல்
**தெற்றி** : 1. சித்திரகூடம் 2. திண்ணை
**துற்றல்** : 1. குவிதல் 2. உண்டல் 3. நிறைதல்
**பொற்றை** : 1. சிறுதூறு 2. பொருப்பு

*ஒற்று* -- ஒற்றெழுத்து, தூது, ஒற்றல்
*தெற்றி* -- சித்திரகூடம், திண்ணை
*துற்றல்* -- குவிதல், உண்டல், நிறைதல்
*பொற்றை* -- சிறுதூறு, மலை

544. **வீறு** புண்ணியம், விளக்கம்; வெறுப்பொடு, தனிமை, பீடு ஆம்.
**மாறலே** தவிர்தல், விற்றல், விடுதலும் வகுக்கல் ஆகும்;
**சாறு** என்ப குலை, கள்ளோடு, விழவு என முப்பேர் சாற்றும்;
**ஆறு** என்பது ஒழுக்கம், ஓர் எண், அதர், நதி எனவும் ஆமே.

**வீறு** : 1. புண்ணியம் 2. விளக்கம் 3. வெறுப்பு 4. தனிமை 5. பீடு
**மாறல்** : 1. தவிர்தல் 2. விற்றல் 3. விடுதல்
**சாறு** : 1. குலை 2. கள் 3. விழவு
**ஆறு** : 1. ஒழுக்கம் 2. ஓர்எண் 3. அதர் 4. நதி

*வீறு* -- புண்ணியம், விளக்கம், வெறுப்பு, தனிமை, பெருமை
*மாறல்* -- தவிர்தல், விற்றல், விடுதல்
*சாறு* -- குலை, கள், திருவிழா
*ஆறு* -- ஒழுக்கம், ஓரிலக்கம், வழி, யாறு

545. **தாறு** விற்குதையே, எல்லை, தாழ்மரக்குலை, முட்கோல் ஆம்;
**சேறு** என்ப கும்பி, சாரம், தித்திப்பு, விழவு, கள்ளு;
**ஊறு** என்ப தீமை, தீண்டல், உயிர்க்கொலை, இடையூறு என்ப
**ஏறு** இடி, முதல் நாள் ஆகும்; இடபமோடு, எருதும் ஆமே.

**தாறு** : 1. விற்குதை 2. எல்லை 3. மரக்குலை 4. முட்கோல்
**சேறு** : 1. கும்பி 2. சாரம் 3. தித்திப்பு 4. விழவு 5. கள்ளு
**ஊறு** : 1. தீமை 2. தீண்டல் 3. கொலை 4. இடையூறு
**ஏறு** : 1. இடி 2. முதல்நாள் 3. இடபம் 4. எருது

***தாறு*** -- வில்லின்குதை, அளவு, மரக்குலை, முட்கோல்
***சேறு*** -- சேறு, சாரம், தித்திப்பு, திருவிழா, கள்
***ஊறு*** -- தீமை, தொடுதல், கொலை, இடையூறு
***ஏறு*** -- இடி, அச்சுவினிநாள், இடபவிராசி, எருது

546. தூறலே பழிச்சொல், வானத்துளி, மழைபெய்தல் ஆகும்;
தேறலே நிச்சயம், தேன், தெளிவொடு, தங்கல் என்ப;
பாறலே பொருதல், ஓடல், பகடுடன், இடபராசி;
நாறலே மணத்தல், தோன்றல், முளைத்தலும் நவிலல் ஆமே.

தூறல் : 1. பழிச்சொல் 2. வானத்துளி 3. மழைபெய்தல்
தேறல் : 1. நிச்சயம் 2. தேன் 3. தெளிவு 4. தங்கல்
பாறல் : 1. பொருதல் 2. ஓடல் 3. பகடு 4. இடபராசி
நாறல் : 1. மணத்தல் 2. தோன்றல் 3. முளைத்தல்

*தூறல்* -- பழிமொழி, மழைத்துளி, மழைபெய்தல்
*தேறல்* -- நிச்சயம், தேன், துணிவு, தங்கல்
*பாறல்* -- பொருதல், ஓடல், எருது, இடபவிராசி
*நாறல்* -- மணத்தல், தோன்றல், முளைத்தல்

547. ஏற்றலே இரத்தல், கோடல், எதிர்ந்து போர் செயல், எழுப்பல்;
ஆற்றலே பொறை, முயற்சி, அதிகமே, வலியே ஞானம்.
தோற்றலே வலி, பிறப்பு தோன்றுதல், புகழ் நாற்பேர் ஆம்,
போற்றலே வணங்கல், ஓம்பல், புகழ்தலும் முப்பேர் ஆமே.

**ஏற்றல்** : 1. இரத்தல் 2. கோடல் 3. எதிர்ந்து போர் செயல் 4. எழுப்பல்
**ஆற்றல்** : 1. பொறை 2. முயற்சி 3. அதிகம் 4. வலி 5. ஞானம்
**தோற்றல்** : 1. வலி 2. பிறப்பு 3. தோன்றுதல் 4. புகழ்
**போற்றல்** : 1. வணங்கல் 2. ஓம்பல் 3. புகழ்தல்

***ஏற்றல்*** -- இரத்தல், கொள்ளல், எதிர்ந்துபோர்செய்தல், எழுப்பல்
***ஆற்றல்*** -- பொறுமை, முயற்சி, அதிகம், வலி, ஞானம்
***தோற்றல்*** -- வலி, பிறப்பு, தோன்றல், புகழ்
***போற்றல்*** -- வணங்குதல், காத்தல், கீர்த்தித்தல்

548. **கூற்று** என்ப மறலி, வார்த்தை; காலனும் முப்பேர் கூறும்.
**நாற்றம்** நாறுதலே, தோன்றல், நறவமும் நவிலற்பாற்று ஆம்;
**ஊற்று** என்பது ஊன்று கோலும், உறவியும் இருபேர் ஓதும்;
நோற்றலே நியமமோடு, பொறை, தவம் நுவலல் ஆமே.

**கூற்று** : 1. மறலி 2. வார்த்தை 3. காலன்
**நாற்றம்** : 1. நாறுதல் 2. தோன்றல் 3. நறவம்
**ஊற்று** : 1. ஊன்றுகோல் 2. உறவி
நோற்றல் : 1. நியமம் 2. பொறை 3. தவம்

***கூற்று*** -- யமன், சொல், காலன்
***நாற்றம்*** -- நாறுதல், தோன்றுதல், மணம்
***ஊற்று*** -- ஊன்றுகோல், நீரூற்று
*நோற்றல்* -- நியமம், பொறுமை, தவம்

549 **ஊற்றமே** புகழோடு, ஆற்றல்; ஊன்றுகோல் எனவும் ஓதும்.
**ஏற்றமே** அதிகம், பூட்டை; இவர்தலும், புகழும் என்ப.
**தேற்றமே** குறிக்கோள், மன்றம், தெருள் என முப்பேர் செப்பும்;
**மாற்றம்** வேற்றுமையினோடு, வாசகம், பகையும் ஆமே.

**ஊற்றம்** : 1. புகழ் 2. ஆற்றல் 3. ஊன்றுகோல்
**ஏற்றம்** : 1. அதிகம் 2. பூட்டை 3. இவர்தல் 4. புகழ்
**தேற்றம்** : 1. குறிக்கோள் 2. மன்றம் 3. தெருள்
**மாற்றம்** : 1. வேற்றுமை 2. வாசகம் 3. பகை.

**ஊற்றம்** -- புகழ், வலி, ஊன்றுகோல்
**ஏற்றம்** -- அதிகம், ஏற்றமரம், ஏறுதல், புகழ்
**தேற்றம்** -- குறிக்கோள், மன்றம், தெளிவு
**மாற்றம்** -- வேற்றுமை, சொல், பகை

550. பொறி மரக்கலமே, செல்வம், பூமகள், ஏந்திரங்கள்,
அறிவு, இலாஞ்சனை, எழுத்தோடு, ஐம்பொறி, வரி ஒன்பான் [பேர்.
வெறி வெருவுதல், கலக்கம், வெறியாட்டு, வட்டம் நாற்றம்,
குறியபேய், துருவை, கள்ளு, கூறும் நோய் ஒன்பது ஆமே.

பொறி : 1. மரக்கலம் 2. செல்வம் 3. பூமகள் 4. ஏந்திரங்கள் 5. அறிவு 6. இலாஞ்சனை 7. எழுத்து 8. ஐம்பொறி 9. வரி
வெறி : 1. வெருவுதல் 2. கலக்கம் 3. வெறியாட்டு 4. வட்டம் 5. நாற்றம் 6. பேய் 7. துருவை 8. கள்ளு 9. நோய்.

*பொறி* -- மரக்கலம், செல்வம், இலக்குமி, ஏந்திரம், அறிவு, அடையாளம், எழுத்து, ஐம்பொறி, வரி

*வெறி* --பயமுறல், கலக்கம், வெறியாட்டு, வட்டம், மணம், பைசாசம், துருவாடு, மது, நோய்

551. **இறை** என்பு கடவுள், ஈசன், இறையிறுப்பு, அரசன், புள்ளின் இறகு, கூன், சிரம், இறப்போடு, இறுத்தல், பீடு, உயர்ச்சி, அற்பம், நறைமலர்க் கடவுள், மூத்தோன், நாதன், கையிறை, உயர்ந்தோர், உறுகடன், வடவை, துன்பம் ஒரு பதிற்று இரட்டி ஆமே.

**இறை** : 1. கடவுள் 2. ஈசன் 3. இறையிறுப்பு 4. அரசன் 5. புள்ளின் இறகு 6. கூன் 7. சிரம் 8. இறப்பு 9. இறுத்தல் 10. பீடு 11. உயிர்ச்சி 12. அற்பம் 13. மலர்க்கடவுள் 14. மூத்தோன் 15. நாதன் 16. கையிறை 17. உயர்ந்தோர் 18. கடன் 19. வடவை 20. துன்பம்.

***இறை*** -- கடவுள், சிவன், இறையிறுப்பு, அரசன், பக்கியினிறகு, கூன், தலை, இறப்பு, இறுத்தல், பெருமை, உயர்ச்சி, அற்பம், பிரமன், மூத்தோன், எப்பொருட்குமிறைவன், கையினிறை, உயர்ந்தோர், கடன், வடவைத்தீ, துன்பம்.

552. **உறை** பொருள், மருந்து, வாழ்நாள், உணவு, வெண்கலம் [மேகாரம், எறிபடைக் கலத்தின்கூடே, எண்குறித்திறுதி பெயதல், நறிய பாற்பிரை, இடைச்சொல், நகரம் நீர்த்துளி, உயர்ச்சி, புறமொடு, மழையே, நீளம், புகன்ற நாநான்கும் ஆமே.

**உறை** : 1. பொருள் 2. மருந்து 3. வாழ்நாள் 4. உணவு 5. வெண்கலம் 6. மேகாரம் 7. எறிபடை கலத்தின் கூடு 8. எண்குறித்திறுதி பெய்தல் 9. பாற்பிரை 10. இடைச்சொல் 11. நகரம் 12. நீர்த்துளி 13. உயர்ச்சி 14. புறம் 15. மழை 16. நீளம்

***உறை*** -- பொருள், மருந்து, வாழ்நாள், உணவு, வெண்கலம், பொன், படைக்கலம்பெய்கூடு, எண்குறித்திறுதிபெய்தல், பாற்பிரை, இடைச்சொல், நகரம், நீர்த்துளி, உயர்ச்சி, முதுகு, மழை, நீளம்.

**(றகர எதுகை முற்றிற்று)**

## னகர எதுகை

553. **மனவு** சங்கு, அக்கு, நீலமணி, மணிப் பொதுவே, ஆடை;
**தனி** கலப்பின்மை யோடு, சமமின்மை, தமி முப்பேர் ஆம்;
**முனை** நுனி, பகை, வெறுப்பு, முதன்மையும் மொழியும் நாற்பேர்;
**இனம்** என்ப சுற்றம், கூட்டம், இருங்குலம், அமைச்சும் ஆமே.

**மனவு** : 1. சங்கு 2. அக்கு 3. நீலமணி 4. மணிப்பொது 5. ஆடை
**தனி** : 1. கலப்பின்மை 2. சமமின்மை 3. தமி
**முனை** : 1. நுனி 2. பகை 3. வெறுப்பு 4. முதன்மை
**இனம்** : 1. சுற்றம் 2. கூட்டம் 3. குலம் 4. அமைச்சு

***மனவு*** – சங்கு, உருத்திராக்கம், நீலரத்தினம்,மணிப்பொது, புடைவை
***தனி*** -- கலப்பிலாமை, சமானமின்மை, தனிமை
***முனை*** -- நுனி, பகை, வெறுப்பு, முதன்மை
***இனம்*** -- கிளை, தொகுதி, குலம், மந்திரி.

554. **தனம்** முலை, பொன், ஆன்கன்று, சந்தம், முத்தன்மைப் பேர் [ஆம்;
**கனவு** கண்படை, மயக்கம், கனா என முப்பேர் காட்டும்.
**கனை** ஒலி, நிறைவினோடு, நெருக்கமும் கருதும் முப்பேர்;
**பனுவல்** ஆகமமே, நூலே, பாவுடன், உரையும் ஆமே.

**தனம்** : 1. முலை 2. பொன் 3. ஆன்கன்று 4. சந்தம் முத்தன்மைப் பேர்
**கனவு** : 1. கண்படை 2. மயக்கம் 3. கனா
**கனை** : 1. ஒலி 2. நிறைவு 3. நெருக்கம்
**பனுவல்** : 1. ஆகமம் 2. நூல் 3. பா 4. உரை.

***தனம்*** -- முலை, பொன், பசுக்கன்று, பசுமுதன்முப்பொருள்
***கனவு*** -- நித்திரை, மயக்கம், கனா
***கனை*** -- ஒலி, நிறைவு, நெருக்கம்
***பனுவல்*** -- ஆகமம், நூல், பா, உரை

555. **அனந்தனே** சிவன், மால், சேடன், அலாயுதன், அருகன் ஐம்பேர்;
**அனந்தமே** முடிவிலாமை, ஆடகம், விண் முப்பேரே;
**அனங்கம்** மல்லிகை, உடம்பில்லாமையோடு, இருவாட்சிப் பேர்;
**தனஞ்செயன்** பார்த்தன், செய்யதழல், ஒருகாற்றும் ஆமே.

**அனந்தன்** : 1. சிவன் 2. மால் 3. சேடன் 4. அலாயுதன் 5. அருகன்
**அனந்தம்** : 1. முடிவிலாமை 2. ஆடகம் 3. விண்
**அனங்கம்** : 1. மல்லிகை 2. உடம்பில்லாமை 3. இருவாட்சி
**தனஞ்செயன்** : 1. பார்த்தன் 2. தழல் 3. ஒருகாற்று.

*அனந்தன்* --சிவன், விட்டுணு, ஆதிசேடன்,பலதேவன், அருகதேவன்
*அனந்தம்* -- முடிவிலாமை, பொன், ஆகாயம்
*அனங்கம்* -- மல்லிகை, சரீரமின்மை, இருவாட்சி
*தனஞ்செயன்* -- அருச்சுனன், தீ, தசவாயுவுளொன்று

556. **வனம்** ஈமம், துழாய், நீர், புற்று, வனப்பு, கா, மிகுதி, காடு ஆம்;
**மனு**வே மந்திரமோடு, ஓர்நூல்; **மானேறு** கதிர்நாள், ஆண்மான்;
**புனை** தளை, துகில் வனப்பு, பொலிவு, ஒப்பனையும் ஆகும்;
**மனை** மனைக்கிழத்தி, இல் ஆம்;**மனோகரம்** ஏர், இச்சைப்பேர்.

**வனம்** : 1. ஈமம் 2. துழாய் 3. நீர் 4. புற்று 5. வனப்பு 6. கா 7. மிகுதி 8. காடு
**மனு** : 1. மந்திரம் 2. ஓர்நூல்
**மானேறு** : 1. கதிர்நாள் 2. ஆண்மான்
**புனை** : 1. தளை 2. துகில் 3. வனப்பு 4. பொலிவு 5. ஒப்பனை
**மனை** : 1. மனைக்கிழத்தி 2. இல்
**மனோகரம்** : 1. ஏர் 2. இச்சை.

*வனம்* -- சுடுகாடு, துளசி, சலம், புற்று, வனப்பு, சோலை, மிகுதி, காடு
*மனு* -- மந்திரம், ஓர்நூல்
*மானேறு* -- உத்திரநாள், கலைமான்
*புனை* -- விலங்கு, புடைவை, வனப்பு, பொலிவு, அலங்கரிப்பு
*மனை* -- இல்லவள், வீடு
*மனோகரம்* -- அழகு, இச்சை.

557. **அனகமே** பாவமின்மை, மாசின்மை இருபேர் ஆகும்;
**நனி** இடங்கழிமை, பீடு, மிகுதியும் நாட்டும் முப்பேர்;
**கனி** மணி தோன்றிடம், தித்திப்பொடு, காஞ்சனப் பேர்;
**முனைவு** என்ப வெறுப்பு, கோபம் முட்டுதல் முப்பேர் ஆமே.

**அனகம்** : 1. பாவமின்மை 2. மாசின்மை
**நனி** : 1. இடங்கழிமை 2. பீடு 3. மிகுதி
**கனி** : 1. மணிதோன்றிடம் 2. தித்திப்பு 3. காஞ்சனம்
**முனைவு** : 1. வெறுப்பு 2. கோபம் 3. முட்டுதல்

*அனகம்* -- பாவமின்மை, மாசின்மை
*நனி* -- இடங்கழிமை, பெருமை, மிகுதி
*கனி* -- மணிதோன்றுமிடம், தித்திப்பு, பொன்
*முனைவு* -- வெறுப்பு, கோபம், முட்டல்

558. **கனலி** ஆதவனே, செந்தீ கருமா என்று இவை முப்பேர் ஆம்;
**நனவு** என்ப தெளிவினோடு, நனம், களன், நவிலும் முப்பேர்
**சினன்** என்பது அருகன், புத்தன்; **தினையே** ஓர்பயிரே, அற்பம்;
**முனைவரே** முனிவர் நாமம், பகைவரும் மொழியல் ஆமே.

**கனலி** : 1. ஆதவன் 2. தீ 3. கருமா
**நனவு** : 1. தெளிவு 2. நனம் 3. களன்
**சினன்** : 1. அருகன் 2. புத்தன்
**தினை** : 1. ஓர்பயிர் 2. அற்பம்
**முனைவர்** : 1. முனிவர் 2. பகைவர்.

***கனலி*** -- சூரியன், நெருப்பு, பன்றி
***நனவு*** -- தெளிவு, அகலம், கள்ன்
***சினன்*** -- அருகதேவன், புத்ததேவன்
***தினை*** -- ஓர்பயிர், சிறுமை
***முனைவர்*** -- முனிவர், பகைஞர்.

559. **முனி** என்பது யானைக்கன்று, முனிவன், வில், அகத்தி, நாற்பேர்.
**துனி** அச்சம், புலவிநீட்டம், துன்பம், நோய், ஆறு, கோபம்;
**பனி** என்ப நடுக்கம், துன்பம், பயம், குளிர், இமமும் ஐம்பேர்,
**சினை** என்பது, உறுப்பு, முட்டை, பீள், மரச்சினை, அரும்பே.

**முனி** : 1. யானைக்கன்று 2. முனிவன் 3. வில் 4. அகத்தி
**துனி** : 1. அச்சம் 2. புலவிநீட்டம் 3. துன்பம் 4. நோய் 5. ஆறு 6. கோபம்
**பனி** : 1. நடுக்கம் 2. துன்பம் 3. பயம் 4. குளம் 5. இமம்
**சினை** : 1. உறுப்பு 2. முட்டை 3. பீள் 4. மரச்சினை 5. அரும்பு

***முனி*** -- யானைக்கன்று, இருடி, வில், அகத்தி
***துனி*** -- பயம், புலவிநீட்டிப்பு, துன்பம், நோய், ஆறு, கோபம்
***பனி*** -- நடுக்கம், துன்பம், அச்சம், குளிர், பனி
***சினை*** -- உறுப்பு, முட்டை, கரு, மரக்கொம்பு, அரும்பு

560. **வினை** என்ப தொழில், கருத்து, வெஞ்சமர் விளம்பும் முப்பேர்;
**பனை** என்பது அனுடநாள், ஓர்மீன், பனைமரமும் பன்னும்;
**இனன்** என்பது அரசன், இந்தோடு, இரவியும் முப்பேர் என்ப;
**அனு** கவுள், தொடர்ச்சி என்ப; **அனந்தர்** நித்திரை, பித்து ஆமே.

**வினை** : 1. தொழில் 2. கருத்து 3. சமர்
**பனை** : 1. அனுடநாள் 2. ஓர்மீன் 3. பனைமரம்
**இனன்** : 1. அரசன் 2. இந்து 3. இரவி

**அனு** : 1. கவுள் 2. தொடர்ச்சி
**அனந்தர்** : 1. நித்திரை 2. பித்து.

***வினை*** -- செய்தொழில், கருத்து, போர்
***பனை*** -- அனுடநாள், ஓர்மீன், பனைமரம்
***இனன்*** -- அரசன், சந்திரன், சூரியன்
***அனு*** -- கவுள், தொடர்ச்சி
***அனந்தர்*** -- துயில், பித்து

561. **துன்னர்** தோற்றுன்னரோடு, பொல்லருஞ் சொல்லும் நாமம்;
**பின்னம்** வேற்றுமை, பராகம், பிணக்கொடு முப்பேர் பேசும்;
**சின்னமே** பராகம், காளம், சிறுமை, தட்டு அடையாளப் பேர்;
**கன்னமே** கதுப்பு, காது, கன்னக்கோல், நரம்பும் ஆமே.

**துன்னர்** : 1. தோற்றுன்னர் 2. பொல்லர்
**பின்னம்** : 1. வேற்றுமை 2. பராகம் 3. பிணக்கு
**சின்னம்** : 1. பராகம் 2. காளம் 3. சிறுமை 4. தட்டு 5. அடையாளம்
**கன்னம்** : 1. கதுப்பு 2. காது 3. கன்னக்கோல் 4. நரம்பு.

***துன்னர்*** -- செம்மார், தையற்காரர்
***பின்னம்*** -- வேற்றுமை, துகள், மாறுபாடு
***சின்னம்*** -- துகள், காளம், சிறுமை, தட்டு, அடையாளம்
***கன்னம்*** -- கவுள், செவி, கன்னக்கோல், நரம்பு.

562. **அன்னியம்** குயில், அயற்பேர்; **அனுங்கலே** வருந்தல், வாடல்;
**முன்னையே** அக்காள், முன்னை மரமோடு, மூத்தோன், தொன்மை,
**உன்னமே** நினைவு, நீர்வாழ் பறவை, நெஞ்சு, ஓதிமப் பேர்;
**நன்னிலை** தவம், ஒழுக்கம், நாட்டிய சுகம் மூன்றாமே.

**அன்னியம்** : 1. குயில் 2. அயற்பேர்
**அனுங்கல்** : 1. வருத்தல் 2. வாடல்
**முன்னை** : 1. அக்காள் 2. முன்னை மரம் 3. மூத்தோன்
4. தொன்மை
**உன்னம்** : 1. நினைவு 2. நீர்வாழ்பறவை 3. நெஞ்சு 4. ஓதிமம்
**நன்னிலை** : 1. தவம் 2. ஒழுக்கம் 3. சுகம்.

***அன்னியம்*** -- குயில், அயல்
***அனுங்கல்*** -- வருந்தல், வாடல்
***முன்னை*** -- அக்காள், ஓர்மரம், மூத்தோன், பழமை
***உன்னம்*** -- நினைவு, நீர்வாழ்பறவை, நெஞ்சு, அன்னம்
***நன்னிலை*** -- தவம், ஒழுக்கம், சுகம்.

563. **பின்** கடை, வழியினோடு, பெருமை, காரணமும் ஆகும்;
**என்** இகழ்ச்சிக் குறிப்போடு, இசைசொல், ஐயச் சொல் என்ப;
**முன்** பக்கம், பழமை, முன்பு, முதல், மேலோடு ஐம்பேர் கூறும்;
**மின்** ஒளி, தெரிவையோடு, மின்னலும் விளம்பல் ஆமே.

**பின்** : 1. கடை 2. வழி 3. பெருமை 4. காரணம்
**என்** : 1. இகழ்ச்சிக் குறிப்பு 2. இசைச்சொல் 3. ஐயச்சொல்
**முன்** : 1. பக்கம் 2. பழமை 3. முன்பு 4. முதல் 5. மேல்
**மின்** : 1. ஒளி 2. தெரிவை 3. மின்னல்

***பின்*** -- கடை, வழி, பெருமை, காரணம்
***என்*** -- இகழ்ச்சிக்குறிப்பு, இசைச்சொல், ஐயச்சொல்
***முன்*** -- பக்கம், பழமை, முன்பு, முதல், மேல்
***மின்*** -- ஒளி, பெண், மின்னல்.

564. **முன்னலே** நினைவு, நெஞ்சு ஆம், முன்னம், சீக்கிரியோடு எண்ணம்;
**கன்னல்** சர்க்கரை, கரும்பு, கரகம், நாழிகை வட்டிற் பேர்;
**மன்னன்** உத்திரட்டாதிப்பேர், மன்னவன் தானும் ஆகும்;
**கின்னரம்** முற்குரோசம், கிழத்தும் யாழ், கூனும் ஆமே.

**முன்னல்** : 1. நினைவு 2. நெஞ்சு 3. முன்னம் 4. சீக்கிரி 5. எண்ணம்
**கன்னல்** : 1. சர்க்கரை 2. கரும்பு 3. கரகம் 4. நாழிகை 5. வட்டில்
**மன்னன்** : 1. உத்திரட்டாதி 2. மன்னவன்
**கின்னரம்** : 1. முற்குரோசம் 2. யாழ் 3. கூன்.

***முன்னல்*** -- சிந்தனை, மனம், முன்னம், சீக்கிரிமரம், கருத்து
***கன்னல்*** -- பஞ்சதாரை, கழை, வற்கரி, இருத்தை, கிண்ணம்
***மன்னன்*** -- பிற்கொழுங்கோல், கொற்றவன்
***கின்னரம்*** -- நீர்வாழ்பறவை, வீணை, கிடக்கை, பூமி, மக்கட் படுக்கை, கூன்.

565. **பின்னையே** பின்றை, தங்கை, பெரியமாற்கு உரிய தேவி;
**கொன்** பயனிலாமை, காலம், கூறிய பெருமை, அச்சம்.
**பொன்** பொலிவு, அழகு, இரும்பு, பூமகள், வியாழம், செம்பொன்;
**மன்** நிலைபேறு, அசைச்சொல், மன்னவன், மிகுதி ஆமே.

**பின்னை** : 1. பின்றை 2. தங்கை 3. பெரியமாற்கு உரிய தேவி
**கொன்** : 1. பயனிலாமை 2. காலம் 3. பெருமை 4. அச்சம்
**பொன்** : 1. பொலிவு 2. அழகு 3. இரும்பு 4. பூமகள் 5. வியாழம் 6. செம்பொன்
**மன்** : 1. நிலைபேறு 2. அசைச்சொல் 3. மன்னவன் 4. மிகுதி

***பின்னை*** -- பின்பு, இளையவள், இலக்குமி
***கொன்*** -- பயனின்மை, பொழுது, மானம், பயம்
***பொன்*** -- பொலிவு, அழகு, அயம், இலக்குமி, குரு, தமனியம்
***மன்*** -- நிலைபேறு, அசைச்சொல், அரசன், அதிகம்.

566. **வன்னி**யே பிரமசாரி, வளர்கிளி, சமி, செந்தீ ஆம்;
**சென்னி** கம், பாணன், சோழன், சீருள், ஈயம், செம்பு ஆகும்;
**கன்னி** பெண், துர்க்கை, அத்தம், கற்றாழை, நாகு, ஓர் ஆறு ஆம்;
**தென்** இசை, வனப்பு, தாழை, தெற்கொடு, கற்பும் ஆமே.

**வன்னி** : 1. பிரமசாரி 2. கிளி 3. சமி 4. தீ
**சென்னி** : 1. கம் 2. பாணன் 3. சோழன் 4. சீருள் 5. ஈயம் 6. செம்பு
**கன்னி** : 1. பெண் 2. துர்க்கை 3. அத்தம் 4. கற்றாழை 5. நாகு 6. ஓர் ஆறு
**தென்** : 1. இசை 2. வனப்பு 3. தாழை 4. தெற்கு 5. கற்பு

***வன்னி*** -- பிரமசாரி, தத்தை, வன்னிமரம், நெருப்பு
***சென்னி*** -- தலை, பாடுவோன், வளவன், சீருள், தகரம், தாம்பிரம்
***கன்னி*** -- அரிவை, அமரி, களிறு, குமரி, இளமை, ஒராறு
***தேன்*** -- இராகம், அழகு, தென்னமரம், தெக்கணம், கற்பு

567. **குன்று** வேதண்டம் ஆகும்; குறைவொடு, சதயமும் பேர்.
**அன்றில்** ஓர்பறவை, மூலநாள் என அறைவர் நூலோர்;
**மன்றம்** நிச்சயமே, வீதி, வாசனை, சவை, வெளிப் பேர்;
**மன்றலே** வாசம், வீதி, மருவுகல்யாணம் ஆமே.

**குன்று** : 1. வேதண்டம் 2. குறைவு 3. சதயம்
**அன்றில்** : 1. ஓர்பறவை 2. மூலநாள்
**மன்றம்** : 1. நிச்சயம் 2. வீதி 3. வாசனை 4. சவை 5. வெளி
**மன்றல்** : 1. வாசம் 2. வீதி 3. கல்யாணம்

***குன்று*** -- மலை, குறைதல், வருணனாள்
***அன்றில்*** -- அன்றிற்பட்சி, அசுரநாள்
***மன்றம்*** -- உண்மை, தெரு, மணம், அம்பலம், வெள்ளிடை
***மன்றல்*** -- வாசனை, நெடுந்தெரு, விவாகம்

568. **அன்னை** முன்பிறந்தாள், தோழி, ஆய் இவை முப்பேர் என்ப
**அன்னமே** படகம், ஓர்புள், அவி இவை முப்பேர் ஆகும்;
**தன்மை** ஏர், இயல்பினோடு, மூவிடத்தொன்றும் சாற்றும்;
**பன்னலே** நெருக்கம், வார்த்தை, பருத்தியின் பேரும் ஆமே.

**அன்னை** : 1. முன்பிறந்தாள் 2. தோழி 3. ஆய்
**அன்னம்** : 1. படகம் 2. ஓர்புள் 3. அவி
**தன்மை** : 1. ஏர் 2. இயல்பு 3. மூவிடத்திலொன்று
**பன்னல்** : 1. நெருக்கம் 2. வார்த்தை 3. பருத்தி

***அன்னை*** -- அக்காள், பாங்கி, மாதா
***அன்னம்*** -- கவரிமா, அன்னப்புள், சோறு
***தன்மை*** -- அழகு, குணம், தன்மையிடம்
***பன்னல்*** -- செறிவு, சொல், காற்பாசம்

569. **ஆனகம்** தேவதாரு, பணவம், துந்துமியும் ஆகும்;
**மானமே** அளவு, இலச்சை, விமானம், ஏண், பெருமை, குற்றம்;
**பானலே** பழனம், நெய்தல்; **பனிப்பு** என்ப நடுக்கம், அச்சம்;
**மானலே** மயக்கம் ஒப்பு ஆம்; **வானவன்** விதியே, சேரன்.

**ஆனகம்** : 1. தேவதாரு 2. பணவம் 3. துந்துமி
**மானம்** : 1. அளவு 2. இலச்சை 3. விமானம் 4. ஏண் 5. பெருமை 6. குற்றம்
**பானல்** : 1. பழனம் 2. நெய்தல்
**பனிப்பு** : 1. நடுக்கம் 2. அச்சம்
**மானல்** : 1. மயக்கம் 2. ஒப்பு
**வானவன்** : 1. விதி 2. சேரன்

***ஆனகம்*** -- கற்பகதரு, தம்பட்டம், பேரிகை
***மானம்*** -- அளவு, வெட்கம், விமானம், வலி, பீடு, காசு
***பானல்*** -- வயல், நெய்தனிலம்
***பனிப்பு*** -- நடுக்கம், பயம்
***மானல்*** -- மருள், உவமை
***வானவன்*** -- பிரமன், சேரராசன்.

570. **தானமே** மதம், நீராட்டு, தருகொடை, சுவர்க்கம், திண்மை;
**பீனமே** பருமை, பாசி; **பினாகியே** பெண்ணை, ஈசன்,
**நானமே** குளித்தல், கானம், நாவியும், கவரிமாவும்;
**வானம்** ஆகாயம் என்ப; மழை, உலர்மரமும் ஆமே.

**தானம்** :1. மதம் 2. நீராட்டு 3. கொடை 4. சுவர்க்கம் 5. திண்மை
**பீனம்** : 1. பருமை 2. பாசி
**பினாகி** : 1. பெண்ணை 2. ஈசன்
**நானம்** ; 1. குளித்தல் 2. கானம் 3. நாவி 4. கவரிமா
**வானம்** : 1. ஆகாயம் 2. மழை 3. உலர்ந்த மரம்

*தானம்* -- யானைமதம், நீராடல், கொடுத்தல், தெவருலகு வலி
*பீனம்* -- காத்திரம், சைவலம்
*பினாகி* -- பெண்ணையாறு, சிவன்
*நானம்* -- நீராடல், வாசனை, கத்தூரி, மானமா
*வானம்* -- விண், தூறல், உலர்ந்தமரம்

571. **வானி** மேற்கட்டி, சேனை, வண்துகிற்கொடி முப்பேரே;
**ஆனி** உத்திராடம், மூலம், அருங்கேட்டை, ஆனி, கேடு ஆம்;
**ஏனையே** ஒழிவு, மற்றை யெனும் இடைச்சொல்லும் ஆகும்;
**ஆனியம்** பொழுது, நாள் ஆம்; **அனந்தை** ஓர்சத்தி, பூமி.

**வானி** : 1. மேற்கட்டி 2. சேனை 3. துகில்கொடி
**ஆனி** : 1. உத்திராடம் 2. மூலம் 3. கேட்டை 4. ஆனி 5. கேடு
**ஏனை** : 1. ஒழிவு 2. மற்றை எனும் இடைச்சொல்
**ஆனியம்** : 1. பொழுது 2. நாள்
**அனந்தை** : 1. ஓர்சத்தி 2. பூமி

*வானி* -- விதானம், படை, துவசம்
*ஆனி* -- விசுவநாள், குருகு, கேட்டைநாள், ஆனிமாதம், அழிவு
*ஏனை* -- ஒழிவு, மற்றையென்னிடைச்சொல்
*ஆனியம்* -- காலம், தினம்
*அனந்தை* -- ஓர்சத்தி, பூமி

572. **சானகி** சீதை, மூங்கில்; **தனு** என்பது உடல், வில், அற்பம்,
**சானுவே** மலை, முழந்தாள்; மலைப்பக்கம் தானும் ஆகும்.
**சோனையே** ஓண நாளும், விடாமழை சொரிதலும் பேர்;
**கானல்** உப்பளமே, சோலை, கழி, கதிர், கிரணம், பேய்த்தேர்.

**சானகி** : 1. சீதை 2. மூங்கில்
**தனு** : 1. உடல் 2. வில் 3. அற்பம்
**சானு** : 1. மலை 2. முழந்தாள் 3. மலைப்பக்கம்
**சோனை** : 1. ஓணநாள் 2. விடா மழை சொரிதல்
**கானல்** : 1. உப்பளம் 2. சோலை 3. கழி 4. கதிர் 5. கிரணம்
6. பேய்த்தேர்

*சானகி* -- வைதேகி, வேணு
*தனு* -- உடம்பு, தவர், சிறுமை
*சானு* -- பொருப்பு, முழங்கால், மலைச்சாரல்
*சோனை* -- திருவோணம், ஒழியாமழைபொழிதல்
*கானல்* -- அளம், சோலை, கடற்கரை, காயல், கிரணம், கானல்

573. **வான்** என்ப விசும்பு, மேகம், மழையொடு, பெருமை நாற்பேர்;
**தானையே** சேனை, ஆடை, படைக்கலம் தானும் ஆகும்.
கானம் தேர், இசையே, பேதை, காடு, தற்பாடி ஐம்பேர்;
**ஏனலே** செந்தினைப்பேர், தினைப்புனம், கதிரே என்ப.

**வான்** . 1. விசும்பு 2. மேகம் 3. மழை 4. பெருமை
**தானை** : 1. சேனை 2. ஆடை 3. படைக்கலம்
**கானம்** : 1. தேர் 2. இசை 3. பேதை 4. காடு 5. தற்பாடி
**ஏனல்** : 1. தினை 2. தினைப்புனம் 3. கதிர்.

***வான்*** -- ஆகாயம், முகில், மாரி, அண்ணல்
***தானை*** -- பதாதி, சீலை, ஆயுதம்
***கானம்*** -- இரதம், இராகம், அறிவிலி, பழுவம், வானம்பாடி
***ஏனல்*** -- கவலை, தினைப்புனம், கதிர்

574. **ஞானமே** அறிவு, கல்வி, நல்லதத்துவநூல் முப்பேர்;
**யானமே** மரக்கலத்தோடு, எழில்ஊர்தி, கள் இம் முப்பேர்;
**ஏனம்** ஓலைக்குடைப்பேர், எறுழியும், மறமும் என்ப;
**மேனியே** வடிவத்தோடே, நிறமும், உடலுருவம் மேவும்.

**ஞானம்** : 1. அறிவு 2. கல்வி 3. தத்துவநூல்
**யானம்** : 1. மரக்கலம் 2. ஊர்தி 3. கள்
**ஏனம்** : 1. ஓலைக்குடை 2. எறுழி 3. மறம்
**மேனி** : 1. வடிவம் 2. நிறம் 3. உடலுருவம்

***ஞானம்*** -- சேதனம், வித்தை, தத்துவநூல்
***யானம்*** -- நாவாய், வாகனம், சுலோகி
***ஏனம்*** -- ஓலைக்குடை, பன்றி, பாவம்
***மேனி*** -- வடிவு, நிறம், உடலுருவம்

575. **மான்** உரு, மாவினோடு, மகரமீன், மகரராசி;
**கானம்** நன்மணம், காடு என்ப; **கனம்** முகில், அகலம்,பொன் ஆம்
**ஏனாதி** மஞ்சிகன், மந்திரியும் தந்திரியும் என்ப;
**மீனே** சித்திரைநாள், வான்மீன், மயிலையும் மேவும் அப்பேர்.

**மான்** : 1. உரு 2. மா 3. மகரமீன் 4. மகரராசி
**கான்** : 1. நன்மணம் 2. காடு
**கனம்** : 1. முகில் 2. அகலம் 3. பொன்
**ஏனாதி** : 1. மஞ்சிகன் 2. மந்திரி 3. தந்திரி
**மீன்** : 1. சித்திரைநாள் 2. வான்மீன் 3. மயிலை

*மான்* -- வடிவம், விலங்கின்பொது, மகரமட்சம், மகரவிராசி
*கான்* -- நறுநாற்றம், காடு
*கனம்* -- மேகம், அகலம், பொன்
*ஏனாதி* -- நாவிதன், அமைச்சன், தந்திரி
*மீன்* -- சித்திரைநட்சத்திரம், விண்மீன், மீனவிராசி

576. கூனலே பிறை, சங்கோடு, கோணலும் கூறும் முப்பேர்;
பானம் தேன், துவை, குடித்தல், பருகுவனப் பொதுப்பேர்;
தேனு மா, எருமை, பெற்றம், திருட்டு, தேவப்பசுப்பேர்;
சேனை ஆயுதம், அங்காடி, சிறந்திடும் படையும் ஆமே.

கூனல் : 1. பிறை 2. சங்கு 3. கோணல்
பானம் : 1. தேன் 2. துவை 3. குடித்தல் 4. பருகுவனப் பொதுபேர்
தேனு : 1. மா 2. எருமை 3. பெற்றம் 4. திருட்டு 5. தேவப்பசு
சேனை : 1. ஆயுதம் 2. அங்காடி 3. படை.

*கூனல்* -- பிறை, சங்கு, கோண்
*பானம்* -- மது, துவை, குடித்தல், பருகுதற்குரியன
*தேனு* -- குதிரை, எருமை, பசு, களவு, தேவப்பசு
*சேனை* -- ஆயுதம், கடைவீதி, தானை.

577. ஆன்றல் மாட்சிமையினோடே, அகலமும், மிகுதியும் பேர்;
ஊன்றலே சார்தல், தள்ளல், நட்டலும் முப்பேர் ஓதும்;
நோன்றல் தள்ளுதல், நிறுத்தல், பொறுத்தலும் நுவலல் பாற்று
[ஆம்;
தோன்றியே இரத்தத்தோடு, காந்தளும் சொல்லற் பாற்றே.

ஆன்றல் : 1. மாட்சிமை 2. அகலம் 3. மிகுதி
ஊன்றல் : 1. சார்தல் 2. தள்ளல் 3. நட்டல்
நோன்றல் : 1. தள்ளுதல் 2. நிறுத்தல் 3. பொறுத்தல்
தோன்றி : 1. இரத்தம் 2. காந்தள்

*ஆன்றல்* -- மாட்சிமை, அகலம், மிகுதி
*ஊன்றல்* -- சார்தல், தள்ளல், நடுதல்
*நோன்றல்* -- தள்ளல், நிலைநிறுத்தல், பொறுத்தல்
*தோன்றி* -- இரத்தம், காந்தள்.

**(னகர எதுகை முற்றிற்று)**

## ஓரெழுத்தொருசொற் பல்பொருள்

578. **ஆ** பசு, இரக்கம், இச்சை, ஆன், வியப்பு, இசையே, ஆச்சா;
**கா** வலி, பொழில், வருத்தம், காவடி, துலை, காத்தற் பேர்;
**பா** என்ப பரப்பு, நூற்பா, பரவுதல், பனுவல் என்ப;
**தா** வலி, வருத்தம், கேடு, தாண்டுதல், பகை ஐம்பேரே.

**ஆ** : 1. பசு 2. இரக்கம் 3. இச்சை 4. ஆன் 5. வியப்பு 6. இசை 7. ஆச்சா
**கா** : 1. வலி 2. பொழில் 3. வருத்தம் 4. காவடி 5. துலை 6. காத்தல்
**பா** : 1. பரப்பு 2. நூற்பா 3. பரவுதல் 4. பனுவல்
**தா** : 1. வலி 2. வருத்தம் 3. கேடு 4. தாண்டுதல் 5. பகை

***ஆ*** -- பசுப்பொது, இரக்கம் அவா, பசு, வியப்பு, இசை, ஆச்சாமரம்
***கா*** -- வன்மை, சோலை, வருத்தம், தோட்சுமை, துலாம், காத்தல்
***பா*** -- பாப்பு, நூற்பா, பரவல், பாட்டு
***தா*** -- வன்மை, வருத்தம், கேடு, தாண்டல், பகை

579. **ஈ** என்ப கேசவத் தோடு, இக்கு, முன்னிலை யசைச்சொல்;
**சீ**யே பாரதி, பொன், ஐயை, சீயெனல், விடமே, காந்தி;
**தீ** அறிவு, அளறு, செந்தீ, தீமை, தீம், இவை ஐம்பபேர் ஆம்,
**வீ** மலர், புள், சா, நீக்கம்; **மீ** என்ப மேல், விண் ஆமே.

**ஈ** : 1. கேசவம் 2. இக்கு 3. முன்னிலை அசைச்சொல்
**சீ** : 1. பாரதி 2. பொன் 3. ஐயை 4. சீயெனல் 5. விடம் 6. காந்தி
**தீ** : 1. அறிவு 2. அளறு 3. தீ 4. தீமை 5. தீம்
**வீ** : 1. மலர் 2. புள் 3. சா 4. நீக்கம்
**மீ** : 1. மேல் 2. விண்.

***ஈ*** -- வண்டு, கள், முன்னிலையசைச்சொல்
***சீ*** -- சரச்சுவதி, இலக்குமி, பார்வதி, சீயெனல், விடம், காந்தி
***தீ*** -- அறிவு, நரகம், நெருப்பு, தீமை, இனிமை
***வீ*** -- பூ, பக்கி, சாவு, நீக்கம்
***மீ*** -- மேல், ஆகாயம்

580. **மை** தகர், இளமை, மாசு, வடு, மலடு, அஞ்சனம், செல்;
**பை** பைம்மை, ஏர், அராவின் பணமொடு, பை நாற்பேர் ஆம்;
**தை** என்ப மகரராசி, சாற்றும் ஓர் மதியே, பூசம்;
**வை** என்ப புல்லு, கூர்மை, வைக்கோல் என்று இவை முப்பேர்.

**மை** : 1. தகர் 2. இளமை 3. மாசு 4. வடு 5. மலடு 6. அஞ்சனம் 7. செல்
**பை** : 1. பைமை 2. ஏர் 3. அராவின் பணம் 4. பை
**தை** : 1. மகரராசி 2. ஓர் மதி 3. பூசம்
**வை** : 1. புல்லு 2. கூர்மை 3. வைக்கோல்

***மை*** -- ஆடு, இளமை, கறுப்பு, குற்றம், மலடு, மை, மேகம்
***பை*** -- பசுமை, அழகு, பாம்பின்படம், பை
***தை*** -- மகரவிராசி, தைமாதம், பூசநாள்
***வை*** -- புல், கூர்மை, வைக்கோல்

581. ஓ இரக்கச்சொல், நீக்கமோடு, நீர்த்தகை கபாடம்;
**தூ** பகை, தசை, பற்றுக்கோல், சுத்தம், புள்ளிறகு, வெண்மை;
**பூ** மலர், அழகு, வையம், பொலிவு, இலை, பிறப்புக், கூர்மை;
**சே** என்பது இடபம், ஏறு, சிவப்பொடு, விலங்கு ஏறு ஆமே.

**ஓ** : 1. இரக்கச்சொல் 2. நீக்கம் 3. நீர்த்தகை கபாடம்
**தூ** : 1. பகை 2. தசை 3. பற்றுக்கோல் 4. சுத்தம் 5. புள்ளிறகு 6. வெண்மை
**பூ** : 1. மலர் 2. அழகு 3. வையம் 4. பொலிவு 5. இலை 6. பிறப்பு 7. கூர்மை
**சே** : 1. இடபம் 2. ஏறு 3. சிவப்பு 4. விலங்கு ஏறு.

***ஓ*** -- இரக்கச்சொல், நீக்கம், மடைபடைக்குங்கதவு
***தூ*** -- பகை, தசை, பற்றுக்கோடு, சுத்தம், பக்கியினிறகு, வெண்மை
***பூ*** -- புட்பம், அழகு, பூமி, பொலிவு, இலை, பிறப்பு, கூர்மை
***சே*** -- இடபவிராசி, எருது, சிவப்பு, விலங்கேற்றுப்பொது

582. **ஐ** என்ப கடவுள், ஆசான், ஆதிபன், அழகு, இடைச்சொல்;
நை கபம் இருமல், நுண்மை, நாதன், சாரியை, மந்தாரம்;
**கை** என்ப சிறுமை, சார்பு, கறை, இடம், சீலம், செங்கை;
வெய்ய போரணியினோடு, ஒப்பனை இவை மேவும் எண்பேர்.

**ஐ** : 1. கடவுள் 2. ஆசான் 3. ஆதிபன் 4. அழகு 5. இடைச்சொல் 6. கபம் 7. இருமல் 8. நுண்மை 9. நாதன் 10. சாரியை 11. மந்தாரம்.
**கை** : 1. சிறுமை 2. சார்பு 3. கறை 4. இடம் 5. சீலம் 6. கை 7. போரணி 8. ஒப்பனை

***ஐ*** --கடவுள், குரு, அரசன், அழகு, இடைச்சொல், கோழை, இருமல், நுண்மை, பெருமாள், சாரியை, மந்தாரம்
***கை*** --சிறுமை, சார்பு, குற்றம், இடம், ஒழுங்கு, கரம், படைவகுப்பு, அலங்கரிப்பு

583. மா வண்டு, பெருமை, பிண்டி, வாசி, கூப்பிடல், வெறுத்தல்,
காவுறு விலங்கு, செல்வம், கருநிறம், கமலை பத்து ஆம்;
கோ விழி, பசு, நீர், திக்கு, குலிசம், விண், கிரணம், பூமி,
ஏ உரை, சுவர்க்கம், வேந்தன், இரங்கல், வெற்பு, ஈரேழ் ஆமே.

மா : 1. வண்டு 2. பெருமை 3. பிண்டி 4. வாசி 5. கூப்பிடல் 6. வெறுத்தல் 7. காவுறுவிலங்கு 8. செல்வம் 9. கருநிறம் 10. கமலை

கோ : 1. விழி 2. பசு 3. நீர் 4. திக்கு 5. குலிசம் 6. விண் 7. கிரணம் 8. பூமி 9. ஏ 10. உரை 11. சுவர்க்கம் 12. வேந்தன் 13. இரங்கல் 14. வெற்பு.

*மா* -- வண்டு, பெருமை, நென்மர், குதிரை, அழைத்தல், வெறுப்பு, விலங்கின்பொது, செல்வம், கருநிறம், இலக்குமி

*கோ* -- கண், பசு, சலம், திசை, வச்சிராயுதம், ஆகாயம், கிரணம், பூமி, அம்பு சொல், தேவலோகம், அரசன், இரங்கல், மலை

(ஓரெழுத் தொருசொற் பல்பொருள்
முற்றிற்று)

வேதகிரியார் சூடாமணி முற்றிற்று

* * *

# பல பொருள் ஒரு சொல் அகராதி

## தா



## தி



## தீ



## து

## மா

மி



மீ



மு



மூ

# பாடல் முதற்குறிப்பு அகராதி

(எண் : பாடல்களின் தொடர் எண்)

## அ



## ஆ

## தா



## தி



## தீ



## து



## தூ



## தெ



## தே



## தொ



## தோ



## ந

## வெ



## வே

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

அண்மை வெளியீடுகள்

| | ரூ. பை. |
|---|---|
| சங்கத் தமிழர் வாழ்வியல் | .. 75.00 |
| தமிழக மேடைநாடகப் பெண் கலைஞர்கள் -குறிப்பேடு | .. 25.00 |
| A Grammar of Contemporary Literary Tamil | .. 80.00 |
| Cilappatikaram | .. 100.00 |
| காதம்பரி மூலமும் வசனமும் | .. 125.00 |
| Tani Pacura Togai | .. 30.00 |
| Dedication | .. 25.00 |
| Temple Chimes | .. 20.00 |
| Nala Venba | .. 45.00 |
| Tamil Heroic Poems | .. 40.00 |
| Six Long Poems from Sangam Tamil | .. 30.00 |
| Kurinci-P-Pattu-Muttollayiram | .. 40.00 |
| Kuruntokai | .. 110.00 |
| Landscape and Poetry | .. 50.00 |
| Tamil Culture and Civilization | .. 60.00 |
| Tolkappiyam and Astadhyayi | .. 110.00 |
| தமிழக மகளிர் தொடக்க காலமுதல் ஆறாம் நூற்றாண்டு வரை | .. 50.00 |
| தமிழில் நவீன நாடகம் | .. 70.00 |
| இலக்கியத்தில் சோதிடம் | .. 65.00 |
| சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும் | .. 80.00 |
| தொல்காப்பியம்-பொருள்-புறத்திணையியல் பகுதி - 1 | .. 50.00 |
| தொல்காப்பியம்-பொருள்-புறத்திணையியல் பகுதி - 2 | .. 65.00 |
| சோதிடவியல் | .. 70.00 |
| மூலிகைக் கற்பங்கள் | .. 80.00 |
| அமிர்த மதன கூத்து நாடகம் | .. 90.00 |
| சித்த மருத்துவ மணிகள் | .. 75.00 |
| கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவனை (முதல் தொகுதி) | .. 85.00 |
| Tamil Scripts - Work Book | .. 50.00 |
| Work Book Written Tamil | .. 50.00 |
| விடுதலைக்கு முன் தமிழ் நாவல்களில் பெண்கள் | .. 30.00 |
| திருக்கோயில்களில் தொழில் சமுதாய உறவுகள் | .. 25.00 |
| தமிழ்க் காட்சி நெறியியல் | .. 46.00 |
| இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள் | .. 30.00 |
| ஒப்பிலக்கியம்:கொள்கைகளும் செயல்முறைகளும் | .. 15.00 |
| கருணையம்மன் அந்தாதி | .. 22.00 |